சிவமயம்.

வரதராச கவிராசர் இயற்றிய

# சிவராத்திரிபுராணம்

## மூலமும்,

யாழ்ப்பாணத்து அச்சுவேலி

மயில்வாகனப்பிள்ளை அவர்கள்

குமாரரும்

உடுப்பிட்டி வாசருமாகிய

குமாரசூரியப்பிள்ளை அவர்கள்

இயற்றிய

## பதவுரையும்

இவை

மேற்படியூர் அ. வேன்மயில்வாகனப்பிள்ளை அவர்கள்

கேட்டுக்கொண்டபடி

உரையாசிரியரால்

தும்பைநகர்

கலாநிதி யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

பிரமாதீச௵ ஆவணிமீ.

விலை ரூபா க

உ

சிவமயம்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

புலோலி

## பிரமஸ்ரீ. ம. முத்துக்குமாரசுவாமிக்குருக்களவர்கள்

சொல்லியது.

உலகமபோற்றிடுநற்சிவராத்திரி யுண்மையை யுணர்த்திடு புராணத்திற்[டே
கிலகுசீபத வுரைவெளிப் படுத்தென வியம்பினரா வேண்டுகோண் மேற்கொண்
டிலகுமாமூடுப்பிட்டியாம்பதியுறைசெல்வவேளாளனற் செயன்மிக்கான்
பகைதவிசன் குமாரசூரியப்பெயர்ப் பண்டிதன் பண்புற வமைத்தானே.

---

நவிண்டில்

கந்தவன ஆச்சகர்

## பிரமஸ்ரீ. சு. கனகசபாபதிக்குருக்களவர்கள்

சொல்லியது.

வரைபக வெறிந்தோன் வரம்பெறு வாதன் வழங்கிய சிவநிசி வரலா
றுரைதரு புராண மூலகினை யொளிர வுணர்ந்திட வுரைவரை யென்னத்
தன்பெறு முடிப்பைத் தாவில்வேன் மயிலாந் தரமக லிலங்குள சாற்றிடவே
புரைதவி ரனறாக குமாரசூ ரியனும் புலமையோன் புரிந்தன னினிதே.

---

தும்பைநகர்

## பிரமஸ்ரீ. ச. சுப்பிரமணியசாஸ்திரிகள்

சொல்லியது.

செய்யசடைச் சிவனிரவின் பெருமை கூறுந்
திவ்வியநற் புராணத்தி னருமை தேர்ந்து
மையலகன் றெவருமுணர் தன்மை யாக
மன்னுமுரை செந்தமிழி னினிதி யற்றி
வையகமெங் கும்பரவ வச்சி லிட்டு
வழங்கினனற் குமாரசூ ரியப்பேர் பெற்றோன்
றுய்யமயில் வாகனப்பேர்த் தோன்ற லீன்ற
சுதன்வேளாண் மரபின்மிகு சுகுணன் றானே.

---

தும்பைநகர்
குருஸ்வாமிமந்திரம்
பிரமஸ்ரீ. சிவ. பஞ்சாக்ஷரக்குருக்களவர்கள்
சொல்லியது.



சுன்னாகத் தமருமறைந் தொழுகுலத்து வரதகவித் தோன்றல் சொற்ற
பைந்நாகத் தணிபரம னிசிபுரா ணத்துரையைப் பரிவிற் செய்தான்
கைந்நாகத் தவனுலகை யனவு நிப்பைப் பதிமயில்வா கனன்சேய் பானன்
மன்னாகத் திசைந்ததொடைக் குமாரகு ரியப்பிள்ளை மதிவல் லோனே.

---

சுன்னாகம்
மகாவித்துவான்
ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்
சொல்லியது.



கங்கைநதி சூடிசிவ நிசியின் மேன்மை
கருதரிய புராணமுறை யமைத்துச் சுன்னை
தங்கியநான் மறையாளன் வரதன் சொன்ன
தமிழ்க்கவிக ளாய்ந்துபத வுரையொன் றீந்தான்
பங்கமிலாப் பாலியபண் டிதப்பேர் பெற்றோன்
பகருமயில் வாகனவே டந்த பாலன்
கொங்கலரும் பொழிலுடுப்பை நகரி வாசன்
குமாரகு ரியநாமங் கொண்டோ னன்றே.

---

உடுப்பிட்டி
வித்துவான்
ஸ்ரீமத். சி. ஆறுமுகப்பிள்ளையவர்கள்
சொல்லியது.



ஆரியம் பரந்த வரனரு ளிரவி னமைதியி னொன்றினுக் கறிஞர்
சீரிய வரத மெனவிது காறுஞ் செப்பிய திறமது திறம்பிப்
பேரிய குமார சூரிய மெனமண் பிறக்கின னுரையுடுப் பிட்டிப்
பாரிய மயில்வா கனன்றரு பால பண்டிதன் குமாரகு ரியனே.

---

## உரைச்சிறப்புப்பாயிரம்.

தும்பளை

### ஸ்ரீமத். வே. கணபதிப்பிள்ளைச்சோதிடரவர்கள்

சொல்லியது.

சீவாத ராசனையில் சிவநிசியின் புராணமிரு டோரா தாய
வாராபுவியி லெனவெழுதி யச்சிட்டான் பதவுரையொன் றச்ச வேல்
பூர்யயில்வா கனன்மதலை யுடுப்பிட்டி வேளாள ரேரோங்கு புந்தி
கூர்மையுளா னின்னைற்குக் குமாரசூரியனெனும்பேர் கூறற் பாற்றே

## நூற்சிறப்புப்பாயிரம்.



யாழ்ப்பாணம்

### மயில்வாகனப்புலவரியற்றியது.

பரத ராசனுப ராசல ராசன்மகள் பங்க னன்புதரு பண்புசேர்
விரத ராசசிவ நிசியி னீள்சரித மிகவி ளங்கிட விரும்பினன்
சாத ராசனைய மொழிய ரங்கனருள் கருணை மார்க்கர் பருணிதன
வரத ராசன்மறை வாண ராசன்மிகு மதுர வாசுகவி ராசனே.

யாழ்ப்பாணம்

### சின்னத்தம்பிப்புலவரியற்றியது.

மைத்தவிடப் பணிப்பணியான் வராசனமுஞ் சராசனமு மலையாக் கொண்ட
சித்தனுயர் சிவநிசிமான் மியமதனைச் செந்தமிழாற் றெரிதரச்செய் ஞா
னத்தகைய பாரத்துவாசகோத் திரனரங்க னருளு மைந்தன்
சத்தபுரி களிற்காசி நகர்வரத பண்டிதன்முத் தமிழ்வல் லோனே.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ரு | க0 | னன்குடிஞை | நன்குடிஞை |
| கங | ங | வளா | வழா |
| ,, | க0 | வளா | வழா |
| ,, | கஅ | ஞகுவரதை | ணகுவரதை |
| ஙக | உரு | மிருந்து | கொண்டு |
| ஙரு | உஉ | அதிகரிக்கவும் | அதிகரிக்க |
| ஙசா | ச | இதன் | இதின் |
| சக | கசு | பிரமம் | பரம் அது |
| ருஉ | உங | யாழ்மதிவளர் | யாழ்மதிமதிவளர் |
| ருங | கக | மால | மான் |
| ருசா | ச | அம் ஆ அசைகள் | அம்மா வியப்பு |
| சாச | உஅ | பாநெய் | பானெய் |
| சாசா | உஉ | முடியிநான்கு | முடியினான்கு |
| எ0 | கசா | னயப்பன் | நயப்பன் |
| எக | கஉ | னன்று | நன்று |
| எசு | கசா | நூலானது இடையிலறுமென்று | நூல்போன்ற இடையானது மு மென்று |
| அச | கசா | வந்து | ——— |
| அஎ | கக | முல்லை | ——— |
| ,, | உசு | மானகர் | மாநகர் |
| சு0உ | உஅ | நிகரான | ணிகரான |
| க0ங | உரு | மங்குநிற | மங்குணிற |
| ,, | உஅ | டிகைதநன | றிகைதநன |
| க0சா | க(ரு) | அந்திககாலமாகிய | இருளாகிய |
| கக்க | அ | பொருளகள | பொருள |
| கக்சா | எ | பரந்த | பரந்து |
| ககஎ | ஙச | பணை | பணைத்த |
| கஙஎ | சா | அழல் | சுழல் |
| ,, | எ | பெயர்த்திடும் | பேர்த்திடும் |
| கஙஅ | சங | தாள | தாளகள் |
| கஙசு | கசு | இணையகூறி | இணையதுதிகூறி |
| கச0 | உஉ | முன்னீர | முந்நீர் |
| கசஅ | உக | அந்தணருககு | துறவு அந்தணருககு |
| ,, | உஉ | பிராமணர்களுக்கு | துறவிகளான பிராமணர்களுககு |
| கருக | சா | மின்னும் | மின்னு |
| ,, | உஅ | நால | ஞால |
| கருச | அ | சுவா | உயர்சுவா |
| ,, | அ | நாய்ககூட்டம் | உயர்ந்த நாய்க்கூட்டம் |
| கருஅ | உஎ,உஅ | அன்னெறி | அந்நெறி |
| கசாசா | உ0 | நிணைந்து | ணிணைந்து |
| ,, | உசா | இளந்த | இழந்த |
| கசாசு | உசா | மொய்ம்புகள் | மொய்ம்புகண் |
| கஅங | உ0 | விதித்தாய் | விடுத்தாய் |
| கசுங | கஅ | கமலதோடு | கமலத்தோடு |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨00 | ௩௪ | தென்றலும் | தென்றல் |
| ,, | ௩௫ | காற்றும்வீச | காற்றுவீச |
| ௨0௪ | ௧௧ | பயந்து | பயந்தும் |
| ,, | ௨0 | அஞ்சி | அஞ்சியும் |
| ,, | ௨௪ | தெறிக் | தரிந் |
| ௨0௮ | ௩௩ | நிலத்தில் | நிலத்தினில் |
| ௨௧௨ | ௧௮ | சிவபெருமானது | சிவபெருமான் |
| ,, | ௨௨ | (சங்கரியெம்பெருமான்) | ——— |
| ௨௧௫ | ௨௫ | இறங்கி | இறக்கி |
| ,, | ௨௯ | கீழிறங்கி | கீழிறக்கி |
| ௨௧௯ | ௨௭ | மெயபுடை | மெய்ப்புடை |
| ௨௩௭ | ௬ | முனிவருடைய | முனிவா தம்முடைய |
| ௨௪௮ | ௨௫ | து[illegible]து | துதித்து, |
| ௨௫௧ | ௧௬, ௧௭ | பழமையாகிய | புராதலமென்னும் |
| ௨௬0 | ௨௨ | [illegible]குமி | இலசகுமி |
| ௨௬௪ | ௩௪ | சே[illegible]வோம் | சேர்வேம் |
| ௨௭௧ | ௩௩ | உ[illegible]ாதது | உளளத்து |
| ௨௭௬ | ௧, ௨ | மைசநதன் [illegible]நதையில் | மைந்தன் சிந்தையில் |
| ௨௯௩ | ௩௪ | அவற்றை | அதனை |
| ௨௯௪ | ௧, ௨ | மு[illegible]மதில் | முப்புரம் |
| ௨௯௫ | ௬ | [illegible]ற்றனுவற் | [illegible]ற்றவனுற் |

——— இவ்வடையாளமிக்கல.

# சருக்க அகராதி.

சிவமயம்.

# முகவுரை

அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப்பிழம்பாகி ய சிவபெருமான் சர்வான்மாக்களுக்கும் அனுக்கிரகிக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கின்ற திருக்கேதீச்சரம் திருக்கோணமாமலை திருக்கரசை சிவனொளிபாதம் முதலிய சிவஸ்தலங்களையும், சுப்பிரமணியக்கடவுள் ஞானக்காட்சிகொடுத்து வீற்றிருக்கும் அதியற்புதமான ஸ்ரீகதிர்காமக்ஷேத்திரத்தையும் தன்னுட் கொண்ட இவ்விலங்காபுரியிலே செந்தமிழ்நாவலர் செறிந்ததுழீஇய யாழ்ப்பாணத்து அச்சுவேலியில் இற்றைக்கு ஏறக்குறைய இருநூறு வருடங்களின்முன் ஸ்ரீ காசியம்பதியிலிருந்து வந்து வசித்தவரும், பாரத்துவாசகோத்திர அரங்கநாத ஐயங்கார்க்குத் தவப்புதல்வராயுற்பவித்தவரும், சுன்னைவாசியும், வரகவியும், பிள்ளையார் கதை ஏகாதசிபுராணம் முதலிய நூல்களைப்பாடியவருமாகிய வரதபண்டிதர், சிவராத்திரிவிரதத்தின்பெருமையை யாவரும் அறிந்துய்யும்பொருட்டு, தில்லைவனத்தறிஞர் சிலர் கட்டளையிட்டபடி பல நூல்களிலுள்ள சிவராத்திரிமான்மியங்களைத் திரட்டி ஓர் புராணமாகப் பாடினார். இச்சிவராத்திரிபுராணம் பொருட்சுவை சொற்சுவைகளால் எப்புலவரையும் மிக மகிழ்விக்கத்தக்கது. இதனை நுண்ணுணர்வில்லாதாரையரு மெளிதினுணரும்பொருட்டு உரையியற்றவேண்டுமென்னும் கோரிக்கை என்னுள்ளத்தையிட்டதனையானும், இதற்குதவியாக எம்மூர்வாசரும் நண்புநீங்காதநல்லறிவாளருமாகிய ஸ்ரீமத். அ. வேன்மயில்வாகனப்பிள்ளை என்பவர் பலமுறையும் பன்முறையுந் தூண்டியமையானும், எனதறிவுக்கெட்டியவாறு பதவுரையாக எழுதி வெளிப்படுத்தினேன். குணிதோஷதமர்கள் இவ்வுரையிலுள்ள குற்றங்களைநீக்கிக் குணங்களைக் கொள்வாரென்பது எனதுதுணிபாகும்.

"குற்றங்களைநீக்கிக்குணங்களைக்கொண்டாடல்
கற்றறிந்தோர்க்கேற்றகடன்"

"நல்லார்பிறர்குற்றம்நாடார்நலந்தெரிந்து
கலைதவர்குற்றங்காண்பரோ—அல்லாத
என்போல்வாரென்னையிகழ்வாரோவிவ்வுரைகட்குப்
பின்பாரோகாண்பார்பிழை"

இங்ஙனம்
ம. குமாரசூரியப்பிள்ளை
உடுப்பிட்டி.



உ

சிவமயம்.

# சிவராத்திரிபுராணம்

## பதவுரை

### காப்பு.

ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா யிருப்பானை யுரக வேந்தன், றாங்குநெடு நிலத்தானை முகத்தானை வதைத்தானைச் சயில மானைப், பாங்குவைத்து மழுத்தானை பரித்தான்றந் தளித் தானைப் பசும்பொற் றோட்டுப், பூங்கமல பதத்தானைப் பொருவி லைந்து கரத்தானைப் போற்றல் செய்வாம்.

**இதன்பொருள்:** ஓங்கும் ஒரு மருப்பானை—உயர்ந்த ஒருதிருக்கொம்பையுடையவரும், உயிர்க்கு உயிராய் இருப்பானை—சீவான்மாக்களுக்கெல்லாம் பரமான்மாவாயிருப்பவரும், உரகவேந்தன் தாங்கும் நெடு நிலத்து ஆனைமுகத்தானை வதைத்தானை—(குண்டலினிசத்தியென்னும் சிவசத்தியாகிய) ஆதிசேடனாற்பரிக்கப்படுகின்ற நெடியநிலவுலகத்தின்கட் கயமுகாசுரனைக்கொன்றருளியவரும், சயில மானைப் பாங்கு வைத்து மழு தானை பரித்தான் தந்து அளித்தானை—இமயமலையின்கண்ணே திருவவதாரஞ்செய்தருளிய நோக்கினால் மான்போல்பவராகிய உமையம்மையாரை வாமபாகத்திலிருத்தி மழுப்படையைத்திருக்கரத்திலேந்திய சிவபெருமான்பெற்றருளியவரும், பசும் பொன் தோட்டு பூம் கமல பதத்தானை—செம்பொன்மயமான இதழ்கள்பொருந்திய அழகியதாமரைமலர்களையொத்த திருப்பாதங்களையுடையவரும், பொரு இல் ஐந்து கரத்தானை—ஒப்பில்லாத ஐந்துதிருக்கரங்களையுடையவருமாகிய விநாயகக்கடவுளை, போற்றல் செய்வாம்—(இந்நூல் யாதொரு இடையூறுமின்றி இனிதுமுடியும்பொருட்டு யாம்) துதிப்பாம் என்றவாறு.

# கடவுள்வாழ்த்து

## நடராசர்.

சீர்தந்த கமலமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தேவர் கோவுங், கூர்தந்த நகப்புலிக்காற் றவமுனியும் பதஞ்சலியுங் குழைந்து போற்ற, வார்தந்த கலசமுலை மலைவனிதை விழிகளிப்ப மன்றுளாடுங், கார்தந்த மணிமிடற்றுக் கடவுடிரு வடியிணைகள் கருத்துள் வைப்பாம்.

இ—ள். சீர் தந்த கமல மலர் திசைமுகனும்—அழகுபொருந்திய செந்தாமரைமலராசனராகிய பிரமதேவரும், திருமாலும்—மகாவிஷ்ணுமூர்த்தியும், தேவர்கோவும்—தேவர்களுக்கெல்லாந்தலைவனுகிய இந்திரனும், கூர் தந்த நகப் புலிக்கால தவமுனியும்— கூர்மைவாய்ந்த நகங்கள்பொருந்திய புலியின்கால்போன்றகால்களையுடைய தவசிரேட்டராகிய வியாக்கிரபாதமுனிவரும், பதஞ்சலியும் குழைந்து போற்ற—பதஞ்சலிமுனிவரும் மனமுருகித்துதிக்க, வார் தந்த கலச முலை மலைவனிதை விழி களிப்ப—கச்சிறப்படைந்த பூரணகும்பங்களைநிகர்த்த ஸ்தனங்களையுடைய இமயமலையரசன்புத்திரியாகிய உமையம்மையாரது திருநயனங்கள்களிப்படைய, மன்றுள் ஆடும்—கனகசபையின்கண்ணே (சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்கின்றபஞ்சகிருத்தியகாரணமாகத்) திருநடனத்தைச்செய்தருளாநின்ற, கார் தந்த மணி மிடற்றுக் கடவுள் திரு அடி இணைகள்— நஞ்சுண்டுகறுத்த அழகியதிருக்கண்டத்தையுடைய சிவபெருமானது உபயதிருப்பாதங்களையும், கருத்துள் வைப்பாம்—மனத்திலிருத்துவாம் எ—று. (க)

## சிவகாமியம்மை.

கடிகமழ்கட் கமலமலர்க் கட்டிகிரிக் கரனொருசூ கரம தாகிப், படியிடந்து மறிவரிய பதப்பவள மலைமருங்கிற் படரும் பச்சைக், கொடிகொடிய பவக்கடலிற் குளித்தழுந்தா தின்பமுத்தி கூடும் வண்ண, மடியவருக் கருள்புரியுஞ் சிவகாமி யம்மைபதந் தன்பு கூர்வாம்.

இ—ள்: கடி கமழ் கள் கமல மலர் கண்—வாசனைவீசுகின்ற தேன்நிறைந்த தாமரைமலராகிய திருநயனத்தையும், திகிரிக் கரன்—சக்கராயுதத்தைத்தாங்கிய திருக்கரத்தையுமுடைய மகாவிஷ்ணுமூர்த்தி, ஒரு சூகரம் அது ஆகிப் படி இடந்தும்—ஒருபன்றிவடிவங்கொண்டு பூமியைக்கிழித்துச் சென்றும், அறிவரிய பத பவள மலை மருங்கில்— அறிதற்கரிய திருப்பாதங்களைக்கொண்ட பவளமலைபோன்ற சிவபெருமானதுவாமபாகத்தில், படரும் பச்சைக் கொடி—படர்ந்த பச்சைக்கொடிபோன்றெழுந்தருளியிருக்கின்ற, கொடிய பவக் கடலில் குளித்து அழுந்ாது—கொடுமையாகிய பிறவிக்கடலி

ன்கண்ணே அழுந்திவருந்தாது, இன்ப மூத்தி கூடும் வண்ணம்—சத்தசுகவடிவாகிய மோட்சத்தையனுபவிக்கும்படி, அடியவருக்கு அருள் புரியும் சிவகாமியம்மை—தொண்டர்களுக்குக்கருணைபாலிக்கின்ற சிவகாமியம்மையாரது, பதத்து அன்பு கூர்வாம்— திருப்பாதங்களினிடத்து அன்புமிகுவேம் எ—று. (௨)

## விநாயகர்.

சொற்பகர்நா வினுக்கடங்கா வளங்குலவு தில்லைமன்று துலங்கு கோயிற், பொற்பகலாக் குடதிசைக்கோ புரத்தமரர் கணத்தலைவர் போற்ற மேவி, யற்பகனுண் மலரிறைத்துத் தொழுமடியார் வேட்டவர மளித்த லாலே, கற்பகநா மம்பெறுமே ரம்பனையோர் கொம்பனையுட் கருதி வாழ்வாம்.

இ—ள்: நா பகர் சொல்லினுக்கு அடங்கா வளம் குலவு—நாவினாற் கூறப்படுகின்ற சொற்றொகுதிமுழுவதாலும் உரைக்கவியலாத வளம்பொருந்திய, தில்லை மன்று துலங்கு கோயில் பொற்பு அகலாக் குடதிசைக் கோபுரத்து—சிதம்பரத்திலுள்ள கனகசபைவிளங்காநின்ற திருக்கோயிலினது அழகுகுன்றாத மேலைக்கோபுரவாயிலில், அமரர் கணத்தலைவர் போற்ற மேவி—தேவர்களும் கணநாதர்களும் ஸ்தோத்திரிக்கும்படியெழுந்தருளி, அல் பகல் நாள் மலர் இறைத்து—இரவும்பகலும்ஓயாது புதியபுஷ்பங்களைத்தூவி, தொழும் அடியார் வேட்ட வரம் அளித்தலால்— வழிபாடுசெய்கின்றஅன்பர்கள் விரும்பியவரங்களையெல்லாமீந்தருளுதலினால், கற்பக நாமம் பெறும்—கற்பகமென்னுங்காரணப்பெயரைப்பெற்ற, ஓர் கொம்பனை எரம்பனை—ஒற்றைக்கொம்பையுடைய கணேசமூர்த்தியை, உள் கருதி வாழ்வாம்— மனத்தின்கண்ணேசிந்தித்து வாழக்கடவேம் எ—று. (௩)

## சுப்பிரமணியர்.

சூராட்டுப் பயில்சயிலத் துணைமுலைத்திண் டகுவியர்மை தோயும் வாட்க, ணீராட்டுப் பெறமறநீ டவுணருடற் புலவலகை நிறையத் தேக்கிப், பாராட்டுத் தரவடிவேற் படைபணித்த கரனரன்பார்ப் பதிக்குச் செல்வச், சீராட்டுப் பிள்ளையெனு முருகன் முருகவிழ்மலர்த்தாள் சென்னி சேர்ப்பாம்.

இ—ள்: சூர் ஆட்டு பயில் சயிலம் துணைமுலை திண் தகுவியர் மை தோயும் வாள் கண் நீராட்டுப் பெற— தேவமாதர்கள் விளையாட்டயராநின்ற மலைகளையொத்த இரண்டுஸ்தனங்களையுடைய வலியஅசுரப்பெண்களது மையிட்டிய வாள்போன்றகண்களினின்றும் நீர்சொரியவும், மறம் நீடு அவுணர் உடல் புலவு அலகை நிறையத் தேக்கிப் பாராட்டுத்தர—கொடுமைமிகுந்தஅசுரர்களது சரீரத்தின்நிணத்தைப் பிசாசுகள்நிரம்பஉண்டு களிகொண்டாடவும், வடி வேல் படை பணித்த கரன்—கூர்மைபொருந்திய வேலாயுதத்தையேவியருளிய திருக்கரத்தையுடையவரும், அரன் பார்ப்பதிக்குச் செ

கொடியசூரபன்மனது மார்பைத்துளைத்து, ஒரு தோகை எறி—ஒப்பற்றமயி ல்வாகனத்தின்மேலேறி, இரு தோர்கைமாரோடு எரசத்தில் இருந்த பிரா ன்—மயில்போலுஞ்சாயலையுடைய தெய்வயானை வள்ளியம்மையாகிய இரு தேவிமாரோடும் திருவேரகத்தின்கண்ணெழுந்தருளியிருந்தசுப்பிரமணியக்க டவுளானவர், என் அகத்தில் இருக்க என்பால் இடர்க்கு இடமின்று—என துமனதின்கண்ணே குடிகொண்டிருத்தலால் என்னிடத்திற்றுன்பங்களெ வையேனுந்தங்குதற்கிடமில்லையாம் எ—று. (அ)

நீடலுறழ் கருங்கனங்கள் படிந்துமுழ வெனவதிர நிரந்து தும்பி, பாடல்புரி தரத்தழைத்த பாசடைச்சந் தனப்பணையிற் ப டருஞ் செய்ய, கோடலலர் விளக்கேந்தக் குலமயினா டகம்புரியுங் குன்றுதோறு, மாடல்புரி முருகனிரு சரணமலர் பரவிவினை ய கற்றி வாழ்வாம்.

இ—ள்: நீடு அல் உறழ் கரும் கனங்கள் படிந்து முழவு என அதிர—மிக்கஅந்தகாரத்தையொத்த கரியமேகங்களானவை தங்கிநின்று முழவப்ப றைபோல ஆரவாரிக்கவும், நிரந்து தும்பி பாடல் புரிதர—நெருங்கிநின்று வண்டுகளிசைபாடவும், தழைத்த பாசடைச் சந்தனப் பணையில் படருஞ் செய்ய கோடல்—குழைத்த பச்சிலைகளைக்கொண்ட சந்தனமரக்கிளைகளிற் படர்ந்த செங்காந்தள்கள், அலர் விளக்கு ஏந்த—மலராகியவிளக்கைத்தாங்க வும், குலமயில் நாடகம் புரியும் குன்று தோறும்—கூட்டமாகியமயில்களாட னஞ்செய்கின்ற மலைவர்க்கங்கடோறும், ஆடல் புரி முருகன் இரு சரண ம லர் பரவி—திருவிளையாடலைச்செய்தருளிய முருகக்கடவுளது இரண்டுபாத தாமரைகளையும் வணங்கி, வினை அகற்றி வாழ்வாம்— எமதுபாவவினையை யொழித்து வாழக்கடவேம் எ—று. (கூ)

உருத்தணியா வருமசுர ருடறுணிக்கு நெட்டிலைவே லுர வோய் துன்பக், கருத்தணியாப் பெருவெயிலுட் டிளைத்திளைத்த களையகலக் கருணைக் கண்டந், திருத்தணியார் கழனிழற்கீ ழென் றுவழி படுமடியா ரிதையத் துள்ளுந், திருத்தணியாம் பதியகத் தும் வாழ்குமர குருபரன்றாள் சிரமேற் கொள்வாம்.

இ—ள்: உருத்து அணியா வரும் அசுரர் உடல் துணிக்கும் நெடு இ லை வேல் உரவோய்—கோபங்கொண்டு அணியாகவந்தஅசுரர்களது சரீரங்க ளைவெட்டிய நெடிய இலைவடிவாகிய வேலாயுதத்தைத்தாங்கிய வலியவரே, துன்பக் கரு தணியாப் பெரு வெயிலுள் திளைத்து இளைத்த களை அகல—து ன்பங்களுக்கெல்லாங்காரணமான பிறவியேயாகிய மிக்கவெயிலில்அழுந்திவ ருந்திய இளைப்புநீங்கும்படி, கருணைக்கண் தந்து அணி ஆர் கழல் நிழல் கீழ் இருத்து என்று வழிபடும் அடியார் இதயத்துள்ளும்—உமதுகிருபாநோக்கத் தைச்செய்து அழகுபொருந்திய வீரக்கழலணிந்ததிருப்பாதநிழலிலிருத்திய

ருளுமென்று வழிபாடுசெய்கின்றதொண்டர்களது இருதயத்திலும், திருத்தணியாம் பதி அகத்தும்—திருத்தணிகையாகியக்ஷேத்திரத்திலும், வாழ் குமர குரு பரன் தாள் சிரமேல் கொள்வாம்—எழுந்தருளியிருக்கின்ற குமாரக் கடவுளது திருப்பாதங்களை எமதுசிரமேற்சூடக்கடவேம் எ—று. (க0)

பொருவினறு மலர்பொதுளுந் தண்டலைசூழ் கதிரைநகர்ப் புனிதன் பாத, முருகியுளத் தழுத்திவினை நீறழுந்து மாறெழுத்து முணர்ந்து நாவின், முருகசர வணபவசண் முககுகவென் றனுதினமு மொழிவோர் தங்கள், மருமருவு கமலமல ரடிமுடியின் மீதுவைத்து வணங்கல் செய்வாம்.

இ—ள்: பொரு இல் நறு மலர் பொதுளும் தண்டலை சூழ் கதிரை நகர்ப் புனிதன் பாதம்—ஒப்பில்லாத வாசனைகமழ்கின்ற புட்பங்கள்நிறைந்த சோலைகளாற்சூழப்பட்ட கதிர்காமக்ஷேத்திரத்தின்கண்ணேயெழுந்தருளியிருக்கின்ற பரிசுத்தராகியசுப்பிரமணியக்கடவுளது திருப்பாதங்களை, உருகி உளத்து அழுத்தி—கசிவுகொண்டு மனத்தின்கண்ணே நிலைபெறப்பதித்து, வினை நீறு அழுத்தும் ஆறெழுத்தும் உணர்ந்து—தீவினைகளெல்லாவற்றையும் நீறுக்குகின்ற ஸ்ரீசடட்சரங்களை விதிப்படியறிந்து, நாவில் முருக சரவணபவ சண்முக குக என்று—நாவினால் முருகனே சரவணபவனே சண்முகனே குகனேயென்று, அனு தினமும் மொழிவோர் தங்கள்—தினந்தோறுஞ்செபிக்கின்ற அடியார்களது, மரு மருவும் கமல மலர் அடி முடியின் மீது வைத்து—வாசனைபொருந்திய தாமரைமலரையொத்ததிருப்பாதங்களையெமதுசிரசின்மேற்சூடி, வணங்கல் செய்வாம்—தோத்திரஞ்செய்யக்கடவேம் எ—று. (கக)

## திருநந்திதேவர்.

செய்யதழற் புரிசடையுந் திருநுதலிற் றனிவிழியுந் திண்டோ ணான்கும், கையதனிற் சுரிகைமழுப் பிரம்புகவை யடிச்சிறுமான் கன்றுந் தாங்கி, வையமுத லனைத்துலகுந் தொழுங்கயிலை மலைகாக்க மதியஞ் சூடு, மையனருள் பெற்றநந்தி யடிக்கமல முடிக்கமல மாக வைப்பாம்.

இ—ள்: செய்ய தழல் புரி சடையும்—செந்நிறம்பொருந்திய அக்கினிப்பிழம்பையொத்த முறுகியசடையும், திரு நுதலில் தனி விழியும்—திருநெற்றியின்கண்பொருந்திய ஒப்பற்ற அக்கினிநேத்திரமும், திண் தோள் நான்கும்— வலிய நான்குதிருப்புயங்களும், கை அதனில் சுரிகை மழு பிரம்பு கவையடிச் சிறுமான் கன்றும் தாங்கி— திருக்கரங்களின்கண்ணே உடைவாளும் மழுவாயுதமும் பிரம்பும் பிளவுபொருந்திய பாதங்களைக்கொண்ட சிறியமான்கன்றும் ஆகிய இவைகளையெல்லாந்தாங்கப்பெற்று, வையம் முதல் அனைத்து உலகும் தொழும் கயிலை மலை காக்க— பூமிமுதலெல்லாவு

லகங்களினாலும்வணங்கப்பெற்ற கயிலையங்கிரியைக்காவல்புரியும்படி, மதியம் சூடும் ஐயன் அருள் பெற்ற நந்தி— சந்திரனைத்திருமுடியிற்றரித்தருளிய சிவபிரானது அருளைப்பெற்ற திருநந்திதேவருடைய, அடி கமலம் முடி கமலம் ஆக வைப்பாம்—பாதாரவிந்தங்களை எமதுசிரக்கமலமாகச்சூடக்கடவேம் எ—று.

முடிக்கு அமலம் எனினுமாம். (கஉ)

## சரஸ்வதி.

காரதிருங் கயிலைமலைக் கண்ணுதன்முப் புரமெரிக்கக் கருதுமந்நா, ணீரதிகந் தருந்தரங்கத் தடங்கடல்சூழ்ந் திடும்புவி நெடுந்தேரூர்ந்த, சாரதிதன் றிருநாவி லடியருளத் தினிலிருக்குந் தவள மேனிப், பாரதிசெம் பதப்பதுமத் துணைப்போது முப்போதும் பரவல் செய்வாம்.

இ—ள். கார் அதிரும் கயிலைமலை கண்ணுதல்—மேகங்கள்முழங்காநின்ற கயிலாயகிரியின்கண்ணெழுந்தருளிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான், முப்புரம் எரிக்கக் கருதும அந்நாள்—திரிபுரதகனஞ்செய்யத்திருவுளங்கொண்ட அக்காலத்தில், நீர் அதிகம் தரும தரங்கத் தடம் கடல் சூழ்ந்திடும்—நீர்நிறைந்த திரைகளைக்கொண்ட விசாலமாகியசமுத்திரத்தாற்சூழப்பட்ட, புடவி நெடும் தேர் ஊர்ந்த சாரதிதன் திருநாவில்—பூமியாகிய நெடிய தேரைச்செலுத்தியசாரதியாகும் பிரமதேவரது திருநாவிலும், அடிய உளத்தினில் இருக்கும்— அடியார்களதுஇருதயங்களிலும் வீற்றிருந்தருளாநின்ற, தவள மேனி பாரதி செம் பத பதுமத் துணைப்போது—வெண்ணிறமாகியதிருமேனியைக்கொண்ட சரசுவதிதேவியினது அழகியதிருப்பாதங்களாகிய இரண்டுதாமரைமலர்களையும், முப்போதும் பரவல் செய்வாம்—காலை உச்சி மாலையாகிய திரிகாலங்களினுந்துதிக்கக்கடவேம் எ-று.()

## சண்டேசர்.

நீரிரண்டு கரத்தெடுத்த நிறைகுடப்பான் முதற்புனித நீரிலாட்டி, வாளிரண்டு நிகர்த்தவிழி மலைமகள்கேள் வனைவழுத்தி மலர்கள் சாத்தி, யாளிரண்டு பரமர்தமைத் தென்றருச்சிக்கு மமைய மதி லவஞ்செய் தந்தைத், தாளிரண்டு மறவெறிந்த சண்டேசர் முண்டகப்பொற் றாளிற் றாழ்வாம்.

இ-ள். நீள் இரண்டு கரத்து எடுத்த நிறை குடம் பால் முதல் புனித நீரில் ஆட்டி—நீண்ட இரண்டுதிருக்கரங்களினாலுமெடுத்தாகிய நிறைந்தகுடத்தின்கண்ணேயுள்ள பால்முதலாகச் சுத்தோதகமிறுதியாகவுள்ளவஸ்துக்களைக்கொண்டபிடேகித்து, வாள இரண்டு நிகர்த்த விழி மலைமகள் கேள்வனை— இரண்டுவாளாயுதங்களையொத்த திருநயனங்களைக்கொண்ட இமவத்பர்வதபுத்திரிநாயகராகிய சிவபெருமானை, வழுத்தி மலர்கள் சாத்தி—தோ

த்திரங்களைக்கூறிப் புட்பங்களைச்சாத்தி, இரண்டு பதம் அளித்து ஆனென்று அருச்சிக்கும் அமையத்தில்—உமது இரண்டுதிருப்பாதங்களையும் அடியேற்குத்தந்தருளி ஆட்கொள்ளக்கடவீரென்று பூசைசெய்யுஞ்சமயத்து, அவம் செய் தந்தை தாள் இரண்டும் அற எறிந்த—அப்பூசைக்கிடையூறுசெய்த பிதாவாகிய (எச்சதத்தனது) இரண்டுகால்களையும் துணியும்படிவெட்டியருளிய, சண்டேசர் முண்டகம பொன் தாளில தாழ்வாம்—சண்டேசுரநாயனரது கமலமலர்களைப்போன்ற அழகிய திருப்பாதங்களின்கண்ணே விழுந்துவணங்குவாம் எ—று. (௧௪)

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

வெங்குருவிற் கவுணியர்தங் குலத்துதித்து மீனவன்றன் வெப்புங் கூனு, மெங்குமிசை பெறமாற்றி யமணரெண்ணா யிரர் கழுவி லிறக்க வேற்றிப், பங்கமிலென் பரிவையுருப் படைத்து யிர்பெற் றெழப்பதிகம் பாடி மேன்மை, தங்குமறைத திருஞான சம்பந்தன் றாட் டுணைக டலைமேற் கொள்வாம்.

இ—ள் வெங்குருவில் கவுணியர் தம் குலத்து உதித்து—(தேவகுருவாகிய பிரகஸ்பதியினலேபூசிக்கப்பட்ட) சீகாழிப்பதியின்கண்ணே கவுணியர்கோத்திரத்திற்றிருவவதாரஞ்செய்து, மீனவன் தன் வெப்பும் கூனும் எங்கும் இசைபெற மாற்றி—கூன்பாண்டியராசனது சுரநோயையுங் கூனையும் எவ்வுலகமும்புகழுண்டாகும்படி மாற்றியருளி, அமணர் எண்ணாயிரர் இறக்க கழுவில் ஏற்றி—(சமயவாதஞ்செய்த) எண்ணாயிரஞ்சமணர்களும் உயிர்துறக்கும்படி கழுமரத்திலேற்றுவித்து, பங்கம் இல் என்பு அரிவை உரு படைத்து உயிர் பெற்று எழ பதிகம் பாடி—(பலதினங்களுக்குமுன் விஷந்தீண்டி உயிர்துறந்த பூம்பாவையென்னுஞ்சிறுமியினது) குற்றமற்றஎலும்புகளானவை(பழைய) பெண்ணுருவமடைந்து உயிர்கொண்டெழும்படி திருப்பதிகத்தைப்பாடியருளி, மேன்மை தங்கும் மறை திருஞானசம்பந்தன் தாள் துணைகள்—மகிமைதங்கப்பெற்ற வேதங்களையோதிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளது திருப்பாதங்களிரண்டையும், தலை மேல கொள்வாம்—(எமது)சிரமிசைச்சூடக்கடவேம் எ—று. (௧௫)

## சுந்தரமூர்த்திநாயனார்.

மங்குனிறத் திருநெடுமால் வளையெயிற்றுப் பெருங்கேழல் வடிவந் தாங்கி, யங்கணில முழுதுமுழு தறிவரிய கமலமல ரடிகள் சேப்பச, சங்கணிகைக் குதலைமொழிச் சரவைவிழிப் பரவை யென்பா டன்பா லன்பாற், பொங்கிருளிற் சந்தரனை நடப்பித்த சுந்தரனைப் போற்றல் செய்வாம்.

இ—ள்: மங்குல் நிற திரு நெடு மால் வளை எயிற்று பெரும் கேழல் வடிவம் தாங்கி—மேகத்தையொத்த நீலநிறத்தைக்கொண்ட நெடியதிருவடி

வத்தையுடைய மகாவிஷ்ணுமூர்த்தி வளைந்தகொம்புகளையுடைய பெரிய பன்றிவடிவத்தைப்பொருந்தி, அங்கண் நிலம்முழுதும் உழுது அறிவரிய— ய இடமகன்ற பூமிமுழுவதையும் ஊடுருவிச்சென்றும் அறிதற்கரியனவாகிய, கமல மலர் அடிகள் சேப்ப—செந்தாமரைமலர்களைபொத்த திருப்பாதங்கள் (கன்றிச்) சிவக்கும்படி, சங்கு அணி கை குதலை மொழி சாவை விழி பரவை என்பாள் தன்பால்—சங்கு வளையல்களணிந்தகரங்களையும் மழலைவார்த்தையையும் அம்பைபொத்த கூரியகண்களையுமுடைய பரவையாரென்னுந் திருநாமத்தைப்பொருந்திய தமது நாயகியாரிடத்தில். அன்பால் பொங்கு இருளில் அரனை சந்து நடப்பித்த—அன்பினால் மிக்க இருளிலே சிவபெருமானைத்தூதாகநடக்கும்படி யேவிய, சுந்தரனை போற்றல் செய்வாம்—சுந்தரமூர்த்திநாயனாரைத் தோத்திரஞ்செய்யக்கடவேம் எ—று. (கசு)

## திருநாவுக்கரசுநாயனார்.

காவரசு மலரயன்மால் கடவுளர்க்காச் சென்றமர்செய் காமனைம், பூவரசு படவிழித்துப் புனவேங்கை பத்தியதள் புனைந்துபோர்த்த, தேவரசு மனமகிழத் திருப்பதிக மிசைத்தமிழிற் சிறக்கப்பாடு, நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன் னாட்டரசு நல்கு மன்றே.

இ—ள் கா அரசு மலர் அயன் மால் கடவுளர்க்கு ஆ சென்று—கற்பகச்சோலைக்கதிபதியாகிய தேவேந்திரனும் செந்தாமரையாசனராகியபிரமதேவரும் மகாவிஷ்ணுமூர்த்தியும் ஆகிய தேவர்கள்பொருட்டாகப்போய், அமர் செய் ஐ பூ அரசு ஆம் காமன் பட விழித்து—யுத்தஞ்செய்த பஞ்சபுட்பபாணங்களுக்கரசனாகிய மன்மதன் இறக்கும்படி நெற்றிக்கண்ணாற்பார்த்தருளி, புன வேங்கை (அதள்) புனைந்து அத்தி அதள் போர்த்த-வனத்திற்சஞ்சரிக்கின்ற புலியினது தோலையுடையாகவுடுத்தும் யானையினது தோலைப் போர்வையாகப்போர்த்துமருளிய, தே அரசு மனம் மகிழ—தேவாதிதேவராகிய சிவபெருமானது திருவுள்ளமானந்தமடையும்படி, தமிழில் இசை திருப்பதிகம் சிறக்க பாடும்—தமிழிலே பண்ணமைந்த திருப்பதிகங்களைச் சிறப்புண்டாகப்பாடியருளிய, நா அரசு பதம் பரசும் நமக்கு—திருநாவுக்கரசுநாயனாரது திருப்பாதங்களைவணங்குகின்ற அடியேங்களுக்கு, உயர் பொன் நாட்டு அரசு நல்கும்—(அத்தொண்டானது) மேன்மையையுடைய சுவர்க்கலோகவரசாட்சியைக்கொடுத்தருளும் எ—று.

அன்று ஏ அசைநிலைகள். (கஎ)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருவாத பித்தகப பிணிக்குடையு முடற்சுமக்கும் பிறங்கைதை நீக்கி, யொருவாத சிவகதியி னுரிமைபெற நறவமல ருமிழுஞ் சேர்லை, மருவாத மளைந்துலவு மன்றுடையாற் குக்கோவை

மாலை சாத்தும், திருவாதவூரடிகளடிகள்படி யுறவணங்கிச் சென்னி சேர்ப்பாம்.

இ—ள்: பெரு வாத பித்த கப பிணிகரு உடையும்—மிக்க வாத பித்த சேட சம்பந்தமாயுதிக்கின்ற நோய்களினாற்பிடிக்கப்பட்டுஅழிகின்ற, உடல் சுமக்கும் பிறவி நீக்கி— சரீரத்தையெடுத்துழலுகின்ற பிறவித்துன்பம் நீங்கப்பெற்று, ஒருவாத சிவகதியின் உரிமை பெற—என்றுநீங்காதமோட்ச கதியின்உரித்தையடையும்படி, நறவ மலர் உமிழும் சோலை மருவாதம் அளைந்து உலவும் மன்று உடையார்க்கு— தேனைப்புட்பங்கள்சிந்துகின்ற சோலைக்கணுள்ளசுகந்தத்தை(மந்த)மாருதமானது அளாவிவந்துவீசும் கனகசபையிலெழுந்தருளியிருப்பவராகிய சிவபிரானுக்கு, கோவை மாலை சாத்தும் திருவாதவூரடிகள் அடிகள்—திருக்கோவையாராகிய பாமாலையைச்சாத்திய மாணிக்கவாசகசுவாமிகளது திருப்பாதங்களை, படி உற வணங்கி சென்னி சேர்ப்பாம்—நிலத்தில் (உறுப்புகள்)தோயும்படி பணிந்து சிரமேற்சூடக்கடவேம் எ—று. (கஅ)

## தில்லைமூவாயிரவர்.

செம்மையா ரழலொருகை துடியொருகை தரித்துமன்றிற் றிருக் கூத்தாடு, மெம்மையா ளுடைய பிரான் யாமவரி லொருவ ரென்றன் றிசைக்கப் பெற்ற, மும்மையா யிரமுனிவர் பொற் பொதுவிற் றிருப்பணிகண் முயன்று செய்வோர், தம்மையா யிரமுறைகை தொழுதவையோர் தாட்டுணை தலைமேற் கொள்வாம்.

இ—ள் செம்மை ஆர் அழல் ஒரு கை துடி ஒரு கை தரித்து—(தாருகவனத்திருடிகளாலனுப்பப்பட்ட) செந்நிறமபொருந்திய (அப்சாரவேள்வியின்)அக்கினியை ஒருதிருக்கரத்தினும் உடுக்கை மற்றொருதிருக்கரத்தினுந்தாங்கியருளி, மன்றில் திருக்கூத்து ஆடும் எம்மையாளுடைய பிரான்—கனகசபையின்கண்ணே திருநடனஞ்செய்கின்ற எம்மையடிமையாகவுடையசிவபிரான்,யாம் அவரில் ஒருவர் என்று அன்று இசைக்க பெற்ற—யாமும் அவர்களுக்குள் ஒருவரென்று அந்நாளிற்றிருவாய்மலர்ந்தருளப்பெற்ற, பொன் பொதுவில் திருப்பணிகள் முயன்று செய்வோர்— கனகசபையின்கண்ணேயுள்ள திருத்தொண்டுகள்யாவற்றையும் ஊக்கத்தோடுசெய்கின்ற, மும்மை ஆயிர முனிவர் தம்மை—மூவாயிரவர்களாகிய அந்தணர்களை, ஆயிரமுறை கைதொழுது—ஆயிரந்தரம் கைகுவித்துவணங்கி, அவையோர் தாள் துணைகள் தலை மேல் கொள்வாம்—அவர்களது உபயபாதங்களையும்எமதுசிரமிசைச்சூடக்கடவேம் எ—று. (ககூ)

## சிவனடியார்.

பொய்விரவு பவநீறு படப்புரிவெண் டிருநீறு பூசிக் கண்டி, கைவிரவு மணியினரா யஞ்செழுத்து முணர்ந்துமனக் களங்க நீங்

கி, மெய்விரவு மறைவரம்பி [illegible] தொழுகியருண் மேன்மை பூண்ட, மைவிரவு கண்டர்தொண்டர் மலரடிகள் சிரத்திருத்தி வழுத்தல் செய்வாம்.

இ—ள்: பொய் விரவு பவம் நீறு பட புரி வெண் திருநீறு பூசி—பொய்யாகிய பிறவித்துன்பம் நீறுயழியும்படிசெய்கின்ற வெண்ணிறமாகிய விபூதியைத்தரித்து, கண்டிகை விரவும் அணியினராய்—உருத்திராக்கமாலையைத் தரித்தவர்களாய், அஞ்சு எழுத்தும் உணர்ந்து—ஸ்ரீபஞ்சாக்ஷரங்களையும் விதிப்படியறிந்து, மன களங்கம் நீங்கி—மனத்தின்கண்ணே சிறிதும்மாசில்லாதவர்களாய், மெய் விரவும் மறை வரம்பின் நிலை கடவாது ஒழுகி—உண்மைவடிவாகியவேதங்களின் விதிமுறைகடவாத ஒழுக்கத்தையுடையவராய், அருள் மேன்மை பூண்ட— திருவருளின்மகிமையையடைந்துகொண்ட, மை விரவு கண்டர் தொண்டர் மலர் அடிகள்— நீலநிறம்பொருந்திய திருக்கண்டத்தையுடைய சிவபெருமானது அடியார்களின் மலர்போன்றபாதங்களை, சிரத்து இருத்தி வழுத்தல் செய்வாம்—சிரசின்கண்ணேசூடித் துதிக்கக்கடவேம் எ—று. (உ0)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

---

# தற்சிறப்புப்பாயிரம்.

கந்தமலர்ப் பொழில்புடைசூழ் தில்லைவனத் தறிஞர்திருக் கடைக்கணோக்கி, முந்தவுரைத் தனர்பலரு மாயினுநீ யாகமநான் மொழிவழாமற், பந்தமறுத் திடுசிவராத் திரிவிரத சரிதைதனைப் பாடுகென்னச், செந்தமிழி னுயர்விருத்தப் பாவதனுற் றிரட்டியொன்றாச் செப்ப லுற்றேன்.

இ—ள்: கந்த மலர் பொழில் புடை சூழ் தில்லைவனத்து அறிஞர்—நறுமணங்கமழாநின்ற மலர்நிறைந்தசோலைகள் பக்கத்திற்சூழ்ந்த சிதம்பரத்தின்கணுள்ள அறிவிற்சிறந்தபெரியோர்கள், திரு கடைக்கண் நோக்கி—திருக்கடாட்சவீட்சணஞ்செய்தருளி, பலரும முந்த உரைத்தனர் ஆயினும்—பலரும் முன்னமேகூறினாராயினும், ஆகம நூல் மொழி வழாமல்— ஆகமங்களிற்கூறிய கிரமந்தவறாமல், பந்தம் அறுத்திடும் சிவராத்திரி விரத சரிதை தனை—மும்மலங்களையும்நாசஞ்செய்கின்ற சிவராத்திரிவிரதமான்மியத்தைக் கூறுஞ் சரித்திரங்களை, நீ பாடுக என்ன—நீ பாடக்கடவையென்று ஆஞ்ஞாபிக்க, செந்தமிழில் உயர் விருத்த பா அதனால்—செந்தமிழ்ப்பாஷையில் உயர்வுபொருந்திய விருத்தப்பாவினால், ஒன்றாய் திரட்டி செப்பலுற்றேன்—ஒன்றுசேரக்கூட்டிப் பாடததொடங்கினேன் எ—று. (க)

வீணிலிவன் றனதுமடம் வெளிப்படையாச் செய்தனனால் வித்தின் பாதி, நாணிலனென் றெனையுலகி னாவலர்க ணகுவரதை நாடிச் சற்றும், பேணிலனின் மலனிரவின் பெருமையெடுத் துரைக்குமிந்தப் பேறு கூறு, மேணிலனெற் சிவபதத்து ளிருத்து மெனும் விருப்புளத்தை யீர்த லாலே.

இ—ள். வீணில் இவன் தனது மடம் வெளிப்படையா செய்தனன்-ஒரு பயனுமின்றி இவன் தன்னறியாமையை யார்க்கும்வெளிப்படப் புலப்படுத்தினான், ஆல வித்தின் பாதி நாண் இலன் என்று-ஆலம்வித்தின்பாதியளவாயினும் இவனிடத்தில்வெட்கமில்லையென்று, நாவலர்கள் உலகில எனை நகுவர்-பண்டிதர்கள் உலகத்தில் என்னையிகழுவார்கள், அதை நாடி சற்றும் பேணிலன்—அதனைக்குறித்துச்சிறிதாயினும் யான் சிந்திக்கின்றிலேன் (ஏனெனில்), நின்மலன் இரவின் பெருமை எடுத்து உரைக்கும் இந்தப்பேறு—மலரகிதராகியசிவபெருமானது திரு இரவின்மகிமையை எடுத்துக்கூறுகின்ற இந்தப்பேறானது, கூறும் ஏண் இலன் என்—அவற்றைக்கூறத்தக்க ஆற்றலிலனாகியஎன்னை, சிவ பதத்துள் இருத்தும் எனும் விருப்பு—சிவலோகத்தில்இருத்தும் என்கின்றவிருப்பமானது, உளத்தை ஈர்தலால்—என்மனத்தையிழுத்தகாரணத்தால் எ—று.

ஏ அசை. (உ)

## வேறு.

அரியநற் பரத விதிமுறை வழுவா தாடுந ராடல்கண் டுவப் போர், விரிசினைத் தருவில் வாழ்கவி நடமுங் கண்டுள விருப் பொடு வியப்பார், தெரிதமிழ்ப் புலவ ரமிழ்தெனத் தெருட்டுஞ் செய் யுள்கேட் டகமகிழ் சிறந்தோ, ருரியரென் புன்சொற் கவிசெவி யேற்றுள் ளுவப்புறற் கென்பதா லுரைத்தேன்.

இ—ள் அரிய நல் பரத விதிமுறை வழுவாது ஆடுநர் ஆடல் கண்டு உவப்போர்-அரிதாகிய நல்ல பரதசாஸ்திரத்தின் விதிக்கிரமந் தவறாமல் ஆடுகின்ற நாடகர்களது நடனத்தைக்கண்டு மகிழ்பவர்கள், விரிசினை தருவில வாழ் கவி நடமும் கண்டு உள விருப்பொடு வியப்பார்-பரந்தகொம்பர்களையுடைய விருட்சங்களில் வாசஞ்செய்கின்ற வானரங்களின் நடனத்தையும் பார்த்து உள்ளத்திற்பொருந்திய இச்சையுடன் மகிழ்வார்கள் (அதுபோல), தெரி தமிழ் புலவர் அமிழ்து என தெருட்டும் செய்யுள் கேட்டு- தமிழ்ப்பாஷையை நன்கறிந்த கல்விமான்கள அமுதத்தைப்போலக்கூறிய இன்பத்தைக் கொடுக்கும் பாக்களைச் செவியுற்று, அக மகிழ் சிறந்தோர்— மனமகிழ்ச்சி கொள்ளுகின்ற (புலமையையுடைய)பெரியோர்கள், என் புன் சொல் கவி செவி ஏற்று— எனது எளியசொற்களாலமைந்த இப்பாக்களையுந் தமது செவியேற்று, உள உவப்பு உறற்கு உரியர் என்பதால் உரைத்தேன்— மனமகிழ்ச்சியடைதற்கும் உரிமையையுடையரென்னுந் துணிபால இந்நூலைப்பாடினேன் எ- று.

நற்சிறப்புப்பாயிரம்முற்றிற்று.

ஆக விருத்தம்

---

# சிவராத்திரியுற்பவச்சருக்கம்.

திலக வாணுதற் கலைமகள் செறிதலாற் றினமு
மிலகு நான்மறைத் தொனிநனி யிரைத்திடு தலினு
லலகிலா வுயிர் படைக்குநான் முகற்கிணை யாமென்
றுலகு போற்றுநை மிசவன வளஞ்சிறி துரைப்பாம்.

இ—ள் திலக வாள் நுதல் கலை மகள் செறிதலால்—பொட்டணிந்து விளங்குகின்ற ஒள்ளியதிருநெற்றியையுடைய சரசுவதிதேவிவாசஞ்செய்தலினாலும், தினமும் இலகும் நால் மறை தொனி நனி இரைத்திடுதலினால்—எந்நாளும்விளங்குகின்ற நான்குவேதங்களினது கோஷமும் மிகவொலித்தலினாலும், அலகு இலா உயிர் படைக்கும் நான்முகற்கு இணையாம என்று—அளவிறந்த ஆன்மவர்க்கங்கள்யாவற்றையும் படைத்தருளுகின்ற சதுர்முகப்பிரமாவுக்குச் சமமுடையமென்று, உலகு போற்றும் நைமிச வன வளம் சிறிது உரைப்பாம்—உலகத்தாரால் புகழ்ந்துரைக்கப்படுகின்ற நைமிசாரணியத்தினது வளங்களைச் சிறிதுகூறுவாம் எ—று. (க)

மண்ட லந்தனைச் செங்கனிப் பவளவாய் மடுத்தன்
றுண்ட முண்டகக் கட்புரு டோத்தம னுறைவை
குண்ட மொண்டழற் கண்ணினன் குலவுல கொப்பென்
றண்டர் யாவரும் புகழ்வது நைமிசா ரணியம்.

இ—ள் நைமிசாரணியம்—அந்தநைமிசவனமானது, மண்டலம் தனை செம் கனி பவள வாய் மடுத்து அன்று உண்ட—பூமண்டலத்தைச் செந்நிறம்பொருந்திய (கொவ்வைக்)கனியைப்பொத்த பவளம்போன்ற தமதுதிருவாயிலிட்டுப் பண்டைநாளிலுண்டருளிய, முண்டக கண் புருட உத்தமன்—தாமரைககண்ணையுடையவரும் புருடோத்தமருமாகிய மகாவிஷ்ணுமூர்த்தி, உறை வைகுண்டம்—எழுந்தருளியிருக்கின்ற வைகுண்டலோகத்துக்கும், ஒள் தழல் கண்ணினன் குலவு உலகு ஒப்பு என்று—ஒளிபொருந்திய அக்கினிநேத்திரத்தையுடையராகிய சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற சிவலோகத்துக்குஞ் சமமுடையமென்று, அண்டர் யாவரும் புகழ்வது—எத்தேவர்களாலும் புகழ்ந்துரைக்கப்படுவது எ—று. (உ)

முனிவர் முன்னைநாண் முண்டகத் தவிசினன் முகனைப்
புனித மாதவம் புரிந்தியாம் வைகிடப் புவியி
லினிய நற்றல மியம்புதி யென்னவெண் கமல
வனிதை கேள்வனோ் நுண்ணுதித் தருப்பையை வாங்கி.

இ—ள். முனிவர்—முனிவர்கள் எல்லோரும், முன்னை நாள்—பண்டைக்காலத்தில், முண்டக தவிசில் நான்முகனை—தாமரையாசனராகிய

பிரமதேவரைப்(பார்த்து), புனித மா தவம் புரிந்து யாம் வைகிட—பரிசுத்த மாகிய பெருமைபொருந்திய தவங்களைச்செய்து யாம்வசித்தற்கு, புவியில் இனிய நல் தலம் இயம்புதி என்ன-பூமியின்கண்ணேயுள்ளதானங்களில் பலவகைச்சுகங்கட்குமுரிய நல்ல ஒருக்ஷேத்திரத்தைக் கூறியருளவேண்டுமென்று வேண்டலும், வெண் கமல வனிதை கேள்வன்—வெண்டாமரையாசனியாகிய சரசுவதிக்கு நாயகராகும்பிரமதேவரானவர், ஓர் நுண் நுதி தருப்பையை வாங்கி--ஒரு நுட்பமாகிய நுதிபொருந்திய தருப்பைப்புல்லையெடுத்து எ—று. (௩)

இருகை யால்வளைத் துருட்டியீ திறுத்திடு மிடத்திற்
பொருவின் மாதவம் புரிதிரென் றுரைத்திடப் போனார்
கருது மக்குசை தங்கிய கானமற் றதனாற்
றிருவு றைந்திடு நைமிச வனமெனச் சிறந்த.

இ—ள்: இரு கையால் வளைத்து உருட்டி—(தமது) இரண்டுதிருக்கரங்களினாலும் அத்தருப்பைப்புல்லைச் (சக்கரம்போல)வளைத்து உருளச்செய்து, ஈது இறுத்திடும் இடத்தில்—இச்சக்கரமானது தங்குகின்றதானத்தில், பொரு இல் மா தவம் புரிதிர் என்று உரைத்திட போனார்— ஒப்பில்லாத மகிமைதங்கிய தவத்தைச்செய்யுங்களென்று கூறியருளலும் அப்பொழுதேயதன்பின்சென்றனர், கருதும் அக்குசை தங்கிய கானம்—எண்ணப்படுகின்ற அத்தருப்பைச்சக்கரமானது சென்றுதங்கியவனம், அதனால்—அக்காரணத்தால், திரு உறைந்திடும் நைமிச வனம் என சிறந்த— இலட்சுமீகரம்பொருந்திய நைமிசாரணியமென்று பெயர்பெற்றுச் சிறப்படைந்தது எ—று.

மற்று அசைநிலை. (௪)

துன்று கொன்றையாற் பசுங்கொடி விரவலாற் சுடுதீ
யென்று மேவலாற் கடுவிடப் பணிகளெய் துதலாற்
கன்று மானுகண் டுறைதலாற் கதிர்மணிக் கனக
மன்று ளாடிய பரம்பர னிகர்க்குமவ் வனமே.

இ—ள்: அவ்வனம்—அந்த நைமிசாரணியமானது, துன்று கொன்றையால்—நெருங்கிய கொன்றைமரங்கள் நிற்றலினாலும், பசும் கொடி விரவலால்- பச்சைக்கொடிகள் நெருங்கியிருத்தலினாலும், சுடு தீ என்றும் மேவலால்—சுடுகின்ற அக்கினியானது எந்நாளும் (அவியாமல்)இருத்தலினாலும், கடு விட பணிகள் எய்துதலால்— கொடியநஞ்சையுடைய சர்ப்பங்களிருத்தலினாலும், மான் கன்று உகண்டு உறைதலால்-மான்கன்று துள்ளி வசித்தலினாலும், கதிர் மணி கனக மன்றுள் ஆடிய பரம்பரன் நிகர்க்கும்— கிரணங்களையுடைய இரத்தினகசிதமாகிய கனகசபையின்கண்ணே நிர்த்தஞ்செய்கின்ற சிவபெருமானை ஒக்கும் எ—று.

ஏ-அசைநிலை. சிவபிரானுக்குக்கூறுங்கால், கொன்றை-கொன்றைமலர். பசுங்கொடி-உமாதேவி. (௫)

ஆண்டெ ழுந்துயர் சோலைக ளறவருக் கடைகாய்
மாண்ட நற்கனி மலர்முதல் வழங்கினஞ் சுரர்க்கு
மீண்ட ளித்திட வேண்டுமென் றெண்ணிவா னளவாய்
நீண்ட வன்றடஞ் சினைக்கையை நீட்டியே நிற்கும்.

(ரு)—ள். ஆண்டு எழுந்து உயர் சோலைகள்— அந்நைமிசாரணியத்திலே தோன்றியுயர்ந்த சோலைகளானவை, அறவருக்கு—அங்கேயுள்ள முனிவர்களுக்கு, அடை காய் மாண்ட நல் கனி மலர் முதல் வழங்கினம்—பத்திரங்களும் காய்களும் மாட்சிமைபொருந்திய நல்ல கனிவர்க்கங்களும் புஷ்பங்களும் ஆகிய இவற்றைக்கொடுத்தோம், சுரர்க்கும்—தேவர்களுக்கும், ஈண்டு அளித்திட வேண்டும் என்று எண்ணி— இப்பொழுது (யாம் அவ்வஸ்துக்களை) கொடுக்கவேண்டுமென்று நினைத்து, வான் அளவாய்—ஆகாயமளவிற்கு, நீண்ட வன் தடம் சினைக் கையை நீட்டி நிற்கும்—நீட்சிபொருந்திய வலிய விசாலித்த கொம்புகளாகிய தம் கைகளையுயர்த்தி நிற்கின்றன எ—று.()

சடையர் குண்டிகை தரித்திடுங் கரத்தர்கண் டிகையின்
றொடைய ராதப மறைத்திடுந் தோகைமென் பீலிக்
குடையர் செய்யகற் றோய்த்திடுங் கோடிக மிறைஞ்சி
யுடையர் மாதவத் துறுவர்க ளுறுவதவ் வனமே.

(௬)—ள்: அவ்வனம்—அந்த நைமிசாரணியம், சடையர்—சடைமுடியையுடையவர்களும், குண்டிகை தரித்திடும் கரத்தர்—கமண்டலத்தைத் தாங்கிய கைகளையுடையவரும், கண்டிகையின் தொடையர்— உருத்திராக்கமணி மாலையையுடையவரும், ஆதபம் மறைத்திடும் தோகை மென் பீலிக்குடையர்—சூரியவெப்பத்தைத் (தம்மேற்படாது) மறைக்கின்ற மிருதுவாகிய மயிலிறகுகளினாற்செய்யப்பட்ட குடைகளையுடையவரும், செய்ய கல் தோய்த்திடும் கோடிகம் இறைஞ்சி உடையர்—சிவந்த காவிக்கல் தோய்க்கப்பெற்ற வஸ்திரங்களையும் மரவுரிகளையும் உடைகளாகக்கொண்டவரும் (ஆகிய), மா தவத்து உறுவர்கள் உறுவது—மகாதவத்தையுடைய முனிவர்கள் வாசஞ்செய்யப்படுவது எ—று.

ஏ-அசை. (எ)

ஆத பந்தெறு வேனினா ளம்புதந் துளித்துச்
சீத நீர்பொழி மாரிநா ளிமம்பெயுந் தினங்கண்
மாத வந்தவ றுதிலைத் தும்பரு மதிக்கப்
பாத கங்களைக் கடிந்திடும் படிவரப் படிவர்.

(இ)—ள்: அப்படிவர்—அந்தமுனிவர்கள், ஆதபம் தெறும் வேனில் நாள்—வெயில்வருத்துகின்ற வேனிற்காலத்தும், அம்புதம் துளித்து சீத நீர் பொழி மாரி நாள்—மேகங்களானவை திவலைகளாகக் குளிர்ச்சிபொருந்திய

மழையைச்சொரிகின்ற மாரிக்காலத்தும், இமம் பெயும் தினங்கள்-பனிக்கா லத்தும், மா தவம் தவறுது இழைத்து—பெருமைபொருந்திய தவங்களை வழுவின்றிச்செய்து, உம்பரும் மதிக்க—தேவர்களும் வியக்கும்படி, பாதகங்களைக் கடிந்திடும் படிவர்—பாவங்களைநசித்த புண்ணியத்திருமேனியையுடையவர்கள் எ—று. (அ)

உருப்ப வெந்தழல் வேட்பவ ரொண்மலர் சமிதை
தருப்பை தண்டளி ரெடுப்பவர் தமனியச் சிகரப்
பருப்ப தந்தனைத் தனுவெனக் குனிசெய்த பரனை
விருப்ப மோடருச் சிப்பவ ரெண்ணிலார் விளம்பில்.

இ—ள்: விளம்பில்—கூறுமிடத்து, எண்ணிலார்—(அங்குதவஞ்செய்கின்ற) எண்ணிறந்த மேலோர்கள், உருப்ப வெம் தழல் வேட்பவர்—சொலிசகும்படி வெவ்விய அக்கினியைவளர்த்து யாகஞ்செய்பவர்களாயும், ஒண் மலர் சமிதை தருப்பை தண் தளிர் எடுப்பவர்—ஒளிபொருந்திய புஷ்பங்களையும் யாகவிறகுகளையும் தருப்பைப்புல்லையுங் குளிர்ச்சிபொருந்திய பத்திரங்களையுஞ் சேகரிப்பவர்களாயும், தமனியச் சிகரப் பருப்பதம் தனை—பொற்கொடுமுடிகளையுடைய மகாமேருகிரியை, தனு எனக் குனிசெய்த பரனை—வில்லாக வணக்கிய பரமசிவனை, விருப்பமோடு அருச்சிப்பவர்— அன்போடு அருச்சனைசெய்பவர்களாயுமுள்ளவர்கள் எ—று. (கூ)

இன்ன நைமிச வனத்தியல் பனைத்தையு மெடுத்து
வன்ன மாமணி கிடந்தொளிர் பல்றலை வாயாற்
சொன்ன வூழிகள் பற்பல தொலைந்திடத் துணிந்து
பன்ன காதிபன் பகரினும் பகர்ந்திடற் கரிதால்.

இ—ள்: இன்ன நைமிச வனத்து இயல்பு அனைத்தையும்— இத்தகைய நைமிசாரணியத்தினது இயற்கைகள் யாவற்றையும், பன்னக அதிபன்—ஆதிசேடனுனவன், வன்ன மா மணி கிடந்து ஒளிர் பல் தலை வாயால்—அழகிய பெரிய இரத்தினங்கள்கிடந்து ஒளிகாலுகின்ற ஆயிரஞ்சிரங்களினுமுள்ள வாய்களினல், சொன்ன ஊழிகள் பல் பல தொலைந்திட துணிந்து எடுத்துப் பகரினும்—(கணிதநூலார்) வகுத்துக்கூறிய பல்லூழிகாலங்கள் தொலையுமளவும் துணிந்தெடுத்துப் புகன்றாலும், பகர்ந்திடற்கு அரிது—கூறிமுடித்தற்கியலாது எ—று.

ஆல்-அசைநிலை. (கO)

தெருண்ம னத்துயர் வியாதன்மா ணக்கரிற் சிறந்தோன்
மருண்ம னத்தினர்க் களவிடற் கரியனான் மறையின்
பொருண்ம னத்துணர் சூதன்முற் புராணநூல் வல்லோ
னருண்ம னத்துட னனையநை மிசவன மடைந்தான்.

இ—ள்: தெருள் மனத்து உயர் வியாதன் மாணாக்கரில் சிறந்தோன்—ஞானவறிவினையுடைய மனத்தைக்கொண்ட மேலவராகிய வியாசமுனிவரது மாணவருட்டலைமையுடையவரும், முன் புராண நூல் வல்லோன்—ஆதிகாலத்திற் பதினெண்புராணங்களையும் வகுத்துக்கூறிய வலிமையையுடையவரும், மருண் மனத்தினர்க்கு—மயங்குகின்ற மனத்தையுடையவர்களுக்கு, அளவிடற்கு அரிய நால் மறையின் பொருள் மனத்து உணர்சூதன்-அளந்தறிதற்கியலாத இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்கின்ற சதுர்வேதங்களின் பொருளையின்னதென்றறிந்த மனத்தையுடையவருமாகிய சூதமுனிவர், அருள் மனத்து உடன் அனைய நைமிச வனம் அடைந்தான்-அருள்நிறைந்த மனத்தையுடையராய் அந்த நைமிசாரணியத்தின்கண் வந்தருளினார் எ—று. (௧௧)

வேறு.

வந்தமா முனிவன் றனக்கெதிர் புகுந்து வருகென வுரைத்திவண் வரநீ, யெந்தமா தவஞ்செய் தனமென முகம னியம்பியங்கியாவரு மிறைஞ்சி, யந்தமா மணிப்பொற் றவிசினி லிருத்தி யருத்தியோ டருக்கிய முதலா, முந்தவா தரவிற் பூசனை விதியின் முறைதவ றுவகை முடித்து.

இ—ள்: வந்த மா முனிவன் தனக்கு எதிர் புகுந்து— ஆங்குவந்த மேலவராகிய சூதமகாமுனிவருக்கு எதிர்சென்று, வருகென உரைத்து—வந்தருளுகவென்றழைத்து, இவண் நீ வர எந்த மா தவம் செய்தனம் என முகமன் இயம்பி—இவ்விடத்திற்குத் தேவரீர் எழுந்தருளிவருவதற்கு யாங்களெத்தவத்தைச் செய்தோமென்று உபசாரவாக்குக்கூறி, அங்கு யாவரும் இறைஞ்சி—அங்கிருந்த முனிவர்களெல்லோரும் நமஸ்காரஞ்செய்து, அந்த மா மணிப் பொன் தவிசினில் இருத்தி—அழகிய பெருமைபொருந்திய இரத்தினங்கள் பதித்துப் பொன்னாற்செய்யப்பட்ட ஆசனத்தின்கண்ணேயிருக்கச்செய்து, அருத்தியோடு-உள்ளன்புடனே, அருக்கியம் முதலாப் பூசனை-அருக்கியமுதலாகிய பூசையை, ஆதரவில் விதியின் முறை தவறு உவகை முந்த முடித்து— அன்புடன் விதிக்கிரமந்தவறாமல் முதலிற்செய்துமுடித்து எ—று. (௧௨)

மழைக்கரு முகின்மின் னிறத்தசெஞ் சடில மாதவர் சூதனை நோக்கி, யிழைப்பதற் கெளிதாய்ப் பவக்கடல் சுவற்றி யிருங்கதிப் பேறுநல் குவதாய்க், குழைக்கய னடந்து கழிக்கயன் மருட்டுங் கூர்விழிக் கோதைபங் கருக்கு, முழைக்கரப் பெருமான் விரதமொன் றெமக்கீண் டுரைத்திட வேண்டுமென் றிரப்ப.

இ—ள்: மழை கரு முகில் மின் நிறத்த செம் சடில மாதவர்— மழையைப்பெய்கின்ற கரிய முகில்களினின்றுந்தோற்றுவதாகிய மின்னலை

யொத்த செந்நிறத்தைக்கொண்ட சடைமுடியைத்தாங்கிய தவசிரேட்டர்கள், சூதனை நோக்கி—சூதமுனிவரைப்பார்த்து, இழைப்பதற்கு எளிதாய்—யாவரும் அனுட்டிப்பதற்கு மிகவிலகுவானதாய், பவக் கடல் சுவற்றி இரும் கதிப்பேறு நல்குவதாய்—பிறவிச்சமுத்திரத்தை வற்றச்செய்து பெருமை பொருந்திய மோட்சப்பேற்றைக் கொடுத்தற்கு வலிமையுடையதாய், குழைக்கு அயல் நடந்து— காதணிகள்வரையுந் தாவிச்சென்று, கழி கயல் மருட்டும் கூர் விழி கோதை பங்கு இருக்கும்—(நீர்க்) கழிகளில்வசிக்கின்ற கயல்மற்சங்களையும் மருளச்செய்யுங் கூரிய திருநேத்திரங்களையுடைய உமாதேவியார் எழுந்தருளிய இடப்பாகத்தைக்கொண்ட, உழை கர பெருமான் விரதம் ஒன்று—மான்கன்றைத்தாங்கிய திருக்கரத்தையுடைய சிவபிரானுக்குரிய விரதமொன்றை, ஈண்டு எமக்கு உரைத்திட வேண்டும் என்று இரப்ப— இவ்விடத்து எங்களுக்குக் கூறியருளவேண்டுமென்று யாசிப்ப எ—று. (கரு)

நன்றென முகமு மிதயமு மலர்ந்து நயனநீர் பொழிதர விருந்தே, முன்றவ மிழைத்த பயனிது கேட்க முயன்றது நீவிர்முக் குறும்பை, வென்றமா தவத்தீர் விடையுயர்த் தருளும் விமலனுக் குரியநல் விரத, மொன்றுள தமர ரனைவரு நோற்ப துரைக் குவ னுவந்து கேட்டிடுமின்.

இ—ள்: நன்று என முகமும் இதயமும் மலர்ந்து— நல்லதென்று முகமும் மனமுமொருசேர விளக்கமுடையனவாகி, நயன நீர் பொழிதர இருந்து—கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம்சொரியச் (சிவத்தியானத்தில்) இருந்து (அதன்பின்னர்), முக் குறும்பை வென்ற மா தவத்தீர்— காமம் வெகுளி மயக்கம் ஆகிய மூவகைக்குற்றங்களையும்வென்ற பெருந்தவத்தையுடைய முனிவர்காள், நீவிர் இது கேட்க முயன்றது—நீங்களிதனைக்கேட்கும்படி முயற்சிசெய்த செயலானது, முன் இழைத்த தவப் பயன்—முன்னே (சென்றபலபிறவிகள்தோறும்) செய்ததவத்தின் பலனாகும், விடை உயர்த்து அருளும் விமலனுக்கு உரிய நல் விரதம் ஒன்று உளது— இடபக்கொடியையுயர்த்தியருளிய மலரகிதராகிய சிவபிரானுக்குரிய நல்லவிரதமொன்றுண்டு, அமரர் அனைவரும் நோற்பது—(அது) தேவர்களெல்லோராலும் அனுஷ்டிக்கப்படுவது, உரைக்குவன் உவந்து கேட்டிடுமின்—கூறுவேன் மகிழ்ச்சியுடன் சிரவணஞ்செய்மின் எ—று.

ஏ-அசை. (கசு)

மின்னைநேர் சடிலத் தவிர்மதிக் கொழுந்து மிலைச்சிய சிவனிசிப் பெருமை, அன்னவூர் தியுமோ ராயிரங் கவைநா வனந்தனு மறைந்திடற் கரிதான், மன்னுமா தவஞ்செய் நந்திவா னவற்கு வழுவையு முழுவையு முரித்தோன், முன்னைநா ளுரைத்த தென்னொரு நாவான் மொழிந்திட முடியுமோ முடியா.

இ—ள்: மின்னை நேர் சடிலத்து அவிர் மதி கொழுந்து மிலைச்சிய சிவநிசிப் பெருமை—மின்னலையொத்த சடைமுடியின்கண்ணே ஒளிபொருந்திய இளஞ்சந்திரனைத்தரித்த சிவபெருமானது திருவிரவின் மான்மியத்தை, அன்ன ஊர்தியும்—அன்னவாகனராகிய பிரமதேவரும், ஓர் ஆயிரம் கவை நா அனந்தனும்—ஆயிரம் கவர்பொருந்திய நாககளையுடைய ஆதிசேடனும், அறைந்திடற்கு அரிது—எடுத்தளவுபடுத்திக்கூறுதல் கூடாது, மன்னு மா தவம் செய் நந்திவானவற்கு—நிலைபெற்ற பெரிய தவத்தைச் செய்த நந்தியங்தேவருக்கு, வழுவையும் உழுவையும் உரித்தோன்— யானையையும் புலியையுமுரித்தருளிய சிவபெருமான், முன்னை நாள் உரைத்தது-பண்டைக்காலத்துத்திருவாய்மலர்ந்தருளியது, என் ஒரு நாவால் மொழிந்திட முடியுமோ முடியா—(அதனை) என்னுடைய ஒருநாவினால் கூறிமுடிக்க வியலுமோ இயலாது எ—று. (கரு)

உலகுயிர் பிரமன் படைப்பதுந் திருமா லுயிர்த்தொகை காப்பது முலகி, லலகிலா வளம்பெற் றியக்கர்கோ னளகை யளிப்பதுங் களிப்பொ டிந்திரன்ற, னிலகுபொன் னுலகம் புரப்பது மதிய மிரவிசெந் தழற்கிறை யிவர்க, டலைமைபெற் றதுவுஞ் சிவநிசி விரதந் தனையிழைத் தெனவுளத் துணர்வீர்.

இ—ள்: உலகு உயிர் பிரமன் படைப்பதும்—உலகத்தையும் உயிர்களையும் பிரமதேவர் சிருட்டிப்பதும், திருமால் உயிர்த்தொகை காப்பதும்—விஷ்ணுதேவர் ஆன்மாக்களையெல்லாமிரட்சிப்பதும், உலகில் அலகிலா வளம் பெற்று இயக்கர் கோன் அளகை அளிப்பதும—உலகின்கண்ணேயளவற்ற பெருஞ்செல்வத்தையடைந்து இயக்கர்களுக்குத்தலைவனாகிய குபேரன் அளகாபுரியைப்பரிபாலிப்பதும், களிப்பொடு இந்திரன்றன் இலகு பொன் உலகம் புரப்பதும்—மகிழ்ச்சியுடனே தேவேந்திரன் விளங்குகின்ற சுவர்க்கலோகத்தை ஆளுவதும, மதியம் இரவி செம் தழற்கு இறை இவர்கள் தலைமை பெற்றதுவும்—சந்திரனுஞ்சூரியனும் அக்கினிதேவனும் ஆகிய இவர்கள் முதன்மையடைந்ததுவும், சிவநிசி விரதம் தனை இழைத்து என, உளத்து உணர்வீர்—சிவராத்திரிவிரதம் அனுஷ்டித்தமையினாலென்று மனத்திலறிந்துகொள்ளக்கடவீர் எ—று. (கசு)

கூறுநான் மறையோர்க் கிருநிலம் பசும்பொற் குவைபசுக் கொடிநல் கிடினும், வேறுவே றுரைத்த விரதநோற் றிடினும் விரியுளைப் புரவியின் வேள்வி, நூறுசெய் திடினும் புளவெண் டரள நரைத்திரை கொழித்திடுங் கங்கை, யாறுமூழ் கிடினுஞ் சிவநிசி நோற்போர் பெறுபய னடைதன்மற் றரிதால்.

இ—ள்: கூறு நால் மறையோர்க்கு—(விதந்து) பேசப்படுகின்ற நான்குவேதங்களையுமறிந்த பிராமணர்களுக்கு, இரு நிலம்—பெருமைபொருந்

திய பூமியையும், பசும் பொன் குவை—பசுமையாகிய பொற்குவியல்களையு
ம், கோடி பசு நல்கிடினும்-கோடிபசுக்களையும் (தானமாகக்)கொடுத்தாலும்,
வேறு வேறு உரைத்த விரதம் நோற்றிடினும்- வெவ்வேறாய்க்கூறப்படுகின்ற
பலவிரதங்களையுமனுஷ்டித்தாலும், விரி உளை புரவியின் வேள்வி நூறுசெய்
திடினும்— பரந்த பிடர்மயிரையுடைய குதிரைகளைக்கொன்று செய்யப்ப
டுகின்ற நூறு அசுவமேதயாகங்களைச்செய்தாலும், வெண் தரளம் புரள நு
ரைத்திரை கொழித்திடும் கங்கையாறு மூழ்கிடினும்—வெள்ளிய முத்துக்க
ள் புரளும்படி நுரைபொருந்திய திரைகளைவீசுகின்ற கங்காநதியிலே ஸ்நாந
ஞ்செய்தாலும், சிவநிசி நோற்போர் பெறுபயன் அடைதல் அரிது— சிவ
ராத்திரிவிரதத்தையனுஷ்டிப்பவர்கள் அடைகின்றபயனைப் பெறுவதரிதாகு
ம் எ—று.

மற்று ஆல் அசைகள். (கள)

அந்தண ரரசர் வணிகர்வே ளாள ராதியா விழிகுலத் துதித்
த, வெந்தொழி லாள ரந்தமா விந்த விரதமே நோற்றிடி லவர்தா,
மிந்திர னயன்மா லிமையவர் முனிவர் யாவரு மிறைஞ்சிநின் றே
த்தக், கந்தடு களிறன் றுரிந்துமெய் தரித்த கண்ணுதற் கடவுளிற்
பொலிவார்.

இ—ள்: அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் ஆதியா—பிராமணரு
ம் அரசரும் வைசியரும் சூத்திரருமுதலாக, இழி குலத்து உதித்த வெம்
தொழிலாளர் அந்தமா—ஈனியகுலங்களிலே தோன்றிய சண்டாளரிறுதியா
க, இந்த விரதமே நோற்றிடில்—இச்சிவராத்திரிவிரதத்தையனுஷ்டிப்பாரா
கில், அவர் தாம்—அவர்கள், இந்திரன் அயன் மால் இமையவர் முனிவர் யா
வரும் இறைஞ்சி நின்று ஏத்த—இந்திரன் பிரமா விஷ்ணு தேவர்கள் முனி
வர்களாகிய எல்லோரும் வணங்கிநின்று துதிக்க, கந்து அடு களிறு அன்று
உரித்து மெய் தரித்த—கட்டுத்தறியை முரிக்கின்ற யானையையந்நாளிலுரி
த்துத் தமது திருமேனியிலணிந்தருளிய, கண்ணுதற் கடவுளிற் பொலிவார்-
நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது திருவுருவத்தைப்பெற்று வாழ்
வார்கள் எ—று. (கஅ)

ஆவினைப் புரிநூ லணிதரு மருமத் தருமறைக் கிழவரைக் க
ருங்கண், மாவினை யளித்த கடலமு தனைய மழலைமென் மொழிச்
சிறு மகாரைக், காவினைப் பொருவுங் கருங்குழற் செவ்வாய்க் க
ன்னிய ரிவர்களைச் செகுத்த, தீவினை யனைத்தும் பரிதிமுன் னிரு
ள்போற் சிவநிசி நோற்றிடற் றீரும்.

இ—ள் ஆவினை—பசுக்களையும், புரி நூல் அணிதரும் மருமத்து அ
ருமறை கிழவரை—முப்புரிநூலணிந்த மார்பையுடைய அரிய வேதங்களை
யோதுகின்ற பிராமணர்களையும், கரும் கண் மாவினை அளித்த கடல் அமு

து அலைய—கரிய கண்களையுடைய இலக்குமிதேவியைப்பெற்ற திருப்பாற் கடலிற்றோன்றியவமுதத்தையொத்த, மழலை மென் மொழி சிறு மகாரை—நிரம்பாமென்சொல்லையுடைய சிறுகுழந்தைகளையும், காவிளை பொருவும் கரும் குழல் செவ்வாய் கன்னியர் இவர்களை—சோலையையொத்த கரியகூந்தலையுஞ் சிவந்த வாயையுமுடைய பெண்களையுமாகிய இவர்களை, செகுத்த தீவினை அனைத்தும்—கொன்ற தீச்செயல்கள் யாவும், சிவநிசி நோற்றிடில்-சிவராத்திரிவிரதத்தையனுட்டிப்பின், பரிதி முன் இருள் போல் தீரும்—சூரியனுக்கு முன்னேயழிகின்ற இருளைப்போல நீங்கும் எ—று. (௧௯)

மறைகளிற் சாம மகங்களிற் புரவி மகமலை களின்மக மேரு நிறைபுன னதியிற் கங்கையோ ரைந்தாய் நிகழ்ந்தபூ தத்திலா காய, முறைதெரி சுரரிற் கருமுகி லூர்தி முதன்மைபெற் றுயர்ந்த வாறென்ன, வறைதரு விரத மனைத்தினு முரைக்கு மரனிர வதிகமென் றறிமின்.

இ—ள்: மறைகளில் சாமம்—வேதங்களுக்குள்ளே சாமவேதமும், மகங்களில் புரவிமகம்—யாகங்களுக்குள்ளே அசுவமேதயாகமும், மலைகளில் மகமேரு—பருப்பதங்களுக்குள்ளே மகாமேருமலையும், நிறை புனல் நதியில் கங்கை—நிறைந்த சலத்தைக்கொண்ட நதிகளுக்குள்ளே கங்கைநதியும், ஓர் ஐந்தாய் நிகழ்ந்த பூதத்தில் ஆகாயம்— ஒப்பற்ற பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென ஐந்தாக விளங்குகின்ற பூதங்களுக்குள்ளே ஆகாயமும், முறை தெரி சுரரில் கரு முகில் ஊர்தி— விதிவிலக்குகளையறிந்த தேவர்களுக்குள்ளே கரிய மேகவாகனனாகிய இந்திரனும், முதன்மை பெற்று உயர்ந்தவாறு என்ன—மேன்மையடைந்துயர்ந்தாற்போல, அறைதரு விரதம் அனைத்தினும்—கூறப்படுகின்ற விரதங்களெல்லாவற்றினும், உரைக்கும் அரன் இரவு அதிகம் என்று அறிமின்— கூறப்படுகின்ற சிவராத்திரிவிரதமொன்றே விசேடித்ததென்றறியக்கடவீர் எ—று. (௨௦)

மற்றொரு விரதஞ் சிவநிசிக் கிணையா மதிப்பது மாண்டுமீண் டுதித்துப், பெற்றன தொழில்க ளியற்றிநின் றுழலும் பிரமன்மான் முதலிமை யவரைப், பற்றலர் புரமோர் நொடியினி லடலை படவட வரைகுனித் தருளுங், கற்றையஞ் சடிலக் கண்ணுதற் கிணையென் றறிவிலா ருரைப்பது கடுக்கும்.

இ—ள்: மற்று ஒரு விரதம் சிவநிசிக்கு இணையா மதிப்பது—வேறெந்தவிரதத்தையாவது சிவராத்திரிவிரதத்துக்குச் சமமுடையதாக எண்ணுவது, மாண்டு மீண்டு உதித்து பெற்றன தொழில்கள் இயற்றி நின்று உழலும்—இறந்து பின்னும் பிறந்து தாம்பெற்ற தொழில்களைச்செய்து நின்றலைகின்ற, பிரமன் மால் முதல் இமயவரை— பிரமா விஷ்ணுமுதலிய தேவர்களை, பற்றலர் புரம் ஓர் நொடியினில் அடலை பட வடவரை குனித்து அரு

ளும்—அன்பிலிகளாகிய அசுரர்கள்வாழ்ந்த முப்புரங்களையும் கணப்பொழு தினுள்ளே சாம்பராகும்படி மகாமேருமலையை வில்லாகவளைத்தருளிய, கற்றை அம் சடில கண்ணுதற்கு இணை என்று— கூட்டமாகிய சடாமுடியையுடைய சிவபெருமானுக்குச் சமமென்று, அறிவிலார் உரைப்பது கடுக்கும்— அறிவில்லாதவர் சொல்வதையொக்கும் எ—று. (உக)

அன்புளா ரன்றி யன்பிலா ரெனினு மானிர விளினுண வகற்றிப், புன்புலா லுடலம் வருந்திடத் துயில்கண் பொருந்திடா தருச்சனை புரிந்தாற், றுன்பநீள் பிறவிச் சுழிக்கட லழுந்தித் துயருறார் துறக்கமே முதலா, மின்பமார் பதத்திற் போகமார்ந் தமலனிணைப்பதம் பெறுவரென் றிசைத்தான்.

இ—ள்: அன்புளார் அன்றி அன்பிலார் எனினும்— அன்புள்ளவர்களல்லாமல அன்பில்லாதவர்களாயினும், அரன் இரவினில் உணவு அகற்றி- சிவராத்திரிதினத்திலே உணவையொழித்து, புன் புலால் உடலம் வருந்திட—எளிய மாமிசத்தாலாகிய உடம்பானது வருந்தும்படி, கண் துயில் பொருந்திடாது—நித்திரை செய்யாது, அருச்சனை புரிந்தால்—சிவபூசைபுரிந்தாராயின், துன்பம் நீள் பிறவி சுழி கடல் அழுந்தி துயர் உறார்—துன்பம்மிகுந்த பிறப்பாகிய சுழியைக்கொண்ட சமுத்திரத்தின்கண்ணே விழுந்துவருந்தார், துறக்கமே முதலாம் இன்பம் ஆர் பதத்தில் போகம் ஆர்ந்து— சுவர்க்கலோகம்முதலாகிய இன்பம் நிறைந்த மேலுலகங்களிற் பலவகைச் சுகங்களையுமனுபவித்து, அமலன் இணை பதம் பெறுவர் என்று இசைத்தான்— முடிவில் நிர்மலராகிய பரமசிவனது இரண்டு திருப்பாதங்களையுமடைவரென்று கூறியருளினார் எ—று. (உஉ)

இனையன மொழிகள் கனைகட லமிழ்த மெனச்செவிப் புலம்புக முனிவ, ரனைவரு மகிழ்ந்து மெய்ம்மயிர் பொடிப்ப வங்கையாற் றொழுதுபைங் குவளைச், சுனைபயில் கயிலைச் சிவநிசி விரதத் தோற்றமு நோற்றிடு மியல்பும், வினையக றவத்துச் சூதமாமுனிவ விரித்துரைத் தருளென விளம்பும்.

இ—ள்: இனையன மொழிகள் கனை கடல் அமிழ்தம் என செவிப்புலம் புக—இவ்வாறாகிய வார்த்தைகளெல்லாம் ஒலிக்கின்ற திருப்பாற்சமுத்திரத்திற்றோன்றிய அமுதத்தைப்போலச் செவிவழியே செல்லுதலும், முனிவர் அனைவரும் மகிழ்ந்து—(அந்நைமிசாரணியவாசிகளாகிய) முனிவர்களெல்லோருமானந்தமடைந்து, மெய் மயிர் பொடிப்ப அம் கையால் தொழுது— சரீரமெங்கணும் ரோமாஞ்சங்கொள்ள அழகிய கைகளைக்குவித்துத் தொழுது, பைங்குவளை சுனை பயில் கயிலை சிவநிசி விரத தோற்றமும்—பசுமையாகிய குவளைமலர்கள்பொருந்திய தடாகங்கள்விளங்குகின்ற கயிலாயகிரியின்க

ண்ணேயெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது திருவிரவிற்பொருந்திய விரதத்தினுற்பவத்தையும், நோற்றிடும் இயல்பும்—அவ்விரதத்தையனுஷ்டிக்குமுறைமையையும், வினை அகல் தவத்து சூத மா முனிவ—தீவினைமுழுவதும் நீங்கப்பெற்ற தவத்தான்மிக்க சூதமகாரிஷியே, விரித்து உரைத்து அருளென— விரித்துச்சொல்லியருளுகவென்று வேண்ட, விளப்பும்— அம்முனிவர் கூறுவாராயினர் எ—று. (உக)

பெற்றுயர் கற்ப மீற்றுல கீன்ற பிதாமக னுலந்துபே ருலக,
முற்றுமற் றொடுங்கிப் பிரளயத் துயிர்கண் முடிந்திடுஞ் சங்குலி
னுளத்தன், புற்றுமா மறையா கமவிதிப் படிவண் டூதுதே னு
ண்டுபாட் டயரும், பொற்றுணர்க் கடுக்கைத் தொடைமிடை சடி
லப் புனிதனை யருச்சனை புரிந்தாள்.

இ—ள் பெற்று உயர் கற்ப ஈற்று உலகு ஈன்ற பிதாமகன் உலந்து-உயர்வுபொருந்திய கற்பாந்தத்தில் எல்லாவுலகங்களையுஞ் சிருட்டித்த பிரமதேவரிறக்கப்பெற்று, பேருலகம் முற்றும் ஒடுங்கி—பெரியவுலகங்களெல்லாம் நசிந்து, பிரளயத்து உயிர்கள் முடிந்திடும் சங்குலின்—பிரளயவெள்ளத்திலே சர்வான்மாக்களும் அழிந்தவிரவில், உமா உளத்து அன்புற்று— உமாதேவியார் திருவுளத்திலே யன்புகொண்டு, வண்டு ஊதுதேன் உண்டு பாட்டு அயரும்—வண்டுகள் ஊதுகின்று தேனைப்பருகியிசைபாடுகின்ற, பொன் துணர் கடுக்கைத் தொடை மிடை சடிலப் புனிதனை—பொன்போன்ற விதழ்களபொருந்திய கொன்றைமலராற் சமைக்கப்பட்ட மாலையையணிந்த சடைமுடியையுடைய பரிசுத்தராகிய சிவபெருமானை, மறை ஆகம விதிப்படி— வேதாகமங்களிற்பொருந்திய விதிதவறாமல, அருச்சனை புரிந்தாள்—பூசனைசெய்தனர் எ—று.

மற்று-அசை. (உச)

யாமமோர் நான்குஞ் சென்றகன் றுகாந்தத் திருட்பொழு
தகன்றபி னிதழித், தாமமார் புனைந்த சோமசே கரன்பொற் று
ளிணை பணிந்தவன் றனது, வாமமா ரிமய வல்லியின் றனையான்
வழிபடு சங்குல்வா னுவந்து, மாமகீர் வெளியுலகுளோ ரெவருஞ்
சிவநிசி யெனாவின் றிடவும்.

இ—ள் யாமம் ஓர் நான்கும் சென்று அகன்று— நான்குசாமங்களும்போய்க்கழிந்து, உகாந்தத்து இருட்பொழுது அகன்றபின்—யுகமுடிவினிரவு கழிந்தபின்பு, அவன் தனது வாமம் ஆர் இமய வல்லி— அப்பெருமானதிடப்பாகத்திலெழுந்தருளிய இமயமலையரசன் புத்திரியாராகிய உமாதேவியார், இதழித் தாமம் ஆர் புனைந்த சோமசேகரன் பொன் தாள் இணை பணிந்து— கொன்றைமலர்மாலையையும் ஆத்திமாலையையுந்தரித்த சந்திரசேகரராகிய சிவபெருமானது பொன்மயமாகிய உபயபாதங்களையும் நமஸ்கரித்

து, யான் இன்று உனை வழிபடும் கங்குல்—நான் இன்றுதேவரீரை வழிபட்ட இவ்விரவை, வானவரும் நாம நீர் வேலி உலகுளோர் எவரும்— தேவர்களும் கடல்சூழ்ந்த பூமியின்கண்ணேயுள்ள மனுடர்களும் மற்றும்யாவரும், சிவநிசி என நவின்றிடவும்—சிவராத்திரியென்றுகூறவும் எ—று. (உரு)

இச்சிவ நிசிநோற் றியாவரா யினுமுன் னிணையடித் தாமரை கருதிப், பச்சிமத் தடைந்த பரிதிபூ ருவத்திற் பருப்பதத் துதித்திடு மளவு, நச்சிநற் பூசை புரிந்தவர் முத்தி நண்ணவும் வேண்டுமென் றிரப்ப, வுச்சியின் மணிசே ருரகபூ டணனு முமையவட் கவ்வர மளித்தான்.

இ—ள்: யாவர் ஆயினும் இச் சிவநிசி நோற்று— எச்சிறுநிலையையுடையராயினும் இச்சிவராத்திரிவிரதத்தையனுஷ்டித்து, உன் இணை அடித் தாமரை கருதி—தேவரீரது உபயபாதாரவிந்தங்களையும் சிந்தனைசெய்து, பச்சிமத்து அடைந்த பரிதி பூருவத்தில் பருப்பதத்து உதித்திடும் அளவும்— மேற்றிசையின்கண்ணே சென்றஸ்தமித்த சூரியன் கீழ்த்திசையின்கணுள்ள உதயகிரியிற்றோன்றுமளவும், நச்சி நல் பூசை புரிந்தவர்— அவாவுடனே நல்லசிவபூசையைச்செய்தவர்கள், முத்தி நண்ணவும் வேண்டும் என்று இரப்ப—மோக்ஷவின்பத்தைப் பெறுதலும்வேண்டுமென்று யாசிப்ப, உச்சியின் மணி சேர் உரக பூடணனும்—சிரசின்கண்ணே மாணிக்கரத்தினத்தைப் பொருந்திய சர்ப்பங்களையாபரணமாகவுடைய எம்பெருமானும், அவ் வரம் உமையவட்கு அளித்தான்— அவ்வரத்தையுமாதேவிக்குந்தருளினார் எ—று.

ஆதலாற் சிவராத் திரியெனு நாம மனைவரு மறைந்திட நிகழ்ந்த, தீதலாற் பரம னிரவினிற் றோற்ற மின்னுமோர் காரணமுளதென், றோதவாரிதிசூ ழுலகுளோர் பொருட்டா லுறுவர்கேட் டுவந்துள முருகச், சூதமா முனிவன் வியாதன்முன் மொழிந்த சொற்படி சொல்லுவான் றுணிந்தே.

இ—ள்: ஆதலால்—ஆகிய விக்காரணத்தால், சிவராத்திரி எனும் நாமம் அனைவரும் அறைந்திட் நிகழ்ந்தது— சிவராத்திரியென்கின்ற வித்திருப்பெயரானது யாவருஞ்சொல்லும்படிவழங்கியது, ஈது அலால்— இக்காரணமேயல்லாமல், பரமன் இரவினில் தோற்றம்-சிவராத்திரியுற்பவத்திற்கு, இன்னும் ஓர் காரணம் உளது என்று— இன்னுமொருகாரணமுள்ளதென்று, ஓதம் வாரிதி சூழ் உலகு உளோர் பொருட்டால்—நீர்நிறைந்த சமுத்திரத்தினாற்சூழப்பட்ட உலகத்தின்கணுள்ள மனுடர்களின்நிமித்தமாய், உறுவர் கேட்டு உவந்து உளம் உருக—அந்நைமிசாரணியத்துமுனிவர்கள் கேட்டு மனங்கசியும்படி, வியாதன்முன் மொழிந்த சொற்படி—வியாசமுனிவரானவர் தமக்குமுன்னேயுபதேசித்தவண்ணம், சூதமாமுனிவன் துணிந்து சொ

ல்லுவான்—சூதமகாரிஷியானவர் (அப்பெருமையைத்தம்மாலளத்தலியலாத தாயினும் பக்திவலிமையால்) துணிந்து சொல்வாராயினர் எ—று.

ஏ-அசை. (உஎ)

பின்னுமோர் கற்ப விறுதியி னிரசப் பிரசமென் கமலவீட் டிருக்கு, மன்னவா கனனு முலகுமா ருயிரு மழிந்திடு மற்றை நா ளிருண்ட, வன்னமா முகில்க ளீண்டியோ ரேழு மறிகட னீர் முகந் தெழுந்து, முன்னமே பொழிந்த பிரளயப் புனல்வான் மு கட்டள வளாவி முட்டியதால்.

இ—ள்: பின்னும் ஓர் கற்ப இறுதியில்—பின்னருமொரு (பிரம)கற் பாந்தத்தில், இரசப் பிரச மென் கமல வீட்டு இருக்கும் அன்ன வாகனனும்- இனிய தேன்நிறைந்த மிருதுவாகிய தாமரைமலரையாசனமாகக்கொண்டெ ழுந்தருளியிருக்கும் அன்னத்தைவாகனமாகவுடைய பிரமதேவரும், உலகும்- (அவரால் சிருட்டிக்கப்பட்ட) உலகங்களும், ஆருயிரும்—(அவற்றில் வாழா நின்ற) நிறைவாகிய ஆன்மாக்களும், அழிந்திடும் அற்றைநாள்—அழிந்த அ ற்றைத்தினமாகிய (சங்காரகாலத்து), இருண்ட வன்ன மா முகில்கள் ஓரே ழும் ஈண்டி—கருநிறப்பொருந்திய சப்தமேகங்களுமொன்றாகத்திரண்டு, ம றி கடல் நீர் முகந்து எழுந்து—திரைமறிகின்ற சமுத்திரத்தின்சலத்தைக்கு டித்து மேலெழுந்து, முன்னமே பொழிந்த பிரளயப்புனல்- முன்னரேபொ ழிந்த பிரளயவெள்ளமானது, வான்முகட்டு அளவு அளாவி முட்டியது—ஆ காய முகடுவரையும் நிறைந்துமுட்டியது எ—று.

ஆல்-அசை. (உஅ)

ஊறிலா னுயிருக் குயிரதா யிருக்கு மொருபொரு ளொப்பு ட னுயர்வு, வேறிலா னகண்ட பூரண மான வெறுவெளி வெறு த்தெதி ரடக்கு, மாறிலா னிமய மலைமக டனைத்தன் வாமமீ திரு த்தினேன் வாழ்நா, ளீறிலா முதல்வன் யாவரு முய்ய யோகமுற் றிருந்தன னிப்பால்.

இ—ள்: ஊறு இலான்—எவ்வகைக்குறைவுமில்லாதவரும், உயிரு க்கு உயிரதாய் இருக்கும் ஒரு பொருள்—சீவான்மாக்களுக்குப் பரமான்மாவா கவிருக்கின்ற ஒருவஸ்துவும், ஒப்புடன் உயர்வு வேறு இலான்— ஒப்புடைப் பொருளும்உயர்வுடைப்பொருளும்வேறில்லாதவரும், அகண்ட பூரணமான வெறு வெளி—கண்டிக்கப்படாது நிறைந்த சுத்தவெளியும், வெறுத்து எதி ர் அடக்கும் மாறு இலான்—பகைத்து எதிர்கொண்டு தம்மையடக்கத்தக்க பகைமையொன்றுமில்லாதவரும், இமய மலை மகள் தனை தன் வாமம் மீது இருத்தினோன்—இமவத்பர்வதபுத்திரியாராகிய உமாதேவியாரை யிடப்பாக த்தில் வைத்தருளியவரும், வாழ்நாள் ஈறு இலா முதல்வன்— முடிவில்லாத வாயுட்காலத்தையுடைய முதல்வருமாகிய சிவபெருமான், யாவரும் உய்ய

யோகம் உற்று இருந்தனன்—எல்லாவான்மாக்களும் (பாவத்தினின்று)மூய் யும்பொருட்டு யோகநிலையையடைந்திருந்தனர், இப்பால்— இதன்மேல் எ—று. (உக)

காணிமிர் துளபக் கண்ணியு மணியுங் கவின்பெறப் புனைந்திடுங்கரிய, மேனிய னளித்த சராசர மனைத்து மீளவும் படைப்பதற்கெண்ணி, யூனிமி ருடற்செங் கட்பெருங் கேழ லுருத்தரித் தாழ்ந்தபே ருலகைக், கூனிய மருப்பிற் றூங்கியப் புனலுட் குளித்துமீ தெடுத்துயர்த் தியபின்.

இ—ள்: கான் நிமிர் துளபக் கண்ணியும் மணியும் கவின் பெறப் புனைந்திடும் கரிய மேனியன்—பரிமளங்கமழுகின்ற துளசிமாலையையுங் கௌத்துவமணியையும் அழகுபொருந்தும்படி தரித்த கருவண்ணராகிய மகாவிஷ்ணுமூர்த்தியானவர், அளித்த சர அசரம் அனைத்தும் மீளவும் படைப்பதற்கு எண்ணி—தாம்முன்னே காத்தருளிய இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்களாகிய யாவற்றையும் பின்னருஞ் சிருட்டித்தற்கு நினைத்து, ஊன் நிமிர் உடல் செம் கண் பெரும் கேழல் உருத் தரித்து—தசைநிறைந்த உடலத்தையுஞ் சிவந்தகண்களையுமுடைய பெரிய (வெண்) பன்றிவடிவத்தைக்கொண்டு, ஆழ்ந்த பேர் உலகை—(பிரளயசலத்திலே) யமிழ்ந்திக்கிடந்த பெரியவுலகத்தை, அப் புனல் குளித்து—அப்பிரளயவெள்ளத்திலமிழ்ந்து, கூனிய மருப்பில் தாங்கி—வளைந்த தமது கொம்புகளிற்சுமந்து, எடுத்து மீது உயர்த்திய பின்—தூக்கியவ்வெள்ளத்தின்மேலே யுயர்த்தியபின்பு எ—று.()

சரிதிசைக் கிரிக ளெட்டுமெண் டிசையிற் றளம்பிடா வகை முதனாட்டி, விரிகதிர்ப் பசும்பொற் கொடுமுடி விளங்கு மேருவை யணிபெற நிறுத்திப், பரிவுறு முயிர்க ளனைத்து மீரேழு புவனமும் பண்டுபோற் படைத்தற், குரியநான் முகத்துக் குரவனை விரவு முந்தியம் போதினு லுதவி.

இ—ள்: சரி திசைக்கிரிகள் எட்டும் எண் திசையில் தளம்பிடாவகை முதல் நாட்டி—சரிந்த திக்குமலைகளெட்டையும் அட்டதிக்குகளிலும் உறுதியாக முதலில் நிறுத்தி, விரிகதிர் பசும்பொன் கொடுமுடி விளங்கும் மேருவை அணிபெற நிறுத்தி—பரந்த கிரணங்களையுடைய செம்பொற்சிகரங்கள்விளங்குகின்ற மகாமேருகிரியை யழகுதங்க நிலைப்படுத்தி, பரிவு உறும் உயிர்கள் அனைத்தும்— அன்புபொருந்தியவான்மவர்க்கங்களெல்லாவற்றையும், ஈரேழு புவனமும்—பதினான்குலகுகளையும், பண்டுபோல் படைத்தற்கு உரிய நான்முகத்துக் குரவனை— முன்போலச்சிருட்டித்தற்கு உரிமையையுடைய நான்குமுகங்களைக்கொண்ட பிரமாவை, விரவும் உந்தியம் போதினுல் உதவி—பொருந்திய உந்தியங்கமலத்தினின்றுந்தோற்றுவித்து எ—று.()

பங்கயத் தயனைக் கடைக்கணித் துலகம் பண்டுபோற் படைத்திடப் பணித்துத், துங்கவேற் றடங்கட் டிருமகள் சுருதி துதித்திடுந் துணைப்பதம் வருட, வெங்கண்மா மணிச்சூட் டரவணைப் புறத்து வெண்டிரைப் பாற்கட னடுவ, ணங்கண்மா ஞால முழுதுமுண் டுமிழ்ந்த வமலனங் கறிதுயில் புரிந்தான்.

இ—ள்: அங்கண் மா ஞாலம் முழுதும் உண்டு உமிழ்ந்த அமலன்—அழகிய இடமகன்றபெரிய பூமியைமுற்றவுமுண்டுகக்கிய நிர்மலராகிய மகாவிஷ்ணுமூர்த்தியானவர், பங்கயத்து அயனைக் கடைக்கணித்து—தாமரையாசனராகிய பிரமதேவரைத்திருக்கடைக்கணோக்கஞ்செய்து, உலகம் பண்டுபோல் படைத்திட பணித்து—அழிந்த உலகங்களெல்லாவற்றையும் முன்போலச்சிருட்டிக்கும்படி ஆஞ்ஞாபித்து, துங்க வேல் தடம் கண் திரு மகள் சுருதி துதித்திடும் துணை பதம் வருட— அழகுபொருந்திய வேற்படையையொத்த விசாலித்தகண்களையுடைய இலக்குமிதேவி வேதங்களினுற்றுதிக்கப்படுகின்ற உபயபாதங்களையுந்தைவர, வெம் கண் மா மணி சூட்டு அரவு அணைப்புறத்து—கொடிய கண்களையும் மாணிக்கரத்தினம்பொருந்திய உச்சியையுமுடைய சர்ப்பசயனத்தின்மேல், வெண் திரை பாற்கடல் நடுவண்— வெள்ளிய திரைகளைக்கொண்ட பாற்கடலின்மத்தியில், அறி துயில் புரிந்தான்—யோகநித்திரை செய்தருளினர் எ—று.

அங்கு-அசைநிலை. (௩உ.)

உந்தியி லுதித்த நான்மறைப் பிரம னுரைக்குமுக் காலமு முணர்ந்து, புந்தியிற் றெளிந்தீ ரேழுல குடனே புலவர்கந் தருவர்கிம் புருடர், வெந்திற லரக்க ரியக்கர்வா ளசுரர் விஞ்சையர் கருடர் பைசாசர், முந்திய சித்தர் மனுடர்நீ டுரகர் முனிவரர் முதன்முதற் படைத்தே.

இ—ள்: உந்தியில் உதித்த நால் மறைப்பிரமன்—விஷ்ணுதேவரின் கமலநாபியினின்றுந்தோன்றிய நான்குவேதங்களையுமுணர்ந்த பிரமதேவர், உரைக்கும் முக்காலமும் உணர்ந்து—கூறப்படுகின்ற இறப்புநிகழ்வெதிர்வென்னும்மூன்றுகாலங்களையுமறிந்து, புந்தியில் தெளிந்து-தமது விவேகத்திற்றெளிவடைந்து, ஈரேழு உலகுடன்—பதினான்குலகங்களையும், புலவர் கந்தருவர் கிம்புருடர்—தேவர்களையும் கந்தருவர்களையும் கிம்புருடர்களையும், வெம் திறல் அரக்கர் இயக்கர் வாள் அசுரர்—கொடிய வலிய அரக்கர்களையும் யக்ஷர்களையும் வாட்படையைக்கொண்ட அசுரர்களையும், விஞ்சையர் கருடர் பைசாசர்—வித்தியாதரர்களையும் கருடர்களையும் பிசாசபதத்தினர்களையும், முந்திய சித்தர் மனுடர் நீடு உரகர்-முதன்மைபொருந்திய சித்தர்களையும் மனுடர்களையும் நெட்டுடலினையுடைய நாகர்களையும், முனிவரர்-முனிவர்களையும், முதன் முதல் படைத்து—முன்னரேசிருட்டித்து எ—று.

ஏ-அசை. (௩௩)

பூதிய மைந்தி னனுபவம் பொருந்திப் பொருவின்முக் குணங்களைத் தழுவி, யாதியிற் புகனான் கிருபதின் மேனான் கமைந்த நூறாயிர பேத, மோதிய யோனி நாலிடத் துதிப்பித் தொற்றை யாழியந்தடந் தேரூர், சோதிவா னிரவி குளிர்கதிர் மதியந் தோற்றுவித் தனனத் துவசன்.

இ—ள்: அனத் துவசன்— அன்னக்கொடியையுடைய பிரமதேவர், பூதியம் ஐந்தின் அனுபவம் பொருந்தி—(உலகசிருட்டிப்புக்குக் காரணமாகிய) சுத்தபஞ்சபூதங்களினதும் அனுபவம் வாயக்கப்பெற்று, பொருவில் முக்குணங்களைத் தழுவி—ஒப்பில்லாத சாத்வீக இராசத தாமதங்களாகிய முக்குணங்களையும் பொருந்த அமைத்து, ஆதியில் புகல்-ஆதிகாலத்திலே கூறப்பட்டுள்ள, நான்கு இருபதின்மேல் நான்கு அமைந்த நூறு ஆயிர பேதம் ஓதிய யோனி—எண்பத்துநான்குலட்சம் யோனிபேதமாக விரித்துரைக்கப்பட்ட ஆன்மாக்களையும, நாலு இடத்து உதிப்பித்து—அண்டசம் சுவேதசம உற்பிச்சம் சராயுசம் என்னும் நான்கினதும்வழியாகத்தோற்றுவித்து, ஒற்றை ஆழி அம் தடம் தேர் ஊர் சோதி வான் இரவி- ஒற்றைச்சக்கரத்தையுடைய அழகிய விசாலித்த தேரினகண்ணேறிச்செல்லுகின்ற ஒளிபொருந்திய ஆகாயசஞ்சாரியாகிய சூரியனையும, குளிர் கதிர் மதியம்—குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய சந்திரனையும், தோற்றுவித்தனன்—சிருட்டித்தனர் எ—று. (௩௪)

பாருல கெவையுஞ் சராசரத் தொகையும் படைத்தபின் பண்ணவர் முதலாச், சீருல விடுமீ ரொன்பது கணமுந் திரண்டிரு மருங்குசே விப்பக், கூருல வியவெள் ளுகிர்ப்பெரும் பேழ்வாய்க் கோளரி சுமந்தபொற் றவிசிற், காருல வியமைக் குழற்கருந் தடங்கட் கலைமகள் கொழுநன்வீற் றிருந்தான்.

இ—ள் பாருலகு எவையும் சர அசர தொகையும் படைத்தபின்—பூமண்டலங்கள்யாவற்றையும் அவற்றில் வாழாநின்ற இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்களையுஞ் சிருட்டித்ததன்மேல், பண்ணவர் முதலா சீர் உலவிடும் ஈரொன்பது கணமும்—தேவர்கள்முதலாகச் சிறப்புப்பொருந்திய பதினெட்டுவகைக கணத்தவர்களும், திரண்டு இரு மருங்கு சேவிப்ப— கூடிநின்று இரண்டுபக்கங்களினுஞ் சேவைபுரிய, கூர் உலவிய வெள் உகிர்— கூர்மைதங்கிய வெள்ளிய நகங்களையும், பெரும் பேழ்வாய்—பெரிய பகிர்ந்த வாயையுமுடைய, கோளரி சுமந்த பொன் தவிசில்—சிங்கங்களினாலே தாங்கப்பெற்ற அழகிய ஆசனததின்மேல், கார் உலவிய மைக்குழல்— கருமையமைந்த மேகத்தையொத்த கூந்தலையும், கரும் தடம் கண்— கரிய விசாலித்த கண்களையுமுடைய, கலைமகள் கொழுநன் வீற்றிருந்தான்—சரஸ்வதிநாயகராகிய பிரமதேவர் வீற்றிருந்தனர் எ—று. (௩௫)

பின்னரோர் தினத்திற் றான்வகுத் தமைத்த பேருல கனைத் தையு நோக்கச், சொன்னமா கணங்கள் சூழ்வர வெழுந்து துல ங்குமே லுலகுபா தலங்கள், பொன்னவிர் குடுமிப் பூதர முதலாப் போயவன் கண்டுடல் புளகித், தென்னினு முதல்வ ரினிப்பிற ரொருவ ரிலரென விருஞ்செருக் குற்றே.

இ—ள்: பின்னர் ஓர் தினத்தில்—பின்பு வேறொருதினத்திலே, அவன் தான் வகுத்து அமைத்த பேருலகு அனைத்தையும் நோக்க—அப்பிரமதேவர் தாம் வகைபடச்சிருட்டித்த பெரியவுலகங்கள்யாவையுங் காணும்பொருட்டு, சொன்ன மா கணங்கள் சூழ்வர எழுந்து போய்—கூறிய பதினெண் கணத்தலைவர்களுந் தம்மைச்சுற்றிவர எழுந்து புறப்பட்டு, பொன் அவிர் குடுமி பூதரம் முதலா— பொன்னொலைமைந்துவிளங்குகின்ற சிகரங்களையுடைய மகாமேருகிரிமுதலாக, துலங்கு மேல் உலகு பாதலங்கள்—விளங்குகின்ற சுவர்க்காதிமேலேழுலகங்களையும் அதலாதிகீழேழுலகங்களையும், கண்டு உடல் புளகித்து—பார்த்து (மகிழ்ச்சியினால்) சரீரமானது ரோமாஞ்சங்கொண்டு, இனி என்னினும் முதல்வர் பிறர் ஒருவர் இலர் என— இனி எம்மிலும் பார்க்க மேலாகியதலைவர் வேறொருவருமில்லையென்று, இரும் செருக்கு உற்று—மிக்க கர்வங்கொண்டு எ—று.

ஏ-அசை. (௩௬)

உளமிகத் தருக்கிக் கொண்டுமண் டலம்பண் டுண்டவன் றொண்டையங் கனிவாய்த், தளரிடைக் கரிய கெண்டையந் தடங் கட் டாக்கணங் கின்றவன் சரமாத், துளவணி மருமத் தரியர வணையிற் றுணைவிழி முகிழ்த்தறி துயில்செய், கிளர்நெடுந் தமர திரைமணி கொழிக்குங் கிரவா ரிதிமருங் கடைந்தான்.

இ—ள்: உளம் மிக தருக்கி கொண்டு—மனத்திலே மிகவுமகங்காரம் மிகுந்து, மண்டலம் பண்டு உண்டவன்—பூமிமுழுவதையும் முன்னொநாளிலேயுண்டருளியவரும், தொண்டை அம் கனிவாய்-கொவ்வைக்கனியையொத்த அழகிய வாயையும், தளர் இடை—அசைகின்ற (நுண்ணிய) இடையையும், கரிய கெண்டை அம் தடங்கண்—கருமையாகிய கெண்டைமற்சம் போன்ற அழகிய விசாலித்த கண்களையுமுடைய, தாக்கணங்கின் தவன்— இலக்குமிதேவிக்கு நாயகரும், துளவு சரமா அணி மருமத்து அரி— துளசியை மாலையாகவணிந்த திருமார்பையுடையவருமாகிய விஷ்ணுமூர்த்தியானவர், அரவு அணையில் துணை விழி முகிழ்த்து அறி துயில் செய்— சர்ப்பசயனத்தின்மேல் இருநயனங்களையும் மூடி யோகநித்திரைசெய்கின்ற, கிளர் நெடும் தமர திரை மணி கொழிக்கும்— பிரகாசம்பொருந்திய நீண்ட ஒலிநிறைந்த திரைகளானவை இரத்தினங்களைவாரி வீசுகின்ற, கீர வாரிதி மருங்கு அடைந்தான்—திருப்பாற்கடலின் கரையையடைந்தார் எ—று. (௩௭)

விண்ணினின் றிழிந்து முதிர்ந்தசூற் காளமேகமொன் றமுதசாகரத்தி, னண்ணிய தெனவே நெட்டுடற் பகுவாய் நகுமணிச் சுடிகைவா ளரவிற், புண்ணிய முதல்வன் யோகநித் திரைமுன் புரிவது கண்டுளம் பொறும, லெண்ணிநின் றடர்ந்து கண்படை வளர்வோன் யாவனீ யெழுந்திரென் றிசைத்தான்.

இ—ள்: விண்ணின் நின்று இழிந்து—ஆகாயத்தினின்றுங் கீழேயிறங்கி, சூல் முதிர்ந்த காள மேகம் ஒன்று—கருமுதிர்ச்சியையுடைய கரியதொருமேகமானது, அமுத சாகரத்தில் நண்ணியது என—திருப்பாற்சமுத்திரத்தின்கண்ணே வந்து தங்கினாற்போல, நெட்டு உடல் பகுவாய் நகு மணி சுடிகை வாள் அரவில்—நெடியவுடலையும் பிளந்தவாயையும் பிரகாசம் பொருந்திய இரத்தினத்தைக்கொண்டவுச்சியையுமுடைய ஒளிபொருந்திய சேஷனாகிய சர்ப்பத்தின்மேல், புண்ணிய முதல்வன் யோக நித்திரை முன் புரிவது கண்டு—புண்ணியசொரூபியாகிய விஷ்ணுமூர்த்தியானவர் முன்னமே யோகநித்திரைசெய்வதைப்பார்த்து, உளம் பொறுமல் எண்ணி நின்று அடர்ந்து—மனதினிடத்திற் பொறுமைதோன்றலின்றிச் சிறிதுநேரம் ஆலோசித்து நின்று (பின்னர்)நெருங்கி, கண்படை வளர்வோன் நீ யாவன்—(இங்கு) துயில்புரிகின்ற நீ யார், எழுந்திரு என்று இசைத்தான்—எழுந்திருக்கக் கடவையென்று கூறினார் எ—று.

ஏ-அசை. (௩அ)

வேறு.

அகலந்தனி லலர்மின்பயி லமலன்றுயி லொருவி
யிகல்கொண்டிவை புகல்கின்றனை யார்நீயென வினவப்
புகலம்பர முலகும்பர்கள் புவனங்கனல் பவனஞ்
சகலந்தனி யுதவும்பொரு டானென்றுரை தந்தான்.

இ—ள்: அகலம் தனில் அலர் மின் பயில் அமலன்—திருமார்பின்கண்ணே கமலாசனியாகுமிலக்குமிவாசஞ்செய்கின்ற மலரகிதராகிய விஷ்ணுமூர்த்தியானவர், துயில் ஒருவி—தமது யோகநித்திரையைவிட்டெழுந்து, இகல் கொண்டு இவை புகல்கின்றனை—பகைமைகொண்டிவைகளைக்கூறுகின்றாய், நீ யார் என வினவ—நீயாரென்றுவினவுதலும், புகல் அம்பரம் உலகு உம்பர்கள் புவனம் கனல் பவனம் சகலம்—கூறப்படுகின்ற திக்கு உலகம் தேவர்கள் புவனங்கள் அக்கினி வாயு முதலிய எல்லாவற்றையும், தனி உதவும் பொருள் தான் என்று உரை தந்தான்—பிறர்துணையின்றிச்சிருட்டித்தமுதற்பொருள் தாமேயென்று கூறினார் எ—று. (௩௯)

பூவுந்தியில் வந்தோனிவை புகலப்புய லனையான்
தாவுந்திரை தவழுங்கட றரையெண்டிசை வரைபார்
மேவும்பல வுயிரும்பர்கள் விதியிங்குனை முதன்மற்
றியாவுந்தரு பரதத்துவன் யானென்றுரை செய்தான்.

இ—ள்: பூ உந்தியில் வந்தோன் இவை புகல—விஷ்ணுவினது கமலநாபியினின்றுந்தோற்றிய பிரமதேவரிவ்வாறுகூறுதலும், புயல் அனையான்—மேகவண்ணராகிய விஷ்ணுமூர்த்தியானவர், தாவும் திரை தவழும் கடல்—தாவிப்பாய்கின்ற திரைவீச்சைக்கொண்ட சமுத்திரங்களையும், தரை எண்திசை வரை—பூமியையும் அதனெண்டிக்கினுமுள்ள மலைகளையும், பார் மேவும் பல உயிர்—அப்பூமியின்கண்ணே வாசஞ்செய்கின்ற பல்வகையான்மாக்களையும், உம்பர்கள்—தேவர்களையும், இங்கு விதி உனை முதல் மற்று யாவும் தரும்—இங்கேநிற்கின்ற பிரமாவாகிய நீமுதலாக மற்றெப்பொருள்களையும் உண்டாக்கிய, பரதத்துவன் யான் என்று உரை செய்தான்—மேலாகிய தத்துவத்தையுடைய தலைவன் யானேயென்று கூறினர் எ—று. (௪0)

மறைநாலுமென் னாவுற்றது மண்கால்புனல் விண்டீ
நிறைவாகிய பொருள்யாவுமென் னினைவின்படி படைப்பே
னிறைவாகிய பரதத்துவன் யானல்லது நீயென்
றறைவாயறி வற்றாயென வயனுங்கழ றுற்றான்.

இ—ள்: மறை நாலும் என் நாவுற்றது—இருக்கு யசுர் சாமம் அதர்வணமாகிய நான்குவேதங்களும் என்நாவினின்றுந்தோன்றின, மண் கால் புனல் விண் தீ நிறைவாகிய பொருள் யாவும்—பிருதிவியும் வாயுவும் சலமும் ஆகாயமும் அக்கினியுமாகிய பஞ்சபூதங்களின் நிறைவாகிய வெப்பொருள்களையும், என் நினைவின்படி படைப்பேன்—எனதெண்ணத்தின்படியே சிருட்டிக்கவல்லேன், ஆதலினால், நிறைவாகிய பரதத்துவன் யான் அல்லது—சர்வவல்லமையும்நிறைந்த மேலாகியதத்துவத்தையுடையவன் யானேயல்லாமல், நீ என்று அறைவாய் அறிவற்றாய் என—நீ (பதிப்பொரு) ளென்று கூறுகின்றனை யறிவிலியேயென்று, அயனும் கழறுற்றான்—பிரமதேவருங் கூறினர் எ—று. (௪௧)

அக்காலையி லிருவோரையு மடர்மாயை மறைக்கப்
புக்காருணர் வில்லாரமர் பொருவான்முயல் பொழுதிற்
கைக்கார்முக முனிவுற்றெதிர் கண்ணன்குனி வித்துத்
திக்கானைகள் வெருவும்படி சிறுநாணொலி செய்தான்.

இ—ள்: அ காலையில் இருவோரையும் அடர் மாயை மறைக்க—அச்சமயத்திற் பிரமவிஷ்ணுக்களிருவரையும் நிறைந்தமாயை மறைவுசெய்தலினால், உணர்வு இல்லார் அமர் பொருவான் புக்கார் முயல் பொழுதில்—சுத்தவறிவில்லாதவர்களாயுத்தஞ்செய்தற்குச்சென்று முயன்றசமயத்தில், எதிர் கண்ணன் முனிவு உற்று கைக் கார்முகம் குனிவித்து—எதிர்நின்ற விஷ்ணுமூர்த்தியானவர் கோபங்கொண்டு தமது திருக்கரத்தின்கண்ணேயுள்ள (சார்ங்கமென்னும்) வில்லைவளைத்தருளி, திக்கு ஆனைகள் வெருவும்படி சிறு நாண் ஒலி செய்தான்—திக்குயானைகளெல்லாமஞ்சும்படி தமது வில்நாணினின்றுஞ்சிறிது தொனியையவிளைத்தனர் எ—று. (௪௨)

வலிசேர்புய நெடுமால்கர மருவுங்கொடு மரநா
ணொலியாலர வரசும்பர்க ளுடனுட்கிட வுவரார்
கலியார்கடை யனல்கால்கிளர் காலங்கள் கடுப்பச்
சலியாதட லுடனின்றடு சரமாரி பொழிந்தான்.

இ—ள்: வலி சேர் புய நெடு மால்—வலிமைதங்கிய புயங்களையுடைய நெடிய மகாவிஷ்ணு மூர்த்தியானவர், கரம் மருவும் கொடுமர நாண் ஒலியால்—தமது திருக்கரத்திற்பொருந்திய வில்லினது நாணோசையினால், அரவு அரசு உம்பர்கள் உடன் உட்கிட—சர்ப்பராசனாகிய ஆதிசேடனுந்தேவர்களுமொருங்கேநடுங்கும்படி, உவர் ஆர்கலி ஆர் கடை அனல் கால் கிளர் காலங்கள் கடுப்ப—உவர்க்கடலும் அக்கடலிற்பொருந்திய வடவாமுகாக்கினியும் பிரசண்டமாருதமும் நிமிர்ந்து பரவுகின்ற ஊழிக்காலத்தைப்போல, சலியாது அடல்உடன் நின்று—சோர்வில்லாமல் வலிமையுடனேநின்று, அடு சரமாரி பொழிந்தான்—கொலைசெய்கின்ற அம்புகளை மழைபோல்ச்செலுத்தினார் எ—று. (௬௫)

கடுத்தானுருத் தெழுந்தாலெனக் காயுங்கத மிகவந்
தடுத்தான்முத லகிலஞ்சுடு மயிலம்புகள் பலவும்
விடுத்தானவை முடுகாதயல் விலகும்படி விரைவிற்
றடுத்தானொரு குசைகொண்டுயர் சலசத்தவி சுறைவோன்.

இ—ள்: கடு தான் உருத்து எழுந்தால் என— ஆலகாலநஞ்சானது மிகவுங்கோபங்கொண்டெழுந்தாற்போல, காயுங் கதம் மிகவந்து அடுத்தான்—கொதிக்கின்ற கோபமானது மிகவும்மூளப்பெற்றவராய், முதல் அகிலம் சுடும் அயில் அம்புகள் பலவும் விடுத்தான்—முன்னைநாளிலே திரிபுரங்களையுந்தகித்த கூர்மையாகிய அம்புகள்பலவற்றையுந்தெரிந்தேவினார், அவை முடுகாது அயல் விலகும்படி—அப்பாணங்கள் தம்மிடத்திலே நெருங்காது அயலில்நீங்கும்படியாய், உயர் சலசத் தவிசு உறைவோன்—உயர்வுபொருந்திய தாமரையாசனராகிய பிரமதேவர், விரைவில் ஒரு குசை கொண்டு தடுத்தான்—வேகமாயொருதருப்பைப்புல்லைக்கொண்டு தடைசெய்தனர் எ-று.

சீறித்திசை முகனீடிய சிறையோதிம மதன்மே
லேறிப்பல படைமந்திர மெடுத்தோதினன் விடுத்தா
னூறித்தரு கருணைக்கட லுவணப்பு ளுகைத்தே
நூறிச்சில கணைகொண்டொரு நொடியிற்றுகள் செய்தான்.

இ—ள்: சீறி திசைமுகன் நீடிய சிறை ஓதிமம் அதன் மேல் ஏறி—கோபங்கொண்டு சதுர்முகனாகிய பிரமதேவர் நீண்ட சிறகுகளையுடைய அன்னவாகனத்தின்மேலேறி, பல படை எடுத்து மந்திரம் ஓதினன் விடுத்தான்-பலபடைக்கலங்களையெடுத்து அவ்வவற்றின்மந்திரங்களைச்செபித்துச்செலுத்தினர், ஊறித்தரு கருணைக்கடல்— பெருகாநின்ற கிருபாசமுத்திரமா

கிய விஷ்ணுதேவரானவர், உவணப்புள் உகைத்து— கருடவாகனத்தின் மேலாரோகணித்து, சில கணை கொண்டு—சிலபாணங்களினால், ஒரு நொடியில் நூறித் துகள் செய்தான்—ஒரு கணப்பொழுதினுள் அவற்றையெல்லாம் அழித்துத்துகளாகச்செய்தனர் எ—று. (௬௫)

கண்டந்தண னிவனாகமோர் கடிகைப்பொழு தளவிற்
றுண்டஞ்செய்வ னென்றேழ்கடல் சுவறச்சுரர் பதற
வண்டங்கள் வெடித்துட்கிட வசனிக்குல நாணுந்
தண்டொன்றது கொண்டங்கரி தடமார்பி லெறிந்தான்.

இ—ள்: அந்தணன் கண்டு—பிரமதேவரதனைக்கண்ணுற்று, இவன் ஆகம் ஓர் கடிகை பொழுது அளவில் துண்டம் செய்வன் என்று— இவனது சரீரத்தை ஓர் கணப்பொழுதினுள்ளே யான்துணித்து விடுவேனென்று, ஏழ் கடல் சுவற—சப்தசாகரங்களும் வறப்பவும், சுரர் பதற—தேவர்கள் நடுங்கவும், அண்டங்கள் வெடித்து உட்கிட—பல அண்டங்களும் பிளந்துகுலுங்கவும், அசனிக்குலம் நாணும் தண்டு ஒன்றது கொண்டு— இடியேற்றின்றொகுதிகளெல்லாம் வெட்கமடையத்தகுந்த ஓர் தண்டாயுதத்தையெடுத்து, அங்கு அரி தட மார்பில் எறிந்தான்—அவ்விடத்தில் விஷ்ணுதேவரது விசாலமாகிய திருமார்பின்கண்ணே வீசினர் எ—று. (௬௬)

முதிரச்சின மெதிரச்சுதன் முடுகுங்கதை கடுகிற்
பிதிர்பட்டுதிர் தரமைப்புயல் பிளிறுற்றிடு மொலிபோ
லதிரப்பொரு செருவிற்றின மட்டாட லரக்கர்
குருதிப்பிண முடைநாறிடு மோர்தண்டுமு னுய்த்தான்.

இ—ள்: சினம் முதிர—கோபமானது அதிகரிக்கவும், அச்சுதன்—திருமாலானவர், எதிர் முடுகும் கதை கடுகில் பிதிர் பட்டு உதிர் தர—எதிர்த்து நெருங்கிவருகின்ற தண்டாயுதம் கடுகைப்போலத்துகளாய்ச் சிதறவும், மை புயல் பிளிறு உற்றிடும் ஒலி போல அதிர—கருநிறமாகிய மேகங்கள் சத்திக்கின்ற தொனியைப்போல அதிர்ச்சியுண்டாகவும், பொரு செருவில் தினம் அட்டு ஆடல் அரக்கர் உதிர பிணமுடை நாறிடும்— செய்யப்படுகின்ற யுத்தத்தில் தினந்தோறுங்கொலைசெய்து வலியவரக்கர்களது இரத்தஞ்சிந்திய பிணத்தினது முடைநாற்றம் வீசுகின்ற, ஓர் தண்டு முன் உய்த்தான்- ஒரு தண்டாயுதத்தை எதிரேயெடுத்துச்செலுத்தினார் எ—று. (௬௭)

விண்ணாடெரி கதுவத்திரை விரியுங்கடல் சுவறத்
தண்ணார்மதி தபனன்றிசை தடுமாறினர் திரிய
மண்ணாடழி வுற்றும்பரு மடியும்படி மறமுற்
றெண்ணாதமர் பொருதிட்டன ரீரைம்பது வருடம்.

இ—ள்: விண் நாடு எரி கதுவ—சுவர்க்கலோகமானது அக்கினிபற்றவு ம், திரை விரியும் கடல் சுவற—திரைபரவுகின்ற சமுத்திரங்கள் வற்றவும், தண் ஆர் மதி தபனன் திசை தடுமாறினர் திரிய—குளிர்ச்சிநிறைந்த சந்தி ரனும் சூரியனுந்தாஞ்செல்லுந்திக்கறியாது தடுமாறித்திரியவும், மண் நாடு அழிவு உற்று உம்பரும் மடியும் படி—பூமியுமழிந்து தேவர்களுமழிந்துபோ கும்படி, மறம் உற்று—பகைகொண்டு, ஈரைம்பது வருடம் எண்ணாது அமர் பொருதிட்டனர்—நூறுவருடகாலம் வேறுசிந்தனையின்றி யுத்தஞ்செய்தனர் எ—று. (சஅ)

பொருதிப்படி மலைவுற்றிடு போதிற்றிரு மார்பன்
சுருதிக்கிறை வன்சென்னி துணிக்கும்படி நெஞ்சிற்
கருதித்துணை விழியிற்கனல் காலக்கனல் காலும்
பரிதிப்படை விட்டானது பலியாதுறல் கண்டே.

இ—ள்: பொருது இப்படி மலைவு உற்றிடு போதில்—எதிர்த்து இ வ்விதமாகப்போர்புரியுஞ்சமயத்தில், திருமார்பன்— இலக்குமியை மார்பகத் திற்கொண்டதிருமாலானவர், சுருதிக்கு இறைவன் சென்னி துணிக்கும்ப டி நெஞ்சில் கருதி- சதுர்வேதங்களுக்குந்தலைவராகிய பிரமதேவரது சிரசை வெட்டும்படி மனத்திற் சிந்தித்து, துணை விழியில் கனல் கால— இரண்டுக ண்களினின்றுமக்கினியானதுசொலிக்க, கனல் காலும் பரிதிப்படை விட் டான்— அக்கினியைக்கக்குகின்ற சக்கராயுதத்தைச்செலுத்தினர், அது பலியாது உறல் கண்டு— அப்படைக்கலமொன்றுஞ்செய்யாமையைக்கண்டு எ—று. (சகூ)

குரமாமுகத் துருமேலினிக் கொள்வான் கொதித்தேதன்
சரமானதங் கெடுத்தேவினன் றனியாடல்விற் குனித்தே
திரமாமுக மொருநான்குள செழுநான்மறை யவன்றன்
வரமார்கணை விடுத்தான்வளர் வடவைக்கனன் மான.

இ—ள்: இனி மேல் குரமாமுகத்து உரு கொள்வான் கொதித்து- இனிமேற்கர்க்கியவதாரங்கொள்பவராகிய விஷ்ணுமூர்த்தியானவர் கோபமி கப்பெற்று, தனி ஆடல் வில் குனித்து—ஒப்பில்லாத வலிய (சார்ங்கம்) எ ன்னும்வில்லைவளைத்து, தன் சரம் ஆனது அங்கு எடுத்து ஏவினன்—தமது நாராயணாஸ்திரத்தை ஆங்கேயெடுத்துச்செலுத்தினர், திர மா முகம் ஒரு நான்கு உள செழு நால் மறையவன்—உறுதியாகிய நான்குமுகங்களையுடை ய பொருள்விரிந்த சதுர்வேதங்களுக்குந்தலைவராகிய பிரமதேவர், வளர் வ டவைக் கனல் மான—பொங்கியெழும்புகின்ற வடவாமுகாக்கினியையொப் ப, தன் வரமார் கணை விடுத்தான்—தமது வரப்படைக்கலமாகிய பிரமாஸ்தி ரத்தைச்செலுத்தினர் எ—று.

ஏ-அசை. (௫0)

பெண்டான்முடி கொண்டானிடம் பெற்றானுத விற்றீக்
கண்டானுறு மெண்டோளிறை கண்டானகன் மண்டா
னுண்டானுறு நுண்டாதித ழொண்டாமரை யுறைவோன்
றண்டானுதி வண்டான்முதிர் சமரம்பொரு தமரம்.

இ—ள்: அகல் மண் தான் உண்டான்—விசாலமாகிய பூமியையுண்டருளிய விஷ்ணுதேவரும், நுண் தாது உறு இதழ் ஒள் தாமரை உறைவோன்— நுண்ணிய பராகத்தைக்கொண்ட இதழ்களமைந்த ஒளிபொருந்திய தாமரைமலரில் வாசஞ்செய்பவராகிய பிரமதேவரும், தண்டால்— தண்டாயுதத்தினாலும், நுதி வண்டால்— கூரிய அம்புகளினாலும், முதிர் சமரம் பொரு தமரம்— மிக்கயுத்தஞ்செய்கின்றதினாலுண்டாகிய ஆரவாரத்தை, பெண்தான் முடி கொண்டான்— கங்காதேவியைச் சடையின்கண்ணே தரித்தருளியவரும், இடம் (பெண்) பெற்றான்—இடப்பாகத்தே உமாதேவியாரை வைத்தருளியவரும், நுதலில் தீ கண் உறும் எண் தோள் இறை கண்டான்— திருநெற்றியில் அக்கினிக்கண்ணைக்கொண்ட எட்டுத்திருப்புயங்களையுடைய தலைவருமாகிய சிவபெருமான் திருநோக்கஞ்செய்தனர் எ—று. (௫௧)

கடுவெஞ்சின மொடுதம்படை விடுகின்றனர் கடிதின்
றடுவெங்கள மிசைதுஞ்சுவ ரரியம்புய ரெனவே
சுடுவெங்கனல் சிகைகொண்டெழு சுடரின்றிரள் வடிவாய்
நடுநின்றனன் மதியம்பொதி நளிர்செஞ்சடை முதல்வன்.

இ—ள்: அரி அம்புயர்— விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும், கடு வெம் சினமொடு தம் படை விடுகின்றனர்— மிக்ககோபத்தோடு தமதுபடைக்கலங்களைச் செலுத்துகின்றனர், கடிது இன்று அடு வெம் களமிசை துஞ்சுவர் என—வேகமாயித்தினத்தில் கொலைத்தொழிற்குரிய கொடிய யுத்தகளத்திலே இறந்துவிடுவார்களென்று (திருவுளங்கொண்டு), சுடு வெம் கனல் சிகை கொண்டு எழு சுடரின் திரள் வடிவாய்—சுடுகின்ற கொடியவக்கினியானது கிளைத்தெழுகின்ற சுவாலைவடிவாய், நளிர் மதியம் பொதி செம் சடை முதல்வன்—குளிர்ந்த சந்திரனைத்தாங்கிய சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமான், நடு நின்றனன்--(அவ்விருவருக்கும்) நடுவேதோன்றி நின்றனர் எ—று.

ஏ-அசை. (௫௨)

எடுக்குங்குட மாதத்தினி லிலகும்பிறை குறையத்
தொடுக்குந்திதி பன்னான்கெனச் சொல்லுஞ்சதுர்த் தசியி
னடுக்கங்குலி னப்பேரொளி நண்ணுற்றபி னன்னோர்
விடுக்கும்படை நீறாயவை வெந்திட்டன மாதோ.

இ—ள்: எடுக்கும் குட மாதத்தினில்—(வியந்து) எடுத்துக்கூறப்படு
கின்ற மாசிமாதத்தில், இலகும் பிறை குறையத் தொடுக்கும் திதி பன்னா
ன்கு என சொல்லும் சதுர்த்தசியில்— விளங்குகின்ற சந்திரன் கலைகள்கு
றைந்துவருமபரபக்கத்துப் பதினான்காந்திதியாகச் சொல்லப்படுஞ் சதுர்த்த
சிதினத்தில், நடுக் கங்குலில் அப் பேரொளி நண்ணுற்றபின்— நடுவிரவில்
அந்தப் பெரிய அக்கினிச்சுவாலையானது தோன்றியபின்னர், அன்னோர் வி
டுக்கும் படை நீறாய் அவை வெந்திட்டன—அப்பிரமவிஷ்ணுக்கள் செலுத்
திய படைக்கலங்கள் வெந்து நீறாயின எ—று.

மாதோ—ஈற்றசை. (௫௩)

வேறு.

நின்மலை தனக்கு மூத்த நீலமா மலைக்கும் வேதப்
பொன்மலை தனக்கு நாப்பட் புரைதவிர் பதும ராக
மன்மலை நின்ற தென்ன மாறுகொண் டவர்தம் மிற்றாஞ்
சொன்மலை வுறாத வண்ணந் தோன்றிய சுடரைக் கண்டார்.

இ—ள்: நின்மலை தனக்கு மூத்த நீல மா மலைக்கும்—உமாதேவியா
ருக்கு முன்தோன்றிய விஷ்ணுமூர்த்தியாகிய நீலமலைக்கும், வேதப் பொன்
மலை தனக்கும் நாப்பண்—சதுர்வேதங்களையுமறிந்த பிரமதேவராகிய பொ
ன்மலைக்கும் நடுவணாக, புரை தவிர் பதுமராக மன் மலை நின்றது என்ன—
குற்றமற்ற நிலையான பதுமராகமலையொன்று நின்றாற்போல, மாறுகொண்
டு அவர் தம்மில் தாம் சொல் மலைவு உறாத வண்ணம்—மாறுபாடாக அவ்வ
ரிபிரமர்கள் தமக்குள்ளேதாம் வாதஞ்செய்யாவண்ணம், தோன்றிய சுட
ரை கண்டார்—தோன்றிய அக்கினிப்பிழம்பைக் கண்டனர் எ—று. (௫௪)

பங்கயத் தயன்மால் விண்ணோர் பார்த்தகட் புலனுக் கெட்டா
தங்கவர் மனத்தி னாலு மளவிடற் கரிய தாகிச்
செங்கதிர்ப் பரிதி கோடி திரண்டொரு வடிவாய்க் கூடிப்
பொங்கொளி விரித்தா லென்னப் பொலிந்தபே ரொளியை நோக்கி.

இ—ள்: பங்கயத்து அயன் மால் விண்ணோர்—தாமரையாசனராகிய
பிரமதேவரும் திருமாலும் மற்றையதேவர்களும், பார்த்த கட்புலனுக்கு எ
ட்டாது—நோக்கிய கண்பார்வைக்ககப்படாது, அங்கு அவர் மனத்தினாலும்
அளவிடற்கு அரியது ஆகி—அவ்விடத்து அவர்களுடைய மனத்தாலுமளவு
செய்தற்கருமையையுடையதாய், செம் கதிர் பரிதி கோடி திரண்டு ஒரு வ
டிவாய்க் கூடி—சிவந்த கிரணங்களையுடையகோடிசூரியர்கள் ஒருமித்தொ
ரேவடிவங்கொண்டு, பொங்கு ஒளி விரித்தால் என்ன—பொலிவுபொருந்தி
ய ஒளியைக் கக்கினாற்போல, பொலிந்த பேரொளியை நோக்கி— பரந்த
பெரிய சோதிவடிவத்தைப்பார்த்து எ—று. (௫௫)

அதிசய மடைந்து நீண்ட வழற்பிழம் பாகி நிற்கு
மிதினடி முடிகள் காண்பா னிருவரு மிசைந்து தம்மிற்

கதிதரு மடிக டேடக் கடவனென் றேன மாகித்
துதிபெறு முகுந்தன் கீழேழ் தொன்னிலங் கீண்டு சென்றான்.

இ—ள்: அதிசயம் அடைந்து—ஆச்சரியகரத்தராய், நீண்ட அழல் பிழம்பு ஆகி நிற்கும் இதின் அடி முடிகள் காண்பான்—நெடிய அக்கினிப்பிழம்பாகநிற்கின்ற இச்சோதிவடிவத்தின் அடியையும்முடியையுந்தேடிக்காணுமபடி, இருவரும் தம்மில் இசைந்து—இருவருந் தங்களுக்குள் மனஒற்றுமை கொண்டு, கதிதரும் அடிகள் தேட கடவன் என்று— மோட்சத்தைக்கொடுத்தற்குவல்லதாகிய இதனதுஅடியை யான்தேடிக்காண்குவனென்று, துதி பெறு முகுந்தன்—(எல்லா ஆன்மாக்களாலுந்) துதிக்கப்படுகின்ற திருமாலானவர், ஏனமாகி—ஒரு (வெண்)பன்றிவடிவங்கொண்டு, கீழ் எழ் தொல் நிலம் கீண்டு சென்றான்—கீழேயுள்ள பழமையாகிய சப்தபாதலங்களையுங் கிழித்துச் சென்றார் எ—று. (௫௬)

கன்னமா மதங்கள் சிந்துங் கரிமுத லாக முன்னோர்
சொன்னவா ருயிர்க ளெல்லாந் துணுக்கிடப் பவளச் செங்கா
லன்னமாய்ச் சிறைக்கால் மேரு வசைத்திடப் பறந்து வாச
வன்னவா ரிசத்தோன் வானின் மணிமுடி தேடிப் போனான்.

இ—ள்: கன்ன மா மதங்கள் சிந்தும் கரி முதலாக—கபோலத்தினின்றுமதிகமாகிய மதம்பாய்கின்ற யானைமுதலாக, முன்னோர் சொன்ன ஆர் உயிர்கள் எல்லாம் துணுக்கிட—மேலோர்களினாலே கூறப்பட்டுள்ள நிறைவாகிய ஆன்மவர்க்கங்களெல்லாம் நடுக்கும்படி, வாச வன்ன வாரிசத்தோன்—பரிமளங்கமழாநின்ற அழகிய தாமரையாசனராகிய பிரமதேவர், பவள செம் கால் அன்னமாய்—பவளம்போன்ற சிவந்த கால்களையுடைய அன்னவடிவாகி, சிறை கால் மேரு அசைத்திட—அதன் சிறகுகளினின்றுந் தோன்றிய காற்றானது மகாமேருகிரியையுமசைக்கும்படி, வானில் பறந்து—ஆகாயமார்க்கமாய்ப் பறந்து, மணி முடி தேடிப் போனான்—அழகிய முடியைத்தேடிச்சென்றார் எ—று. (௫௭)

மருவருந் துளப மாலு மலர்மிசை வதிகின் றோனு
மிருவரு மனந்த கால மிறந்துட லிளைத்த தன்றித்
திருவரு மழலின் செய்ய சேவடி முடிகா ணாமல்
வெருவரு மனத்த ராகி வெள்கினர் மீள்கின் றாரால்.

இ—ள்: மரு வரும் துளப மாலும்— வாசனைபொருந்திய துளசிமாலையையணிந்த மகாவிஷ்ணுமூர்த்தியும், மலர் மிசை வதிகின்றோனும் இருவரும்—தாமரைமலரின்கண்ணே யெழுந்தருளிய பிரமதேவருமாகியவிருவரும், அனந்த காலம் இறந்து உடல் இளைத்தது அன்றி—அளவற்றகாலங் கழிந்து தம்முடல்களுமிளைக்கப்பெற்றதேயன்றி, திருவரும் அழலின் செய்ய சே அடி முடி காணாமல்—அழகுதங்கிய அச்சோதிவடிவத்தினது செம்மை

வாய்ந்த திருவடியையுந்திருமுடியையுங் காணுதவர்களாய், வெருவரும் மன த்தர் ஆகி—அச்சம்பொருந்திய மனத்தையுடையவராகி, வெள்கினர் மீள்கி ன்ருர்—நாணடைந்து (பாதலத்தினின்றும் ஆகாயத்தினின்றும்) மீண்டுவரு கின்ருர் எ—று.

ஆல் அசை. (ருஅ)

கூடியங் கிருவர் தாமுங் கோலநீ டொளியை நோக்கி
யாடியி னடங்கும் வெற்பி னமர்ந்துய ரன்ப ருள்ளத்
தூடிருந் தருள்வோய் நின்னை யுணர்ந்தில மெமது சென்னி
சூடியாம் வாழ வின்றுன் றுணைப்பதங் காட்டு கென்ருர்.

இ—ள். அங்கு இருவர் தாமும் கூடி—அவ்விடத்திலவ்விருவருமொ ருங்குகூடி, கோலம் நீடு ஒளியை நோக்கி—அழகுமிகுந்த சோதிவடிவத்தை ப்பார்த்து, ஆடியின் அடங்கும் வெற்பின் அமர்ந்து—(சிறு)கண்ணுடியினு ள்ளேயடங்கிக்காணப்படும் பெரிய மலையைப்போல அணுவடிவாகி, உயர் அன்பர் உள்ளத்து ஊடு இருந்து அருள்வோய்—உயர்வுபொருந்திய அடியா ர்களது உளளத்தினுள்ளே வீற்றிருந்தருளுகின்ற எம்பெருமானே, நின்னை உணர்ந்திலம்—(எளிய யாங்கள் முன்னா) உம்மையறிந்தேமல்லேம், இன்று உன் துணை பதம் எமது சென்னி சூடி யாம் வாழ—இற்றைத்தினத்தே தே வரீருடைய திருவடிகளிரண்டையும் எமதுசிரசிற்றரித்து யாம் வாழ்வடையு ம்படி, காட்டுக என்ருர்—அடியேங்களுக்குக் காட்டியருளவேண்டுமென்று வேண்டினர் எ—று. (ருகூ)

மாசிமா தத்திற் றேன்று மதிக்கலை குறைந்து தேயு
மாசில்பன் ஞன்காம் பக்கத் தரையிரு ளியாமந் தன்னிற்
றேசினல் விளங்குஞ் சோதிச் செழுஞ்சுட ராகி நின்ற
காசிலா நுதற்கட் பெம்மான் றனதுருக் காட்டி நின்ருன்.

இ—ள்: மாசி மாதத்தில் தோன்றும் மதிக்கலை குறைந்து தேயும் ஆ சு இல் பன்னுன்காம் பக்கத்து—மாசிமாதத்தின்கண்ணே வருகின்ற சந்திர ன் தனதுகலைகள்தேய்ந்து குறைகின்ற குற்றமில்லாத அபரபக்கச் சதுர்த்த சியில், அரை இருள் இயாமம் தன்னில—அர்த்தராத்திரியில், தேசினல் வி ளங்கும் சோதி செழும் சுடர் ஆகி நின்ற—அழகுநிறைந்து பிரகாசிக்கும்மிக் க ஒளியையுடைய அக்கினிப்பிழம்பாகியெழுந்தருளிநின்ற, காசு இலா நுத ல் கண் பெம்மான்—குற்றமில்லாத நெற்றிக்கண்ணையுடைய பரமபதியான வர், தனது உரு காட்டி நின்ருன்—(அப்பிரமவிஷ்ணுக்களுக்குத் தோன்ற த்தக்கதாய்)தமது திருவுருவத்தைக் காட்டிநின்றருளினர் எ—று. (கூo)

நீலகண் டமுமெண் டோளு நெற்றியிற் கண்ணு நீறுங்
காலனைக் காய்ந்த காலுங் கையின்மான் மழுவுங் கண்டு

மாலவன் வாமந்தன்னின் மலரயன் வலப்பா னின்று
சூலபா ணியனை நோக்கித் துதிபல சொல்ல லுற்றார்.

இ—ள்: நீலகண்டமும்—கரியதிருமிடற்றையும், எண் தோளும்—எட்டுப்புயங்களையும், நெற்றியில் கண்ணும் நீறும்—திருநெற்றியில் அக்கினிக்கண்ணையும் விபூதியையும், காலனைக் காய்ந்த காலும்—யமனை உதைத்தருளிய திருப்பாதத்தையும், கையில மான் மழுவும் கண்டு—திருக்கரங்களின்கண்ணே மான்கன்றையும் மழுவாயுதத்தையுங்கண்டு, மாலவன் வாமம் தன்னில்—மகாவிஷ்ணு இடப்பாகத்திலும், மலரயன் வலப்பால் நின்று—கமலாசனராகிய பிரமதேவர் வலப்பாகத்திலும்நின்றுகொண்டு, சூலபாணியனை நோக்கி—சூலாயுதத்தைத்தாங்கிய திருக்கரத்தையுடைய சிவபெருமானைப் பார்த்து, துதிபல சொல்லலுற்றார்—பலதோத்திரங்களையுங்கூறுவாராயினார் எ—று. (சுக)

ஓதியா யணுவா யெண்ணி லுயிர்க்குயி ராகி யென்றும்
பேதியாப் பரம தாகிப் பிறப்புட னிறப்பி லாமற்
சோதியா யெழுதாக் கேள்விச் சுருதியின் முடிவா யெங்கட்
காதியா யநாதி யாகு மடிகணின் னடிகள் போற்றி.

இ—ள்: ஓதியாய்—ஞானமாகியும், அணுவாய்—நுண்பொருளாயும், எண்ணில் உயிர்க்கு உயிர் ஆகி—அளவுகடந்த ஆன்மாக்களுக்கெல்லாம் பரமான்மாவாகியும், என்றும் பேதியாப் பிரமம் ஆகி—எக்காலத்திலும் வேற்றுமையடையாத பரப்பிரமமாகியும், பிறப்புடன் இறப்பு இலாமல்—தோற்றமும் நாசமுமின்றி, சோதியாய்—சுயஞ்சோதிவடிவாயும், எழுதாக் கேள்விச் சுருதியின் முடிவாய்—எழுதாக்கேள்வியாகிய சதுர்வேதங்களின் துணிவுப்பொருளாகியும், எங்கட்கு ஆதியாய்—எம்மனோர்க்கு முன்னாகியும், அநாதியாகும் அடிகள்—தொடக்கமின்றியுமுள்ள பெருமானே, நின் அடிகள் போற்றி—உமது திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் எ—று. (சுஉ)

விடைக்கொடி யுயர்த்தாய் போற்றி விரிமலர்ச் செழும்பொற் கொன்றைத், தொடைப்புயா சலனே போற்றி துலங்குபொற் றோட்டிற் றாவும், படைக்கருங் கடைக்கட் செவ்வாய்ப் பைந்தொடி பங்கா போற்றி, சடைப்பரம் பரனே போற்றி சங்கரா போற்றி போற்றி.

இ—ள்: விடை கொடி உயர்த்தாய் போற்றி—இடபக்கொடியையுயர்த்தியவரேநமஸ்காரம், செழும் பொன் கொன்றை விரிமலர் தொடைப்புய அசலனே போற்றி—செழுமைபொருந்திய பொன்மயமாகிய கொன்றையின்விரிந்த மலர்மாலையையணிந்த புயமலைகளையுடைய பெருமானே நமஸ்காரம், துலங்கு பொன் தோட்டில் தாவும் படை கரும் கடைக்கண் செவ்வாய் பைந்தொடி பங்கா போற்றி—ஒளிவிளங்குகின்ற பொன்னாலாகிய காதணி

யளவும்நீண்ட வேற்படையையொத்த கரிய கூரிய கடைக்கண்களையும் சிவ
ந்த திருவாயையும் பசுமையாகிய வளையல்களையுமுடைய உமாதேவியாரை
இடப்பக்கமாகக்கொண்டருளியவரே நமஸ்காரம், சடைப்பரம் பரனே போ
ற்றி—சடைமுடியையுடைய பரம்பொருளேநமஸ்காரம், சங்கரா போற்றி
போற்றி— (ஆன்மாக்களுக்கெல்லாஞ்) சுகத்தைச்செய்பவரே நமஸ்காரம்
நமஸ்காரம் எ—று. (௬௩)

விரித்துல கனைத்து மாக்கி வீக்குநாட் சராச ரங்கள்
பரித்துள புவன மூன்றும் பாலநேத் திரத்தீ யூட்டி
யெரித்துநீ றாக்கிப் பூசி யென்பணிந் திலங்கு சூலந்
திரித்துநின் றாடு நின்பொற் சேவடி போற்றி போற்றி.

இ—ள்: விரித்து உலகு அனைத்தும் ஆக்கி—மிக்க விரிவுடையதாயு
லகங்களெல்லாவற்றையுஞ்சிருட்டித்து, வீக்கு நாள்—அவைகளைச்சங்கரிக்கி
ன்ற காலத்தில், சர அசரங்கள் பரித்துள புவனம் மூன்றும்—சென்றும் நின்
றும் வாழாநின்ற ஆன்மவர்க்கங்களையெல்லாந்தரித்துள்ள சுவர்க்கமத்திய பா
தலங்களாகிய திரிலோகங்களையும், பால நேத்திரத் தீயூட்டி—நெற்றிக்கண்
ணிற்பொருந்திய அக்கினியைப்பற்றச்செய்து, எரித்து நீறாக்கிப் பூசி— தக
னித்து நீறாக்கித்(திருமேனியெங்கணும் பரவப்) பூசி, என்பு அணிந்து—(பி
ரமவிஷ்ணுக்களின்) என்புமாலைகளையணிந்து, இலங்கு சூலம் திரித்து நின்
று ஆடும்—விளங்குகின்ற சூலாயுதத்தைச்சுழற்றிநின்று நடனம்புரியும், நி
ன் பொன் சே அடி போற்றி போற்றி—உமது சுவர்ணமயமாகிய சிவந்த தி
ருப்பாதங்களுக்கு நமஸ்காரம் நமஸ்காரம் எ—று. (௬௪)

இலகொளிக் கதிரொன் றாகி யீர்ம்புனற் கும்பந் தோறும்
பலவுரு வாகித் தோன்றும் பான்மைபோ லங்கங் காய்நின்
றுலகுயிர்க் கனுப வங்க ளூட்டுவித் தொழிந்த காலத்
தலகிலாக் கருணை நல்கு மடிகணின் னடிகள் போற்றி.

இ—ள்: இலகு ஒளிக்கதிர் ஒன்றாகி—விளங்குகின்ற கிரணங்களையு
டைய சூரியனொருவனேயாகியும், ஈர்ம் புனல் கும்பம் தோறும் பல உருவா
கித் தோன்றும் பான்மை போல்—குளிர்ச்சிபொருந்திய சலம்நிறைந்த குட
ங்கள்பலவற்றினும் வெவ்வேறாகிய பலசூரியர்களைப்போலக்காணப்படுகின்ற
தன்மையையொப்ப, அங்கு அங்காய் நின்று—ஆங்காங்கே (பலவற்றினுந்
தோற்றி) நின்று, உலகு உயிர்க்கு அனுபவங்கள் ஊட்டு வித்து—உலகங்கள்
தோறும் வாசஞ்செய்கின்ற ஆன்மவர்க்கங்களெல்லாம் அவைகள் புசிக்கவே
ண்டிய ஊழின்பிரகாரம் அனுபவங்கள்யாவற்றையுமுண்ணும்படிசெய்து, ஒ
ழிந்த காலத்து—(அவ்வான்மாக்கள் தாமனுபவிக்கவேண்டிய அனுபவங்கள்)
கழிந்துநின்ற(பற்றற்ற) காலத்து, அலகு இலா கருணை நல்கும் அடிகள்—
கணித்தற்கியலாதவுமது கிருபையையீந்தருள்செய்கின்ற சுவாமி, நின் அடி
கள் போற்றி—உமது திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் எ—று. (௬௫)

அருவமா யுருவமாகி யகண்டமா யசல மாகி
யொருபரம் பொருளாய் வண்ண மொப்புட னுயர்வுமின்றி
நிருமல னாகி யெங்கு நிறைந்துநீங் காதுநிற்கும்
கருதரு ஞானு னந்தக் கருணையங் கடலே போற்றி.

இ—ள்: அருவமாய்—உருவமற்றவராயும், உருவமாகி—(கரசரணாதி களோடுகூடிய) உருவுடையராயும், அகண்டமாய்—சர்வபொருளுக்குந்தானே யாகியும், அசலமாகி—அசைவில்லாதவராயும், ஒரு பரம் பொருளாய்— த னித்த முதற்பொருளாயும், வண்ணம் ஒப்புடன் உயர்வும் இன்றி நிருமலன் ஆகி—நிறமும் சமத்துவமும் உயர்வுடைமையும் தமக்கில்லாத மலரகிதராகியு ம், எங்கும் நிறைந்து நீங்காது நிற்கும்— சர்வவியாபகியாயென்றுமன்னிலை தளராதுநிற்கின்ற, கருதரு ஞான ஆனந்தக் கருணையம் கடலே போற்றி— நினைவினுலளக்கலாகாத சுத்தஞானத்தையும் நித்தியானந்தத்தையுமுடைய கிருபாசாகரமே நமஸ்காரம் எ—று. (௬௬)

காலனர் வீழத் தாக்குங் கனைகழற் காலா போற்றி
மூலமாம் பொருளுக்கெல்லா முழுமுதற் பொருளே போற்றி
பாலநேத் திரனே போற்றி படர்திரைப் பாலின் வேலை
யாலமுண் டிருண்ட கண்டத் தண்ணலே போற்றிபோற்றி.

இ—ள்: காலனர் வீழத் தாக்கும் கனை கழல் காலா போற்றி— இய மனும் விழுந்திறக்கும்படியுதைத்தருளிய ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திரு ப்பாதத்தையுடையவரே நமஸ்காரம், மூலமாம் பொருளுக்கு எல்லாம் முழு முதல் பொருளே போற்றி— ஆதிகாரணமாகியவெல்லாப்பொருள்களுக்கு ம் அனாதிகாரணமாகிய பொருளேநமஸ்காரம், பாலநேத்திரனே போற்றி— திருநெற்றியிற்கொண்டவக்கினிக்கண்ணரேநமஸ்காரம், படர் திரைப் பாலி ன் வேலை ஆலம் உண்டு இருண்ட கண்டத்து அண்ணலே போற்றி போற் றி—விசாலமாகிய திரைகளையுடைய திருப்பாற்கடலிற்றோன்றிய ஆலகாலந ஞ்சையுண்டு கறுத்த திருமிடற்றைக்கொண்ட தலைவரே நமஸ்காரம் நமஸ் காரம் எ—று. (௬௭)

பொடியெழப் புரமோர் மூன்றும் புன்னகை கோட்டிச் சுட் டாய், கொடியின்மீ னெழுதும் வேளைக் குளவிழி யழலிற் கொ ன்றாய், படிமுதற் ககனமீறாய்ப் பரந்தியாம் பரிந்து தேடி, யடி முடி காண்டற் கெட்டா வத்தனே போற்றி போற்றி.

இ—ள்: பொடி எழப் புரம் ஓர் மூன்றும் புன்னகை கோட்டிச் சுட் டாய்—சாம்பராகும்படி முப்புரங்களையுந் தேவரீரது சிறுநகையாகிய (அக்கி னியைக்) கொண்டு தகித்தருளினீர், கொடியில் மீன் எழுதும் வேளைக் கு ள விழி அழலில் கொன்றாய்—மீனெழுதிய துவசத்தையுடைய மன்மதனை திருநெற்றியிற்கொண்ட நேத்திரத்தினக்கினியால் தகித்தருளினீர், படிமு

தல் ககனம் ஈருய் பரந்து யாம் பரிந்துதேடி—பூமிமுதலாகாயபரியந்தம் எங்குந்திரிந்து யாங்கள் வருந்தித்தேடியும், அடி முடி காண்டற்கு எட்டா அத்தனே போற்றி போற்றி—திருவடியையுந்திருமுடியையுங்காண்பதற்கு அதீதமாகவிருக்கின்ற தலைவரே நமஸ்காரம் நமஸ்காரம் எ—று. (௬௮)

நீர்வடி வான செய்ய நெருப்புல வுலவை வானம்
பார்வடி வாகத் தோன்றப் படைத்திட முன்ன மன்னுங்
கார்வடி வான கூந்தற் கவுரியு நீயு மொன்ருப்
பேர்வடி வின்றி நின்ற பிஞ்ஞகா போற்றி யென்றே.

இ—ள். நீர் வடிவு ஆன செய்ய நெருப்பு உலவு உலவை வானம் பார்—தண்ணீரும் அழகமைந்த சிவந்த அக்கினியும் சலனம்பொருந்தியகாற்றும் ஆகாயமும் மண்ணுமாகிய இவ்வைந்தும், வடிவாக தோன்ற படைத்திட முன்னம்—உருவமாகத்தோன்றும்படி சிருட்டித்தற்குமுன்னே, மன்னும் கார் வடிவான கூந்தல் கவுரியும் நீயும் ஒன்ருய்—நிலைபெற்ற மேகம்போன்ற கரியவழகிய கூந்தலையுடைய உமாதேவியாருந்தேவரீரும் அத்துவிதமாய், பேர் வடிவு இன்றி நின்ற பிஞ்ஞகா போற்றி என்று—நாமரூபமில்லாமலெழுந்தருளிநின்ற சடைமுடியையுடையவெம்பெருமானே நமஸ்காரம் என்று எ—று. (௬௯)

எய்ச்சிலை யுண்டென் றேதற் கேதுவா மிடையாண் மாரன்
கைச்சிலைப் புருவ மைக்கட் கவுதமன் பன்னி கொண்ட
மைச்சிலை யுருவ மாற்று மலர்ப்பதன் வடத்தண் டார்ந்த
பச்சிலைப் பள்ளியானுட் பரிவுடன் பழிச்சி யேத்த.

இ—ள்: எய்த்து இலை உண்டு என்று ஓதற்கு ஏதுவாம் இடையாள்—சிறுத்து இல்லையோவுண்டோவென்று (சந்தேகித்துக்) கூறுதற்கேதுவாகிய இடையையுடையவளும், மாரன் கை சிலை புருவம் மை கண் கவுதமன் பன்னி—மன்மதனுடையகையின்கண்ணேயுள்ள வில்லையொத்த புருவம்வாய்ந்த கரிய கண்களையுடையவளும் கௌதமரிஷியினது மனைவியுமாகிய அகலிகையானவள், கொண்ட மை சிலை உருவம் மாற்றும் மலர்ப்பதன்—(சாபத்தினல்) அடைந்திருந்த கருங்கல்வடிவத்தை மாற்றியருளிய தாமரைமலர்போன்ற திருப்பாதங்களையுடையவரும், வடத்தண்டு ஆர்ந்த பச்சிலை பள்ளியான்—ஆலவிருட்சத்தின் கிளையிற்பொருந்திய பச்சிலையைப் பாயலாகக் கொண்டவருமாகிய விஷ்ணுமூர்த்தியானவர், உள் பரிவுடன் பழிச்சி ஏத்த— மனத்திற்கொண்ட அன்போடு தோத்திரஞ்செய்து துதிக்க எ—று.

எய்த்து என்பது எதுகைநோக்கி எய்ச்சு என்ருயிற்று. (௭௦)

மருவிரி கமலப் போதின் மன்னுநான் முகத்தோன் வெற்பி
னருவிபோல் விழிநீர் சோர வாகநெக் குருகி யன்பாற்
றருவிரி மலர்க டூவித் தமனியச் சபையி லாடும்
பொருவிரி கமலச் செம்பொற் பூவடி போற்றி செய்தான்.

இ—ள்: மரு விரி கமல போதில் மன்னும் நான்முகத்தோன்— வாசனைகமழுகின்ற தாமரைமலரின்மேல்வாசஞ்செய்யும் நான்குமுகங்களையுடையபிரமதேவர், வெற்பின் அருவிபோல் விழி நீர் சோர— மலையருவியைப்போலக் கண்களினின்றும் நீரானதுசொரிய, ஆகம் நெக்கு உருகி— மனமானது கசிந்துருகி, அன்பால் தரு விரி மலர்கள் தூவி—அன்போடு பஞ்சதருக்களினலர்ந்த புஷ்பங்களைத்தூவி, தமனியச் சபையில் ஆடும்— கனகசபையின்கண்ணே நின்று நடனஞ்செய்கின்ற, பொரு இரி செம் பொன் கமலபூ அடி போற்றி செய்தான்--ஒப்பில்லாத சிவந்த அழகிய தாமரைமலர்போன்ற திருப்பாதங்களை நமஸ்காரஞ்செய்தனர் எ—று. (௭௧)

வேறு.

நிலத்தானைக் கடுவொடுக்கு மிடற்றானை மழுத்தானை நீங்காச்செங்கை, வலத்தானை மலைமகள்சே ரிடத்தானை வரிசிலைக்கை மதனைக் காய்ந்த, சலத்தானை முசலபுயா சலத்தானை தனைச்சூழத் தருக்கி வாழ்தென், புலத்தானை யுதைத்தமலர்ப் பதத்தானைப் போற்றிசெய்தார் புலவ ரெல்லாம்.

இ—ள்: நில தானை கடு ஒடுக்கும் மிடற்றானை— பூமியினுடையாகிய(சமுத்திரத்திற்றோன்றிய) நஞ்சையடக்கிய திருக்கண்டத்தையுடையவரும், மழு தானை நீங்கா செங்கை வலத்தானை—மழுப்படைநீங்காத சிவந்த வலத்திருக்கையையுடையவரும், மலைமகள் சேர் இடத்தானை— மலையரசன்புத்திரியாகிய உமாதேவியார் பொருந்தப்பெற்ற இடப்பாகத்தையுடையவரும், வரி சிலை கை மதனை காய்ந்த சலத்தானை—வரிந்துகட்டிய வில்லைக் கையிலேந்திய மன்மதனையழித்த கோபத்தையுடையவரும், முசல புய அசல தானை தனைச்சூழ தருக்கி வாழ் தென்புலத்தானை உதைத்த மலர் பதத்தானை—இருப்புலக்கைபோன்ற புயமலைகளையுடைய சேனைகள் தன்னைச்சூழும்படி செருக்குடனேவாழ்கின்ற தென்புலத்தையுடையவனாகிய இயமனையுதைத்தருளிய மலர்போன்ற திருப்பாதத்தையுடையவருமாகிய சிவபெருமானை, புலவர் எல்லாம் போற்றி செய்தார்—தேவர்களெல்லோருந் தோத்திரஞ்செய்தனர் எ—று. (௭௨)

கந்தரநேர் கந்தரத்தான் கருணைவிழிக் கடையருளிக் களிப்பினோடு, மந்தரவா னவர்புகழ்பு ளாரசுகைக்கு மச்சுதனை யளித்தே

ணுண்ணுங், கொந்தவிழ்நாண் மலர்க்கமலத் தவிசிருக்கு நான்மு கனைக் குறித்து நீவிர், சிந்தைதனில் விழைந்தவரங் கேண்மினது தருவலெனச் செப்ப லுற்றான்.

இ—ள். கந்தர நேர் கந்தரத்தான்— மேகத்தையொத்து விளங்குகின்ற திருக்கண்டத்தையுடையவராகிய சிவபெருமான், கருணை விழி கடை அருளி—கிருபாநோக்கஞ்செய்தருளி, களிப்பினோடும்— திருவுள்ளமகிழ்ச்சியோடும், அந்தர வானவர் புகழ் புள் அரசு உகைக்கும் அச்சுதனை—சுவர்க்கலோகவாசிகளாகிய தேவர்களெல்லாம் புகழுகின்ற கருடவாகனத்திலேறுபவராகிய விஷ்ணுமூர்த்தியையும், அளி தேன் உண்ணும் கொந்து அவிழ் நாள் மலர் கமல தவிசு இருக்கும் நான்முகனை— வண்டுகள் தேனைப்பருகுகின்ற இதழ்கள்விரிந்த புதிய தாமரைமலராசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரையும், குறித்து—பார்த்தருளி, நீவிர் சிந்தைதனில் விழைந்த வரம் கேண்மின்—நீங்களுங்கள் மனத்தில்விரும்பிய வரங்களைக் கேட்கக்கடவீர், அது தருவல் என செப்பலுற்றான்— அவ்வரங்களைத்தருவோமென்று திருவாய்மலர்ந்தருளினார் எ—று. (எ௩)

கரியெனநின் றுயிர்க்கருள்செய் கண்ணுதனீ கனற்பிழம்பாய் நின்ற காலை, விரிசுடர்விட் டெழுமொளிசேர் விளக்கில்விழும் விட்டிலென வீழ்ந்து நீறு, யெரியுமெம தத்திரங்க ளீங்கெமக்கு மீண்டுதவி யாங்க ளென்றும், புரியுமிரு தொழிலுநிலை பெறவுனருள் புரிதியெனப் போற்றி நின்றார்.

இ—ள்: கரி என நின்று உயிர்க்கு அருள் செய் கண்ணுதல்— சாட்சியாய் நின்று ஆன்மாக்களுக்கெல்லாமனுக்கிரகஞ்செய்கின்ற நெற்றிக்கண்ணையுடைய எம்பெருமானே, நீ கனல் பிழம்பாய் நின்ற காலை—தேவரீர் அக்கினிக்கண்டமாய் நின்ற அப்பொழுது, விரி சுடர் விட்டு எழும் ஒளி சேர் விளக்கில் விழும் விட்டில் என வீழ்ந்து நீறாய் எரியும் எமது அத்திரங்கள்— விரிந்த கிரணத்தைப்பரப்பித் தோன்றுகின்ற வொளிபொருந்தியதீபத்தில் வீழ்ந்தவியும் விட்டிற்பறவைபோல விழுந்து சாம்பாராக எரிந்துபோன எமது அம்புகளை, ஈங்கு எமக்கு மீண்டு உதவி—இவ்விடத்திலே பின்னருமெங்களுக்குத்தந்தருளி, யாங்கள் என்றும் புரியும் இரு தொழிலும் நிலை பெற— அடியேங்களெக்காலமும் நடாத்துகின்ற படைத்தல் காத்தலாகிய இருதொழில்களும் நிலைபெறும்படி, உன் அருள் புரிதி என போற்றி நின்றார்—உமது திருவருளைச்செய்தருளுகவென்று தோத்திரஞ்செய்துகொண்டு நின்றார்கள் எ—று. (எச)

அன்றமரி விருவிரு முடியாமற் சோதிவடி வாயா னும்மு னின்றவிராச் சிவநிசியந் நிசி வருநாட் களில்விதித்த நியமத்தோடு, மன்றன்மலர் கொடுபூசை புரிந்திடினீர் நினைந்தவெலாம் வழ

ங்கல் செய்வா, மென்றயன்மா லிருவருக்கு மனமகிழ வரமளித் திட் டியம்பும் பின்னும்.

இ—ள்: அன்று அமரில் இருவீரும் முடியாமல் சோதி வடிவாய் யாம் நாம் முன் நின்ற இராசிவநிசி—அக்காலத்துச்செய்த யுத்தத்தின்கண்ணே நீவிரிருவீருமழிந்துபடாமல் அக்கினிவடிவமாகி உமக்குமுன்னே யாம் தோன்றிநின்ற இரவானது சிவராத்திரியாகும், அந்நிசி வரு நாட்களில்—அச்சிவ ராத்திரிவந்துசேருகின்ற தினங்களில், விதித்த நியமத்தோடு—ஆகமங்களிற் கூறிய விதிக்கிணங்க, மன்றல் மலர் கொடு பூசை புரிந்திடில்—வாசனைபொருந்திய புஷ்பங்களைக்கொண்டு பூசனைசெய்வீராகில், நீர் நினைந்த எலாம் வழங்கல் செய்வாம் என்று அயன் மால் இருவருக்கும் மனம் மகிழ வரம் அளித்திட்டு— நீங்கள்விரும்பியவெல்லாம் யாம் கொடுத்தருள்வோமென்று பிரம விஷ்ணுக்களிருவருக்கும் மனக்களிப்புண்டாகும்படி வரங்கொடுத்து, பின்னும் இயம்பும்—மேலுங்கூறியருளுவார் எ—று. (எரு)

ஆதியிலம் பிகைநோற்ற விரதமிதன் பெருமையெவ ரளக்க வல்லார், சாதிமுறை நெறிதவறுஞ் சண்டாளர் நோற்றிடினுந் தக்கோ ராகி, மோதிவருங் கடல்புடைசூ ழுலகில்விரும் பியபோக முற்றிப் பின்னர்ப், பூதிதரும் பெரும்பாவக் கடல்கடந்து முத்தி நெறி பொருந்து வாரால்.

இ—ள்: ஆதியில் அம்பிகை நோற்ற விரதம் இதன் பெருமை— ஆதிகாலத்தில் உமையவளினுலேயனுஷ்டிக்கப்பட்ட இவ்விரதத்தின் மகிமையை, எவர் அளக்க வல்லார்— யார் அளந்துசொல்ல வல்லவர், சாதிமுறை நெறி தவறும் சண்டாளர் நோற்றிடினும்—வருணத்துக்கிசைந்த முறைமையாகியவொழுக்கங்களைத் தவறவிட்ட எளியவர்களனுஷ்டித்தாலும், தக்கோராகி—மேலவர்களாகி, மோதி வரும் கடல் புடை சூழ் உலகில்—திரைமோதிப்புரளுகின்ற கடலினுல் நாற்புறமுஞ்சூழப்பட்ட உலகத்தில், விரும்பிய போகம் முற்றி—தாம்விரும்பிய போகங்களையனுபவித்து, பின்னர் பூதி தரும் பெரும் பாவ கடல் கடந்து —அதன்மேல் நரகங்களைக்கொடுக்கின்ற பெரிய பாவமாகிய சமுத்திரத்தைக்கடந்து, முத்திநெறி பொருந்துவார்—மோட்சபதத்தையடைகுவர் எ—று.

ஆல் அசை. (எசு)

ஆவிந்த மறையவர்கட் களித்தாலும் புரவிமக மாற்றினுலு, மேவிந்தச் சிவநிசிபோற் பலன்றுரா வெனவியந்து விண்ணினேங்கு, மாவிந்த நடைபயின்று வந்தனைய கரியுரித்த வரதன் வாமக், கோவிந்த னரவிந்தன் கோவிந்தன் முகநோக்கிக் கூறிப் போனுன்.

இ—ள்: ஆ விந்தம் மறையவர்கட்கு அளித்தாலும்— பசுக்களை விந்தக்கணக்காய்ப் பிராமணர்களுக்குத் (தானமாகக்) கொடுத்தாலும், புரவி மகம் ஆற்றினும்—அசுவமேதயாகஞ்செய்தாலும், மேவு இந்த சிவநிசிபோல் பலன் தாரா என வியந்து—பொருந்திய இந்தச்சிவராத்திரியைப்போல நற்பலனைததரமாட்டாவென்று புகழ்ந்து, விண்ணின் ஓங்கும் மா விந்தம் நடை பயின்ற வந்தனைய கரி உரித்த வரதன்—ஆகாயத்திலுயர்ந்து வளர்ந்த பெரிய விந்தகிரியானது நடந்துவந்தாற்போன்ற யானையையுரித்த வரதரும், வாம கோ இந்தன்—இடக்கண் சந்திரனாகவுடையவருமாகிய சிவபெருமான், அரவிந்தன் கோவிந்தன் முகம் நோக்கி—பிரமா விஷ்ணுவாகியவிருவர்முகங்களையும் பார்த்து, கூறி போனான்—திருவாய்மலர்ந்தருளிச்சென்றார் எ—று.

உலங்குலவும் புயமுகுந்த னிவ்விரத நோற்றுயிர்காத் துடற்று போரிற், சலங்குலவு மரக்கர்குலச் சலதிவட வையிற்சுவற்றுந் தானை பெற்றும், பொலங்குலவு மிதழ்விரிந்து தேன்றுளிந்து வழிந்திடுமம் புயப்பொற் பூவி, னிலங்குலவு மயிலைமணந் திமையவர்கண் முதலெவர்க்கு மிறைவ னானான்.

இ—ள் உலம் குலவும் புய முகுந்தன் இவ்விரதம் நோற்று—திரண்டகல்லையொத்த புயங்களையுடைய விஷ்ணுமூர்த்தி இவ்விரதத்தையனுட்டித்து, உயிர் காத்து—ஆன்மாக்களையெல்லாங் காவல்செய்தும், உடற்று போரில் சலங்குலவும் அரக்கர்குல சலதி—எதிர்த்துச்செய்யப்படுகின்ற யுத்தத்தில கோபம்பொருந்திய அரக்கர்கூட்டமாகிய சமுத்திரத்தை, வடவையில் சுவற்றும் தானை பெற்று—வடவாமுகாக்கினியைப்போல வற்றச்செய்கின்ற சக்கராயுதத்தைப்பெற்றும், பொலம் குலவும் இதழ் விரிந்து தேன் துளித்து வழிந்திடும் அம்புய பொன் பூவின் இலம் குலவும் மயிலை மணந்து—பொன்போலவிளங்குகின்ற இதழ்கள்மலர்ந்து தேன்துள்ளியாகச் சிந்துகின்ற அழகிய தாமரைமலராகிய இல்லத்தில் வாசஞ்செய்கின்ற இலக்குமியை விவாகஞ்செய்தும், இமையவர்கள் முதல் எவர்க்கும் முதல்வன் ஆனான்—தேவர்கள்முதலாகிய எல்லோர்க்குந் தலைவருமாயினார் எ—று. (எஅ)

நல்லுணர்வுற் றுயர்கமல நான்முகனோற் றுலகுநால் வகையிற் றோற்றும், பல்லுயிரு நினைத்தமனப் படியமைத்துத் தனதுகரப் படையும் பெற்றுச், சொல்லுமறை முழுதுணர்ந்து தூவியயனப் புள்ளூர்ந்து சுணங்கு பூத்த, வல்லுறழ்மைக் கருங்கண்முலை வாணிதனை மணந்துபெரு வாழ்வு பெற்றான்.

இ—ள்: நல் உணர்வு உற்று உயர் கமல நான்முகன் நோற்று—நல்லறிவுகொண்டு உயர்ச்சிபொருந்திய தாமரையாசனராகிய பிரமதேவரதனையனுட்டித்து, உலகமும் நால் வகையில் தோற்றும் பல் உயிரும் நினைத்த ம

ணப்படி படைத்து— சகலவுலகங்களையும் அண்டசம்முதலாக நான்குவகை யாய்ப்பிறக்கின்ற பலவான்மாக்களையும் தாம்நினைத்த எண்ணத்தின்படி சி ருட்டித்தும், தனது கர படையும் பெற்று—தம்முடைய திருக்கரத்திற் பொருந்திய பிரமாஸ்திரத்தைப்பெற்றும், சொல்லு மறை முழுதுணர்ந் து—சொல்லப்படுகின்ற சதுர்வேதங்கள் முழுவதையுமறிந்தும், தூவி அன ப்புள் ஊர்ந்து—சிறகுகளையுடைய அன்னவாகனத்தைச்செலுத்தியும், சுண ங்கு பூத்த வல் உறழ் மை கரும் கண் முலை வாணிதனை மணந்து—தேமல் படர்ந்த சூதாடுகருவியை நிகர்த்த கரிய கண்களையுடைய ஸ்தனங்கள்பொரு ந்திய சரசுவதிதேவியை விவாகஞ்செய்தும், பெருவாழ்வு பெற்றான்—பெ ருவாழ்வடைந்திருந்தார் எ—று. (எக)

சீதரனுந் திசைமுகனு நோற்றதற்பி னிவ்விரதஞ் சிறந்த தெங்கு, மோதவரு மாகமதிச் சிவநிசியுற் பவமீதென் றுணர்வீ ரென்றே, மாதவத்தி னுயர்சனகன் முதலானை மிசவனத்தோர் மகிழ்ந்து கேட்பச், சூதமுனி வரனிகழ்ந்த சரித்திரத்தை விரித் தெடுத்துச் சொன்னான் மன்னோ.

இ—ள்: சீதரனும் திசைமுகனும் நோற்றதன்பின்— விஷ்ணுமூர்த் தியும் பிரமதேவருமிவ்விரதத்தையனுஷ்டித்ததன்பின்பு, இவ்விரதம் எங்கு ம் சிறந்தது—இச்சிவராத்திரிவிரதமானது உலகமெங்குஞ் சிறப்படைந்தது, ஓதவரும் மாக மதி சிவநிசி உற்பவம் ஈது என்று உணர்வீர் என்று—எடுத்து க்கூறப்படுகின்ற மாசிமாதத்தில்வரும் சிவராத்திரியின் தோற்றமானது இ துவாகுமென அறியக்கடவீரென்று, மா தவத்தில் உயர் சனகன் முதலாம் நைமிச வனத்தோர் மகிழ்ந்து கேட்ப—மகத்தாகிய தவத்திலுயர்ந்த சனக முனிவர் முதலாகிய நைமிசாரணியத்திலுள்ள முனிவர்கள் களிகூர்ந்துகே ட்கும்படி, சூதமுனிவரன்—சூதமகாமுனிவரானவர், நிகழ்ந்த சரித்திரத் தை விரித்து எடுத்துச் சொன்னான்—தோன்றிய இச்சிவராத்திரிசரித்திரத் தை எடுத்து விசாலமாகக்கூறினார் எ—று.

ஏ மன் ஓ அசைகள். (அ0)

சிவராத்திரியுற்பவச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் கO௬.

# சிவராத்திரிமான்மியச்சருக்கம்.



சொன்ன சூதனை நோக்கியவ் வனத்துறை துறவர்கண் ம
றைகூறு, மன்ன மாவிர தத்தினை நோற்றிடு மடைவுமன் றரன்
றாளிற், பன்ன மாமல ரிட்டருச் சனைபுரி பரிசுநீ பரிவோடின், றி
ன்ன வாறெனு விரித்தெமக் குரைத்தியென் றிரப்பவங் கிசைக்கி
ன்றான்.

இ—ள்: அவ்வனத்து உறை துறவர்கள்—அந்நைமிசாரணியத்தின் கண்ணே வாசஞ்செய்கின்ற முனிவர்கள், சொன்ன சூதனை நோக்கி—இவ்வாறுகூறிய சூதமகாமுனிவரைப்பார்த்து, மறைகூறும் அன்ன மா விரதத்தினை நோற்றிடும் அடைவும்—வேதங்களிலெடுத்துக்கூறப்படுகின்ற அப்பெரியவிரதத்தை அனுஷ்டிக்கும்முறைமையும், அன்று அரன் தாளில் பன்ன மா மலர் இட்டு அருச்சனை புரி பரிசும்—அத்தினத்தில் சிவபெருமானுடைய திருப்பாதங்களுக்குப் பச்சிலைகளையும் மகத்தாகிய பூக்களையுஞ்சொரிந்து பூசனைசெய்கின்ற கிரமமும், இன்று நீ பரிவோடு இன்னவாறு என விரித்து எமக்கு உரைத்தி என்று இரப்ப—இப்பொழுது தேவரீரன்புடனே இத்தன்மையையுடையதென்று விரிவாக எங்களுக்குக்கூறியருளவேண்டுமென்று யாசிப்ப, அங்கு இசைக்கின்றான்— அவ்விடத்தேயதனைக்கூறுவாராயினார் எ—று. (க)

மாக மாமதிச் சிவநிசி யுற்பவம் வகுத்துரைத் தனமிப்பா
லாக வத்துட னைந்துள வரனிரா வவற்றைநீ ருணர்வீரால்
யோக ராத்திரிசோமவா ரத்தினன் றுதயகா லையிலேதொட்
டேக மாகவந் நிசிக்கடை யளவுவா விசைந்திடி லிதுவாமே.

இ—ள்: மாக மா மதி சிவநிசி உற்பவம் வகுத்து உரைத்தனம்—மாசிமாதத்தின்கண்ணே வருகின்ற மகாசிவராத்திரியின் உற்பவத்தைவிரித்துக்கூறினேம், இப்பால்—மேல், ஆக அத்துடன் ஐந்துள அரன் இரா—அம்மகாசிவராத்திரியுடன் ஐந்துசிவராத்திரிகளுள்ளன, அவற்றை நீர் உணர்வீரால்—அவைகளைக்கிரமமாக நீங்களறியக்கடவீர், யோகராத்திரி-(அவைகளுள்) யோகசிவராத்திரியானது, சோமவாரத்தினன்று உதய காலையிலே தொட்டு—திங்கட்கிழமை சூரியோதயகாலத்திற்றொடங்கி, ஏகமாக அந்நிசிக்கடை அளவும் உவா இசைந்திடில் இதுவாம்— தனிமையாக அன்றிரவினிறுதிக்காலம்வரையும் அமாவாசைபொருந்துமாயின் இதுவேயாகும் எ—று.

எ-அசை. (உ)

திங்க ளின்கலை குறைசதுர்த் தசிமதிக் கிழமையிற் றிகழல்
லிற், றங்கு சாமநான் களவுதொட் டிருந்திடிற் சயிலமீன் றருண்
மானைப், பங்கில் வைத்திடும் பரமனைப் பூசனை பண்ணுக பரிவோ
டு, மிங்கு ரைத்தவா கமங்கண்மற் றிதனையும் யோகராத் திரியெ
ன்றே.

இ—ள்: திங்களின் கலை குறை சதுர்த்தசி—சந்திரனது கலைகள் தேய்கின்ற (அபரபக்கத்துச்) சதுர்த்தசியானது, மதிக்கிழமையில் திகழ் அல்லில் தங்கு சாமம் நான்கு அளவு தொட்டு இருந்திடில்—சோமவாரத்தில் விளங்குகின்ற இரவிற்பொருந்திய நான்குசாமங்களினும் தொடர்ந்திருக்குமாயின், சயிலம் ஈன்றருள் மானைப் பங்கில் வைத்திடும் பரமனைப் பரிவோடு பூசனை பண்ணுக—மலையரசன்பெற்ற புத்திரியாராகிய உமாதேவியாரையிடப்பாகத்தின்கண்ணே கொண்டருளிய சிவபெருமானை அன்போடு பூசை செய்யக்கடவீர், ஆகமங்கள் இதனையும் யோகராத்திரி என்று இங்கு உரைத்த—ஆகமங்களானவை இதனையும் யோகசிவராத்திரியென்றே இங்கு கூறின எ—று.

மற்று ஏ அசைகள். (௩)

ஈறு வந்தசா மத்தரை நாழிகை யிருளுவா விருந்தாலுந்,
தேறு கின்றவச் சதுர்த்தசி யப்படிச் சேரினுங் கொளல் வேண்
டு, மூறு தீர்தவத் துறவிர்காள் விதிமுறை யுரைக்குமிங் கிவை
நோற்கிற், கூறு மற்றுள சிவநிசி விரதமுக் கோடிநோற் றிடலொ
க்கும்.

இ—ள்: ஈறு வந்த சாமத்து அரை நாழிகை இருள் உவா இருந்தாலும்—(இரவின்) நான்காஞ்சாமத்திற்பின் அரைநாழிகையளவு இருள்நிறைந்த அமாவாசை பொருந்திநின்றாலும், தேறுகின்ற அச் சதுர்த்தசி அப்படிச் சேரினும்—(கணித்துத்) தெளியப்பட்ட அவ்வபரபக்கத்துச்சதுர்த்தசியானது அவ்வாறு நான்காஞ்சாமத்தின் முன் அரைநாழிகையில் வந்துகூடினும், கொளல் வேண்டும்—(யோகசிவராத்திரியாகக்) கொள்ளல்வேண்டும், ஊறு தீர் தவத் துறவிர்காள்—குற்றநீங்கிய தவவொழுக்கத்தைக்கொண்ட முனிவர்களே, விதிமுறை உரைக்கும் இங்கு இவை நோற்கில்—விதிக்கிரமந்தவறாமற் கூறப்படுகின்ற இவ்விரதங்களையனுஷ்டிக்கில், கூறும் மற்று உள சிவநிசி விரதம்—சொல்லப்பட்ட வேறு சிவராத்திரிவிரதங்கள், முக் கோடி நோற்றிடல் ஒக்கும்—மூன்றுகோடிக்கணக்கானவற்றை யனுஷ்டித்தலை நிகர்க்கும் எ—று. (௪)

பருவ மாறுள வருடமோ ரொன்றுறு பன்னிரு மதிதோறு
முருவ மாமதி நிறைந்தது குறைந்திடு மோரிரு பக்கத்து

மருவு மாசதுர்த் தசியறு நான்கினு நோற்பது வழக்காகுந்
திருவ மர்ந்தமா தவரிதை நித்திய சிவநிசி யெனச்சொல்வார்.

இ—ள்: ஆறு பருவம் உள வருடம் ஓர் ஒன்று உறும் பன்னிரு மதி தோறும்—ஆறுபருவங்களைக்கொண்ட ஒவ்வொரு வருடகாலத்தினுமுள்ள பன்னிரண்டுமாதங்களினும், உருவ மா மதி நிறைந்து அது குறைந்திடும் ஓர் இரு பக்கத்தும்—அழகிய பெரிய சந்திரனானவன் வளர்ந்துந்தேய்ந்தும் வருகின்ற ஒவ்வொருபூருவ அபரபக்கங்களிரண்டினும், மருவு மா சதுர்த்தசி அறுநான்கினும்—பொருந்திய பெருமையையுடைய இருபத்துநான்குசதுர்த்தசிதினங்களினும், நோற்பது வழக்கு ஆகும்—இவ்விரதத்தையநுஷ்டிப்பதுவழக்கமாகும், திரு அமர்ந்த மாதவர்—அருள்நிறைந்த மகாதவத்தையுடைய பெரியோர்கள், இதை நித்திய சிவநிசி எனச் சொல்வார்— இதனை நித்திய சிவராத்திரியென்று கூறுவர் எ—று. (௫)

மாதசிவராத்திரி—

அதிக மாகமா தத்தினிற் குளிர்கதி ரம்புலி குறைபக்கத்
திதிபன் னான்குமீன் றிங்கண்முற் றிருதியை சித்திரை மதிதேயு
மதியி னட்டமி யிடபமா தத்துமுன் மருவுமட் டமிமாசில்
பதிக யாழ்மதி மதிவளர் சதுர்த்தியாம் பகர்ந்தகற் கடகத்தில்.

இ—ள்: அதிக மாக மாதத்தினில்—பெருமையையுடைய மாசிமாதத்தில், குளிர் கதிர் அம்புலி குறை பக்க திதி பன்னான்கு—குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் கலைகள்குறைந்த அபரபக்கச்சதுர்த்தசியும், மீன் திங்கள் முன் திருதியை—பங்குனிமாதத்தில் பூருவபக்கத்திருதியையும், சித்திரை மதிதேயும் மதியில அட்டமி—சித்திரைமாதத்தில் அபரபக்கத்தட்டமியும், இடப மாதத்து முன் மருவும் அட்டமி—வைகாசிமாதத்தில் பூருவபக்கத்தட்டமியும், மாசில் பதிக யாழ் மதி மதி வளர் சதுர்த்தி—குற்றமில்லாத ஆனிமாதத்தில் பூருவபக்கச்சதுர்த்தியும், பகர்ந்த கற்கடகத்தில்— கூறப்பட்ட ஆடிமாதத்தில் எ—று. (௬)

விரியும் வெண்ணிலாக் கலைகுறை பஞ்சமி விளங்குமா வணிதன்னி
பரியுஞ் சுக்கில பக்கவட் டமிபுரட் டாதிமுற் பதின்மூன்று
மரிய வைப்பசிக் கம்புலி வளர்திதி யாறிரண் டறைதேளிற்
றெரியு முற்படு சத்தமி பிற்படு திதியிலட் டமிதானும்.

இ—ள்: விரியும் வெண் நிலா கலை குறை பஞ்சமி—கிரணங்கள் விரிந்த வெள்ளிய சந்திரனது கலைகள்தேய்ந்த அபரபக்க பஞ்சமியும், விளங்கும் ஆவணிதன்னில் பரியும் சுக்கிலபக்க அட்டமி—விளங்குகின்ற ஆவணிமாதத்தில்பொருந்திய பூருவபக்கத்தட்டமியும், புரட்டாதி முன் பதின்மூன்றும் — புரட்டாதிமாதத்தில் பூருவபக்கத்திரயோதசியும், அரிய ஐப்பசிக்கு அம்புலி வளர் திதி ஆறிரண்டு—அருமையாகிய ஐப்பசிமாதத்திற் சந்திரன்

வளருகின்ற பூருவபக்கத்துவாதசியும், அறை தேளில் தெரியும் முன்படு சத்தமி—சொல்லப்படுகின்ற கார்த்திகைமாதத்தில் எண்ணப்படும் பூருவபக்கச்சத்தமியும், பின்படு திதியில் அட்டமி தானும்— அபரபக்கத்தட்டமியும் எ—று. (எ)

ஒப்பின் மார்கழி யுபயபக் கத்தினி லுறுதிதி பதினன்குஞ்
செப்பு மான்மதி வளர்மதி தனிலுறு திருதியை யிவைசூலக்
கப்பு வேற்கரக் கண்ணுத லருச்சனைக் குரியவா கமமெல்லாந்
தப்பி லாதெடுத் திவைகண்மா தச்சிவ நிசியெனச் சாற்றும்மே.

இ—ள்: ஒப்பு இல் மார்கழி உபய பக்கத்தினில் உறு திதி பதினன்கும்—ஒப்பில்லாத மார்கழிமாதத்திற்பொருந்திய பூருவ அபரபக்கங்களிரண்டினுமுள்ள சதுர்த்தசிகளும், செப்பு மான்மதி வளர் மதி தனில் உறு திருதியை—சொல்லப்பட்ட தைமாதத்தில வருகின்ற பூருவபக்கத்திருதியையும், இவை—ஆகிய இப்பதினன்குதிதிகளும், கப்பு வேல் சூலக்கரக் கண்ணுதல் அருச்சனைக்கு உரிய—முக்கருப்பொருந்திய சூலாயுதத்தைத்தாங்கியதிருக்கரத்தையும் நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமானை யருச்சனைசெய்தற்குரிய (காலமாகும்), இவைகள்—இத்திதிகளை, ஆகமம் எலாம் தப்பிலாது எடுத்து—எல்லா ஆகமங்களும் தவறுமலெடுத்து, மாத சிவநிசி என சாற்றும்—மாதசிவராத்திரியென்று கூறும் எ—று. (அ)

மாறின் மார்கழிச் சதுர்த்தசி யாதிரை மருவிலுத் தமமாகு
மூறி லாக்குடத் திங்களிற் குளிர்கதி ருடுபதி குறைபக்கந்
தேறி நின்றிடு சதுர்த்தசி குசன்கதிர்க் கிழமையிற் சேர்வுற்றா
லீறி னற்கதி கொடுக்குமுக் கோடியாஞ் சிவநிசிக் கிணையாமால்.

இ—ள்: மாறு இல் மார்கழிச் சதுர்த்தசி ஆதிரை மருவில் உத்தமம் ஆகும்—குற்றமில்லாத மார்கழிமாதத்துச்சதுர்த்தசியானது திருவாதிரையுடன்கூடி லுத்தமமாககொள்ளப்படும், ஊறு இலாக் குடத்திங்களில—குற்றமில்லாத மாசிமாதத்தில், குளிர் கதிர் உடுபதி குறைபக்கம்—குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன்தேயாநின்ற அபரபக்கத்தில், தேறி நின்றிடு சதுர்த்தசி—தெளியப்பட்டுநின்ற சதுர்த்தசியானது, குசன் கதிர்க் கிழமையிற் சேர்வுற்றால்— செவ்வாய்க்கிழமையிலேனும் ஞாயிற்றுக்கிழமையிலேனும் பொருந்துமாகில், ஈறு இல் நல் கதி கொடுக்கும் முக்கோடியாம் சிவநிசிக்கு இணையாம்—அழிவற்ற மோக்ஷத்தைக்கொடுக்கின்ற மூன்றுகோடிக்கணக்காகிய சிவராத்திரிக்குச்சமமுடையதாகும் எ—று.

ஆல்-அசைநிலை. (கூ)

[பு

உற்ற பன்னிரு மதியினிவ் விரதநோற் றுளம்விழைந் தனமுன்னு
பெற்று ளோரயன் மாசியிற் கேசவன் பிறங்குபங் குனிதன்னிற்

சொற்ற சித்திரைத் திங்களிற் பார்ப்பதி சூரியன் விடைமாதத்
தற்ற மற்றிடு மிதுனமா தத்தர னாடியிற் குமரேசன்.

இ—ள்: உற்ற பன்னிரு மதியில் இவ்விரதம் நோற்று— பொருந்திய பன்னிரண்டுமாதத்தினும்வருகின்ற இம்மாத சிவராத்திரிகளை அனுட்டித்து, உளம் விழைந்தன முன் நாள் பெற்றுளோர்—மனதின்கண்ணே விரும்பியவைகளை முன்னைநாளிலே பெற்றவர்கள் (யாரெனில்), மாசியில் அயன்—மாசிமாதத்தில் பிரமாவும், பிறங்கு பங்குனி தன்னில் கேசவன்—விளங்காநின்ற பங்குனிமாதத்தில் விஷ்ணுவும், சொற்ற சித்திரைத் திங்களில் பார்ப்பதி—சொல்லப்பட்ட சித்திரைமாதத்தில் பார்ப்பதிதேவியாரும், விடை மாதத்து சூரியன்—வைகாசிமாதத்தில் சூரியனும், அற்றம் அற்றிடு மிதுன மாதத்து அரன்—கேடற்ற ஆனிமாதத்தில் உருத்திரனும், ஆடியில் குமரேசன்—ஆடிமாதத்தில் குமாரக்கடவுளும் எ—று. (கய)

சிங்கத் தம்புலி கன்னியிற் சேடனிந் திரனெடுந் துலைத்திங்க
டங்கு கார்த்திகை நாமக டனுமதி தனின்மனோன் மணிதையிற்
றுங்க மாரிமி லிடபதே வன்பசுஞ் சுகமொழி யுமைவாம
பங்க நீடரு டந்திடத் தக்கநற் பக்கராத் திரிசொல்வாம்.

இ—ள்: சிங்கத்து அம்புலி—ஆவணிமாதத்திற்சந்திரனும், கன்னியில் சேடன்—புரட்டாதிமாதத்தில் ஆதிசேடனும், நெடும் துலைத் திங்கள் இந்திரன்—நெடிய ஐப்பசிமாதத்தில் இந்திரனும், தங்கு கார்த்திகை நாமகள்—பொருந்திய கார்த்திகைமாதத்தில் சரசுவதியும், தனுமதி தன்னில் மனோன்மணி—மார்கழிமாதத்து மனோன்மணிதேவியும், தையில் துங்கம் ஆர் இமில் இடபதேவன்-தைமாதத்தில் உயர்வுபொருந்திய முரிப்பையுடைய நந்திதேவருமாகிய (இவர்களேயாம்), பசும் சுக மொழி யுமை வாம பங்கன்—பச்சைநிறம்பொருந்திய கிளிமொழியையொத்த இனியவார்த்தையையுடைய உமாதேவியாரை யிடப்பாகத்திற்கொண்டருளிய சிவபெருமான், நீடு அருள் தந்திடத் தக்க நல் பக்கராத்திரி சொல்வாம்—மிகவுமனுக்கிரகஞ்செய்தற்குரிய நல்ல பக்கசிவராத்திரியையினிக்கூறுவாம் எ—று. (கக)

மகர திங்களி னபரபக் கத்திடை வருபிர தமையெய்தப், புகலு மன்றுதொட் டெதிர்ந்தபன் மூன்றுநாட் புசிப்பதோர் பொழுதாகிப், பகர்த ரும்பதி னொன்கினி னேற்பது பக்கராத் திரியாகு, மிகப ரந்தரு விரதமற் றிதற்கிணை யாவரே புகல்கிற்பார்.

இ—ள்: மகர திங்களின் அபரபக்கத்திடை வரும் பிரதமை எய்த—தைமாதத்தின்கண்ணே அபரபக்கத்தில்வருகின்ற பிரதமையானது பொருந்த, புகலும் அன்று தொட்டு—சொல்லப்படுகின்ற அத்தினந்தொடங்கி, எதிர்ந்த பன்மூன்றுநாள்—எதிராகவருகின்ற பதின்மூன்றுதினங்களும், ஓர்

பொழுது புசிப்பது ஆகி—ஒருபொழுதுமாத்திரம் புசிப்பதாய், பகர்தரும் ப திஞன்கினில் நோற்பது—கூறப்படுகின்ற பதிஞன்காந்திதியாகிய சதுர்த்த சிதினத்திலுபவாசஞ்செய்வது, பக்க ராத்திரியாகும்—பக்கசிவராத்திரியென் றுகூறப்படும், இதற்கு இணை—இச்சிவராத்திரிக்குச் சமமாக, இகபரம் தரு ம் விரதம்—இம்மை மறுமைச்சுகத்தைத் தரத்தக்க விரதங்கள், யாவரே புக ல்கிற்பார்—யார்தாம் எடுத்துக்கூறவல்லவர் எ—று.

மற்று அசை. (கஉ)

அருட ருஞ்சிவ ராத்திரி யிப்படி யைந்துபட் டனவாகு, மு ருகு காதலோ டைந்தையு நோற்றனன் றுரைத்தவை முடியாதே ன், மருவு மிங்கிதி ஞென்றனை விதித்திடும் வரன்முறை வழுவா மற், பெருகு மன்புட ஞேற்றவர் பெறற்கரும் பெருங்கதி பெறு வாரால்.

இ—ள்: அருள் தரும் சிவராத்திரி இப்படி ஐந்து பட்டனவாகும்—அனுக்கிரகத்தைக்கொடுக்கின்ற சிவராத்திரியானது இவ்வாறு ஐந்துபிரிவை யுடையதாகும், உருகு காதலோடு ஐந்தையும் நோற்றல் நன்று—கசிவுகொண்ட அன்போடு இவ்வைந்து சிவராத்திரிகளையும் அனுஷ்டிப்பது நன்மையாம், உரைத்தவை முடியாதேல்— கூறப்பட்ட அவையனைத்தையும் அனுஷ்டிக்கமுடியாதாயின், மருவும் இங்கிதில் ஒன்றனை—பொருந்திய இவ் விரதத்தில் ஒன்றைமாத்திரம், விதித்திடும் வரன்முறை வழுவாமல்— விதிக் கப்பட்ட கிரமந்தவறாமல், பெருகும் அன்புடன் நோற்றவர்—மிக்க காதலோடு அனுஷ்டித்தவர்கள், பெறற்கு அரும் பெருங்கதி பெறுவார்— பெறுதற்கரிய மோக்ஷப்பேற்றை அடைகுவர் எ—று.

ஆல் அசை. (கரு)

ஊதை முன்படு பஞ்சியி னுறுவினை யோட்டியொண் டுவ ரோட்டக், கோதை பங்கன தருட்கடற் குளித்திடுங் கோதறு கு ணத்தீர்கா, ளேதை யாமெடுத் துரைப்பதிங் குமக்கினி யிமையவ ரறியாரிப், பேதை மானுட ரறிவரோ சிவநிசிப் பெருமையின் றி றனம்மா.

இ—ள்: ஊதை முன்படு பஞ்சியின் உறுவினை ஓட்டி—காற்றின்மு ன்னகப்பட்ட பஞ்சைப்போலப்பொருந்திய தீவினையையோட்டெடுப்பச்செ ய்து, ஒள் துவர் ஓட்டக் கோதை பங்கனது— ஒளிபொருந்திய பவளம்போன்ற அதரங்களையுடைய உமாதேவிபங்காராகிய சிவபெருமானது, அருள் கடல் குளித்திடும் கோது அறு குணத்தீர்காள்— கிருபாசாகரத்தின்கண்ணே யமிழ்க்தாநின்ற குற்றமற்ற குணத்தையுடைய முனிவர்களே, இங்கு உமக்கு இனி எதை யாம் எடுத்து உரைப்பது—இங்கே உங்களுக்கு இனியெவற்றை யாமெடுத்து (விதந்து) கூறுவது, சிவநிசிப் பெருமையின் திறன்—சி

வராத்திரியினது மகிமையின்வலிமையை, இமையவர் அறியார்— தேவர்க ளும் முற்றஅறிந்திலர், இப்பேதை மானுடர் அறிவரோ—இந்த அறியாமை யையுடைய மனுடர்களறிவார்களோ (அறியார்) எ—று.

அம ஆ அசைகள். அட்டமோ வியப்பு (கச)

வேறு.

மத்தகமால் களிற்றுரிவை போர்த்துழுவை யுரித்துடுத்து ம திபஞ் சூடும், வித்தகனீ னிறமிடற்றுச் சிவனிரவா கியவிரதம் வி ளங்க நோற்கி, லுத்தமமத் திமமதம மெனவொருமூ வகைப்படு மவ் வொழுங்கிற் சொல்வன், முத்தழல்வேட் டிடுமுனிவீர் கே ண்மினெனச் சூதமுனி மொழிவ தானான்.

இ—ள். மத்தக மால் களிற்று உரிவை போர்த்து— மத்தகத்தையு டைய மயக்கம்பொருந்திய யானையின்தோலைப் போர்வையாகக்கொண்டும், உழுவை உரித்து உடுத்து—புலியையுரித்து (அத்தோலை) உடையாகத்தரித் தும, மதியஞ்சூடும் வித்தகன்—சந்திரனைத்திருமுடியிற்சூடிய வித்தகத்தன் மையையுடையவராகிய, நீல் நிற மிடற்றுச் சிவன் இரவாகிய விரதம்—கரி ய கண்டத்தைக்கொண்ட சிவபெருமானது திருவிரவின்விரதத்தை, விளங் க நோற்கில—விளக்கமாக அனுஷ்டிக்கில, உத்தமம் மத்திமம் அதமம் என ஒரு மூவகைப்படும்—உத்தமம் மத்திமம் அதமம் என மூன்றுபேதப்படும், அவ்வொழுங்கில் சொல்வன்—அவைகளைக்கிரமமாகக்கூறுவேன், முத்தழல வேட்டிடும் முனிவீர் கேண்மின் என—ஆகவனீயம் காருகபத்தியம் தக்ஷ ணாக்கினியம் என்கின்ற மூன்றுவகையாகிய அக்கினியையுங்கொண்டு யாகஞ் செய்கின்ற முனிவர்களே கேட்கக்கடவீர்களென்று, சூதமுனி மொழிவதா னான்—சூதமகாமுனிவர் சொல்லுவாராயினர் எ—று. (கரு)

விரித்தசெழுங் கதிர்ப்பரிதி மேற்றிசைபோ யந்திவந்து மே வுங் காறுந், தெரித்ததிர யோதசியாந் திதிநின்று பின்புசதுர்த் த சிதான் கூடித், தரித்தவிரா வன்றிமற்றைப் பகன்முழுதுந் தங்கி யிடிற் றுறுகட் டந்தி, யுரித்தபிரா னிரசனிக்கு ருத்தமத்தி லுத் தமமா யுரைப்பர் மன்னோ.

இ—ள்: விரித்த செழும் கதிர்ப்பரிதி மேல் திசை போய் அந்தி வ ந்து மேவும் காறும்—பரந்த செழுமையாகிய கிரணங்களையுடைய சூரியன் மேற்குத்திசையையடைந்து அந்திக்காலம்வரும்வரையும், தெரித்த திர யோதசியாம் திதி நின்று—கணிக்கப்பட்ட திரயோதசித்திதியானதுநின்று, பின்பு சதுர்த்தசி தான் கூடி—பின்பு சதுர்த்தசித் திதியானது கூடப்பெற்று, தரித்த இரா அன்றி—பொருந்திய இரவுமாத்திரமன்றி, மற்றைப்பகல் மு ழுதும் தங்கியிடில்—மற்றைநாட்பகல்முழுவதும் செறிந்திருக்குமாயின்,

றுசண் தந்தி உரித்த பிரான் இரசனிக்குள்— வன்கண்ணையுடைய யானை யையுரித்த சிவபெருமானது இராத்திரிக்குள், உத்தமத்தில் உத்தமமாய் உரைப்பர்—உத்தமோத்தம சிவராத்திரியென்று கூறுவர் எ—று.

மன் ஓ அசைநிலைகள். (கசு)

உதித்தகதி ரத்தமித்த பின்கூடுஞ் சதுர்த்தசியுத் தமமா மெ ன்பர், துதித்தவுத யாதியுத யாந்தமதாய்ப் பகலிரவு தோய்ந்து நி ற்கும், கதித்தசதுர்த் தசிகதிரத் தமிக்குமுன்சேர் சதுர்த்தசிநற் கங்குற் போதின், மதித்தபத்து நாழிகையின் பின்கூடுஞ் சதுர்த் தசிமத் திமமா மன்றே.

இ—ள்: உதித்த கதிர் அத்தமித்த பின் கூடும் சதுர்த்தசி—உதயஞ் செய்த சூரியனானவன் அஸ்தமனமானபின்பு கூடுகின்ற சதுர்த்தசியான து, உத்தமமாம் என்பர்—உத்தமசிவராத்திரியென்று புகலுவர், துதித்த உ தயாதி உதய அந்தமதாய் பகல இரவு தோய்ந்து நிற்கும் கதித்த சதுர்த்த சி—துதிக்கப்படுகின்ற உதயந்தொடங்கி மற்றநாள் உதயம் இறுதியாகவுள் ள பகலும் இரவும் செறிந்து நிற்கின்ற சிறந்த சதுர்த்தசியும், கதிர் அத்தமி க்கு முன் சேர் சதுர்த்தசி—சூரியன் அஸ்தமிக்குமுன்னே கூடுகின்ற சதுர் த்தசியும், நல கங்குல் போதில் மதித்த பத்து நாழிகையின் பின் கூடும் சது ர்த்தசி—நல்ல இரவின்கண்ணே கணிக்கப்பட்ட பத்துநாழிகைக்குமேல் வந் துகூடுகின்ற சதுர்த்தசியும், மத்திமமாம்—மத்திமசிவராத்திரியாகும் எ—று.

அன்று எ அசைநிலைகள். (கஎ)

அல்லினிரு பதகடிகை யளவுசதுர்த் தசிதானின் றதற்குப் பின்னர்ச், சொல்லினுயர் மதிபரிதி யுடன்கூடு மமாவாசை தொ ட்டத்தோடு, புல்லியிடி னதமசிவ ராத்திரியா மெனவெடுத்துப் புகல்வ ரல்லி, னல்லியல்சேர் பதின்மூன்றாந் திதிதொட்ட சதுர் த்தசியே நன்ற தாமால்.

இ—ள்: அல்லின் இருபது கடிகை அளவும் சதுர்த்தசிதான் நின் று—இரவிலிருபது நாழிகைவரையும் சதுர்த்தசித்திதிநின்று, அதற்குப் பி ன்னர்—அதன்மேல், சொல்லின் உயர் மதி பரிதி உடன் கூடும் அமாவாசை தொட்டு அத்தோடு புல்லியிடின்—மேலாகக்கூறப்படுகின்ற சந்திரனானவன் சூரியனுடன்வந்துகூடுகின்ற அமாவாசைத்திதியானதுதொடங்கி அச்சதுர்த் தசியோடு பொருந்துமாயின், அதம சிவராத்திரியாம் என எடுத்துப் புகல்வ ர்—அதமசிவராத்திரியென்று விதந்து கூறுவர், அல்லில் நல இயல் சேர் ப தின்மூன்றாந் திதி தொட்ட சதுர்த்தசியே—இரவில் நன்கமைந்த பதின்மூ

ன்றுந்திதியாகிய திரயோதசித்திதியோடு பொருந்தப்பெற்ற சதுர்த்தசித்தி தியே, நன்றதாம்—நன்மையையுடைத்தாம் எ—று.

ஆல் அசை. (கஅ)

கங்குறனிற் பதின்மூன்றுந் திதியுடனே சதுர்த்தசியோர் க லைதான் கூடி, லங்கதுவே சிவநிசியாக் கொளல்வேண்டுஞ் சிவரூ ப மாகு மேன்மை, தங்குசதுர்த் தசிதிரயோ தசிசத்தி ரூபமிவை தாமொன் றாகித், துங்கமுறக் கூடுமிராச் சிவலிங்கா காரமெனச் சொல்வர் மன்னோ.

இ—ள்: கங்குல்தனில் பதின்மூன்றுந் திதியுடனே சதுர்த்தசி ஓர் கலைதான் கூடில்—இரவில் திரயோதசித்திதியோடு சதுர்த்தசித்திதியான து ஓர்கலையளவுகாலமாயினும் பொருந்தின், அங்கு அதுவே சிவநிசியாக் கொ ளல் வேண்டும்—அதனையே சிவராத்திரிதினமாகக்கொள்ளல்வேண்டும், மே ன்மை தங்கு சதுர்த்தசி சிவரூபம் ஆகும்—மகிமைபொருந்திய சதுர்த்தசித் திதி சிவவடிவமாகும், திரயோதசி சத்திரூபம்— திரயோதசித்திதி சத்திவ டிவமாகும், இவைதாம் ஒன்றாகித் துங்கமுறக் கூடும் இரா—இவ்விரண்டுதி திகளும் ஒன்றுபட்டு உயர்வுபொருந்தக்கூடுகின்ற இரவானது, சிவலிங்கா காரம் எனச் சொல்வர்—சிவலிங்கவடிவமுடையதுஎன்றுகூறுவர் (அறிஞர்) எ—று.

மன் ஒ அசைநிலைகள். (கக)

ஆசிலமா வாசைதொட்ட சதுர்த்தசிதா னுவியக லங்கம் போலாம், பேசுமிதிற் பூசைசெய்யிற் பிரமகத்தி தோடமுண்டா ம் பிறங்கு மந்தத், தேசமுழு வதுங்கெடுமுற் புண்ணியம்போஞ் சிந்தைசெய்யிற் றிடுக்கிட் டுள்ளங், கூசுநர கங்கடம்மிற் கொடிய விரௌ ரவமதனிற் குளிப்பர் மாதோ.

இ—ள்: ஆசில் அமாவாசை தொட்ட சதுர்த்தசிதான்— குற்றமில் லாத அமாவாசைத்திதியை(அர்த்தராத்திரியில்)தீண்டிநிற்குஞ் சதுர்த்தசியா னது, ஆவி அகல் அங்கம்போலாம்— உயிர்நீங்கப்பெற்ற சரீரத்திற்குச்சமமா கும், பேசும் இதில் பூசைசெய்யில்-கூறப்படுகின்ற இத்தினத்திற்சிவராத்தி ரிபூசைசெய்யின், பிரமகத்தி தோடம் உண்டாம்— பிராமணனைக்கொன்ற தோஷமுண்டாகும், பிறங்கும் அந்த தேசம் முழுவதும் கெடும்—விளங்குகி ன்ற அந்நாடுமுழுவதும் நாசமடையும், முன் புண்ணியம் போம்—முன்னாளி ற்செய்த புண்ணியங்களுமழியும், சிந்தைசெய்யில்—மனதினால்நினைத்தாலு ம், திடுக்கிட்டு உள்ளம் கூசு நரகங்கள் தம்மில்— நடுக்கங்கொண்டு மனங்கூ சுகின்ற நரகங்களுக்குள், கொடிய இரௌரவம் அதனில் குளிப்பர்—கொடு மையையுடையரௌரவம் என்னும் நரகத்தில் வீழ்ந்து வருந்துவர் எ—று.

மாது ஓ அசைநிலைகள். (உ0)

ஊறிலமா வாசைதொட்ட சதுர்த்தசிவை திகர்விரத்தர்க் குரிய தாகுங், கூறுபுகழ்ச் சைவர்முன்னாட் கொளல்வேண்டுந் திருவோணங் கூடி நிற்கு, மாறிலமா வாசைதொட்ட சதுர்த்தசிதான் விரத்தருக்கும் வாழ்வின் மிக்க, தூறில்கிரு கத்தருக்கு மாகுமமா வாசையெனுந் தோட மின்றே.

இ—ள்: ஊறு இல் அமாவாசை தொட்ட சதுர்த்தசி—குற்றமற்ற அமாவாசைத்திதியோடு பொருந்திய சதுர்த்தசியானது, வைதிகர் விரத்தர்க்கு உரியது ஆகும்—வேதஒழுக்கத்தையுடையவர்களுக்கும் துறவிகளுக்குமுரிய விரதமாகும், கூறுபுகழ் சைவர் முன் நாள் கொளல் வேண்டும்—சொல்லப்பட்ட கீர்த்தியையுடைய ஆகமகிரமத்தைக்கொண்ட சைவர்கள் முதற்றினத்தையே அனுஷ்டிக்கவேண்டும், திருவோணம் கூடி நிற்கும் மாறு இல் அமாவாசை தொட்ட சதுர்த்தசிதான்—திருவோணநட்சத்திரத்தோடு சேர்ந்துநிற்கின்ற குற்றமில்லாத அமாவாசையுடன்கூடிய சதுர்த்தசியானது, விரத்தருக்கும் வாழ்வின் மிக்க தூறு இல் கிருகத்தருக்கும் ஆகும்—துறவிகளுக்கும்மிக்கவாழ்வையுடைய இழிவற்ற இல்லாச்சிரமிகளுக்குமுரியதாகும், அமாவாசை எனும் தோடம் இன்று—அமாவாசைதீண்டுதலாகிய குற்றம் இல்லையாம் எ—று.

ஏ—அசை. (உக)

அற்றமிலத் தராத்திரிமுன் சதுர்த்தசியோர் கலைகூடி லன்று கொள்க, செற்றமிலச் சதுர்த்தசிநள் ளிரவினிற்பின் னொருகலைதான் சேடித்துற்றான், மற்றநாட் கொளல்வேண்டும் வைதிகரும் விரத்தர்களு மதிக்கும்பக்க, முற்றதுதா னிரண்டுபடி லிரவிலதி கத்திதிதா னுசிதமாமே.

இ—ள்: அற்றம் இல் அர்த்தராத்திரி முன் சதுர்த்தசி ஓர் கலை கூடில்—கேடில்லாத நடுவிரவின்முன் சதுர்த்தசித்திதியானது ஒருகலையளவு கூடிநின்றால், அன்று கொள்க—அத்தினத்திலே விரதத்தைக்கொள்ளல்வேண்டும், செற்றம் இல் அச் சதுர்த்தசி—பகைமையில்லாத அச்சதுர்த்தசித்திதியானது, நள் இரவினில் பின் ஒருகலைதான் சேடித்து உற்றால்— மறுநாள் அர்த்தராத்திரியின் பின் ஒருகலையளவு எஞ்சிநிற்குமாயின், வைதிகரும் விரத்தர்களும் மற்றநாள் கொளல் வேண்டும்—வைதிகரும் துறவிகளும் பின்னாளிலே விரதத்தைக்கொள்ளல்வேண்டும் (சைவர்முதனாட்கொள்ளவேண்டுமென்பதாம்), மதிக்கும் பக்கம் உற்றது தான் இரண்டுபடில்—மதிக்கப்படுகின்ற சதுர்த்தசித்திதி இரண்டு அர்த்தராத்திரிகளினும்வந்து இரண்டுபட்டு வருமாயின், இரவில் அதிகத்திதிதான் உசிதமாம்— இரவிற்சதுர்த்தசித்திதியதிகமாய்நிற்குந்தினமேவிரததினமாகக்கொள்ளத்தக்கதாம் எ—று.

ஏ-அசை. (உஉ)

திதித்திரயஞ் சேர்ந்துவரில் வைதிகர்க்குஞ் சைவருக்குஞ் சி
றந்த தாகு, மதிக்குமற்றை நிசிக்கடையி லமாவாசை கூடமுத
ன் மழுமா னேந்து, நதிச்சடையோன் றனைப்பூசை புரிந்திடுதல்
சைவருக்கு நன்று மென்றே, விதித்தனரான் மதிக்கிழமைச் சது
ர்த்தசிக்கு மிந்தமுறை வேண்டுந் தானே.

இ—ள்: திதித் திரயம் சேர்ந்து வரில்—(திரயோதசியின் பிற்கூறும் சதுர்த்தசியின் முழுக்கூறும் அமாவாசையின் முற்கூறுமாகிய) மூன்றுதிதிகளும் ஒருதினத்தில் வருமாயின், வைதிகர்க்கும் சைவருக்கும் சிறந்ததாகும்— வேத ஒழுக்கத்தையுடையவர்களுக்கும் ஆகம ஒழுக்கத்தையுடையவர்களுக்கும் சிறப்புடையதாகும், மதிக்கும் அற்றை நிசிக்கடையில் அமாவாசை கூட முதல்—விரததினமாக நிச்சயிக்கப்பட்ட அத்தினத்தினிராமுடிவில் அமாவாசையானது வந்துகூடுமுன்னர், மழு மான் ஏந்தும் நதிச் சடையோன் தனை பூசை புரிந்திடுதல்— மழுவாயுதத்தையும் மான்கன்றையுந்தாங்கிய கங்கைநதியைக்கொண்ட சடைமுடியையுடைய சிவபெருமானைப் பூசிப்பது, சைவருக்கு நன்றும் என்று விதித்தனர்—ஆகமிகளுக்கு நன்மையையுடையதென்று (மேலோர்) கூறினர், மதிக்கிழமைச் சதுர்த்தசிக்கும் இந்தமுறை வேண்டும்—சோமவாரத்திலேவருகின்ற சதுர்த்தசித்திதிக்கும் இந்தக்கிரமங் கொள்ளல்வேண்டும் எ—று.

ஏ ஆல் தான் ஏ அசைகள். (உங)

அற்றனின்மூ வைந்துகன்ன லாமளவிற் சதுர்த்தசிமுற் றி
னத்திற் கூடி, மற்றைநா ளிரவுபதி னைந்துகன்ன லளவிலுவா வ
ந்தொன் றாகி, யுற்றிடிற்பிற் றினந்தனிலே பூசைபுரிந் திடலாகா
தொழிக முந்தச், சொற்றதினத் தருச்சனைசெய் திடவிதித்தார்
சைவநெறித் துறைநின் றோர்க்கே.

இ—ள்: அல் தனில் மூவைந்து கன்னல் ஆம் அளவில்—இரவிற் பதினைந்துநாழிகையளவில், சதுர்த்தசி முன் தினத்தில் கூடி—சதுர்த்தசித்திதியானது முதனாளிற்கூடி, மற்றை நாள் இரவு பதினைந்து கன்னல் அளவில்—பின்னைநாள் இரவு பதினைந்துநாழிகையளவில், உவா வந்து ஒன்றாகி உற்றிடில்—அமாவாசையானது வந்து ஒன்றாகக்கூடுமாயின், பின் தினந்தனிலே பூசை புரிந்திடல் ஆகாது ஒழிக—பின்னைத்தினத்திலே பூசனைசெய்தல் நன்றன்று ஆதலின் அதனைநீக்கக்கடவர், சைவ நெறித்துறை நின்றோர்க்கு—ஆகமவழியிலே நிற்கின்றவர்களுக்கு, முந்தச் சொற்ற தினத்து அருச்சனை செய்திட விதித்தார்— முதலாகச் சொல்லப்பட்டநாளிற் பூசனைசெய்யும்படி கூறினர் எ—று.

ஏ அசை. (உச)

முற்றிதியி லோர்பொழுதுண் டிடையில்விதித் திடுந்திதியி
ன் முழுது முண்ணு, திற்றிதனிற் றுயிலொருவி யேறேறி தனை
ப்பூசித் தியாம நான்கும், பிற்றிதியிற் சிவனடியார்க் கன்னநல்கி
ப் பாரணந்தான் பின்னர்ச் செய்யச், சொற்றிடுமா கம்மாதச் சி
வநிசிநோற் றிடக்கருதித் துணிந்து ளோர்க்கே.

இ—ள்: மாக மாத சிவநிசி நோற்றிட கருதி துணிந்துளோர்க்கு—மாசிமாதத்தின்கண்வருகின்ற மகாசிவராத்திரியை அனுஷ்டிக்க நினைத்துத் துணிந்தவர்கட்கு, முன் திதியில் ஓர் பொழுது உண்டு—முற்றிதியாகிய திரயோதசிவருந் தினத்தில் ஒருபொழுதுமாத்திரம் உணவுகொண்டு, இடையில் விதித்திடும் திதியில் முழுதும் உண்ணுது— இடையிலே கூறப்பட்ட சதுர்த்தசித்திதியில முழுதும் உபவாசியாகி, இற்று இதனில் துயில் ஒருவி—இந்தத்தினத்திலே நித்திரையுமின்றி, ஏறு ஏறிதனை யாமம் நான்கும் பூசித்து—இடபவாசனுரூடராகிய சிவபிரானை அவ்விரவின் நான்குயாமங்களும் பூசனைசெய்து, பின் திதியில் சிவன் அடியார்க்கு அன்னம் நல்கி --பின்திதியாகிய அமாவாசையிற் சிவபெருமானுடைய அடியவர்களுக்கு அன்னதானஞ் செய்து, பின்னர் பாரணந்தான் செய்ய சொற்றிடும்—பின்பு பாரணஞ்செய்யும்படி கூறும் எ—று. எ ஆசை. (௨௫)

ஓதவருஞ் சோமசிவ நிசிதனக்குச் சதுர்த்தசியி லுண்டு வா
விற், றாதவிழ்பூங் கொன்றையணி வேணியனைப் பூசைசெய்து
சாம நான்குந், தீதகன்ற பிரதமையிற் பாரணஞ்செய் திடவேண்
டுஞ் செப்புமைந்து, பேதமுள்ள சிவநிசிக்குட் சதுர்த்தசிசங் க
ரனிரவாய்ப் பிறங்கி நின்றால்.

இ—ள் ஓத வரும் சோம சிவ நிசி தனக்கு--எடுத்துக்கூறத்தகும் (பெருமையையுடைய) திங்கட்கிழமையின்கண்ணே வருகின்ற யோகசிவராத்திரிக்கு, சதுர்த்தசியில உண்டு—சதுர்த்தசிதிதியில் ஒருபொழுதுணவுகொண்டு, உவாவில்—அமாவாசைததிதியில, தாது அவிழ் கொன்றை பூ அணி வேணியனை— இதழ்விரிந்த கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானை, சாமம் நான்கும் பூசை செய்து—(இரவின்) நான்குசாமங்களினும் அருச்சனைபுரிந்து, தீது அகன்ற பிரதமையில் பாரணம் செய்திடல் வேண்டும்— குற்றம்நீங்கிய பிரதமைத்திதியிற் பாரணஞ்செய்தல்வேண்டும், செப்பும் ஐந்து பேதம் உள்ள சிவ நிசிக்குள்—(முன்) கூறப்பட்ட மாகசிவராத்திரி யோகசிவராததிரி நித்தியசிவராத்திரி மாசசிவராத்திரி பக்கசிவராத்திரியென்கின்ற ஐந்துவகைப்பட்ட சிவராத்திரிகளுக்குள், சதுர்த்தசி சங்கரன் இரவாய் பிறங்கி நின்றால்— சதுர்த்தசித்திதியானது சிவராத்திரிதினமாக விளங்கிக்கிடந்தால் எ—று. (௨௬)

இன்னசிவ நிசிவிரத நோற்றிடுவோர் முற்றினத்தி லெய்தா நின்ற, வன்னதிர யோதசியி லொருபொழுதுண் டரிவையர்தோ ளணைத லின்றிச், சொன்னவிர வகற்றியற்றை வைகறையிற் புனிதநதித் தோயத் தாடிப், பின்னர்தின மணியுதிக்குங் காலையிற் செய் கடனனைத்தும் பிறழா தாற்றி.

இ—ள். இன்ன சிவநிசி விரதம் நோற்றிடுவோர்— இவ்விதமாகிய சிவராத்திரிவிரதத்தையனுஷ்டிப்பவர்கள், முன் தினத்தில் எய்தாநின்ற அன்ன திரயோதசியில் ஒரு பொழுது உண்டு—முதல்நாளில் வந்த அந்தத் திரயோதசித்திதியில் ஒருபொழுதுணவுகொண்டு, அரிவையர் தோள் அணைதல் இன்றி—பெண்களோடு சையோகமில்லாதவர்களாய், சொன்ன இரவு அகற்றி—கூறிய திரயோதசியிரவைக்கழித்து, அற்றை வைகறையில்—அந்தவிடியற்காலத்தில், புனிதநதித் தோயத்து ஆடி— பரிசுத்தமாகிய நதிநீரில்ஸ்நானஞ்செய்து, பின்னர் தினமணி உதிக்கும் காலையில்—பின்பு சூரியனுதயஞ்செய்கின்ற சமயத்தில், செய்கடன் அனைத்தும் பிறழாது ஆற்றி—செய்யவேண்டிய கடமைகளையாவற்றையும் வழுவாதுசெய்து எ—று. ()

மதிமுடியோன் கோயிறனை வலம்வந்து தண்டனிட்டு வணங்கி வாயாற், றுதிபுகன்றில் வயினேகி யிழிகுலத்தோர் பாதகர் பாற் றுன்னி டாமற், கதியறுமற் றவருட ன்வாய் பேசாமற் கண்ணினெதிர் கண்டி டாம, னதியிடைப்போய் நண்பகலி னுனவிதி வழுவாது நன்னீ ராடி.

இ—ள். மதி முடியோன் கோயில்தனை வலம் வந்து—சந்திரனைத்தரித்த திருமுடியையுடைய சிவபெருமானது திருக்கோவிலைப்பிரதக்ஷிணஞ்செய்து, தண்டனிட்டு வணங்கி— தண்டாகாரமாக (விழுந்து) கும்பிட்டு, வாயால் துதி புகன்று—வாயினால் ஸ்தோத்திரங்களைக்கூறி, இல் வயின் ஏகி—தமது இல்லத்தையடைந்து, இழிகுலத்தோர் பாதகர்பால் துன்னிடாமல—தாழ்ந்தகுலத்தவர்களையும் கொலையாளர்களையுஞ்சேராமல், கதி அறும் அவருடன் வாய் பேசாமல்—நற்கதிக்கு அருகரல்லாத அவர்களோடுரையாடாமலும, கண்ணின் எதிர் கண்டிடாமல்—கண்ணினால் எதிரேகாணாமையும், நதியிடைப்போய்—ஆற்றிற்சென்று, நண் பகலில் ஆன விதி வழுவாது நல் நீர் ஆடி—மத்தியானகாலத்தில் சொல்லியவிதிமுறைவழுவாமல் சுத்தசலத்தில் ஸ்நானஞ்செய்து எ—று.

மற்று அசை. (உஅ)

தூய்ய வெண்டூ சிரண்டுடுத்திட் டுச்சியிற்செய் கடன்கழித்துச் சுடலை யாடு, மையனைப்பூ சிக்குமிடங் கோமயத்தான் மெ

ழுகியபின் னம்பொன் னாடை, செய்யதுகி னேத்திரத்தால் விதா
னித்து வாழைகன்னல் சிறக்கநாட்டி, மையகனாண் மலர்மாலை
தோரணங்க ணிரைநிரையின் வயங்கநாற்றி.

இ—ள்: தூய்ய வெண் தூசு இரண்டு உடுத்திட்டு— பரிசுத்தமாகிய இரண்டு வெள்ளைவஸ்திரங்களைத்தரித்துக்கொண்டு, உச்சியில் செய் கடன் கழித்து—மத்தியானகாலத்திற்செய்யவேண்டிய கிரியைகளைமுடித்து, சுடலை ஆடும் அப்பனை பூசிக்கும் இடம் கோமயத்தால மெழுகியபின்— மயானபூமியின்கண்ணே நடனஞ்செய்கின்ற சிவபெருமானுக்குப் பூசைசெய்யுமிடத்தைச் சாணத்தினாற்றிருமெழுக்கிட்டபின்னர், அம்பொன் ஆடை செய்ய துகில் நேத்திரத்தால விதானித்து—அழகியபொற்பீதாம்பரங்களினாலுஞ் செந்நிறமாகிய வஸ்திரங்களினாலும் பட்டுவஸ்திரங்களினாலும் மேற்கட்டிகட்டி, வாழை கன்னல் சிறக்க நாட்டி—வாழைகளையும் கரும்புகளையுஞ் சிறப்புறும்படிநட்டு, மை அகல் நாள் மலர் மாலை தோரணங்கள் நிரைநிரையின் வயங்க நாற்றி— குற்றம்நீங்கிய அன்றலர்ந்த பூமாலைகளையும் தோரணங்களையும் வரிசைவரிசையாக விளங்கும்படி தூங்கக்கட்டி எ—று. (௨௯)

கண்ணுதலை யருச்சித்தற் குரியபொரு ளனைத்தினையுங் கரு
தித்தேடி, விண்ணுலவு கதிரருக்கன் மேற்றிசைவேலையின்முழுக
வீழும் வேலை, தண்ணுலவு சந்தனநற் றூபதீ பாதியிம் சயில மீ
ன்ற, வொண்ணுதலோர் பாகனுறை சந்நிதியின் முன்னமிவை யு
தவி யன்பால்.

இ—ள். கண்ணுதலை அருச்சித்தற்கு உரியபொருள் அனைத்தினையும் கருதித்தேடி—லலாடநேத்திரராகிய சிவபிரானுக்குப்பூசைசெய்தற்குவேண்டியபொருள்களெல்லாவற்றையும் நினைவோடுசம்பாதித்து, விண் உலவு கதிர் அருக்கன் மேல் திசை வேலையில் முழுக வீழும் வேலை-ஆகாயசஞ்சாரியாகிய சூரியன் மேற்குத்திக்குச்சமுத்திரத்தில் அமிழ்ந்தியஸ்தமிக்குஞ்சமயத்தில், இம சயிலம் ஈன்ற ஒள் நுதல் ஓர் பாகன் உறை சந்நிதியில- இமயமலையரசன் பெற்ற ஒளிவிளக்குந் திருநெற்றியையுடைய உமாதேவியாரோர்பாகத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானெழுந்தருளிய திருக்கோவிலில், தண் உலவு சந்தனம் நல் தூபம் தீபாதி இவை முன்னம் அன்பால் உதவி— குளிர்ச்சி பொருந்திய சந்தனம் நல்ல தூபம் தீபமாகியவிப்பொருள்களை முன்னமேயன்போடுபகரித்து எ—று. (௩0)

அந்தியினிற் றண்புனறோய்ந் தருக்கியநற் கிரியைசெய மாற்றி
ப் பின்னர், வந்திளமா மதிமுடித்த வள்ளறனைப் பீடிகையில் வை
த்துத் தாபித், திந்தியமோ ரைந்தவித்திட் டாகமநூன் மறைக
ளெடுத் தியம்பாநிற்கு, முந்தியமந் திரங்களினாற் பூசைவிதி வழு
வாமன் முடித்தல் வேண்டும்.

இ—ள்: அந்தியினில தண் புனல் தோய்ந்து— சாயம்போதிற் குளிர்ந்த சலத்தில் ஸ்நானஞ்செய்து, அருக்கியம் நல் கிரியை செபம் ஆற்றி— அருக்கியம் நன்கிதாகிய கிரியைகள் மந்திரசெபங்களாதியவற்றை (விதிப்படி) செய்து, பின்னர் வந்து—பின்புவந்து, இள மா மதி முடித்த வள்ளல் தனை பீடிகையில் வைத்து தாபித்து—இளஞ்சந்திரனைத் திருமுடியிற்றரித்த சிவபெருமானைப் பீடத்தின்கண்ணேவைத்து ஸ்தாபித்து, இந்தியம் ஓர் ஐந்து அவித்திட்டு—பஞ்சப்புலன்களையுமடக்கிக்கொண்டு, ஆகம நூல் மறைகள் எடுத்து இயம்பா நிற்கும் முந்திய மந்திரங்களினால்— ஆகமங்களிலும் வேதங்களிலுமெடுத்து முன்னமேசொல்லப்பட்ட மந்திரங்களினால், பூசை விதி வழுவாமல் முடித்தல் வேண்டும்—பூசாகக்கிரமத்தைத் தவறுமற்செய்துமுடித்தலவேண்டும் எ—று. (௬௧)

முன்னமுதற் சாமத்தி லானினைந்தா லாட்டிடுக முறைமையாகப், பின்னரிரண் டாஞ்சாமத் தைந்தமிர்தா லாட்டிடுக பிரசந்தன்னா, லன்னயஞ்சேர் மூன்றாய சாமத்தி லாட்டிடுக நாலாஞ்சாமங், கன்னலின்சாற் றினிலாட்டக் காரணவா கமமெடுத்துக் கழறிற்றன்றே.

இ—ள் முன்னம் முதற்சாமத்தில் ஆனின் ஐந்தால் ஆட்டிடுக— முன்னமே முதற்சாமத்தில் பஞ்சகௌவியத்தினால் அபிடேகிக்க, முறைமையாக பின்னர் இரண்டாம் சாமத்து ஐந்து அமிர்தால் ஆட்டிடுக—கிரமப்படி பிந்திய இரண்டாஞ்சாமத்தில் பஞ்சாமிர்தத்தினாலபிடேகிக்க, நல் நயம் சேர் மூன்றாய சாமத்தில் பிரசம் தன்னால் ஆட்டிடுக— மிககநன்மைபொருந்திய மூன்றாஞ்சாமத்தில் தேனினாலபிடேகிக்க, நாலாம் சாமம் கன்னலின் சாற்றினில ஆட்ட— நான்காஞ்சாமத்திற் கருப்பஞ்சாற்றினாலபிடேகிக்கவென்று, காரண ஆகமம் எடுத்து கழறிற்று— காரணாகமம் எடுத்து(விதந்து) கூறிற்று எ—று.

அன்று ஏ அசைகள். (௬௨)

ஆசகல்கோசலந்தயிர்பால் கோமயநெய் கௌவியமைந் தாகுஞ் செந்தேன், காசகல்சர்க் கரைததிபா னெய்யிவையைந் தமிர்தமெனக் கரைவ ரிந்தை, மாசகல்கௌ வியம்போலத் தனித்தனியே தாபித்து மதியஞ் சூடு, மீசன்மணி முடிமீதி லாட்டிடவா கமநூல்களெடுத்துக் கூறும்.

இ—ள் ஆசு அகல் கோசலம் தயிர் பால் கோமயம் நெய் கௌவியம் ஐந்து ஆகும்— குற்றமில்லாத பசுவின்சலமும் தயிரும் பாலும் சாணமும் நெய்யுமாகிய இவைகளைந்தும் பஞ்சகவ்வியமாகும், செம் தேன் காசு அகல் சர்க்கரை ததி பால் நெய் இவை ஐந்து அமிர்தம் எனக்கரைவர்— சிவந்த

தேன் குற்றமில்லாத சர்க்கரை தயிர் பால் நெய்யாகிய இவ்வைந்தையும் பஞ்சாமிர்தமென்று கூறுவர், இத்தை—இவைகளை, மாசு அகல் கௌவியம் போல தனித்தனியே தாபித்து— குற்றமில்லாத டஞ்சகௌவியத்தைப் போலத்தனிமைதனிமையாக ஸ்தாபனஞ்செய்து, மதியம் சூடும் ஈசன் மணிமுடி மீதில் ஆட்டிட—சந்திரனைத்தரித்த சிவபெருமானது அழகிய திருமுடியின்மேலபிடேகஞ்செய்யும்படி, ஆகம நூல்கள் எடுத்து கூறும்—ஆகமசாஸ்திரங்கள் எடுத்து(விதந்து)ரைக்கும் எ—று. (௩௩)

சந்தனமுற் சாமத்தி லகிலிரண்டாஞ் சாமமதிற் சாம மூன்றிற், கந்தமிகுங் கருப்பூரங் கடைச்சாமங் குங்குமஞ்செங் கமலப் போதில், வந்தருநான் முகன்முகுந்தன் மகபதிவா னவரெவரும் வணங்கி யேத்து, மந்தமிலா முழுமுதல்வன் றிருமேனி குளிரமிகுமன்பிற் சாத்தி.

இ—ள்: செம் கமல போதில் வந்து அருள் நான்முகன் முகுந்தன் மகபதி வானவர் எவரும் வணங்கி ஏத்தும்— செந்நிறமாகிய தாமரைமலரின் கண்ணே வீற்றிருந்தருள்கின்ற நான்குமுகங்களையுடைய பிரமதேவரும் மகாவிஷ்ணுமூர்த்தியும் யாகாதிபதியாகிய இந்திரனும் மற்றையதேவர்களுமாகியவெல்லோரும் வணங்கித்துதிக்கின்ற, அந்தம் இலா முழுமுதல்வன் திருமேனி குளிர—அழிவிலலாத முழுமுதற்பொருளாகிய சிவபெருமானது திருமேனியானது குளிர்ச்சியடையும்படி, முன் சாமத்தில் சந்தனம்— முதற்சாமத்திற் சந்தனத்தையும், இரண்டாம் சாமமதில் அகில்—இரண்டாஞ்சாமத்தில் அகிலஞ்சந்தனத்தையும், சாமம் மூன்றில் கந்தம் மிகும் கருப்பூரம்—மூன்றுஞ்சாமத்தில் வாசனைமிகுந்த கருப்பூரப்பொடியையும், கடைச்சாமம் குங்குமம்—இறுதிச்சாமத்திற்குங்குமத்தையும், மிகும் அன்பில் சாத்தி—மிகுந்த அன்புடனே சாத்தி எ—று. (௩௪)

முற்சாமம் வில்வமதிற் பிற்சாம முளரிமலர் மூன்றுஞ்சாம, நற்சாதி மலர்நாலாஞ் சாமமதி னந்தியா வர்த்தப் பூக்கொண், டற்சாருங் களத்திறைக்குச் சாத்துகவென் றாகமத்து ளதிகமான,சொற்சார முள்ளசித்த தந்திரநூ றெருத்திரனைச் சொன்ன தாமால்.

இ—ள்: ஆகமத்துள் அதிகமான சொல் சாரம் உள்ள சித்ததந்திர நூல்—ஆகமங்களுக்குள் விசேடமாகிய சொற்பொருளடங்கப்பெற்ற சித்ததந்திரமென்னும் நூலானது, அல சாரும் களத்து இறைக்கு— அந்தகாரத்தையொத்த திருமிடற்றையுடையவராகிய சிவபெருமானுக்கு, முன் சாமம் வில்வம்—முதற்சாமத்தில் வில்வத்தையும், அதின் பின் சாமம் முளரிமலர்—அதன்பின் னாகியவிரண்டாஞ்சாமத்திற்றாமரைமலரையும், மூன்றும் சாமம் நல் சாதிமலர்— மூன்றுஞ்சாமத்தில் நல்ல சிறுசண்பகமலரையும், நாலாம் சாமமதில் நந்தியாவர்த்தப்பூ கொண்டு சாத்துக என்று—நான்காஞ்சாமத்தில்ந

ந்தியாவர்த்தமலரையுங்கொண்டு சாத்தக்கடவரென்று, தொகுத்து இதனை ச்சொன்னது—தொகுத்திதனைக்கூறிற்று எ—று.

ஆம் ஆல் அசைகள். (சஞ)

முண்டகமுற் சாமமதிற் றுளசியிரண் டாஞ்சாம மூன்றாஞ் சாமங், கண்டகஞ்சேர் கூவிளமுத் தளசகிளைநான் கெனப்பகுத்த கடையிற்சாமம், விண்டலர்ந்து மதுத்துளிக்கு முற்பலத்தின் மல ர்சாத்த வேண்டு மென்றே, யண்டரெலாம் புகழ்ந்தேத்துஞ் சிந்தி யமா மாகமநூ லறைந்த தன்றே.

இ—ள்: அண்டர் எலாம் புகழ்ந்து ஏத்தும் சிந்தியமாம் ஆகமநூல் —தேவர்களெல்லாராலும் புகழ்ந்து துதிக்கப்படுகின்ற சிந்தியமென்னுமாக மநூலானது, முன் சாமமதில் முண்டகம்—முதற்சாமத்தில் தாமரைமலரை யும், இரண்டாம் சாமம் துளசி—இரண்டாஞ்சாமத்தில துளசியையும், மூ ன்றாம் சாமம் கண்டகம் சேர் கூவிள முத்தளக் கிளை— மூன்றாஞ்சாமத்தில் முட்களைக்கொண்ட வில்வத்தினது மூவிதழ்கள்பொருந்திய பத்திரத்தையு ம், நான்கு என பகுத்த கடையில் சாமம் விண்டு அலர்ந்து மது துளிக்கும் உ ற்பலத்தின் மலர் சாத்த வேண்டும் என்றே அறைந்தது— நான்காவதாக ப்பகுக்கப்பட்ட கடைசிச்சாமத்தில இதழ்கள்விரிந்து தேனைப்பிலிற்றுகின்ற நீலோற்பலமலரையும் சாத்தவேண்டுமென்றே கூறிற்று எ—று.

அன்று ஏ அசைகள். (சசு)

வில்வநொச்சி மாவிலங்கை முட்கிளுவை வெள்ளில்பஞ்ச வில்வ மாகச், சொல்வரிவற் றின்றழைமுக் கிளையாகக் கொண்ட யன்மா றொடர்ந்துங் காணு, நல்வரதன் றிருமுடியி னான்குசா ம முஞ்சாத்த நன்று மென்று, கல்வியறிந் தவருணரக் காரணாகமமு ரைத்த கருத்தா மன்றே.

இ—ள்: வில்வம் நொச்சி மாவிலங்கை முட்கிளுவை வெள்ளில் ப ஞ்சவில்வமாகச் சொல்வர்— வில்வமும் நொச்சியும் மாவிலங்கையும் முட்கி ளுவையும் விளாவுமாகிய (இவ்வைந்தையும்) பஞ்சவில்வமென்றுகூறுவர், இ வற்றின் தழை முக்கிளையாகக்கொண்டு—இவற்றின் தழைகளில் மூவிதழ்கள் கொண்ட பத்திரங்களைக்கொண்டு, அயன் மால் தொடர்ந்தும் காணு நல்வ ரதன் திருமுடியில் நான்கு சாமமும் சாத்த நன்றும் என்று— பிரமவிஷ்ணு க்கள் தேடியுங்காண்டற்கரிய நல்லவரங்களைக்கொடுத்தருளுகின்ற சிவபிரா னது திருமுடியில் நான்குசாமமுமணிதலும் நன்மையையுடையதென்று, க ல்வி அறிந்தவர் உணர காரணாகமம உரைத்த கருத்தாம்— கற்றறிந்தவர்கள றியும்படி காரணாகமம்(எடுத்துக்)கூறிய துணிபாகும் எ—று.

அன்று ஏ அசைகள். (சஎ)

ஏதமின்முற் சாமமுற்கப் பருப்பொடன்ன மாகுமற்றை யிர ண்டாஞ் சாமந், தீதகல்பா யசமாகுஞ் சாமமொரு மூன்றதனிற் றிலஞ்சே ரன்ன, மோதவரு சாமமொரு நான்கதனிற் சுத்தான் னை முரைத்தார் பூத, நாதனிவேத் தியந்தனக்குச் சுத்தான்ன மா ஞ்சாம நான்கிற் கும்மே.

இ—ள். பூதநாதன் நிவேத்தியம் தனக்கு—பூதங்களுக்குத்தலைவரா கிய சிவபெருமானுடைய நிவேதனத்திற்கு, ஏதமில் முன் சாமம் முற்கப்ப ருப்பொடு அன்னம் ஆகும்—குற்றமில்லாத முதற்சாமத்திற் பயற்றம்பருப்பு ச்சேர்ந்த அன்னமாகும், மற்றை இரண்டாம் சாமம் தீது அகல பாயசம் ஆகு ம்—மற்றைய இரண்டாஞ்சாமத்திற்றீங்கற்ற பாயசமாகும், சாமம் ஒரு மூ ன்று அதனில் திலம் சேர் அன்னம்—மூன்றாஞ்சாமத்தில் எள்சேர்ந்த அன் னமாகும், ஓத வரு சாமம் ஒரு நான்கு அதனில் சுத்த அன்னம் உரைத்தா ர்—சொல்லப்படுகின்ற நான்காஞ்சாமத்தில் சுத்த அன்னமாகுமென்று (மே லோர்) கூறினார் (இதுவன்றி), சாமம் நான்கிற்கும சுத்த அன்னம் ஆம்—சா மங்கள் நான்கிற்கும் சுத்த அன்னமுமமையும் எ—று.

ஏ அசை. (கூஅ)

சறுவனே யுக்கிரனே சங்கரனே சிவனேசாம் பவனே சான் றுப், பெறுகதியை நல்கியிடு மீசான னேமகவுக் கிரனே பேசு. ம றுவறுபூ தாதிபதி யேயென்னு மந்திரமோ ரெட்டுமோதி, யுறு தியுடன் றூபாதி நிவேதனங்க ளனைத்தினையு மொழுங்கிற் செய் தே.

இ—ள். சர்வனே—சர்வனும், உக்கிரனே—உக்கிரனும், சங்கரனே— சங்கரனும், சிவனே—சிவனும், சாம்பவனே—சாம்பவனும், சான்றுப் பெறு கதியை நல்கியிடும் ஈசானனே—(எவர்துசெய்கைகளுக்குஞ்) சாட்சியாய் நி ன்று (அவரவர்) அடையவேண்டிய பலங்களை யீந்தருளாநின்ற ஈசானனும், மக உக்கிரனே—மகோக்கிரனும், பேசும் மறு அறு பூத அதிபதியே—கூறப் படுகின்ற குற்றமில்லாத பூதாதிபதியும், என்னும் மந்திரம் ஓர் எட்டும் ஓ தி—என்றுகூறப்படும் அஷ்டமந்திரங்களையுமுச்சரித்து, தூபம் நிவேதனங் கள் ஆதி அனைத்தினையும்— தூபம் நிவேதனங்கள் முதலாகிய சர்வோபசார ங்களையும், உறுதி உடன் ஒழுங்கில் செய்து— நிலையாகிய மனத்தோடு கிர மமாகச்செய்து எ—று.

ஏ அசை. சர்வ என்னும் வடமொழியைத் தொடைநோக்கிச் சறுவ என்றார். (கூகூ)

நாமத்தி னிருக்கெனுஞ்சொன் னூட்டுமறை முந்தவந்து நண் ணுஞ் சாமந், தோமத்தி னகற்றிரண்டா ஞ் சுருதியிரண் டாஞ்சா மஞ் சொற்ற மூன்றாஞ், சாமத்திற் சாமமறை யீற்றிலுறு மறை

நாலாஞ் சாமந் தன்னி, லீமத்தி னின்றாடு மாதிதிரு முன்னோதி யிருகை கூப்பி.

இ—ள். நாமத்தில் இருக்கு எனும் சொல் நாட்டு மறை முந்த வந்து நண்ணும் சாமம்— பெயரினாலே இருக்கு என்று உயர்த்திக்கூறப்படும் முதல்வேதத்தை முதலில்வருகின்றசாமத்திலும், தோம் அகற்று இரண்டாம் சுருதி இரண்டாம் சாமம்— குற்றத்தைநீக்குகின்ற இரண்டாம்வேதமாகிய யசுர்வேதத்தை இரண்டாஞ்சாமத்திலும், சாம மறை சொற்ற மூன்றாம் சாமத்தில்-(மூன்றாம்வேதமாகிய) சாமவேதத்தைக் கூறப்பட்ட மூன்றாஞ்சாமத்திலும், ஈற்றில் உறு மறை நாலாம் சாமம் தன்னில்— இறுதிக்கணுள்ளதாகிய (நான்காம்வேதமாகும்) அதர்வணவேதத்தை நான்காஞ்சாமத்திலும், ஈமத்தில் நின்று ஆடும் ஆதி திருமுன் ஓதி— மயானபூமியின்கண்ணே நின்று நடனஞ்செய்கின்ற ஆதிகர்த்தாவாகிய சிவபெருமானது திருமுன்னிலையில் (சுரபேதங்கள்) தவறாமல் ஓதி, இருகை கூப்பி— இரண்டுகைகளையுங்குவித்து எ—று.

அத்து இன் சாரியைகள். (சo)

உருகுமுளத் துடனிருந்தே யூணொருவி யிருவிழியு முறக்கமின்றி, யிருளுறுகங் குலின்யாம நான்கினுமிப் படியருச்சித் திறுதி தோறும், பொருவிலருக் கியங்கொடுத்து நாயடியேன் புரியுமிந்தப் பூசைதன்னைத், திருவுளத்தி னயந்தருள்வா யெனத்துதித்துத் தண்டனிட்டுத் திருமுன் வீழ்ந்தே.

இ—ள்: உருகும் உளத்துடன் இருந்து—கசிவுகொண்ட மனத்தோடு இருந்து, ஊண் ஒருவி இரு விழியும் உறக்கம் இன்றி—உணவையொழித்து இருகண்களிலுந் தூக்கமுமின்றி, இருள் உறும் கங்குலின் யாமம் நான்கினும் இப்படி அருச்சித்து— இருள்நிறைந்த சிவராத்திரியின் சாமங்கள் நான்கினும் இவ்வாறு பூசித்து, இறுதிதோறும் பொரு இல் அருக்கியம் கொடுத்து—முடிவுகடோறுமொப்பில்லாத அர்க்கியசலத்தினாலுபசரித்து, நாய் அடியேன் புரியும் இந்த பூசைதன்னை திரு உளத்தில் நயந்து அருள்வாய் என—நாய்போன்ற எளிய யான்செய்யுமிந்தப் பூசையை திருவுள்ளத்திலேற்று அருள்செய்யக்கடவீரென்று, திருமுன் தண்டனிட்டு வீழ்ந்து துதித்து-சந்நிதியில் தண்டாகாரமாக விழுந்து நமஸ்கரித்து எ—று.

எ இரண்டும் அசைகள். (சக)

இன்னணநற் சிவபூசை யியற்றியற்றைப் புலரிதனி லெழுந்து போகி, நன்னதியிற் புனலாடிக் காலையிற்செய் கடன்கழித்து நவின்ற வாறே, யன்னதினத் தினும்பகற்போ தரனையருச் சித்ததற்பி னுதி திக்கை, சொன்னகுர வனைப்போற்றி யந்தணருக் காடையன்னஞ் சொன்ன மீந்தே.

இ—ள்: இன்னணம் நல் சிவபூசை இயற்றி—இவ்வாறு நன்கமைந்த சிவபூசையைச்செய்து, அற்றை புலரிதனில் எழுந்து போகி—அன்று விடியற்காலத்தில் எழுந்து சென்று, நல் நதியில் புனல் ஆடி—நல்ல ஆற்றின் சலத்திலே ஸ்நாநஞ்செய்து, காலையில் செய் கடன் கழித்து— உதயகாலத்திற்செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்து, நவின்றவாறே அன்ன தினத்தினும் பகற்போது அரனை அருச்சித்து— முன்னர்க்கூறியபடியேயத்தினத்திலும் பகற்காலத்திற் சிவபிரானுக்குப் பூசனைசெய்து, அதன்பின்—அதன்பின்னர், ஆதி தீக்கை சொன்ன குரவனைப் போற்றி—சிவதீக்ஷைசெய்த குருவைநமஸ்கரித்து, அந்தணருக்கு ஆடை அன்னம் சொன்னம் ஈந்து—பிராமணர்களுக்கு வஸ்திரங்களையும் அன்னத்தையும் பொன்னையும் தானமாகக்கொடுத்து எ—று.

ஏ அசை. (சஉ)

அங்கவர்த மனுமதியாற் பாரணஞ்செய் திடல்வேண்டு மற்றை வைகற், றங்குபகற் கடனனைத்துங் காலசந்தி யுடன்முடித்துத் தாழுங் கீழ்பாற், செங்கதிர்வந் துதித்தாறு கன்னலுக்குட் பாரணந்தான் செய்தா ராகிற், றுங்கமுறு கவளமொன்றுக் கனந்தபல முளதெனநூல் சொல்லு மாதோ.

இ—ள்: அங்கு அவர்தம் அனுமதியால் பாரணம் செய்திடல் வேண்டும்—அவ்விடத்து அவ்வந்தணர்களது உத்தரவின்மேற் பாரணஞ்செய்யக்கடவர், அற்றை வைகல் தங்கு பகல் கடனனைத்தும் காலசந்தியுடன் முடித்து—அந்தத்தினத்திலே பகலுக்குரியகிரிபைகள் யாவற்றையும் காலையிற்செய்கின்ற கிரியைகளோடுசேர்த்துச் செய்துமுடித்து, தாழும் கீழ்பால் செம்கதிர் வந்து உதித்து ஆறு கன்னலுக்குள் பாரணந்தான் செய்தார் ஆகில்—தாழ்வாகிய கீழ்த்திசையிற்சூரியன்வந்துதோன்றி ஆறுநாழிகைக்குள் பாரணத்தைச்செய்வார்களாகில், துங்கமுறு கவளம் ஒன்றுக்கு அனந்தபலம் உளதென நூல் சொல்லும்—(அங்ஙனம்புசிக்கின்ற) உயர்வுபொருந்திய கவளம் ஒன்றுக்கு அளவற்றபலன்களுண்டென்று ஆகமநூல்கள் கூறும் எ—று.

மாதோ ஈற்றசை. (சங)

அலைசெறிபாற் கடல்விடமுண் டருள்வான்முப் புரந்தழலுக் களிப்பான் மேருச், சிலைகுனித்த சிவனிரவிற் படிநோற்போர் சிவகதியிற் செல்வ ரன்றிக், கலைமுழுதுங் கற்றுணர்ந்த மாதவத்தீ ரன்னவர்முற் கருவின் மூவேழ், தலைமுறையி லுள்ளவருஞ் சத்தியமுத் தியிற்சேர்த றப்பிடா தால்.

இ—ள்: அலை செறி பாற்கடல் விடம் உண்டு அருள்வான்— திரைமிகுந்ததிருப்பாற்கடலிலிருந்து தோற்றிய நஞ்சையுண்டருளியவரும், முப்

புரம் தழலுக்கு அளிப்பான் மேரு கிலை குனித்த சிவன் இரவு இப்படி நோற்போர்—திரிபுரங்களையுமக்கினிக்குணவாகக்கொடுக்கும்பொருட்டு மகாமேருகிரியை வில்லாகவளைத்தருளியவருமாகிய சிவபெருமானது திருவிரவை முன்னர்க்கூறியபடியனுஷ்டிப்பவர்கள், சிவ கதியில் செல்வர்— சிவபதத்தையடைவார்கள், அன்றி—அதுவுமல்லாமல், கலை முழுதும் கற்று உணர்ந்த மாதவத்தீர்—கலைஞானங்கள்முழுவதையும் படித்தறிந்த பெருமைபொருந்திய தவத்தையுடையவர்களே, அன்னவர் முன் கருவில் மூவேழ் தலைமுறையில் உள்ளவரும்—அவர்முதலாக விந்துசம்பந்தமாயுள்ள இருபத்தொரு தலைமுறையிலுள்ளவர்களும், முத்தியில் சேர்தல் சத்தியம்— மோக்ஷத்தையடைதலுண்மையாகும், தப்பிடாது—இது தவறமாட்டாது எ—று.

ஆல்-அசை. (சச)

அறைமறைமந் திரவிதியா லருச்சிக்க விரகிலரே லன்பருள்ளத், துறைபரம னைந்தெழுத்தை யுச்சரித்தீ ரெட்டுவகை யுபசாரத்தாற், பொறைதருமன் புடன்பூசை புரிந்திடுக பொறியளிகள் பூந்தா தூது, நறைகமழ்செங் கமலமலர் நான்முகத்தோன் பூசையினு நயப்ப னம்பன்,

இ—ள்: மறை அறை மந்திர விதியால் அருச்சிக்க விரகிலரேல்—வேதங்கள் கூறுகின்ற மந்திரவிதிப்படி பூசனைசெய்தற்கருகரல்லாதவராயின் அன்பர் உள்ளத்து உறை பரமன் ஐந்து எழுத்தை உச்சரித்து—தொண்டர்களுடைய உள்ளத்தின்கண்ணே யெழுந்தருளியிருப்பவராகிய சிவபெருமானுடைய பஞ்சாக்ஷரத்தைச்செபித்து, ஈரெட்டு வகை உபசாரத்தால் பொறைதரும் அன்புடன் பூசை புரிந்திடுக—சோடசோபசாரங்களினாற் பொறுமைபொருந்திய அன்போடுபூசிக்கக்கடவர், நம்பன்—சிவபெருமான், பொறி அளிகள் பூ தாது ஊதும் நறை கமழ் செம் கமல மலர் நான்முகத்தோன் பூசையினும் நயப்பன்—புள்ளிபொருந்திய வண்டுகள் பூஞ்சுண்ணத்தையூதுகின்ற வாசனைகமழுஞ்செந்தாமரைமலராசனராகிய நான்குமுகங்களையுடைய பிரமதேவரது சிவபூசையினும்பார்க்க அங்கீகாரஞ்செய்தருளுவர் எ—று. (சரு)

இத்தகைய சிவார்ச்சனைசெய் திடமாட்டார் விருத்தர் கொடி யிடையார் நோய, ருத்தமநற் சிவநிசியி லூணொருவித் துயினீத்துச் சாமே நான்குஞ், சித்தமிகக் களிகூர்ந்து சிவபுரா ணங்கேட்டுச் செபங்கள் பண்ணி, முத்தனுறை சினகரத்திற் சென்றரனைச் சேவித்தன் முறைமை யாமே.

இ—ள்: இத்தகைய சிவார்ச்சனை செய்திடமாட்டார் விருத்தர் கொடி இடையார் நோயர்—இவ்விதமாகிய சிவபூசையியற்றுதற்கு அருகரல்லாதவர்களாகிய வயோதிபர்களும் கொடிபோன்ற இடையையுடைய பெண்களும் நோயாளர்களும், உத்தம நல் சிவநிசியில் ஊண் ஒருவி துயில் நீத்து— உ

த்தமமாகிய நன்மைபயத்தற்குரிய சிவராத்திரிதினத்தில் போசனமின்றியும் நித்திரையின்றியும், சாமம் நான்கும்—இரவில் நான்குசாமங்களிலும், சித்தம் மிகக் களி கூர்ந்து—மனமானது மிகவும் மகிழ்வடைந்து, சிவபுராணம் கேட்டு—சிவபுராணசரித்திரங்களைக்கேட்டும், செபங்கள் பண்ணி—ஸ்ரீ பஞ்சாட்சரசெபங்கள்செய்தும், முத்தன் உறை சினகரத்தில் சென்று அரனைச் சேவித்தல் முறைமையாம்—இயல்பாகவே பாசங்களினின்றும்நீங்கிய பதிப்பொருளாகுஞ்சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற திருக்கோவிலையடைந்து அப்பெருமானைச்சேவித்தல் தகுதியாகும் எ—று.

ஏ-அசை. (சசு)

அசிக்கணுமை பங்கனைமுற் சாமத்தி லருச்சித்தாங் கதற்குப் பின்னர்ப், பசிக்கழிந்தோர் நீர்சிறிது பால்சிறிது பருகவன்றேற் பழங்கள் சற்றே, புசிக்கசல பானநன்று மத்திமம்பால் பழமதமம் பொருவில் கந்தஞ், சுசிக்கொளப்பந் தோசைபிட்டு மாந்தலதமத்ததமஞ் சொல்லுங் காலே.

இ—ள்: அசி கண் உமை பங்கனை—வாள்போன்ற கூரியகண்களையுடைய உமாதேவிபங்கராகிய சிவபெருமானை, முன் சாமத்தில் அருச்சித்து—முதற்சாமத்திலே பூசனைசெய்து, ஆங்கு அதற்குப்பின்னர்— அவ்விடத்தேயப்பூசைமுடிந்தபின்பு, பசிக்கு அழிந்தோர் சிறிது நீர் சிறிது பால் பருக— பசியினாலே வருந்தியவர்கள் அற்பநீராவது அற்பபாலாவது பானஞ்செய்யக்கடவர், அன்றேல் பழங்கள் சற்றே புசிக்க—அது அமையாதாயின் பழங்களை அற்பமாகப்புசிக்கக்கடவர் (இவற்றுள்), சலபானம் நன்று—தண்ணீர்பருகியிருத்தலுத்தமமாகும், பால் மத்திமம்—பால்பருகுதல் மத்திமமாகும், பழம் அதமம்—பழமுண்ணுதலதமமாகும், பொரு இல் கந்தம் சுசிக்கொள் அப்பம தோசை பிட்டு மாந்தல் சொல்லுங்கால் அதமத்து அதமம் — ஒப்பில்லாத கிழங்குகளையும் சுவைகொண்ட அப்பம் தோசை பிட்டு முதலியவற்றையும்புசித்தல் வகுத்துக்கூறுமிடத்து அதமாதமமாகும் எ—று.

ஏ-அசை. (சஎ)

பகர்தருபா ரணமுமுவாப் புணர்ந்திடமுன் பலன்கொள்சைவர் பண்ணல் வேண்டு, மிகறருமுப் புரமெரித்த பரமனுயர் சீர்த்திகளை யெடுத்து முன்னோர், புகல்சரிதை பாராடிப் பிற்பொழுது போக்கியெழு புரவித் தேரோ, னகல்பொழுதிற் கடன்கழித்துத் துயில்வரற்றை யந்தியன்ன மருந்த லாகா.

இ—ள்: பலன்கொள் சைவர்—நற்பலனையடைதற்கு விரும்பிய சைவர்கள், உவா புணர்ந்திடமுன்-அமாவாசை கூடுமுன்னரே, பகர்தரு பாரணமும் பண்ணல் வேண்டும்— விதிக்கப்பட்ட பாரணத்தையுஞ்செய்துமுடித்த

ல்வேண்டும், இகல் தரு முப்புரம் எரித்த பரமன் உயர் சீர்த்திகளை— பகைமைகொண்ட முப்புரங்களைத்தகித்தருளிய சிவபெருமானதுயர்வுபொருந்திய சிறப்புகளை, முன்னோர் எடுத்து புகல் சரிதை பாராட்டி பின்பொழுது போக்கி—மேலோர்எடுத்துக்கூறுகின்ற கதைகளைக்கேட்டுப்பாராட்டுதல்செய்து பின்பகலைக்கழித்து, எழு புரவி தேரோன் அகல் பொழுதில் கடன்கழித்து துயில்வர்—எழுகுதிரைகள்பூண்ட இரதத்தையுடையவனாகிய சூரியன் அஸ்தமிக்குஞ்சமயத்திற் செய்யவேண்டியகடமைகளைச் செய்துமுடித்து நித்திரைசெய்குவர், அற்றை அந்தி அன்னம் அருந்தல் ஆகா—அன்றுமாலையுணவுபுசித்தலாகாவாம் எ—று. (௪அ)

பாரணஞ்சான் புரிந்ததற்பின் பகற்பொழுதிற் சோம்பொடுகண் படைசெய் தாரேல், வாரணங்கள் பயின்றகுல வந்தணரைம் பதிற்றிரட்டி யாயினோரைக், காரணங்க ளொன்றுமின்றிக் கொன்றகடும் பழியடைவர் கருதுமரு சாந்தி, பேரணங்கு மேவாமமறை விதிப்படியே புரியிலந்தப் பிழைபோ மன்றே.

இ—ள்: பாரணஞ்சான் புரிந்ததன் பின் பகற்பொழுதில் சோம்பொடு கண்படை செய்தாரேல்—பாரணஞ்செய்தபின்புஅற்றைப்பகலிலே சோம்பலினால் நித்திரைசெய்தாராயின், ஆரணங்கள் பயின்றகுல அந்தணர் ஐம்பதில் இரட்டி ஆயினோரை—சதுர்வேதங்களையுமோதிய குலோத்தமர்களாகிய பிராமணர்கள் நூறுபெயரை, காரணங்கள் ஒன்றும் இன்றிக் கொன்ற கடும் பழி அடைவர்—யாதொருகாரணங்களுமின்றிக்கொலைபுரிந்த கொடிய பாதகத்தையடைகுவர், கருதும சாந்தி—அதற்கு மதிக்கப்பட்ட சாந்தியாவது, பேர் அணங்கு இல் ஆம் மறை விதிப்படியே புரியில்— மிக்கதுன்பமற்ற ஒழுக்கதை வேதவிதிப்படி செய்வாராயின், அந்தப் பிழை போம்— அக்குற்றம்நீங்கும் எ—று.

அன்ற ஏ அசைகள். (௪௯)

முத்தியினை விரும்பிமுதற் சங்கற்பந் தவறாது மூவெட் டாண்டு, பத்தியுட னிவ்விரத நோற்றதற்பின் வேதியர்க்குப் பசுப்பூதான, நித்திலவெண் ணகைக்கன்னி காதான மன்னமுட னிதியநல்கிப் புத்தியுடன் சிவநிசியாம் விரதமொழி வதுவழக்காப் புகல்வர் மன்னோ.

இ—ள்: முத்தியினை விரும்பி—மோக்ஷத்தைவிரும்பி, முதல் சங்கற்பம் தவறாது மூவெட்டு ஆண்டு பத்தியுடன் இவ்விரதம் நோற்றதன் பின்—தொடக்கத்திலே செய்துகொண்ட நியமங்கள்தவறாமல் இருபத்துநான்குவருடம் அன்புகொண்டு இவ்விரதத்தை அனுஷ்டித்தபின்னர், வேதியர்க்கு—பிராமணர்களுக்கு, பசு பூ தானம்—கோதானபூதானங்களும், நித்தில வெண் நகைக் கன்னிகாதானம்—முத்தையொத்த வெண்மையையுடைய

பற்களைக்கொண்ட கன்னிகைகளைக்கொடுக்குந்தானமும், அன்னமுடன் நியம் நல்கி—அன்னதானமுஞ்சுவர்ணதானமுமீந்து, புத்தியுடன் சிவநிசியாம் விரதம் ஒழிவுது வழக்காப் புகல்வர்—விவேகபூர்வமாய்ச்சிவராத்திரிவிரதத்தைநிறுத்துதல் முறையாமென்றுகூறுவர் (அறிஞர்) எ--று.

மன் ஓ அசைகள். (௫0)

வேறு.

இந்நல் விரதந் தனைச்சிவ னந்திக் கிசைத்திட வுணர்ந்துசெங் கதிரோன், கந்தவேள் கதைக்கைக் காலன்விற் காமன் கடவுளர் கண்ணோரா யிரத்தோன், செந்தழற் கட வுண் மதிநிதிக் குபேரன் செப்பிய வான்முறை நோற்றுத், தந்தம மனத்தில் விழைந்தன பெற்றுத் தகைபெறு தலைவரா யினரால்.

இ—ள்: இந்த நல் விரதந்தனை சிவன் நந்திக்கு இசைத்திட— இந்நல்லவிரதத்தைச்சிவபெருமான் நந்தியந்தேவருக்கு முதலிலுபதேசிக்க, உணர்ந்து— அவரிடமதனைக்கேட்டறிந்து, செம் கதிரோன்— சிவந்தகிரணங்களையுடைய சூரியனும், கந்தவேள— சுப்பிரமணியக்கடவுளும், கதை கைகாலன்—தண்டாயுதத்தையேந்திய கையையுடையயமனும், வில் காமன்—வில்லையுடைய மன்மதனும், கடவுளர்— தேவர்களும், கண் ஓராயிரத்தோன்—ஆயிரங்கண்களையுடைய இந்திரனும், செம் தழல் கடவுள்—செந்நிறத்தமாகிய அக்கினிதேவனும், மதி—சந்திரனும், நிதி குபேரன்—செல்வப்பெருக்கையுடைய குபேரனும், செப்பிய வான் முறை நோற்று— முன்கூறிய விதிவழுவாது அனுஷ்டித்து, தம்தம மனத்தில் விழைந்தன பெற்று—தங்கள்தங்கள் மனத்தில் விரும்பியவைகளை அடைந்து, தகைபெறு தலைவர் ஆயினா—உயர்வுபொருந்திய அதிகாரிகளாகப்பெற்றனர் எ—று.

ஆல்-அசை. (௫௧)

என்றுரைத் திட லு நைமிச வனத்தி லிருந்தவ ரிருகரங் கூப்பி, நன்றுரைத் தனைநீ நானிலத் துள்ளோர் நவையறு சிவநிசி நோற்றிட், டொன்றுதற் கரிதா முத்திபெற் றவர்க ளுளரெனி லுரையென வுயர்ந்த, குன்றுறழ் தவத்துச் சூதமா முனிவன் றுவன் கேண்மினென் றிசைப்பான்.

இ—ள்: உயர்ந்த குன்று உறழ் தவத்து சூதமா முனிவன்—உன்னதமாகிய மலையைநிகர்த்த தவப்பெருக்கையுடைய சூதமகாமுனிவர், என்று உரைத்திடலும்--என்றிவ்வாறு கூறுதலும், நைமிசவனத்தில் இருந்தவர் இரு கரம் கூப்பி—நைமிசாரணியத்தின்கண்ணேயிருந்த முனிவர்கள் இரண்டுகைகளையுஞ்சிரசின்கண்ணேகுவித்து, நீ நன்று உரைத்தனை— தேவரீர்நன்றாய்விரித்துக்கூறினீர், நானிலத்து உள்ளோர் நவை அறு சிவ நிசி நோற்

திட்டு—பரந்தபூமியின்கண்ணேயுள்ள மனுடருள் குற்றமில்லாத சிவராத்திரிவிரதத்தை அனுஷ்டித்து, ஒன்றுதற்கு அரிதாம் முத்திபெற்றவர்கள் உளர் எனில் உரை என—அடைதற்கரிய மோக்ஷத்தைப்பெற்றவர்களுண்டாயின் கூறக்கடவீரென்றுவேண்டலும், கூறுவன் கேண்மின் என்று இசைப்பான்—சொல்லுவேன்கேளுங்களென்று புகலுவாராயினர் எ—று. (ருஉ)

சிவராத்திரிமான்மியச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் கருரு.

---

# சுகுமாரச்சருக்கம்.



கந்த நாண்மலர்க் குவளைநட் புறுகதிர் மதியஞ்
சந்த னடவிப் பொதும்பரிற் றவழ்ந்துசெல் சாரல்
விந்த மால்வரைக் குத்தரத் துததியின் விரிநீ
ருந்து வெண்டிரைச் சிந்துவென் றொருநதி யுளதால்.

இ—ள்: கந்த நாள் மலர் குவளை நட்புறு கதிர் மதியம்— பரிமளமிருந்த அன்றலர்ந்த குமுதத்தோடு நண்புபூண்ட கிரணங்களையுடைய சந்திரனுனவன், சந்தன அடவிப் பொதும்பரில் தவழ்ந்து செல் சாரல்— சந்தனமரச்சோலையின்கண்ணே தவழ்ந்துசெல்லுகின்ற சாரலையுடைய, விந்த மால் வரைக்கு உத்தரத்து—பெரியவிந்தகிரியின் வடக்குப்பக்கத்தில், உததியின் விரி நீர் உந்தும் வெண் திரை சிந்து என்று ஒரு நதி உளது—சமுத்திரத்தைப்போல விரிந்தசலத்தை வீசுகின்ற வெள்ளிய திரைகள்பொருந்திய சிந்துவென்னும்பெயரையுடைய ஒருநதியுள்ளது எ—று.

ஆல் அசை. குமுதம் அஸ்தமனகாலத்திலலர்தலால் சந்திரனைக்குமுதநண்பனென்றுவழங்குவர். (க)

விடங்க திர்த்திர ணித்திலக் கோடுகள் விரவி
நெடுந்த ருக்களை முரித்துநன் னீலவண் டார்ப்ப
வடுந்தொ ழிற்புரிந் தடவிமால் வரைநின்று வரலாற்
கொடுங்கொ லைக்கடம் பொழிகவுட் களிறெனக் குலவும்.

இ—ள்: விடும் கதிர்த்திரள் தீத்திலக் கோடுகள் விரவி—(அச்சிந்து கதியானது) வீசுகின்ற கிரணக்கூட்டங்களமைந்த முத்துக்களையுடைய கரைகள்பொருந்தப்பெற்று, நெடும் தருக்களை முரித்து—உயர்ந்தவிருட்சங்களை முரித்து, நல் நீல வண்டு ஆர்ப்ப—நல்லநீலநிறத்தைக்கொண்ட வண்டுகள் ஆரவாரிக்க, அடும் தொழில் புரிந்து—கொலைத்தொழிலைச்செய்து, அடவி மால் வரை நின்று வரலால்—மரச்செறிவையுடைய பெரிய மலையினின்றும்வருதலினால், கொடும் கொலை கடம் பொழி கவுள் களிறு என குலவும்—கொடிய கொலைத்தொழிலையும் மதம்பாய்கின்ற கபோலத்தையுங்கொண்ட யானையென்றுசொல்லும்படி செல்லும் எ—று.

யானைக்குக்கூறுங்கால் கோடு-கொம்பு. (உ)

கலைகள் கற்றறி புலவர்வாய்த் தோன்றிய கவிபோன்
மலையி டைப்பிறந் தளக்கரும் பொருள்கொடு வந்து
தலைமை யுற்றசீர் பெற்றுயர் சங்கமார்ந் தெங்கு
முலவி மாநிலத் தவர்களுக் கின்பமே யுதவும்.

இ—ள்: கலைகள் கற்றறி புலவர் வாய் தோன்றிய கவிபோல்—பலகலைகளையுங்கற்றறிந்த கல்விமான்களது வாயினின்றும்பிறந்த செய்யுட்களைப் போல, மலையிடைப் பிறந்து—மலையினின்றுமுற்பத்தியாகி, அளக்க அரும் பொருள் கொடு வந்து—கணக்கற்ற திரவியங்களைவாரிக்கொண்டுபோய்ந்து, தலைமை உற்ற சீர் பெற்று—தலைமையாகிய சிறப்பைத்தாங்கி, உயர் சங்கம் ஆர்ந்து—மேலாகிய சங்குகள்பொருந்தப்பெற்று, எங்கும் உலவி—தேசமெங்கும்பரந்து, மா நிலத்தவர்களுக்கு இன்பமே உதவும்—பெரிய பூமியின்கணுள்ளவர்களுக்கு எந்நாளுஞ்சுகத்தையேதரும் எ—று.

கவிக்குக்கூறுங்கால் மலை பொதியமலை, பொருள்-அர்த்தம். சீர் அசைகளாலாயசீர். சங்கம் கற்றோர்சபை. இன்பம் மகிழ்ச்சி. (ங)

ஏந்து பூண்முலை யெயிற்றியர் வயிறலைத் திரங்கக்
காய்ந்த புற்குரம் பைகளழித் தம்புவிற் கவர்ந்தே
யாய்ந்த பாலையிற் குறும்புக ளடக்கி வேலரசர்
வாய்ந்த வெள்வளை முழங்கவந் தாலென வருமால்.

இ—ள்: பூண் ஏந்து முலை எயிற்றியர் வயிறு அலைத்து இரங்க—ஆபரணங்களைத்தாங்கிய ஸ்தனங்களையுடைய வேட்டுவப்பெண்கள் தம்வயிற்றைப்பிசைந்துகலங்கும்படி, காய்ந்த புல் குரம்பைகள் அழித்து—உலர்ந்தபுல்லினால்வேயப்பட்ட சிறுகுடில்களைச்சிதைத்து, அம்பு வில் கவர்ந்து— அம்புகளையும் விற்களையும் வாரிக்கொண்டு, ஆய்ந்த பாலையில் குறும்புகள் அடக்கி—ஆராயப்பட்ட பாலைநிலத்திலேயுள்ள வெப்பத்தைமாற்றி, வாய்ந்த வெள் வளை முழங்க வேல் அரசர் வந்தால் என வரும்—சிறந்தவெண்ணிறத்தை

யுடைய சங்குகள்ஒலிக்க வேற்படையையேந்திய அரசர்கள் வந்தாற்போலப் பாயாநிற்கும் எ—று.

அரசர்க்குக்கூறுங்கால் குறும்பு-குறுநிலமன்னர். (ச)

கருது மந்நதிக் கரைமருங் குளதுகட் கமலத்
திருமகட்கணி யன்னது தேவரும் வியப்பத்
தருமநீதியுஞ் செல்வமுந் தழைப்பது தகைசால்
பொருவில் குஞ்சர புரியெனப் புகல்வதோர் நகரம்.

இ—ள்: கருதும் அந்நதி கரை மருங்கு உளது—எண்ணத்தகுந்த அச்சிந்துநதிக்கரையின் பக்கத்திலுள்ளது, கள் கமல திருமகட்கு அணி அன்னது—தேனிறைந்த தாமரைமலராசனியாகிய இலக்குமிதேவிக்கு ஆபரணம்போன்றது, தேவரும் வியப்ப தரும நீதியும் செல்வமும் தழைப்பது—தேவர்களும் புகழ்ந்துரைக்கத்தக்க நூன்முறையான நீதியுஞ்சம்பத்துங்காலந்தோறும்பெருகுந்தன்மையையுடையது, தகை சால் பொரு இல் குஞ்சர புரி என புகல்வது ஓர் நகரம்—தகுதியையுடைய ஒப்பற்ற குஞ்சரபுரியென்று சொல்லப்படுகின்ற ஒருநகரம் எ—று. (ரு)

உழுவ றுவயற் கமலவாண் முகத்தியருவப்ப
மழவ றுதநல் லாடவர் மணவினை முடிக்கும்
விழவ றுதவெண் சங்கொலி வீதிதோ றிரட்ட
முழவ றுதவம் முதுநகர்ப் பெருமையார் மொழிவார்.

இ—ள்: உழவு அறு வயல் கமல வாள் முகத்தியர் உவப்ப—உழுதொழில்நீங்காத வயல்களின்கணுள்ள தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகத்தையுடைய பெண்கள்மகிழும்படி, மழவு அறுத நல் ஆடவர் மணவினை முடிக்கும்—இளமைநீங்காத நற்குணமமைந்த ஆண்மக்கள் மணத்தொழிலை செய்கின்ற, விழவு அறுத வெண் சங்கு ஒலி வீதி தோறு இரட்ட—சிறப்புகள்நீங்காத வெள்ளியசங்கின்முழக்கமானது வீதிகடோறுஞ்சத்திக்க, முழவு அறுத அம் முது நகர் பெருமை யார் மொழிவார்—முழவவாத்தியத்தின் ஒலிநீங்காத பழமைபொருந்திய அக்குஞ்சரபுரியினது பெருமையையாரெடுத்துச்சொல்லவல்லவர் எ—று. (சா)

நீருகந்தகார் நிகர்நிறம் படைத்திடு நெடுமால்
ஏருகந்தபைந் துகிலுடுத் தரிக்கலை யிகந்து
பாருகந்தளந் திடநிமிர்ந் தாலெனப் படுமம்
போருகந்திக ழகழ்சூழ்ந் திடுநெடும் புரிசை.

இ—ள்: அம்போருகம் திகழ் அகழி சூழ்ந்திடு நெடும் புரிசை— தாமரைகள்விளங்குகின்ற அகழியினாற்சூழப்பட்ட நீண்டமதிலானது, நீர் உகந்

த கார் நிகர் நிறம் படைத்திடு நெடு மால்—நீரைவிரும்பியுண்ட மேகத்தை பொத்த நீலவர்ணத்தையுடைய நெடிய மகாவிஷ்ணுமூர்த்தியானவர், அரிக கலை இகந்து—பீதாம்பரத்தையகற்றி, ஏர் உகந்த பைந்துகில் உடுத்து—அழ குபொருந்திய பசுமையாகிய வஸ்திரத்தையணிந்து, பார் உகந்து அளந்திட நிமிர்ந்தால் எனப்படும்—பூமியைவிரும்பியளக்கும்படி நெடிய வடிவுகொண் டாற்போலுமுயர்ந்திருக்கின்றது எ—று.

தாமரையிலைநெருங்கிய அகழிசூழ்ந்தமையாற்பச்சைவஸ்திரந்தரித் த திருமாலையுவமித்தார். (எ)

வீழ்ந்து விண்முகில் வேலையென் றுண்ணநீர் மிகுந்திட்
டாழ்ந்த கன்றுநீ டிஞ்சியை வளைந்தபே ரகழி
தாழ்ந்த மீதுய ரடிமுடிச் சக்கர கிரியைச்
சூழ்ந்து வெண்டிரைப் பெருங்கடல் சுற்றிய தொக்கும்.

இ—ள். ஆழ்ந்து அகன்று நீடு இஞ்சியை வளைந்த பேர் அகழி—ஆ ழமுடைத்தாய் விசாலம்பொருந்தி நீண்டமதிலைச்சுற்றியிருக்கின்ற பெரிய அகழியானது, விண்முகில்—ஆகாயத்திற்சஞ்சரிக்கின்ற மேகமானது, வே லை என்று வீழ்ந்து உண்ண நீர் மிகுந்திட்டு—சமுத்திரமென்று கருதிப்பம ந்து பருகும்படியான நீர்மிகுதியையுடையதாய், அடி தாழ்ந்த முடி மீது உ யர் சக்கர கிரியை சூழ்ந்து—அடியாழமுடைத்தாயும் முடி மிக்கஉன்னதமு டைத்தாயுமுள்ள சக்கரவாளமலையைவளைந்து, வெண் திரை பெரும் கடல் சுற்றியது ஒக்கும்— வெள்ளியதிரையையுடைய புறவாழிச்சமுத்திரமான து சுற்றியிருப்பதைநிகர்க்கும் எ—று. (அ)

குறையில் பொன்னெயிற் குடுமியிற் றொடுத்துயர் கொடிக
ளறைதி ரைப்புன லகழிசூ ழங்கக ரரிவை
நிறைவ னப்பெதிர் நோக்குறு மாடியா நிலவின்
கறைது டைத்திட நீட்டிய கரங்களிற் கவினும்.

இ—ள். குறை இல் பொன் எயில் குடுமியில் தொடுத்து உயர் கொ டிகள்—எவ்வகைக்குறைவுமில்லாத அழகிய மதிலினுச்சியிற்கட்டப்பட்டுயர் ந்த கொடிகளானவை, அறை திரை புனல் அகழி சூழ் அந்நகர் அரிவை—ஒ லிக்கின்ற திரைபொருந்திய நீரையுடைய அகழியினாலேசூழப்பட்ட அக்கு ஞ்சரபுரியாகிய பெண்ணானவள், நிறை வனப்பு எதிர் நோக்குறும் ஆடியாம் நிலவின் கறை துடைத்திட நீட்டிய கரங்களில் கவினும்—தன்னுடைய நி றைந்த அழகைஎதிரிலேபார்க்கப்படுகின்ற கண்ணாடியாகிய சந்திரனது கள ங்கத்தைத்துடைக்கும்பொருட்டு நீட்டிய கைகளையொத்துவிளங்கும் எ—று.

நிலவு மாமணி விமானங்க ணிலத்திருந் தென்னப்
பலவு மால்வரைக் குலநிரைத் தெனக்கதிர் பரப்பி
புலவு மான்மதிக் கூன்முது குரிஞ்சிட வுயர்ந்து
குலவு மாடகத் தியற்றிய கூடமா டங்கள்.

இ—ள்: நிலவு மா மணி விமானங்கள் நிலத்து இருந்து என்ன—வீ
ளங்குகின்ற மகத்தாகிய இரத்தினங்கள் பதித்துச்செய்யப்பட்ட விமானங்க
ளானவை பூமியின்கண்ணே வந்து தங்கினாற்போலவும், மால் வரை குலம்
பலவும் நிரைத்தென— பெரிய மலைக்குழாங்கள் பலவற்றையும் வரிசையாக
வைத்தாற்போலவும், கதிர் பரப்பி உலவு மால் மதி கூன் முதுகு உரிஞ்சி
ட—கிரணங்களைப்பரவச்செய்து செல்லுகின்ற பெரிய சந்திரனது வளைந்த
முதுகானது தேயும்படி, ஆடகத்து இயற்றிய கூட மாடங்கள் உயர்ந்து கு
லவும்—ஆடகம் என்னும்பொன்னினாற்செய்யப்பட்ட கூடங்களும் மாடங்க
ளும் உயர்ந்து விளங்காநிற்கும் எ—று. (கo)

மாற தாமென நிழலுடன் மலைகர மலைக
ளாற தாமென விடுமதம் பெருக்கெடுத் தலைப்பச்
சேற தாய்நெடுந் தேர்களுஞ் சனங்களுஞ் செல்ல
நீற தாய்த்துக ளெழுந்துவிண் புதைக்குநீள் வீதி.

இ—ள்: மாறது ஆம் என நிழலுடன் மலை கர மலைகள்—(பகையா
னையென்று நினைத்து) தனது சாயையோடுபொராநின்ற யானைகளானவை,
ஆறது ஆம் என விடு மதம் பெருக்கு எடுத்து அலைப்ப நீள் வீதி சேறதாய்—
(கண்டோரிதனையியற்கையாகிய)நதியேயென்றுசொல்லும்படி சொரிந்தமத
நீரானது பெருகி அலைகொண்டு பாய்தலினால் நீண்ட தெருவீதிகளெங்குஞ்
சேறாகி, நெடும் தேர்களும் சனங்களும் செல்ல நீறதாய்—பெரிய இரதங்க
ளும் மனுடர்களுஞ்செல்லுதலினால் புலர்ந்து துகளாகி, துகள் எழுந்து வி
ண் புதைக்கும்—அத்துகள் கிளம்பி ஆகாயத்தை மறைவுசெய்யும் எ—று. ()

வையம் யாவையும் விலைபெற வளர்முலை வருத்த
நையு நுண்ணிடை நாரியர் புலவியிற் கழித்த
துய்ய மான்மதச் சேற்றொடு துவளு முத்தாரஞ்
செய்ய மாமணிக் கலன்கிடந் தெறிப்பன தெருக்கள்.

இ—ள்: வையம் யாவையும் விலைபெற வளர் முலை வருத்த நையும்
நுண் இடை நாரியர்—பூமிமுழுவதையும் விலையாகப்பெறும்பொருட்டு வள
ராநின்ற ஸ்தனபாரம் வருத்துதலினால் துன்புறுகின்ற மிருதுவாகிய இடை
யையுடைய பெண்கள், புலவியில் கழித்த துய்ய மான் மதச் சேற்றொடு—
ஊடலினாலே நீக்கிய சுத்தமாகிய கஸ்தூரிக்குழம்புடனே, துவளும் முத்து
ஆரம்—அசைகின்ற முத்துமாலைகளும், செய்ய மா மணி கலன்கள்—செந்நி
றமாகிய மாணிக்கரத்தினங்கள்பதித்துச்செய்யப்பட்ட ஆபரணங்களும், தெ
ருக்கள் கிடந்து எறிப்பன—வீதிகளின்கண்ணே பரவிக்கிடந்து பிரகாசிப்ப
ன எ—று. (கஉ)

ஆதி நூலுண ரந்தணர் சாலைக ளொருபா
னீதி மன்னவர் நிறைமணி மாளிகை யொருபா

லூதி யம்பெறு வணிகர்வாழ் வசதிக ளொருபாற்
கோதின் மண்மகள் புதல்வர்தங் குலமனை யொருபால்.

இ—ள்: ஆதி நூலுணர் அந்தணர் சாலைகள் ஒருபால்—முதனூலாகிய வேதங்களையறிந்த பிராமணர்கள்வசிக்கின்றசாலைகள் ஓர்பக்கத்திலும், நீதி மன்னவர் நிறை மணி மாளிகை ஒருபால்— நியாயவொழுங்கு தவறாத அரசர்களது முழுவதும் இரத்தினங்கள்பதித்துச் செய்யப்பட்ட மண்டபங்கள் ஓர்பக்கத்திலும், ஊதியம் பெறு வணிகர் வாழ் வசதிகள் ஒருபால்—ஆதாயத்தையடைகின்ற செட்டிகள்வசிக்கின்ற இல்லங்கள் ஓர்பக்கத்திலும், கோது இல் மண்மகள் புதல்வர் தம் குல மனை ஒருபால்—குற்றமில்லாத வேளாளர்கள்வசிக்கின்ற உயர்வுபொருந்திய இல்லங்கள் ஓர்பக்கத்திலுமுள்ளன எ-று.

மெலிக்கு நூலிடை யறுமென மேகலை யரற்றிச்
சலிப்ப நாண்மலர்த் தாளணி தண்டைநூ புரங்கள்
கலிப்ப நீடிய காந்தளங் கைவளை கலினென்
றொலிப்ப மாதர்க ணாடக மாடரங் கொருபால்.

இ—ள்: மெலிக்கும் நூல் இடை அறும் என மேகலை அரற்றி சலிப்ப— மெல்லிய நூலானது இடையிலறுமென்று மேகலாபரணம்புலம்பித் துன்புறவும், நாள் மலர் தாள் அணி தண்டை நூபுரங்கள் கலிப்ப- அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற பாதங்களின்கண்ணே அணியப்பட்ட தண்டைகளுஞ் சிலம்புகளும் ஒலிக்கவும், நீடிய காந்தள் அம் கை வளை கலின் என்று ஒலிப்ப—நீண்ட செங்காந்தள்மலர்போன்ற கைகளின்கண்ணேயணியப்பட்ட வளையல்கள்கலினென்னுங்குறிப்புடன் ஒலிக்கவும், மாதர்கள் நாடகம் ஆடு அரங்கு ஒருபால்— பெண்கள் நடனம்புரிகின்ற சபாமண்டபங்கள் மற்றோர்புறத்துமுள்ளன எ—று. (௧௪)

அலைகடற்கடைந் தரிசுரர்க் கமுதளித் ததுபோற்
றலைமை பெற்றமுத் தமிழ்க்கட றாலமத் ததனா
லுலைவு றக்கலக் கிச்சுவை செவிப்புலத் துண்பான்
கலைகள் கற்பவர்க் குரைப்பவர் கழகங்க ளொருபால்.

இ—ள்: அலை கடல் கடைந்து அரி சுரர்க்கு அமுது அளித்தது போல்— திரைபொருந்திய பாற்கடலைக்கடைந்து மகாவிஷ்ணுமூர்த்தியானவர் தேவர்களுக்கு அமுதத்தைக்கொடுத்தாற்போல, தலைமை பெற்ற முத்தமிழ் கடல்—முதன்மையையுடைய இயல் இசை நாடகம் என்கின்ற மூவகைத்தமிழாகிய சமுத்திரத்தை, தால மத்து அதனால்—நாவாகிய மத்தைக்கொண்டு, உலைவு உறக் கலக்கி—கலங்கும்படி கலக்கி, சுவை செவிப்புலத்து உண்பான்—அதன்தெளிவாகிய இரசத்தைச் செவியுணர்வினால் நுகரும்படி, கலைகள் கற்பவர்க்கு— சாஸ்திரங்களை அப்பியாசஞ்செய்கின்ற மாணவர்களுக்

கு, உரைப்பவர் கழகங்கள் ஒருபால்—கற்பிக்கின்ற ஆசிரியர்களது பாடசாலைகள் பின்னோர்பாங்கரினுமுள்ளன எ—று. (கரு)

வார்வி சித்திடு மணிமுர சோதையுங் கொடிஞ்சித்
தேர்வி டுத்திடு மோதையும் பிளிறுசிந் துரங்கள்
போர்வி டுத்திடு மோதையும் புரவியின் கனைப்புங்
கார்வி டுத்திடு மோதையின் மும்மடி காட்டும்.

இ—ள்: வார் விசித்திடு மணி முரசு ஓதையும்—வாரினாலே இறுக்கப்பட்ட அழகிய முரசப்பறையினது ஆரவாரமும், கொடிஞ்சி தேர் விடுத்திடும் ஓதையும்—கூம்புகளைக்கொண்ட தேர்களைச்செலுத்துகின்ற முழக்கமும், பிளிறு சிந்துரங்கள் போர் விடுத்திடும் ஓதையும்—முழங்குகின்ற யானைகளை ஒன்றோடொன்று யுத்தஞ்செய்யும்படி ஏவுகின்ற ஆரவாரமும், புரவியின் கனைப்பும்—குதிரைகளின் கனைப்பொலியும், கார் விடுத்திடும் ஓதையின் மும்மடி காட்டும்—மேகத்தினின்றுபிறக்கின்ற முழக்கத்தினும்பார்க்க மும்மடங்காய்த்தொனிக்கும் எ—று. (சக)

மறைவி ரித்துரை பயிற்றுந ரோதையு மன்னர்
திறைய ளக்கவந் தீண்டின ரோதையுந் தேவர்க்
கிறைமை யிற்றினஞ் சாறய ரோதையு மெழுந்திட்
டறைக டற்படு முழக்கமுந் துளக்குற வலைக்கும்.

இ—ள்: மறை விரித்து உரை பயிற்றுநர் ஓதையும்—வேதங்களை விரித்துக்கூறிச் சுவரங்களை மாணுக்கர்களுக்குப் பழக்குபவர்களுடைய சத்தமும், மன்னர் திறை அளக்க வந்து ஈண்டினர் ஓதையும்—அரசர்களுக்குத் திறைகொடுக்கும்படி வந்து நெருங்கிய சிற்றரசர்களுடைய ஆரவாரமும், தேவர்க்கு இறைமையில் தினம் சாறு அயர் ஓதையும்—தேவர்களுக்கு முதன்மையோடு எந்நாளுந் திருவிழாநடாத்துகின்ற ஆரவாரமும், எழுந்திட்டு—ஒன்றாய்த்திரண்டு மேலெழுந்து, அறை கடல் படு முழக்கமும் துளக்குற அலைக்கும்—திரைமோதுகின்ற சமுத்திரத்திலுண்டாகிய ஒலியுமசைவுறும்படி அடக்கும் எ—று. (கஎ)

துண்ட மாமதி தவழ்மதிற் றொன்னக ரதனுட்
கண்ட வாருயிர்த் தொகைமுழு தடங்கிய கணக்கா
லண்ட கோளகை கவித்திடும் பெருநில கனைத்து
முண்ட முண்டகக் கண்ணினு னுதரமொத் துளதால்.

இ—ள்: துண்ட மா மதி தவழ் மதில் தொல் நகர் அதனுள்—பாதியாகிய இளம்பிறைச்சந்திரனைவன் தவழ்ந்துசெல்லுகின்ற மதில்களினாற் சூழப்பட்ட பழமையாகிய அக்குஞ்சரபுரியின்கண்ணே, கண்ட ஆர் உயிர் தொகை முழுது அடங்கிய கணக்கால்—காணப்பட்ட நிறைவாகிய ஆன்மவ

ர்க்கங்கள் யாவும் அடங்கியகாரணத்தால், அண்ட கோளகை கவித்திடும் பேருலகு அனைத்தும் உண்ட—அண்டகடாகத்தினாலே சூழப்பட்ட பெரியவுலகங்களெல்லாவற்றையும் விழுங்கிய, முண்டக கண்ணினான் உதரம் ஒத்தது—தாமரைக்கண்ணனாகிய நாராயணமூர்த்தியினது திருவயிற்றை ஒத்திருந்தது எ—று.

ஆல் அசை. (கஅ)

அரிபு ரந்தரன் விரும்புமந் நகரளிப் பவன்றோ
லுரிபு ரந்தரித் துயர்வட வரைகுழைத் துருத்துத்
திரிபு ரஞ்சுடு சிவனடி சிந்தைசெய் பவன்றாட்
பரிபு ரந்திகழ் திருவுறை பரபுரஞ் சயனே.

இ—ள்: அரி புரந்தரன் விரும்பும் அந்நகர் அளிப்பவன்—விஷ்ணுமூர்த்தியினாலும் இந்திரனாலும் விரும்பப்படுகின்ற அக்குஞ்சரபுரியைப்பரிபாலனஞ்செய்பவனும், தோல் உரி புரம் தரித்து உயர் வட வரை குழைத்து உருத்து திரிபுரம் சுடும் சிவன் அடி சிந்தை செய்பவன்— யானையின்தோலையுரித்துத்திருமேனியிலணிந்து உயர்ந்த மகாமேருபர்வதத்தை வில்லாகவளைத்துக்கோடா கொண்டு முப்புரங்களையுந்தகித்தருளிய சிவபிரானது திருவடிகளை மனத்தின்கண்ணே தியானஞ்செய்பவன், தாள் பரிபுரம் திகழ் திரு உறை பரபுரஞ்சயன்—பாதங்களின்கண்ணே சிலம்புகள்விளங்குகின்ற இலக்குமிதங்கப்பெற்றவனும் (ஆகிய) பரபுரஞ்சயன் (என்னுமோரரசனுளன்) எ—று.

ஏ அசை (கக)

காந்து செம்மணிச் சேடனுங் கமடமுங் கடம்பா
யேந்து கோட்டுமோட் டிபங்களோ ரெட்டுமெண் கிரியு
நாந்த கத்தொடு சமரமேற் றெதிருற நணுகும்
வேந்த ருஞ்சுமை யாறிட மேதினி பரிப்போன்.

இ—ள்: காந்து செம் மணி சேடனும்—பிரகாசிக்கின்ற சிவந்த மாணிக்கரத்தினம்பொருந்திய (உச்சியையுடைய) ஆதிசேடனும், கமடமும்—ஆதிகூர்மமும், கடம் பாய் ஏந்து கோட்டு மோட்டு இபங்கள் ஓரெட்டும்—மதம்பாய்கின்ற ஏந்திய கொம்புகளைக்கொண்ட உயர்ந்த திக்குயானைகளெட்டும், எண் கிரியும்—அட்டமலைகளும், நாந்தகத்தொடு சமரம் ஏற்று எதிருற நணுகும் வேந்தரும்— வாளாயுதத்துடனே யுத்தத்தைமேற்கொண்டு எதிர்த்துவருகின்ற அரசர்களும், சுமை ஆறிட மேதினி பரிப்போன்—தத்தம்சுமைகள் நீங்குமபொருட்டுப் பூமியையரசாட்சிசெய்யுந்தன்மையையுடையவன் எ—று. (உ०)

வேத நான்முறை திறம்பிடா தெங்கணும் விளங்க
மாதர் கற்பெனும் வரம்பழி யாமன்மா நிலத்தோர்

பாதகம்பழி பயின்றிடா தருள்விழி பரப்பி
யாதரத்துட னறப்பயிர் வளர்த்தர சளித்தான்.

இ—ள்: வேத நூல் முறை திறம்பிடாது எங்கணும் விளங்க—வேத சாஸ்திரங்களின்விதிதவறாது எவ்விடத்தும்வழங்கவும். மாதர் கற்பு எனும் வரம்பு அழியாமல்—பெண்கள் தமது கற்பொழுக்கந்தவறாமலும், மாநிலத்தோர் பாதகம் பழி பயின்றிடாது அருள் விழி பரப்பி— பெரிய பூமியின்கண்ணேயுள்ள மாந்தர்கள் பாவச்செயல்களையும் பழிக்குரியவற்றையுஞ்செய்யாமலும் அருணோக்கஞ்செய்து, ஆதரத்துடன் அறப்பயிர் வளர்த்து அரசு அளித்தான்—அன்போடு தருமமாகிய பயிரைவளர்த்து அரசாட்சிசெய்து வந்தனன் எ—று. (உச)

அனைய கோமகற் காசிசொல் புரோகித னானோன்
வினையி னீங்கிய சுரர்குரு நிகர்ப்பவன் வெண்ணூல்
வனையு மார்பினன் முத்தழல் வேள்விகள் வளர்ப்போன்
றனைய ரின்றியே நெடிதுநாட் டவத்தொடு சரித்தான்.

இ—ள்: அனைய கோமகற்கு ஆசி சொல் புரோகிதன் ஆனோன்—அப்பரபுரஞ்சய மகாராசனுக்கு ஆசீர்வாதங்கூறுகின்ற குரவரும், வினையில் நீங்கிய சுரர் குரு நிகர்ப்பவன்—தீவினைகளினின்றும் நீங்கப்பெற்ற தேவகுருவாகிய வியாழபகவானையொப்பவரும், வெண் நூல் வனையும் மார்பினன்—வெள்ளிய உபவீதமணிந்து விளங்குகின்ற மார்பையுடையவரும், முத்தழல் வேள்விகள் வளர்ப்போன்—மூவகை அக்கினிகொண்டு யாகங்களைப் புரிபவரும் (ஆகியபிராமணரொருவர்), தனையர் இன்றியே நெடிது நாள் தவத்தொடு சரித்தான்—புத்திரர்களில்லாமற் பலகாலந் தவவொழுக்கம்பூண்டார் எ—று.

சொற்ற வேதிய னில்வயிற் றோர்சுதன் றீமை
முற்று மோருருக் கொண்டென முடங்குவெண் டிரைக
ளெற்று பாற்கட லிடைவிட முதித்தென வெழில்கூர்
பெற்ற மூர்மறைக் கொழுந்தினை தருள்பெறப் பிறந்தான்.

இ—ள்: சொற்ற வேதியன் இல் வயிற்று—முற்கூறப்பட்ட அப்பிராமணனுக்குமரது மனையாளின் உதரத்து, தீமை முற்றும் ஓர் உருகொண்டென—தீவினைகளெல்லாம் ஒருவடிவங்கொண்டு வந்தாற்போலவும், முடங்கு வெண் திரைகள் எற்றும் பாற்கடல் இடை விடம் உதித்து என— வளைந்த வெள்ளிய திரைகளைவீசுகின்ற திருப்பாற்கடலின்கண்ணே ஆலகாலவிஷந் தோன்றினாற்போலவும், எழில் கூர் பெற்றம் ஊர் மறை கொழுந்தினது அருள் பெற—அழகுமிகுந்த இஷபத்தின்மேலிவர்ந்து செல்லுகின்ற வேதமுதல்வராகிய சிவபெருமானது அருளைப்பெறும்பொருட்டு, ஓர் சுதன் பிறந்தான்—ஒருபுத்திரனானவன் செனனமாயினன் எ—று. (உரு)

தோன்று மைந்தனுக் குயர்சுகு மாரனென் றருளா
லீன்ற தந்தைபே ரிட்டழைத் தேர்மணி யழுத்தி
யான்ற பொன்னணி யணிந்தையாண் டணுகிடு மளவின்
மூன்று நூல்வினை நான்மறை விதிப்படி முடித்து.

இ—ள்: தோன்று மைந்தனுக்கு—இவ்வாறுபிறந்த அப்புத்திரனுக்கு, அருளால் ஈன்ற தந்தை உயர் சுகுமாரன் என்ற பேர் இட்டு அழைத்து—அன்புடனேபெற்ற பிதாவானவர் உயர்வாகிய சுகுமாரனென்று நாமகரணஞ்செய்து, ஏர் மணி அழுத்தி ஆன்ற பொன் அணி அணிந்து—அழகிய இரத்தினங்கள் பதித்துச்செய்யப்பட்ட உயர்வாகிய பொன்னாபரணங்களையணிந்து, ஐ ஆண்டு அணுகிடும் அளவில்—ஐந்துவயதுநிகழும்பொழுது, நால் மறை விதிப்படி மூன்று நூல் வினை முடித்து—சதுர்வேத முறைப்படி உபநயனச்சடங்கை செய்துமுடித்து எ—று. (உச)

ஆதவன்வட திசையணை யுத்தரா யணத்திற்
றீதகன்றிடு மோரைகூ டியசுப தினத்திற்
றாதவிழ்ந்தவெண் டாமரை யாள்சரண் வழுத்திப்
பாதகம்பயின் மகற்குநான் மறைபயில் வித்தான்.

இ—ள்: ஆதவன் வடதிசை ஆணை உத்தராயணத்தில்—சூரியன்வடக்குத்திக்கையணைந்து செல்லுகின்ற உத்தராயணகாலத்தில், தீது அகன்றிடும் ஓரை கூடிய சுபதினத்தில்—எவ்வகைத்தீங்குமில்லாத சுபமுகூர்த்தமமையப்பெற்ற நல்லநாளில், தாது அவிழ்ந்த வெண் தாமரையாள் சரண் வழுத்தி—இதழ்விரிந்த வெள்ளியதாமரைமலரின்கண் வாசஞ்செய்கின்ற சரசுவதிதேவியினது திருப்பாதங்களைத்தோத்திரஞ்செய்து, பாதகம் பயில் மகற்கு—பாதகங்களைச்செய்பவனாகிய தன்புத்திரனுக்கு, நால்மறை பயில்வித்தான்—இருக்கு யசுர் சாமம் அதர்வணம் ஆகிய நான்குவேதங்களையும் ஓதுவித்தார் எ—று. (உரு)

ஆய்ந்தபற்பல கலைகளு மரவினுக் கமுத
மீந்ததாமெனக் கமரிடை யுகுத்தபா லென்ன
வோய்ந்திடாமலற் பகலெலா முணர்த்திட வுணர்ந்து
வாய்ந்த காமவேள் கணைக்கிலக் காமென வளர்ந்தான்.

இ—ள்: ஆய்ந்த பல்பல கலைகளும்—ஆராயப்பட்ட பலபலசாஸ்திரங்களையும், அரவினுக்கு அமுதம் ஈந்தது ஆமென—(விஷத்தைக்கொடுக்கின்ற) சர்ப்பத்துக்குப் பாலைக்கொடுத்தாற்போலவும், கமர் இடை உகுத்த பால் என்ன—நிலவெடிப்பின்கண்ணேயூற்றிய பாலைப்போலவும், ஓய்ந்திடாமல் அல் பகல் எலாம் உணர்த்திட உணர்ந்து—ஒழிதலின்றி இரவுபகல்முழுவதுங்கற்பிக்கக் கற்றுணர்ந்து, வாய்ந்த காமவேள் கணைக்கு இலக்காம் என

வளர்ந்தான்—அழகுவாய்க்கப்பெற்ற மன்மதனது புஷ்பபாணங்களுக்கு இலக்காகும்படி (இளமைபெற்று) வளர்ந்தான் எ—று. (உசு)

கவள மால்களி றெனவரு காட்சி கண்டுருகித்
துவள நூலிடை நடந்துபின் றொடர்ந்துதூ முல்லைத்
தவள வாணகை கோட்டிமா றருந்தனங் காட்டிப்
பவள வாயினார் காமுறு பருவமெய் தினனால்.

இ—ள்: கவள மால் களிறு என வரு காட்சி கண்டு—கவளமாயுண்ணுகின்ற பெரியயானையென்று சொல்லும்படி வளர்ந்துவந்த (அப்புத்திரனதழகுநிறைந்த) தோற்றத்தைக்கண்டு, உருகி—மனங்கசிந்து, நூல் இடை துவள நடந்து—நூலையொத்த நுண்ணிய இடையானது அசையும்படி நடந்து, பின்தொடர்ந்து—(அவன்செல்லுமிடங்கடோறும்) பின்சென்று, தூ முல்லை தவள வாள் நகை கோட்டி—சுத்தமாகிய முல்லையரும்பையொத்த வெள்ளிய ஒளிகொண்டபற்களைத் தோற்றுவித்து, மால் தரும் தனம் காட்டி—மயக்கத்தைத்தருகின்ற ஸ்தனங்களைக்காண்பித்து, பவளவாயினார் காமுறும்—பவளம்போன்ற சிவந்தவாயினையுடைய பெண்கள்விரும்பத்தக்க, பருவம் வந்து எய்தினன்—காளைப்பருவம்வந்தெய்தப்பெற்றான் எ—று.

ஆல்-அசை. (உஎ)

கஞ்ச நாண்மலர்க் கண்ணினன் கலைமதி தகர்த்து
விஞ்ச வேநிரைத் திணக்கிவைத் தனையவெண் ணகையான்
சஞ்ச ரீகமட் டார்பசுந் தாரொடுந் தழுவி
மஞ்சு கீண்டெழு மின்னென நடங்குநூன் மார்பான்.

இ—ள்: கஞ்ச நாள் மலர் கண்ணினன்—அன்றலர்ந்த தாமரைமலரையொத்த கண்களையுடையவனும், கலை மதி தகர்த்து விஞ்ச நிரைத்து இணக்கி வைத்தனைய வெள் நகையான்—கலைகள்பொருந்திய சந்திரனைச்சிறிதாகப்பிளந்து அதிகமாக நிரைத்துவைத்தாற்போன்ற வெண்ணிறமாகிய பற்களையுடையவனும், சஞ்சரீகம் மட்டு ஆர் பசும் தாரொடும் தழுவி—வண்டுகளானவை தேனைப்பருகுகின்ற பசுமையாகிய புஷ்பமாலையோடுசார்ந்து, மஞ்சு கீண்டு எழும் மின் என நடங்கு நூல் மார்பன்—மேகத்தைக்கிழித்துத்தோன்றும் மின்னலையொத்தசைகின்ற உபவீதந்தங்கிய மார்பையுடையவனும் எ—று.

ஏ-அசை. (உஅ)

பெய்யு மாமழை முகிலெனப் பிளிறுசிந் துரத்தின்
கைய தாமெனக் கவின்றரு தாழ்தடக் கையான்
றுய்ய வாரிச முகைமுறுக் கவிழ்செழுந் துணரின்
செய்ய தாளினன் றேடரு மாடவர் திலகன்.

இ—ள்: மா மழை பெய்யும் முகிலென பிளிறு சிந்துரத்தின் கை யதாம் என—பெரிய மழையைவருஷிக்கும் மேகங்களைப்போல முழங்குகின்ற யானையினது துதிக்கையென்றுசொல்லும்படி, கவின் தரு தாழ் தட கையான்—அழகார்ந்து தூங்குகின்ற விசாலித்த கைகளையுடையவனும், தூய்ய வாரிச முகை முறுக்கு அவிழ் செழும் துணரின் செய்ய தாளினன்— சுத்தமாகிய தாமரையரும்பினது சுருள்விரியப்பெற்ற செழுமைதங்கிய மலரையொத்த சிவந்தபாதங்களையுடையவனும், தேடரும் ஆடவர் திலகன்—தேடுதற்கரிய (அழகு வீரம் முதலியனவைகள்நிறைந்த) ஆண்மக்களுக்குள்ளே சிறந்தவனும் எ—று. (௨௯)

சொன்ன விண்டுவிற் றிரண்டுயர் பணைத்தடந் தோளான்
வன்ன மேகலை மடந்தையர் கண்கவர் வதனன்
கன்ன லஞ்சிலைக் காமனே காட்சி தந்தனை யா
னன்ன வன்றிருப் பேரெழி லாரெடுத் தறைவார்.

இ—ள்: சொன்ன விண்டுவில் திரண்டு உயர் பணை தடம் தோளான்—மேருமலையைப்போலத் திரண்டு உயர்ந்த பருத்த விசாலமாகியதோள்களையுடையவனும், வன்ன மேகலை மடந்தையர் கண் கவர் வதனன்—அழகிய மேகலாபரணமணிந்த பெண்களினது கண்களைக்கவருகின்ற முகத்தையுடையவனும், கன்னல அம் சிலை காமனே காட்சி தந்தனையான—கரும்பாகிய அழகிய வில்லையுடைய மன்மதனே தனது ரூபத்தைக்காட்டி வந்தாற்போலும் வடிவத்தையுடையவனுமாகிய, அன்னவன் திரு பேரெழில் ஆர் எடுத்து அறைவார்—அந்தச்சுகுமாரனது சிறந்த பெரியஅழகுதனை யார் எடுத்து முற்றக்கூறி முடிக்கவல்லவர் எ—று. (௩௰)

தென்ற லந்தடந் தேர்மிசை வருமதன் செங்கை
மன்ற லம்புகள் படப்படப் பதைத்துளம் வருந்திப்
பொன்ற யங்குபூண் புணர்முலைக் கணிகையர் போக
மன்றி லென்றிட நுகர்ந்தவா வடங்கில னாகி.

இ—ள்: தென்றல் அம் தடம் தேர்மிசை வருமதன் செம் கை மன்றல அம்புகள் பட பட—தென்றற்காற்றாகிய விசாலித்ததேரின்மேல் வருகின்ற மன்மதனது சிவந்தகைகளினின்றும் (ஏவப்படுகின்ற) வாசனைபொருந்திய மலர்ப்பாணங்கள்வந்து தாக்குந்தோறெல்லாம், உளம் பதைத்து வருந்தி—மனங்கலங்கித் துன்புற்று, பொன் தயங்கு பூண் புணர் முலை கணிகையர் போகம் அன்றில் என்றிட நுகர்ந்து—பொன்னாற்செய்து விளங்குகின்ற ஆபரணங்களையணிந்த நெருங்கிய ஸ்தனங்களையுடைய வேசியர்களது இன்பத்தை (தனதுபெடையையொருபோதும்விட்டுப்பிரியாத அன்றிற்பட்சியென்றுசொல்லும்படி அனுபவித்தும், அவா அடங்கிலன் ஆகி—காமவிருப்பம் தணியப்பெறாதவனாய் எ—று. (௩௧)

பழுதி லன்புட னுதயமுற் பகருமுப் பொழுதுங்
கொழுந ரன்றியோர் கடவுளைத் தளிர்க்கரங் குவியா
வழுவில் கற்புடை மடந்தையர் தமையன மருட்டித்
தழுவி யானினத் தொருமழ விடையெனச் சரித்தான்.

இ—ள்: பழுதில் அன்புடன் உதயம் முன் பகரு முப்பொழுதும்—கெடுதலில்லாத அன்போடு உதயமுதலாகக் கூறப்படுகின்ற முக்காலங்களினும், கொழுநர் அன்றி ஓர் கடவுளை தளிர் கரம் குவியா—தம் நாயகரையல்லாமல் வேறொருதெய்வத்தையும் மாந்தளிர்போன்ற கைகளைக்குவித்து வணங்காத, வழுவில் கற்புடை மடந்தையர் தமை—தவறற்ற கற்பமைந்த பெண்களை, மனம் மருட்டி தழுவி—மனதை மயக்கிப்புணர்ந்து, ஆன் இனத்து ஒரு மழவிடை என சரித்தான்—பசுக்கூட்டத்தினுள்ளே (திரிகின்ற) ஒரு இளமையையுடைய இடபத்தைப்போலத் திரிந்தனன் எ—று. (௩௨)

மாம னானன மசானன மாக்குமா ரிதழித்
தாம னாகம புராணநூல் சதுர்மறை யென்னு
நாம நாவினி னவின்றிடா னாடொறுஞ் சிலைக்கைக்
காம னாகமம் வேதமீ தாமெனக் கற்பான்.

இ—ள்: மாமன் ஆனனம் அச ஆனனம் ஆக்கும்—மாமனாகிய தக்கனதுமுகத்தை ஆட்டுமுகமாக மாற்றியருளிய, ஆர் இதழித் தாமன் ஆகம புராணநூல் சதுர் மறை என்னும் நாமம்—ஆத்திமாலையையுங் கொன்றைமாலையுமணிந்த பரமசிவனது இருபத்தெட்டாகமங்களும் பதினெண்புராணங்களும் நான்குவேதங்களுமாகிய இவைகளின் பெயரையாவது, நாவினில் நவின்றிடான்—நாவினாலுச்சரியாதவனாய், நாள் தொறும் சிலை கை காமன் ஆகமம்—தினந்தோறும் கரும்புவிற்கரத்தனாகிய மன்மதனது காமசாஸ்திரத்தை, வேதம் ஈது ஆம் என கற்பான்—வேதம் இதுவேயென்று அப்பியாசஞ்செய்வான் எ—று. (௩௩)

ஈடு வாடைமற் றிலேபன மெனுமருந் தியற்றிப்
பீடு சானிறை முறைமையிற் பெருந்தகை பெற்ற
கோடு மாமணிக் கும்பநேர் குவிமுலை சுமக்கும்
வாடு நூலிடை மகளிரை வசப்பட மயக்கும்.

இ—ள்: ஈடு வாடை இலேபனம் எனும் மருந்து இயற்றி—இடுமருந்தும் வாடைமருந்தும் பூசுமருந்துமாகிய வசியமருந்துகளைச்செய்து, பீடு சால் நிறை முறைமையில் பெருந்தகை பெற்ற—பெருமைமிகுந்த கற்பொழுக்கத்தில் பெருந்தகைமையையுடைய, கோடு மா மணி கும்ப நேர் குவி முலை சுமக்கும்—யானைக்கொம்புகளையும் இரத்தினகலசங்களையுமொத்த குவிந்த ஸ்தனங்களைத்தாங்கிய, வாடு நூல் இடை மகளிரை வசப்பட மயக்கும்—

துவளுகின்றநூல்போன்ற இடையையுடையபெண்களைத் தன்வசமாகும்படி மயலுறவிப்பான் எ—று. (௬௪)

உலக்கு நாளணித் தாயினர்க் கொளிக்கு மீனொக்கு
நலத்தி னோர்சிலைக் காமவே ணணுகினு நழுவாப்
பெலத்த முல்லையாந் தருக்களை வேரொடும் பிடுங்கி
நிலத்தி னீங்கிட விசைத்தெறி சுழல் வளிநிகர்த்தான்.

இ—ள்: உலக்கும் நாள் அணித்தாயினர்க்கு ஒளிக்கும் மீன் ஒக்கும் நலத்தினோர்—இறக்குந்தினஞ் சமீபித்தவர்களுக்குத்தோன்றாது மறைகின்ற அருந்ததியைநிகர்த்த கற்பொழுக்கத்தையுடைய பெண்களது, சிலை கை காமவேள் நணுகினும் நழுவா பெலத்த முல்லையாம் தருக்களை— கருப்புவில்லையுடைய மன்மதன்வந்தாலும் நிலைதவறாத உறுதியாகிய கற்பென்னும் முல்லை விருக்ஷங்களை, வேரொடும் பிடுங்கி நிலத்தின் நீங்கிட விசைத்து எறி சுழல் வளி நிகர்த்தான்—வேரோடும்பறித்து நிலத்தினின்றும் பிரியும்படி விசைகொண்டெறிகின்ற சூறைக்காற்றுக்கு ஒப்பாயினான் எ—று. (௬௫)

அந்தி வெண்பிறை முடித்தவ னடித்துணைக் கமலஞ்
சிந்தை செய்கிலன் றிருவுருக் களைச்சிலை யென்றே
நிந்தை செய்தன னீதியாய் நித்தமு மியற்றுஞ்
சந்தி வந்தனை மறந்தனன் றுறந்தனன் றருமம்.

இ—ள்: அந்தி வெண் பிறை முடித்தவன் துணை அடி கமலம் சிந்தை செய்கிலன்—அந்திக்காலத்திற்றோன்றுகின்ற வெள்ளிய பிறையைத்தரித்த திருமுடியையுடைய சிவபெருமானது இரண்டுபாததாமரைகளையும் மனதிலே சிந்தியாது, திரு உருக்களை சிலை என்றே நிந்தை செய்தனன்— சிவலிங்கம்முதலிய தேவவிக்கிரகங்களைக் கல்லென்று அவமதித்து, நீதியாய் நித்தமும் இயற்றும் சந்தி வந்தனை மறந்தனன்— விதிப்படி தினந்தோறுஞ் செய்யப்படுவதாகிய சந்தியாவந்தனையை மறந்து, தருமமும் துறந்தனன்—பல தருமங்களையும் ஒழித்தான் எ—று. (௬௬)

இந்த வாறிவ னொழுகிய படிறுகண் டியாருந்
தந்தை பாலெடுத் துணர்த்திடத் தனையனைக் கூவி
யந்த மாநகர்க் கலைஞரை யழைத்தரு கிருத்திச்
சிந்தை தேறுற வுறுதிநன் மதிபல செப்பும்.

இ—ள்: இந்தவாறு இவன் ஒழுகிய படிறு கண்டு—இவ்விதமாக இச்சுகுமாரனைவன் செய்த குற்றங்களைப்பார்த்து, யாரும் தந்தை பால் எடுத்து உணர்த்திட—எல்லோரும் அவனது பிதாவிடத்து அக்குற்றங்கள் யாவற்றையுமெடுத்துக் கூறுதலும், தனையனை கூவி—அவர் தமது புத்திரனையழைத்து, அந்த மா நகர் கலைஞரை அழைத்து அருகு இருத்தி—அப்

பெருமைதங்கிய நகரத்தின்கணுள்ள கல்விமான்களை ஆங்குவருவித்துப் பக்கத்தேயிருக்கச்செய்து, சிந்தை தேறுற உறுதி நல் மதி பல செப்பும்—மனந்தெளிவடையும்பொருட்டு உறுதியாகிய நற்புத்திகள் பலவற்றையும் கூறுவாராயினர் எ—று. (கஎ)

பிறர்ம னைக்குரித் தாகிய பேதையைப் புணர்ந்தோ
ரறம டுத்தநண் பொடுபுகழ் பெருமையொன் றடையார்
மறமி குத்தவெம் பவம்பழி மாற்றரு மச்ச
மிறலி யற்றிடும் பகையிவை நான்குமெய் திடுவார்.

இ—ள்: பிறர் மனைக்கு உரித்தாகிய பேதையை புணர்ந்தோர்—பிறர்மனைவியராகிய பெண்களைப்புணர்ந்தவர்கள், அறம் அடுத்த நண்பொடு புகழ் பெருமை ஒன்றும் அடையார்—தருமம் பொருந்தியசிநேகம் கீர்த்தி பெருந்தகைமையாகிய இந்நான்கனுளொன்றையும் பெறார், மறம் மிகுத்த வெம்பவம் பழி மாற்றரும் அச்சம் இறல் இயற்றிடும் பகை இவை நான்கும் எய்திடுவார்—கொடுமைமிகுந்ததீயபாவங்கள் பழிகள் நீக்குதற்கரியபயம் தன்னைக்கொலைபுரியத்தக்க (வெவ்விய) பகையாகிய இந்நான்கையும் பெறுவர் எ—று. (கஅ)

நீடு றுதுநல் லிளமையென் றுளத்திடை நினைந்து
நாடு றார்பிறர் மனையெனி னுமநீர் வைப்பில்
வீடு றாப்புகழ் மேவுவர் வித்தைகை வித்தங்
கூடு றார்நர கக்குழி கிடந்தழுந் துகிலார்.

இ—ள்: நல் இளமை நீடு உறுது என்று உளத்திடை நினைந்து—நல்ல இளமைப்பருவமானது நிலையாதென்று மனத்தினினைத்து, பிறர் மனை நாடுறார் எனில்—பிறர்மனைவியரிடத்துச் செல்லாராயின், (அவர்கள்) நாம நீர் வைபபில் வீடுறாப் புகழ் வித்தை கை வித்தம் மேவுவர்— அச்சம்பொருந்திய சமுத்திரத்தாற்சூழப்பட்ட பூமியின்கண்ணே அழியாத சீர்த்தியையும் கலவியையும் கைப்பொருளையுமடைகுவர், (அதுவுமன்றி மறுமைக்கண்) நரகக்குழி கூடுறார் கிடந்து அழுந்துகிலார்—நரகக்குழியையடைந்து ஆங்குக்கிடந்து வருந்துதலுறார் எ—று. (கக)

ஊறு தீர்மரத் தூரியி னொன்றென வொன்றி
வேறு பேசகங் காட்டுபுன் மனத்தினோர் விழைவாற்
கூறு நீணிதி கவர்விலை மகளிர்பாற் குறுகி
யேறு காமமே நுகர்பவர்க் கிகபர மில்லை.

இ—ள்: ஊறு தீர் மரத்தூரியின் ஒன்றென ஒன்றி— குற்றமில்லாத புல்லுருவியைப்போல ஒன்றாகப்பொருந்தி, வேறு பேசகம் காட்டும் புல் மனத்தினோர் விழைவால்—மனத்தினாலே வேறுபட்டுக்காட்டுகின்ற எளிய கு

ணத்தோராது சிநேகத்தால், கூறு நீள் நிதி கவர் விலை மகளிர் பால் குறுகி—சொல்லப்படுகின்ற மிக்க திரவியத்தைப்பகரிக்கும் வேசியரிடத்திற்சென்று, எறு காமமே நுகர்பவர்க்கு இகபரம இல்லை—மிக்க காமவிச்சையே பொருளென்று அனுபவிப்பவர்களுக்கு இம்மை மறுமை இன்பங்களில்லையாம எ—று. (சய)

என்று பற்பல நன்மதி துன்மதி யிதயந்
துன்று மச்சுகு மாரனுக் குரைத்தலுஞ் சொற்ற
தொன்று மற்றவன் செவிப்புல நுழைந்தில துபலஞ்
சென்று தைத்திடா நெடுமர மூலையெனச் சிதைந்த.

இ—ள்: என்று பல் பல நன் மதி துன்மதி இதயம் துன்றும் அ சுகுமாரனுக்கு உரைத்தலும்—இவ்வாறு பலவித நற்புத்திகளைத் துற்புத்திகள்மனத்திலேகுடிகொண்ட அந்தச்சுகுமாரனுக்குக்கூறுதலும், சொற்றது ஒன்றும் அவன் செவிப்புலம் நுழைந்திலது—கூறியதொன்றும் அவனது செவியிற்சென்றபலன்தந்திலது, உபலம் சென்று தைத்திடா நெடு மர மூலை என சிதைந்த—கற்பாறையின்கண்ணேசென்று தையாத நெடிய மரமூளையைப் போல (எல்லாப்புத்திகளும்) அழிந்துபட்டன எ—று.

மற்று அசை. (சக)

கப்பி நாடொறுங் கழித்துண வளிப்பினுங் கோழி
தப்பி லாதுபுன் குப்பைபோய்க் கிளைத்திட றவிரா
தொப்பி னூல்படித் துறுமதி யோர்பல கோடி
செப்பி னுந்தம மனம்புரி செயல்விடார் தீயோர்.

இ—ள்: கோழி—கோழியானது, நாள் தொறும் கப்பி கழித்து உணவு அளிப்பினும்—தினந்தோறும் கப்பிமுதலிய தாழ்ந்தபொருட்களையொழித்து நல்ல உணவைக்கொடுத்துவந்தாலும், தப்பிலாது புன் குப்பை போய் கிளைத்திடல் தவிராது-தவறாமலெளிய குப்பையிற்சென்று கிளறுதலை நீங்காது (அதுபோல), தீயோர—தீக்குணம்நிறைந்தவர்கள், ஒப்பு இல் நூல படித்து உறு மதி பல கோடி செப்பினும்—ஒப்பில்லாத பல நூல்களைக்கற்று மிக்கபுத்திகள் பலவற்றைக் கோடிக்கணக்காயெடுத்துரைப்பினும், தம்மனம புரி செயல் விடார்— தம்மனத்தில விரும்பிய எளியசெய்கைகளைவிடார் எ—று.

ஓர் அசை. (சஉ)

களிப்பி னுஞ்சுடுங் கடவுளர் கடல்கடை யமிர்த
மளிப்பி னுஞ்சுடு மறைதிரைக் குளிர்புன லகத்துக்
குளிப்பி னுஞ்சுடுங் குன்றுறு குகைகளிற் குறுகி
யொளிப்பி னுஞ்சுடுங் காமமிக் கூர்தர வுழன்றான்.

இ—ள்: களிப்பினும் சுடும்—மகிழ்வுறும்போதுஞ் சுடத்தக்கதும், கடவுளர் கடல் கடை அமுதம் அளிப்பினும் சுடும்—தேவர்கள் பாற்கடலைக்கடைந்துபெற்ற அமிர்தத்தைக்கொடுத்தாலுஞ் சுடத்தக்கதும், அறை திரை குளிர் புனல் அகத்து குளிப்பினும் சுடும்—ஒலிக்கின்ற திரைநிறைந்த குளிர்ந்த சமுத்திரசலத்தினுள்ளே அமிழ்ந்திக்கிடந்தாலுஞ்சுடத்தக்கதும், குன்று உறு குகைகளில் குறுகி ஒளிப்பினும் சுடும்—மலைகளிற்பொருந்தியகுகைகளினிடத்துச்சென்று ஒளித்தாலுஞ் சுடத்தக்கதுமாகிய, காமம் மிக்கு ஊர் தர உழன்றான்—காமநோயானது மிகுந்து அதிகரித்தலினால் அலைந்தான் எ—று. (சஙூ)

தூய நீத்திழி தொழில்புரி துர்க்குணத் திவனைத்
தாயு நீத்தன டந்தையு நீத்தனன் றமர்க
ணேய நீத்தனர் நிலநிதி மகளிர்மே னிகழு
மாய நீத்ததின் மயக்கறத் துறந்தவர் மனம்போல்.

இ—ள்: நிலம் நிதி மகளிர் மேல் நிகழும் மாயம் நீத்து—மண் பொன் பெண்களிடத்துண்டாகுமாசையையொழித்து, அதின் மயக்கு அற துறந்தவர் மனம்போல்—அவற்றின்மயக்கத்தினின்றும் முற்றத்துறந்ததுறவிகளது மனத்தைப்போல, தூய நீத்து இழி தொழில் புரி துர் குணத்து இவனை—நற்கருமங்களைவிடுத்து எளியகருமங்களைப்புரிகின்றகெட்டகுணத்தையுடைய இச்சுகுமாரனை, தாயும் நீத்தனள் தந்தையும் நீத்தனன்—மாதாவும் நீக்கினாள் பிதாவும்நீக்கினான், தமர்கள் நேயம் நீத்தனர்— சுற்றத்தவர்களும் அன்புநீங்கப்பெற்றார்கள் எ—று. (சச)

தொழுகு லத்தவர் மரபினிற் றோமறத் தோன்றிப்
பழுது பற்பல விளைத்திழி குலத்தொழில் பயின்றான்
முழுமு தற்பொரு ளாய்மறை நடஞ்செய்நான் முகத்தோ
னெழுது மத்தக விதிவழி விலக்கினோ ரெவரே.

இ—ள்: தொழு குலத்தவர் மரபினில் தோமற தோன்றி— பிராமணவருணத்திலே குற்றமின்றிப்பிறந்தும், பழுது பல் பல விளைத்து இழி குலத்தொழில் பயின்றான்—குற்றங்கள்பலவற்றை விளைவித்து எளியகுலத்தவர்களது தொழிலைச்செய்துவந்தான், முழு முதல் பொருள் ஆய் மறை நடம் செய் நான்முகத்தோன் எழுதும் மத்தக விதிவழி விலக்கினோர் எவர்—எல்லாவற்றிற்கும் முதற்பொருளாகிய பரமபதியை ஆராய்ந்தறிதற்கிடமாயுள்ள சதுர்வேதங்களும் நடனஞ்செய்கின்ற நான்குமுகங்களையுடையபிரமாவாலெழுதப்பட்ட தலைவிதிக்கிரமத்தை நீக்கிக்கொண்டவர் யாருளர் எ—று. ஏ அசை. (சரு)

கன்னி மாடமுங் கடிமதிற் காவலுங் கடந்து
துன்னு மாரிருட் பொழுதின்மங் கையர்முலை தோய்வா

ன்ன மன்னவர் தனமைப்பிறர் விலக்கினு மமையா
ரின்ன தன்மையி னீங்கிவை நிகழ்ந்துறு மேல்வை.

இ—ள்: கன்னி மாடமும் கடி மதில் காவலும் கடந்து— கன்னிகர் மாடங்களையுங்காவல்பொருந்திய மதிற்காப்பையுந்தாண்டி, துன்னும் ஆர் இருள் பொழுதில்—மிக நெருங்கிய இருட்காலத்தில், மங்கையர் முலை தோய் வான்—பெண்களது ஸ்தனபோகத்தையனுபவிப்பான், அன்னம் அன்னவர் தமை பிறர் விலக்கினும் அமையார்—அன்னம்போன்ற அம்மகளிரைப்பிறர்தடுத்தவழியுந்தடைப்படார், இன்ன தன்மையின் ஈங்கு இவை நிகழ்ந்து உறும் எல்லை—இவ்விதமாய் இவ்விடத்திவைகள் நடைபெறுகின்றகாலத்தில் எ—று. (சகூ)

முத்த மீதினு முளரிமென் முகிழ்முலை முகத்தும்
வைத்த பற்குறி நகக்குறி கண்டுதம் மனையார்
தத்த மக்குள கற்பழிந் தாரெனச் சலித்துக்
கைத்த சிந்தைய ராகியக் கடிநக ருள்ளார்.

இ—ள்: முத்தம் மீதினும் முளரி மென் முகிழ் முலை முகத்தும்—வாயிதழ்களினும் தாமரைமுகையையொத்த மிருதுவாகிய முகிழ்த்த ஸ்தனங்களினும், வைத்த பல் குறி நக குறி கண்டு—பதித்த பற்குறிநகக்குறிகளைப் பார்த்து, தம் மனையார் தம் தமக்கு உள கற்பு அழிந்தார் என சலித்து—தமது பெண்கள் தங்கள் தங்கள் கற்புநெறிகெடப்பெற்றனரென்று துன்பமடைந்து, அ கடி நகர் உள்ளார் கைத்த சிந்தையர் ஆகி—அக்காவலமைந்த நகரவாசிகள்யாரும் வெறுத்தமனமுடையராய் எ—று. (சஎ)

காவல் சட்டழித் திரவினிற் கரவினு லெய்தி
யாவ ரித்தொழில் புரிபவ ரெனமனத் தெண்ணிப்
பாவ முற்றிய படிற்றொழுக் கச்சுகு மாரன்
மாவ னப்புடை யான்செய லிதுவென மதித்து.

இ—ள்: காவல் சட்டழித்து— எமது காவல் வரம்பைக்கெடுத்து, இரவினில் கரவினுல் எய்தி—இராக்காலத்தில் மறைவாய்வந்து, யாவர் இ தொழில் புரிபவர் என மனத்து எண்ணி— யார் இக்காரியத்தைச்செய்பவரென்று மனத்திலாலோசித்து, மா வனப்பு உடையான்— பேரழகினையுடையவனும், பாவம் முற்றிய படிற்று ஒழுக்கச் சுகுமாரன்— பாவம்நிறைந்த பொய்யொழுக்கத்தையுடையவனுமாகிய சுகுமாரனது, செயல் இது என மதித்து—செய்கையேயிதுவென்று நிச்சயித்து எ—று. (சஅ)

அற்ற நோக்கியாம் பற்றினு மகப்படா னுசை
பெற்ற மாதர்நம் மொழிப்படி யினிமனம் பிரியா

றிற்ற தாகுமில் வாழ்க்கையென் றிரங்கியுட் கவலை
யுற்று ளோர்திரண் டென்செய்கே மிதற்கென வுசாவி.

இ—ள்: யாம் அற்றம் நோக்கி பற்றினும் அகப்படான்—நாம் சமயம் பார்த்துப் பிடிப்பினும் அகப்படான், ஆசை பெற்ற மாதர்—அவனிடத்தே விருப்பம்வைத்த பெண்கள், நம் மொழிப்படி மனம் இனி பிரியார்—எமது சொல்லின்படி மனத்தை யினிமீளார், இல் வாழ்க்கை இற்றது ஆகும் என்று இரங்கி—எமது இல்லொழுக்கமானது அழிந்ததுவென்று துன்புற்று, உள் கவலை உற்றுளோர் திரண்டு—உள்ளத்திலே கவலைநிறையப்பெற்றவராய் மாந்தர்களெவருமொருங்குகூடி, என் செய்கேம் இதற்கு என உசாவி—இதற்கு யாம் யாதுசெய்வோமென்று தம்முள்வினவி எ—று. (௪௯)

வேறு.

காசினி யென்னு மாதின் கலிக்கரி யாடை நீக்கி
மாசகல் புகழ்வெள் ளாடை சாத்திய மன்னன் முன்போய்க்
கூசுத லின்றி நந்தங் குறைதிறந் தறைவோ மென்னத்
தூசகல் வாரின் மான மிழந்தவர் துணிந்து சூழ்ந்து.

இ—ள்: காசினி என்னும் மாதின் கலி கரி ஆடை நீக்கி—பூமிதேவியினது தீமையாகிய கரிய வஸ்திரத்தைக்கழித்து, மாசு அகல் புகழ் வெள் ஆடை சாத்திய—குற்றமற்ற கீர்த்தியாகிய வெள்ளுடையைத்தரித்த, மன்னன் முன் போய்—மகாராசனது முன்னிலையிற்சென்று, கூசுதல் இன்றி நம் தம் குறை திறந்து அறைவோம் என்ன—மனக்கூச்சமின்றி நமது குறையை வெளிப்படுத்திச் சொல்லுவோமென்று, தூசு அகல்வாரில் மானம் இழந்தவர் துணிந்து சூழ்ந்து—தமது வஸ்திரத்தையிழந்தவர்களைப்போல மானமழியப்பெற்றயாவரு மனவுறுதிகொண்டொருங்குகூடி எ—று. (௫௦)

கால்வழி சென்னீ ரென்னக் கருத்தொருப் படுத்தி மான
வேல்வழி கண்ட நெஞ்சர் வெள்வளை கொழுக்கள் கீண்ட
சால்வழி பரந்து மேயுந் தண்பணை நாடு நீதி
நூல்வழி புரக்கு மன்னன் வாயிலை நோக்கி யேகி.

இ—ள்: மான வேல் வழி கண்ட நெஞ்சர்—மானமாகிய வேல் துளைத்துப் புறத்தேபோகப்பட்ட நெஞ்சையுடையவர்களாகிய அம்மாந்தர், கால் வழி செல் நீர் என்ன கருத்து ஒருப்படுத்தி—வாய்க்கால்வழியே பாய்கின்ற சலத்தைப்போல தம்மனத்தை ஒருவழிநிறுத்தி, கொழுக்கள் கீண்ட சால்வழி வெள் வளை பரந்து மேயும்—கலப்பைமுனையினாற்கிழிக்கப்பட்ட சால்மார்க்கமாய் வெள்ளியசங்குகள் பரந்து மேயாநின்ற, தண் பணை நாடு நீதி நூல் வழி புரக்கும் மன்னன் வாயிலை நோக்கி ஏகி—குளிர்ந்த வயல்

பொருந்திய நாட்டை நீதிசாஸ்திரவிதிப்படி பரிபாலனஞ்செய்புமரசனது மாளிகைவாயிலை நோக்கிச்சென்று எ—று. (ருக)

வாயிலோர் தம்மைக் கண்டெம் வரவுரைத் திடுதி ரென்னப்
போயிலோர்க் கன்னை யன்ன புரவலற் போற்றி மாந்த
ராயினோர் கோடி யோரிங் கடைந்தன ரென்னக் கஞ்சக்
கோயிலோ ரிருவர் மேவுங் கொற்றவன் கொணர்மி னென்றான்.

இ—ள்: வாயிலோர் தம்மை கண்டு எம் வரவு உரைத்திடுதிர் என்ன—வாயிற்காவலரைப்பார்த்து எமதுவருகையை அரசனுக்குத்தெரிவியுங்களென்று சொல்ல, போய்—அக்காவலர்சென்று, இல்லோர்க்கு அன்னை அன்ன புரவலற்போற்றி—ஆதுலர்க்கு(அன்னம்முதலியவற்றை வேண்டியபடி கொடுத்துவளர்த்தலால்) தாய்போன்ற அவ்வரசனை நமஸ்கரித்து, மாந்தர் ஆயினோர் கோடியோர் இங்கு அடைந்தனர் என்ன— கோடிக்கணக்கான மனுடர்களிங்குவந்திருக்கின்றார்களென்று கூற, கஞ்ச கோயிலோர் இருவர் மேவும் கொற்றவன்—தாமரையாசனிகளாகிய இலக்குமி சரசுவதியென்னும் இருவரும் வீற்றிருக்கின்ற அவ்வரசனானவன், கொணர்மின் என்றான்—அவர்களை அழைத்துவரும்படி ஆஞ்ஞாபித்தான் எ—று. (ருஉ)

அரசர்கோ னருளிப் பாடென் றவரையுட் புகுத்தப் போந்து
கரசரோ ருகங்கள் கூட்டிக் கனைகழற் றாளிற் றாழ்ந்து
பரசநீள் கடைக்க ணோக்கம் பரப்பிநுங் குறையா தென்ன
முரசகே தனனை யொப்பாய் கேளென மொழிய லுற்றார்.

இ—ள்: அரசர் கோன் அருள் இப்பாடு என்று—அரசர்க்கு அரசனாகிய பரபுரஞ்சயமகாராசனது கிருபையனதித்தகையதென்று, அவரை உள புகுத்தப் போந்து—அவர்களையுள்ளே அனுப்பச்சென்று, சரோருக கரங்கள் கூட்டி—தாமரைமலர்போன்ற கைகளைக்குவித்து நின்று, கனை கழல் தாளில் தாழ்ந்து பரச—ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த பாதங்களில் வீழ்ந்து வணங்க, நீள் கடைக்கண் நோக்கம் பரப்பி—நீண்ட கடைக்கண்ணாற்பார்த்தருளி, நும் குறை யாது என்ன—உமக்கு நேர்ந்தகுறைவு என்னையென்று வினவ, முரசகேதனனை ஒப்பாய் கேளென மொழியலுற்றார்—முரசக்கொடியையுடையவனாகிய தருமராசனையொத்ததன்மையோய் கேட்டருள்கவென்று கூறுவாராயினார் எ—று. (ருஙு)

பூசுர குலேச னுநின் புரோகிதன் மைந்த னோந்து
வாசநீள் கனைக ரந்த மதன்சுகு மார னென்பா
னீசனுய்த் தனது சாதி நீதியா நியம நீத்துத்
தூசகல் கரவு வஞ்சஞ் சூதுசெய் தூர்த்த னாகி.

இ—ள்: பூசுர குல ஈசனும் நின் புரோகிதன் மைந்தன்—பிராமண குலோத்தமராகிய உமது ஆசாரியருடைய புத்திரனும், வாசம் நீள் ஐந்து கணை கரந்த மதன் சுகுமாரன் என்பான்—வாசனைபொருந்திய நீண்ட ஐந்து புஷ்பபாணங்களும் மறையப்பெற்ற மன்மதனையொத்தவனுமாகிய சுகுமாரனென்னும்பெயரினையுடையவன், தனது சாதி நீதியாம் நியமம் நீத்து நீசனாய்—தனது சாதிக்குரிய நீதியொழுக்கங்களை விடுத்து இழிகுலத்தவனாய், தூசு அகல் கரவு வஞ்சம் சூது செய் தூர்த்தன் ஆகி—சுத்தமற்ற களவையும் கபடத்தையும் சூதாடலையும் செய்கின்ற தூர்த்தருணத்தனாகி எ—று.(ருச)

சூல்வளை முழங்கி யார்க்குந் தொடுகடல் வளாக வைப்போர்
கோல்வளை யாமற் காக்குங் குரிசினின் னகரந் தன்னிற்
கால்வளை வரிவில் லேய்க்குங் கருங்கொடிப் புருவ மின்னார்
மால்வளை மனத்த ராய்க்கற் பிகந்திட வருத்து கின்றான்.

இ—ள்: சூல் வளை முழங்கி ஆர்க்கும் தொடு சடல் வளாக வைப்பு—கருமுதிர்ச்சியையுடைய சங்குகளானவை முழங்கிச்சத்திக்கின்ற (சகரர்களினாலே) தோண்டப்பட்ட சமுத்திரஞ்சூழ்ந்த பூமியை, ஓர் கோல் வளையாமல் காக்கும் குரிசில்—ஒப்பற்ற செங்கோல்மு[illegible] றசமற பரிபாலனஞ்செய்கின்ற மகாராசனே, நின் நகரம் தன்னில—உமது நகரத்தின்கண்ணே, சால் வளை வரி வில் எய்க்கும் கொடி கரும் புருவ மின்னார்—காலினாலே வளைக்கப்பட்ட வரிக்குகட்டிய வில்லையொத்த கொடிபோன்ற கரிய புருவத்தைக்கொண்ட பெண்கள்யாவரும், மால் வளை மனத்தராய்— மயக்கத்தினாலே கவரப்பட்டமனத்தையுடையராய, கற்பு இகந்திட வருத்துகின்றான்—தமது நிறைபாகியவொழுக்கங்கெடும்படி துன்பஞ்செய்கின்றனன் எ-று.()

இல்லின்மே வியமின் னார்தங் கு[illegible]நண மெவர்க்கு முன்னுஞ்
சொல்லநா ணுறுவர் யாருந் தோற்றுநோய் துடைத்து மாற்ற
வல்லரா மருத்து வர்க்கு மறைப்பவ ருளரோ மன்ன
புல்லரே மானங் காத்துப் புரந்தரு ளெம்மை யென்றார்.

இ—ள்: மன்ன—அரசனே, யாரும்—யாராயினும், இல்லின் மேவிய மின்னார் தம் குண அகுணம் எவர்க்கு முன்னும் சொலல நாண் உறவர்—தமது இல்லத்தில்வாசஞ்செய்கின்ற மனைவியர்களின் குணகுற்றங்களை எவர்முன்னிலையிலாயினும் வெளிப்படுத்திக்கூற வெட்கமடைவர், தோற்றும் நோய் துடைத்து மாற்ற வல்லராம் மருத்துவர்க்கு—தம்மிடத்துண்டாகிய ரோகத்தை முற்றச்சுகப்படுத்தவல்ல வயித்தியர்களுக்கு, மறைப்பவர் உளரோ—(தமது துன்பங்களைக்கூறுது) மறைத்துவைப்பவர்களுண்டோ (அதுபோல எங்கட்குநேர்ந்த இடரைநீக்கவல்ல நுமக்கு உண்மையைக்கூறினோ

ம்), புல்லரோம் மானம் காத்து புரந்தருள் எம்மை என்றார்— தாழ்ந்தநிலையே மாகிய எங்களது மானத்தைக்காப்பாற்றி நம்மையிரட்சித்தருளுகவென்று வேண்டினர் எ—று. (ருசு)

கேட்டபோ திருகை போதாற் கிளர்செவித் துளைகண் மூடிக்
கோட்டமி றனிச் சோ லோச்சுங் கோவிரு கோக்கள் சேப்ப
வாட்டமில் குமுதச் செய்ய வாயிதழ் துடிப்ப விந்த
நாட்டர சளித்த நீதி நன்றுநன் றென்ன நக்கான்.

இ—ள்: கோட்டம் இல் தனிக் கோல் ஓச்சும் கோ— கோணுதலின்றி ஒப்பில்லாத நீதியைச்செலுத்துகின்ற அவ்வரசனானவன், கேட்டபோது—அதனைக்கேட்டமாத்திரத்தில், இரு கை போதால் கிளர் செவி துளைகள் மூடி—மலர்போன்ற இரண்டுகைகளாலும் விளங்குகின்ற செவித்துவாரங்களைப்பொத்திக்கொண்டு, இரு கோக்கள் சேப்ப—இரண்டுகண்களுஞ்சிவப்பேற, வாட்டம் இல் குமுத செய்ய வாய் இதழ் துடிப்ப—வாடுதலற்ற செவ்வாம்பல் மலரைநிகர்த்த சிவந்த வாயினுதடுகள் துடிக்க, இந்த நாடு அரசு அளித்த நீதி நன்று நன்று என்ன நக்கான்— இந்நகரத்தை யான் பரிபாலனஞ்செய்த நீதிமுறை நல்லது நல்லது என்று சிரித்தான் எ—று.

நன்று என்பது குறிப்பாற்பழித்தது. (ருஎ)

சீற்றமீக் கூர நின்ற சேனைகா வலரை நோக்கி
மாற்றரும் படிற னாகி மறைக்குலந் தோன்றி னோனைக்
காற்றென விரைந்து சென்றிக் கணத்தினிற் கொணர்மி னென்னு
வேற்றுரி முரசு நாண விடியென முழங்கிச் சொன்னான்.

இ—ள்: சீற்றம் மீக் கூர— (அவ்வரசன்) கோபமதிகரிக்க, நின்ற சேனை காவலரை நோக்கி—ஆங்குநின்ற சேனாதிபதிகளைப்பார்த்து, மறை குலம் தோன்றி மாற்றரும் படிறன் ஆகினோனை— பிராமணகுலத்திற் பிறந்து (அக்குலத்திற்குரிய நல்லொழுக்கங்களைநீத்து) தடுத்தற்கரிய தூர்த்தவொழுக்கத்தையுடையவனாகிய சுகுமாரனை, காற்று என விரைந்து சென்று—காற்றைப்போல வேகமாய் நீவிர் சென்று, இக்கணத்தினில் கொணர்மின் என்னு—இப்பொழுதே பிடித்துவாருங்களென்று, ஏற்று உரி முரசு நாண இடி என முழங்கி சொன்னான்—இடபத்தோல்கொண்டு சமைக்கப்பட்டமுரசப்பறையும் நாணமடையும்படி இடியேற்றைப்போலப் பெருந்தொனியாகக்கூறினான் எ—று. (ருஅ)

குரைகடல் விடத்திற் றோன்றுங் கூற்றுவன் றூத ரொப்பா
ரரைநொடிப் பொழுதி லோடி யந்நகர் முழுதுந் தேடி
வரையில்புன் றொழில்க ளாற்று மறையவன் றன்னைப் பற்றி
விரைவுடன்கொணர்ந்துகொற்றவேந்தர்கோன்றிருமுன்விட்டார்.

இ—ள்: குன்ற சடல் விடத்தில் தோன்றும் கூற்றுவன் தூதர் ஒப்பார்—ஒலிக்கின்ற பாற்சமுத்திரத்திற்றோன்றிய ஆலகாலநஞ்சைப்போலக் காணப்படும் இயமனது தூதுவர்களைநிகர்த்த சேனைத்தலைவர், அரை நொடி பொழுதில் ஓடி—அரைக்கணத்தினுள்ளே ஓடிச்சென்று, அந்நகர் முழுதும் தேடி—அந்த நகரமெங்குந்தேடிப்பார்த்து, வரை இல் புன் தொழில்கள் ஆற்றும் மறையவன் தன்னை பற்றி—கணக்கற்றவெளிய தொழில்களைச்செய்பவனாகிய அச்சுகுமாரனைப்பிடித்து, விரைவுடன் கொணர்ந்து—வேகமாய்க் கொண்டுவந்து, கொற்ற வேந்தர் கோன் திருமுன் விட்டார்—வெற்றிபொருந்திய பரபுரஞ்சயமகாராசனது திருமுன்னிலையில் விடுத்தனர் எ—று. ()

வெய்யவேல் விடலை தூர்த்த விப்பிரன் றன்னை நோக்கிச்
செய்யநான் மறையோர் நீதி திறம்பிடு மிவனைச் சென்னி
கொய்திட வேண்டு மென்னக் குலமறை யவரைக் கோற
லையநின் மரபு நீதிக் கடாததென் றமைச்சர் கூற.

இ—ள்: வெய்ய வேல் விடலை—உக்கிரமாகிய வேலையுடைய அவ்வரசனானவன், தூர்த்த விப்பிரன் தன்னை நோக்கி—காமுகனாகிய அச்சுகுமாரனைப்பார்த்து, செய்ய நால் மறையோர் நீதி திறம்பிடும் இவனை—செம்மையாகிய சதுர்வேதங்களையுமுணர்ந்த வேதியர்க்குரியவொழுக்கங்களைக்கடந்த இப்பார்ப்பானை, சென்னி கொய்திட வேண்டும் என்ன—சிரசைவெட்டுதலே தக்கதென்று கூற, அமைச்சர்—(அதனைக்கேட்ட) மந்திரிமார், ஐய—மகாராசனே, குல மறையவரைக் கோறல்—மேன்குலத்தராகிய பிராமணரைக்கொல்லுதல், நின் மரபு நீதிக்கு அடாததென்று கூற—உமது க்ஷத்திரியவொழுக்கத்திற்கு இசையாததென்று (தடுத்துச்) சொல்ல எ—று. ()

கோமுகங் குளிர்ந்து கோபக் கொடுங்கன றணிந்து பின்ன
ரேமுகக் கருங்கண் மாதர்க் கிசைந்தகற் பெனுங்கான் காம
மாமுகத் தீயி னுற்சுட் டரும்பழி சுமந்த விந்தக்
காமுகன் றனைநம் மெல்லை கடத்திநீர் விடுத்தி ரென்றான்.

இ—ள்: கோ முகம் குளிர்ந்து—(அம்மந்திரிமார்கூறிய வசனத்தைக் கேட்டு) அரசன் முகமலர்ச்சிகொண்டு, கொடும் கோப கனல் தணிந்து—உக்கிரமாகிய கோபாக்கினியவியப்பெற்று, பின்னர்—அதன்மேல், ஏ முக கரும் கண் மாதர்க்கு இசைந்த கற்பு எனும் கான்— அம்பின்முனையையொத்த கூரிய கரிய கண்களையுடைய பெண்களுக்கு இயல்பாயுள்ள கற்புநெறியாகிய பெருங்காட்டை, காம மாமுக தீயினால் சுட்டு—காமமென்கின்ற வடவாமுகாக்கினியினாலே தகித்து, அரும் பழி சுமந்த இந்த காமுகன் தன்னை—தீர்த்தற்கரிய பழிகளைச்செய்த இந்தத்தூர்த்தனை, நீர் நம் எல்லை கடத்தி விடுத்திர் என்றான்—நீங்கள் நமது தேசவெல்லைக்கப்பால் துரத்திவிடுங்களென்று கட்டளைசெய்தான் எ—று. (௩௧)

அனையரவ் வுரைகேட் டந்த வந்தணன் றன்னைப் பற்றி
வனைகழன் மன்னன் காக்கு மாநிலங் கடத்தி யப்பால்
வினைவலி யுனக்குச் சூழ்ந்த தென்றவர் விடுத்து மீண்டார்
சினைவளர் தருக்கண் மேவுங் கானெறி சேணிற் சென்றான்.

இ—ள்: அனையர் அவ்வுரை கேட்டு— அச்சேனைத்தலைவர் அவ்வார்த்தையைக்கேட்டு, அந்த அந்தணன் தன்னைப் பற்றி— அச்சுகுமாரனைப்பிடித்து, வனை கழல் மன்னன் காக்கும் மா நிலம் கடத்தி— அழகிய வீரக்கழலணிந்த அவ்வரசனாலரசாட்சிசெய்யப்படுகின்ற பெரிய தேசத்தைத்தாண்டி, அப்பால் விடுத்து—அப்புறத்தேவிட்டு, வினை வலி உனக்கு சூழ்ந்தது என்று—நீ முன்செய்த ஊழ்வினைப்பலனே இப்போது உன்னைவந்துசுற்றிக்கொண்டதென்றுகூறி, அவர் மீண்டார்—அவர்கள் மீண்டுவந்தனர், சினைவளர் தருக்கள் மேவும் கான்நெறி சேணில் சென்றான்— அச்சுகுமாரன் கிளைகள் மலிந்த விருக்ஷங்கள்பொருந்திய காட்டுமார்க்கமாய்நெடுந்தூரம் போயினான் எ—று. (கூஉ)

விண்ணுறு வரைக ளென்ன விளங்குதன் றுணைத்தோள் சேர்ந்த
பண்ணுறு மொழியி னாரை நினைதொறும் பரிந்து நீண்ட
கண்ணுறு புனலா றென்னக் கலுழவேள் கணைகள் பாய்ந்த
புண்ணுறு மார்பிற் றென்றல் புகுந்தழல் போல வீச.

இ—ள்: விண் உறு வரைகள் என்ன விளங்கு தன் துணை தோள் சேர்ந்த—ஆகாயத்தையளாவிய மலைகளைப்போலக்கிளர்ந்து விளங்கிய தனதிரண்டு புயங்களையுமணைந்த, பண் உறு மொழியினாரை— பண்ணமைந்த இனியவார்த்தைகளையுடைய மங்கையர்களை, நினை தொறும் பரிந்து— சிந்திக்குந்தோறும் மனம்வருந்தி, நீண்ட கண் உறு புனல் ஆறு என்னக் கலுழ— நெடிய கண்களினின்றுந்தோன்றிய நீரானது ஆறுபோலப்பாய, வேள் கணைகள் பாய்ந்த புண் உறு மார்பில் தென்றல் புகுந்து அழல் போல வீச— மன்மதனது அம்புகள்தைத்துப்புண்பட்ட மார்பினிடத்துத்தென்றற்காற்றானது பாய்ந்து அக்கினியைப்போல அழற்ற எ—று. (கூங)

அடுசினக் கரடி கோடி யாடுநீ டரவ மாளி
படுமதக் கலுழி தூங்கும் பனைக்கைமால் யானை பாயுங்
கொடுவரிப் புலிவாழ் காட்டிற் கூளிபோற் றனித்துத் துன்பத்
தொடுதிரிந் துழல்வான் றன்மு னோடையொன் றுற்ற தன்றே.

இ—ள்: அடு சின கரடி—கொலைத்தொழிலைச்செய்கின்ற கோபம் மிக்க கரடிகளும், கோடி ஆடு நீடு அரவம்— வளைந்தாடுகின்ற நீண்ட சர்ப்பங்களும், ஆளி—சிங்கங்களும், படு மத கலுழி தூங்கும் பனை கை மால் யானை—மதம்பாய்கின்ற சுவட்டையும் தூங்குகின்ற பருத்த துதிக்கையையு

முடைய பெரியயானைகளும், பாயும் கொடு வரி புலி வாழ் கர்ட்டில்—தாவிப்பாய்கின்ற கொடிய பலவரிகளமைந்த புலிகளும் வாசஞ்செய்கின்ற கானகத்தில், கூளி போல் தனித்துத் துன்பத்தொடு திரிந்து உழல்வான் தன்முன்— பேய்போலத்தனித்துக் கவலைகொண்டு திரிந்தலைபவனுகிய சுகுமாரனுக்கு முன்னே, ஓடை ஒன்று உற்றது—ஓர் தடாகம் காணப்பட்டது எ—று.

அன்று ஏ அசைகள். (௬௪)

தத்திவீழ் திரைக ளெற்றத் தவழ்ந்துசூற் சங்க மீன்ற
நித்திலங் கரைகடோறு நிலவுகா னிழனீர்ப் பொய்கை
மெத்திய நீள மாழம் விரிவுறு மகல மெல்லா
மத்தியென் றுரைப்ப தல்லா லாரதன் பெருமை சொல்வார்.

இ—ள்: தத்தி வீழ் திரைகள் எற்ற—குதித்துப்பாய்கின்ற திரைகள் மோத, தவழ்ந்து சூல் சங்கம் ஈன்ற நித்திலம் கரைகள் தோறும் நிலவு கால்—ஊர்ந்துசென்று கருமுதிர்ச்சியையுடைய சங்குகளீன்ற முத்துக்களானவை கரைகளெங்குமொளியைக்கக்குகின்ற, நிழல் நீர் பொய்கை— மரநிழலையும் சலத்தொகுதியையுங்கொண்ட அத்தடாகத்தை, மெத்திய நீளம் ஆழம் விரிவுறும் அகலம் எல்லாம்—மிக்க நீளமும் ஆழமும் பரந்த விசாலமுமாகிய எல்லாவற்றினுலும், அத்தி என்று உரைப்பது அல்லால்—(கண்டோர்)சமுத்திரமென்று கூறுவதன்றி, ஆர் அதன் பெருமை சொல்வார்—எவர் அதின் பெருமையையெடுத்துக்கூறவல்லர் எ—று. (௬௫)

அம்புய முகமென் காவி யம்பக மாம்பல் வாய்வெண்
கம்புகந் தரங்கோக கங்கொங் கைகணைக் கால்வ ரால்கூர்
மம்புகழ் புறந்தாண் ஞெண்டு வருமுழந் தாள்க ளாகப்
பம்புநீர்ப் படுகர் மென்சொற் பாவைய ருருவங் காட்ட.

இ—ள்: பம்பு நீர் படுகர்—ஒலிக்கின்ற சலம்நிறைந்த அத்தடாகமானது, அம்புயம் முகம்—தாமரைமலரை முகமாகவும், மென் காவி அம்பகம்—மிருதுவாகிய கருங்குவளைமலரைக்கண்களாகவும், ஆம்பல் வாய்— செங்குமுதமலரை வாயாகவும், வெண் கம்பு கந்தரம்— வெள்ளிய சங்கைக்கழுத்தாகவும், கோகம் கொங்கை—சக்கரவாகப்பட்சிகளை ஸ்தனங்களாகவும், வரால் கணைக்கால்—கெண்டைமற்சங்களைக் கணைக்கால்களாகவும், கூர்மம் புகழ் புறந்தாள்—ஆமைகளைப்புகழப்படுகின்ற புறங்கால்களாகவும், ஞெண்டு வரு முழந்தாள்கள் ஆக—நண்டுகளைப் பொருந்திய முழந்தாள்களாகவும்கொண்டு, மென் சொல் பாவையர் உருவம் காட்ட— மிருதுவாகிய வசனங்களையுடைய பெண்களினது வடிவத்தைத்தோற்றுவிக்க எ—று. (௬௬)

முரிதிரைச் சிலைகோல் கோட்டி மூசுவண் டெனுநாண் பூட்டி
விரிமலர்க் கமலங் காவி விசிகங்கள் விரைவின் மாட்டிப்

பிரிவெனுந் துயராற் றுவிப் பிரன்றனைப் பெருத்த பூசல்
புரிதர மதனின் றென்னப் பொலிந்ததப் பொய்கை மன்னோ.

இ—ள்: அப்பொய்கை—அத்தடாகமானது, மூரி திரை சிலை கால் கோட்டி—வளைந்த திரைகளாகிய வில்லைக் காலுறவளைத்து, மூசு வண்டு என்னும் நாண் பூட்டி—இரைகின்ற வண்டுகளாகிய நாண்கயிற்றைத்தொடுத்து, விரி மலர் கமலம் காவி விசிகங்கள் விரைவில் மாட்டி—விரிந்த தாமரைமலர் குவளைமலராகிய பாணங்களை வேகமாய்த்தொடுத்து, பிரிவு எனும் துயர் ஆற்றா விப்பிரன் தனை—பிரிதலாகிய துன்பத்தைச்சகிக்கமாட்டாத அச்சுகுமரனோடு, பெருத்த பூசல் புரிதர—பெருஞ்சண்டையைச்செய்தலினால், மதன் நின்று என்னப் பொலிந்தது—மன்மதன் உருவங்கொண்டுவெளிநின்றாற்போலத்தோற்றியது எ—று.

மன் ஓ அசைகள். (கூஎ)

மூண்டவெம் பசியாற் செய்ய முளரியார் முளரி யெங்கு
மாண்டமீ னிரைதேர் வன்மீன் வாய்ப்படா துகண்டு தப்பித்
தூண்டகு வாளை தாவுந் துழனிகேட் டெழுந்து துள்ளி
நீண்டபைங் கயலை நேடித் துரந்துபோய்ப் பாயு நீர்நாய்.

இ—ள்: மூண்ட வெம் பசியால்—கொதித்தெழுந்த கொடிய பசியினாலே, செய்ய முளரி ஆர் முளரி எங்கும்—செந்தாமரைநிறைந்த (அத்தடாகமாகிய) காடுமுழுவதிலும், மாண்ட மீன் இரை தேர் வன் மீன் வாய்ப்படாது உகண்டு தப்பி தூண் தகு வாளை—பெரிய மீன்களை இரையாகத்தேடித் திரிகின்ற முதலையினது வாய்க்கு அகப்படாமல் துள்ளிப்பிழைத்துத் தூண்களையொத்த வாளைமற்சங்கள், தாவும் துழனி கேட்டு—பாய்கின்ற ஆரவாரத்தைக்கேட்டு, நீர் நாய்—நீர்நாயானது, துள்ளி எழுந்து— துள்ளிப்பாய்ந்து, நீண்ட பைங்கயலை நேடி துரந்து போய் பாயும்—நீளமாகிய பசிய கயல்மற்சங்களைத்தேடிப்பின்தொடர்ந்து பாய்ந்துசெல்லும் எ—று. (கூஅ)

முத்தியி லவபபொய் வேட முயன்றுகண் முகிழ்த்தி யோகம்
புத்தியி னிருந்து தீமை புரிபவ ரென்னத் தூங்கித்
துத்தியா டரவி னெட்டைக் கழுத்தினைச் சுருக்கி மீனைக்
குத்திநுங் கிடக்கண் மூடி யிருப்பன குரண்டங் கோடி.

இ—ள்: முத்தி இல் அவப் பொய் வேடம் முயன்று—மோட்சசாதனமல்லாத வீணாகிய பொய்வேடங்களைப்பூண்டு, கண் முகிழ்த்து—கண்ணை மூடிக்கொண்டு, யோகம் புத்தியில் இருந்து தீமை புரிபவர் என்ன—யோகநிலையில் விவேகத்தோடிருந்து தீமைகளையெல்லாம் மறைவாய்ச்செய்பவர்கள்போல, கோடி குரண்டம்—கோடிக்கணக்கான கொக்குகள், தூங்கி—தூக்கத்தோடிருந்து, துத்தி ஆடு அரவின் நெட்டைக் கழுத்தினைச் சுருக்கி—படம்விரித்தாடுகின்ற சர்ப்பத்தைப்போல நெடிய கழுத்தைச்சுருக்கிக்கொண்

டு, மீனைக்குத்தி நுங்கிட—மீன்களைக்கொத்தி விழுங்கும்படி, கண்மூடியிருப்பன—கண்களைமூடிக்கொண்டிருப்பன எ—று. (சுக)

ஈட்டுவல் வினையின் கொட்பா லெடுத்திடு மியாக்கை மாண்டு
மீட்டும்வந் துலகிற் றோன்றும் விகற்பமித் தன்மை யென்னக்
கோட்டுவெண் டிரைகண் மோதுங் குரைகடற் புவியுள் ளோர்க்குக்
காட்டுவ தென்ன நீரிற் குளித்தெழு கரண்டங் கொள்ளை.

இ—ள் ஈட்டு வல் வினையின் கொட்பால் எடுத்திடும் யாக்கை—(ஆன்மாக்கள் முன்னரே) செய்துகொண்ட கொடிய வினைப்பகுதியின் காரணத்தால் எடுத்த சரீரமானது, மாண்டு மீட்டும் வந்து உலகில் தோன்றும் விகற்பம் இத்தன்மை என்ன—அழிந்து பின்னரும்உலகத்தில் வந்து பிறக்கின்ற பேதம் இத்தன்மையையுடையதென்று, கோட்டு வெண் திரைகள் மோதும் குரைகடல் புவி உள்ளோர்க்கு காட்டுவது என்ன—கரையிலே வெள்ளிய திரைகள்வந்துவீசுகின்ற ஆர்ப்பரிப்பையுடைய கடலாற்சூழப்பட்ட பூமியிலுள்ள மனுடர்களுக்கு விளங்கக்காண்பிப்பதுபோல, கொள்ளை கரண்டம் நீரில் குளித்து எழும்—தொகையாகிய நீர்க்காகங்களானவை அச்சலத்தினுள்ளமிழ்ந்தி பின்னர்மேலெழும்பும எ—று. (எO)

தூயவெண் ணிறக்கூன் சங்கஞ் சூலுளைந் தேறி முட்டாண்
மேயசெங் கமலப் போதின் மீதிருந் தொளிருந் தோற்ற
மாயர்கண் படைகண் டன்னோ ரகத்துறி சரிந்து மாயன்
சேயகைத் தலத்தில் வாரித் திரட்டிய வெண்ணெய் போலும்

இ—ள் தூய வெள் நிற கூன் சங்கம் சூல் உளைந்து முள்தாள் மேய செம் கமல போதில் மீது எறி இருந்து ஒளிரும் தோற்றம்— சுத்தமாகிய வெள்ளிய நிறத்தையுடைய வளைந்த சங்குகளானவை கற்றுளைந்து முளளமைந்த நாளங்களைக்கொண்ட செந்தாமரைமலரின்மேல் ஏறியிருந்து விளங்குகின்ற காட்சியானது, மாயன்—கிருஷ்ணமூர்த்தியானவர், ஆயர் கண படை கண்டு—இடையர்களினது நித்திரைக்காலம்பார்த்து, அன்னோர் அகத்து உறி சரித்து—அவர்களது இல்லத்தினகஙுள்ள உறிகளைச்சாய்த்து, சேய கை தலத்தில் வாரி திரட்டிய வெண்ணெய் போலும்— தமது செந்நிறமாகிய திருக்கரத்தின்கண்ணே அள்ளித்திரட்டிய வெண்ணெயையொக்கும் எ—று. (எக)

கல்லுநீர்க் கயத்து மீனைக் கதுவிவீழ்ந் ததுபெ றுமமற்
சில்லுகிர்ச் சிரலை வெள்கிச் சிறைவிரித் திருப்ப தோர்பாற்
சொல்லுநற் றிகிரிப் புள்ளுந் துணைச்சிறை புலர்த்திக் கோதிப்
புல்லுயிர்ப் பேடை யோடு புளினமே னடப்ப தோர்பால்.

இ—ள்: ஓர்பால்—ஓர்பக்கத்தில், சில் உகிர் சிரலை—சிறிய நகங்களையுடைய சிரலைப்பட்சியானது, கல்லு நீர் கயத்து மீனை கதுவ வீழ்ந்து—தோண்டப்பட்ட நீர்நிறைந்த அத்தடாகத்தின்கணுள்ள மற்சத்தைக்கவ்வும்படி பாய்ந்து, அது பெறுமல் வெள்கி சிறை விரித்து இருப்பது— அவைகளைப் படாமையால் நாணமடைந்து சிறகுகளைவிரித்துக்கொண்டிருக்கும், ஓர்பால்—ஒருபக்கத்தில், சொல்லு நல் திகிரிப்புள்ளு—கூறப்படுகின்ற நல்லசக்கரவாகப்பட்சியானது, துணை சிறை கோதி புலர்த்தி—தனது இரண்டுசிறகுகளையுங்கோதிக்காய்ச்சி, புல் உயிர் பேடையோடு புளினமேல் நடப்பது— தன்னுற்றழுவப்படும் உயிரன்ன பெடைப்புள்ளுடன் மணற்குன்றின்மேல் நடக்கும் எ—று. (எ௨)

மண்டணி லுயர்ந்த பெண்ணைக் கிழங்கினை வகிர்ந்தா லன்ன
நுண்டவண் டானஞ் சூழ்ந்த தொழுதிக ளொருபா லொருபால்
கொண்டரு ந் தாக நீங்கக் குதிக்குமா வினங்க ளோர்பா
லொண்டழை சிறைப்பா லன்னங் கின்னர மிதுன மோர்பால்.

இ—ள்: ஒருபால்—ஒருபக்கத்தில், மண் தனில் உயர்ந்த பெண்ணை கிழங்கினை வகிர்ந்தால் அன்ன துண்ட வண்டானம் சூழ்ந்த தொழுதிகள்—பூமியிலுயர்ந்து வளர்ந்த பனையின்கிழங்கை இரண்டாய்ப்பிளந்தாற்போன்ற அலகுகளையுடைய கொய்யடிநாரைகள் சூழ்மிய கூட்டங்கள் உள்ளன, ஓர்பால—ஒருபக்கத்தில், நீர் உட்கொண்டு அரும் தாகம் நீங்கி குதிக்கும் மா இனங்கள்—சலத்தைப்பருகித் தமது கொடிய தாகம் நீங்கப்பெற்றுத் துள்ளுகின்ற விலங்குக்கூட்டங்கள் உள்ளன, ஓர்பால்—ஒருபக்கத்தில், ஒள் தழை சிறைபால் அன்னம் கின்னர மிதுனம்—ஒளிபொருந்திய மிருதுவாகிய சிறகுகளையுடய வெள்ளிய அன்னங்களும் கின்னரமிதுனமாகிய பட்சிகளும் உள்ளன எ—று. (எ௩)

இன்னதன் மையநீர் வாவி யிருங்கரை தன்னி லெய்தித்
தன்னமர் பேடை தன்னைத் தழீஇச்சிறைக் கரத்துள் ளாக்கி
யன்ன மாதரவிற் புல்லு மதுதெரிந் தணங்க னார்மேற்
பன்னரு மாசை கூர விருந்தனன் பரிவுற் றிப்பால்.

இ—ள். இன்ன தன்மைய நீர் வாவி இரும் கரை தன்னில் எய்தி—(அச்சுகுமாரனனவன்) இத்தன்மையாகிய நீர்நிறைந்த அப்பொய்கையினது பெரிய கரையையடைந்து, அன்னம் தன் அமர் பேடை தன்னை தழீஇச் சிறை கரத்துள் ஆக்கி ஆதரவில் புல்லும் அது தெரிந்து— அன்னப்பட்சியானது தனக்குரிய பெடைப்பட்சியைத்தழுவிச்சிறகுகளாகிய கைகளினுலணைத்து அன்போடு புணருவதைக்கண்டு, அணங்கு அன்னார் மேல் பன்னரும் ஆசை கூர பரிவு உற்று இருந்தனன்—தேவமாதரையொத்த பெண்களிடத்துச் சொல்லொணுப்பேரிச்சைபிறக்க மனக்கவலைகொண்டு இருந்தான், இப்பால்—இதன்மேல் எ—று. (எச)

வேறு

பஞ்சணி பதப்பரி புரத்தொலி பரப்பி
நஞ்சன விழிக்கடை குழைக்கய னடப்பக்
குஞ்சர மருப்பினிரு கொங்கைகள் குலுங்க
வஞ்சியென வோர்புலை மடந்தையவ ணுற்றாள்.

இ—ள்: பஞ்சு அணி பத பரிபுரத்து ஒலி பரப்பி—செம்பஞ்சூட்டப்பட்ட பாதங்களின்கண்ணேயணிந்த சிலம்புகளினுலொலியையுண்டாக்கி, நஞ்சு அன்ன கடை விழி குழைக்கு அயல் நடப்ப—நஞ்சையொத்த கொடிய கடைக்கண்கள் காதளவுஞ்செல்லவும், குஞ்சர மருப்பின் இரு கொங்கைகள் குலுங்க—யானைத்தந்தத்தையொத்த இரண்டு பயோதரங்களும் அசையவும், வஞ்சி என ஓர் புலை மடந்தை அவண் உற்றாள்— கொடியைப்போல ஓர் புலைமாது அவ்விடத்துவந்தனள் எ—று. (எ௫)

மன்றல்கமழ் மாலையணி வார்குழ றனக்கு
மின்றமிழ் மொழிக்குமை விழிக்குமெய் யொளிக்கு
மென்றளி ரடிக்குநிகர் வேறுலகி லொப்புண்
டென்றவ டனக்குவமை யாவர்புகல் கிற்பார்.

இ—ள்: மன்றல் கமழ் மாலை அணி வார் குழல் தனக்கும்—நறுமணம் பரிமளிக்கின்ற புஷ்பமாலையையணிந்த நீண்ட அளகபாரத்துக்கும், இன் தமிழ் மொழிக்கும்—(வசனிக்கப்படுகின்ற) இனிய தமிழ்வார்த்தைக்கும், மை விழிக்கும்—அஞ்சனந்தீட்டிய கண்களுக்கும், மெய் ஒளிக்கும்— தேககாந்திக்கும், மென் தளிர் அடிக்கும்—மிருதுவாகிய மாந்தளிரன்ன பாதங்களுக்கும், உலகில் வேறு நிகர் ஒப்பு உண்டு என்று—உலகத்தின்கண்ணே வேறுசமமாகிய உவமானப்பொருளுண்டென்று, அவள் தனக்கு உவமை யாவர் புகல்கிற்பார்—அப்புலைமகளுக்கு உவமானமெடுத்து யார் கூறவல்லுநர் எ—று.

ஏர்மருவு நூனிக ரிடைக்கொடி நுடங்கத்
தார்மருவு வார்குழல் சரிந்திட விரிந்தே
யார்பத மிரங்கவரு மன்னநடை மின்னை
மாரநிக ரானசுகு மாரனெதிர் கண்டான்.

இ—ள்: ஏர் மருவு நூல் நிகர் இடை கொடி நுடங்க—அழகுதங்கிய நூலையொத்த நுண்ணிய இடையாகிய கொடிதுவளவும், தார் மருவு வார் குழல் சரிந்திட—மாலையையணிந்துவிளங்குகின்ற நீண்ட கூந்தல்சோரவும், விரிந்து ஆர் பதம் இரங்க—பரந்து வண்டுகள்சத்திக்கவும், வரும் அன்ன நடை மின்னை—வந்த அன்னம்போன்ற நடையையுடைய புலைமாதை, மாரன் நிகர் ஆன சுகுமாரன் எதிர் கண்டான்— மன்மதனையொத்த சுகுமாரனனவன் எதிரிலே கண்டான் எ—று.

ஏ-அசை. (எஎ)

பொன்னுலகில் வாழுமட மாதுகொல பொறிப்பைப்
பன்னக நகர்க்கணுறை பாவைகொல் பசுங்கார்
மின்னவிர் சிலம்பினுறை மெல்லியல்கொ லென்று
வின்னன நினைந்துபி னெழுந்தருகி லெய்தி.

இ—ள்: பொன் உலகில் வாழும் மட மாது கொல்— சுவர்க்கலோகத்தில் வசிக்கின்ற மடமைதங்கிய தெய்வப்பெண்ணோ, (அன்றேல்) பொறி பை பன்னக நகர்க்கண் உறை பாவை கொல்—புள்ளிபொருந்திய படத்தையுடைய சர்ப்பர்கள்வாசஞ்செய்கின்ற நாகலோகத்துமாதோ, (அன்றேல்) பசும் கார் மின் அவிர் சிலம்பில் உறை மெல்லியல் கொல் என்று—பசிய மேகங்களும் மின்னலும் விளங்குகின்ற குன்றுகளில் வாசஞ்செய்யும் மிருதுவாகிய இயல்பையுடைய வரையரமகளோவென்று, இன்னன நினைந்து—இவ்வாறுகிய பலவற்றையுஞ்சிந்தித்து, பின் எழுந்து அருகில் எய்தி—பின்பு எழுந்து அப்புலைமாதின் பக்கத்தேயணுகி எ—று. (எஅ)

சேயவரி வாள்விழி யிமைத்திடு திறத்தாற்
றேயநில மீதடி மிதித்திடு சுவட்டா
லாயபுவி மீதுவள ரன்னமிவ ளென்னத்
தீபகுண வேதியன் மனத்திடை தெளிந்தான்.

இ—ள். சேய வரி வாள் விழி இமைத்திடு திறத்தால்—செவ்வரிபரந்த வாள்போன்ற கூரிய கண்களிமைக்குந்தன்மையாலும், நிலமீது அடி தோய மிதித்திடு சுவட்டால்—பூமியின்மேல் பாதங்கள்படிய மிதிக்குஞ்சுவடுடைமையாலும், ஆய புவி மீது வளர் அன்னம் இவள் என்ன—பொருந்திய பூமியின்மேல் வாசஞ்செய்கின்ற மானிடப்பெண்ணேயிவளென்று, தீய குண வேதியன் மனத்திடை தெளிந்தான்—கொடிய குணத்தையுடையவனுகிய சுகுமாரன் மனத்திலே நிச்சயித்தான் எ—று. (எகூ)

மங்குனிற முற்றிடு மடப்பிடியை நாடும்
வெங்கய மெனத்தனி விரைந்துமு னடந்தே
யிங்கெனெதி ருற்றிடுவன் யாவனிவ னென்னுத்
திங்கணிகர் வாணுதறி தைத்தன டரித்தே.

இ—ள்: மங்குல் நிறம் உற்றிடும் மடப்பிடியை நாடும் வெம் கயம் என—மேகத்தைப்போன்ற கரியநிறத்தையுடைய இளமைபொருந்திய பெண் யானையைத்தேடிச்செல்லுகின்ற கொடிய ஆண்யானையைப்போல, தனி விரைந்து முன் நடந்து—தனித்தவனுய் வேகத்தோடு முன்னேநடந்து, இங்கு என் எதிர் உற்றிடுவன்—இவ்விடத்து என்முன்னேவருகின்றான், இவன் யாவன் என்று—இவன் யாரென்று, திங்கள் நிகர் வாள் நுதல் தரித்து தி

சைத்ரனள்—சந்திரனையொத்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய அப்பு லமகள் நின்று திகைப்படைந்தாள் எ—று.

எ அசை. (அO)

ஏமமணி மால்வரை யெனக்குலவு கொங்கை
வேமசனி காலுமுகின் மீதெழு தடித்தின்
வாமமிகு நேரிடை மடந்தையரை வெல்லுங்
காமனிவ னும்மென மனத்திடை கணித்தாள்.

இ—ள்: ஏம மணி மால் வரை எனக் குலவு கொங்கை—பொன்போன்ற அழகிய பெரிய மலைகளையொத்து விளங்குகின்ற ஸ்தனங்களையும், வேம் அசனி காலும் முகில் மீது எழு தடித்தின் வாமம் மிகு நேரிடை மடந்தையரை—எரிகின்ற இடியேற்றைக்கக்கும் முகில்களினின்றுந்தோன்றுகின்ற மின்னையொத்த அழகுமிக்க இடையையுமுடையபெண்களை, வெல்லும் காமன் இவனும் என மனத்திடை கணித்தாள்—வெற்றிகொள்ளுகின்ற மன்மதனேயிவனென்று மனதின்கண் மதித்தனள் எ—று. (அக)

உட்புலமை யற்றுமய லுற்றசுகு மாரன்
மட்குட மெனத்திகழ் வரைப்புய மிலக்காய்க்
கொட்புற நெரித்தபுரு வச்சிலை குனித்தே
கட்கணை தொடுக்கவிர கக்கடல் குளித்தான்.

இ—ள்: உள் புலமை அற்று மயல் உற்ற சுகுமாரன்—உள்ளறிவழிந்து மயக்கங்கொண்ட சுகுமாரனது, மண் குடம் என திகழ் வரை புயம் இலக்காய்-மண்ணாலாகிய குடத்தையொத்துவிளங்குகின்ற மலைபோன்ற புயங்களை இலக்காகக்கொண்டு, கொட்பு உற நெரித்த புருவச்சிலை குனித்து—நெளியும்படி நெரித்த புருவங்களாகிய விற்களைவளைத்து, கண் கணை தொடுக்க—கண்களென்னும் பாணங்களைச்செலுத்துதலும், விரகக் கடல் குளித்தான்—அவன் காமமாகிய சமுத்திரத்துள் அழுந்தினான் எ—று. (அஉ)

முளைத்தெரி கனற்கணெய் முகந்துகுவ தென்ன
விளைத்தமரில் வென்றிபுனை வேள்கழையி னீள்வில்
வளைத்துமண மேவுமலர் வாளிக ணெரிந்தான்
துளைத்தவ னுரத்தினிடை தூவலள வாழ.

இ—ள்: முளைத்து எரி கனல் கண் நெய் முகந்து உகுவது என்ன—சுவாலித்தெரிகின்ற அக்கினியில் நெய்யையள்ளிச்சொரிந்தாற்போல, விளைத்த அமரில் வென்றி புனை வேள்—செய்யப்படுகின்ற யுத்தத்தில் வெற்றியைப்பெறுகின்றவனாகிய மன்மதன், கழையின் நீள் வில் வளைத்து— கரும்பாகிய நீண்ட வில்லைவளைத்து, அவன் உரத்தினிடை துளைத்து தூவல் அளவு ஆழ—அவனது மார்பைத்துளைத்து அம்பினிறகுவரையும் புதையும்படி,

மணமேவு மலர் வாளிகள் துரந்தான்—வாசனைகமழுகின்ற புஷ்பபாணங்களைச்செலுத்தினான் எ—று. (அரு)

மெய்வச மழிந்தழன் மீதின்மெழு காகிப்
பொய்வசன மன்றிது புலங்கொளுதி பொன்னே
உய்வதரி தாமுயி ருலந்துபடு முன்னுன்
கைவச மெனுவிவை கரைந்தன னிரங்கி.

இ—ள்: மெய் வசம் அழிந்து அழல் மீதில் மெழுகு ஆகி—உடல் தன்வசங்கெட்டு (மனமும்) அக்கினியிற்பட்ட மெழுகுபோலுருகி, பொன்னே பொய்வசனம் அன்று இது புலம் கொளுதி—பொன்னையொத்தவளே அசத்தியவார்த்தையன்று இதனைச்சிந்திக்கக்கடவை, உய்வது அரிதாம்—யான் உய்ந்துபிழைப்பது மிகவுமரிதாகும், உலந்து படுமுன் உயிர் உன் கைவசம் எனு—இறந்துபடுதற்குமுன்னமே ஆன்மா உன்கைவசமாகக்கடவதென்று, இரங்கி இவை கரைந்தனன்—மனமிரங்கிப் பின்வருவனவற்றைக்கூறுகின்றான் எ—று. (அச)

இக்குவளை வார்விலி னிருத்திமத னேவு
மக்குவளை வாளிவரு மென்றுமன மஞ்சேன்
மிக்குவளை மீதுலவி மீளுநின் முகத்தின்
மைக்குவளை தானருள் வழங்கலுறின் மாதோ.

இ—ள். மிக்கு வள்ளை மீது உலவி மீளும்—அதிகரித்து வள்ளைக்கொடியையொத்த காதளவுஞ்சென்று மீளுகின்ற, நின் முகத்தின் மை குவளை தான் அருள் வழங்கல் உறின்—உனது முகத்திற்பொருந்திய கருங்குவளைமலர்போன்ற கண்களானவை எனக்குக்கிருபைசெய்யுமாயின், மதன் வளை வார் இக்கு வில்லின் இருத்தி ஏவும் அக்குவளை வாளி வரும் என்று—மன்மதனானவன் வளைந்த நீண்ட கருப்புவில்லிற்றொடுத்துச்செலுத்துகின்ற அந்தக்குவளைமலர்ப்பாணம் வருமென்று, மனம் அஞ்சேன்—மனத்திற்பயங்கரமடையேன் எ—று.

மாது ஓ அசைகள். வள்ளை வளையெனத்தொக்கது. (அரு)

நீரமுறு வேலைவரு செய்யதுவர் வாயி
னாரமுறு வாணில வரும்பிடி னணுத்தான்
கோரமுறு மாரழ லெனக்குட னிசைக்க
ணீரமுறு வாணிலவ தென்செயு மொழிந்தே.

இ—ள்: நீரம் உறு வேலை வரு செய்ய துவர் வாயின்—கரைகளமைந்த சமுத்திரத்திற்றோன்றுகின்ற சிவந்த பவளம்போன்ற வாயின்கணுள்ள, ஆரம் உறு வாள் நிலவு அணுத்தான் அரும்பிடில்—(பற்களாகிய) முத்துக்களினின்றுதோன்றுகின்ற ஒளிதங்கிய நிலவு அணுவளவேனும் வெளிப்படுமா

யின், கோரம் உறம் ஆர் அழலெனா—பயங்கரம்பொருந்திய நிறைந்த அக்கி னியைப்போல, குடதிசைக்கண் ஈரம் உறு வாள் நிலவு எழுந்து என்செயு ம்—மேற்றிசையின்கண் குளிர்ச்சிபொருந்திய ஒள்ளிய சந்திரன்தோன்றி எ ன்னை என்னசெய்வான் ஏ—று.

ஏ அசை. (அசு)

கூடவிணை யாகவளர் கும்பமுலை யென்னு
மாடன்மத மால்களிறெ னங்கைவச மானு
னீடனுவ ணக்கியமர் நித்தமு மியற்றும்
வேடனுயர் வேழமதை வேறன்மிகை யன்றே.

இ—ள்: கூட இணை ஆக வளர் கும்ப முலை என்னும் ஆடல் மத மா ல் களிறு என் அம் கை வசம் ஆனால்—ஒருங்கேயொத்துவளருகின்ற பூரண கும்பங்களையொத்த ஸ்தனங்களாகிய வலிய மதம்பொருந்திய பெரிய யானை கள் எனதுஅழகிய கைவசப்படுமாயின், நீள் தனு வணக்கி நித்தமும் அமர் இ யற்றும் வேள் தன் உயர் வேழமதை வேறல் மிகை அன்று— நீண்ட வில்லை வளைத்துத் தினந்தோறும் போர்புரிகின்ற மன்மதனது உயர்ந்த (அந்திக்காலமாகிய) யானையைவெல்லுதல் அரிதன்று ஏ—று.

ஏ அசை. (அஎ)

தூயகுமு தத்தினொடு தொண்டைதுவ ரொக்கும்
வாயினித முற்றகுடி நீரது வழங்கிற்
காயமுட னத்திகள் கனற்றிவரு பித்த
மேயவிர கப்பெரிய வெப்பவியு மெற்கே.

இ—ள்: தூய குமுதத்தினொடு தொண்டை துவர் ஒக்கும் வாயின் இதழ உற்ற குடிநீர் அது வழங்கில்— சுத்தமாகிய செவ்வாம்பன்மலரையும் கொவ்வைக்கனியையும் பவளத்தையும் நிகர்த்த வாயிற்பொருந்திய அதரத்தி னின்றுமூறுகின்ற பானத்தைக்கொடுப்பையாயின், காயம் உடன் அத்திகள் கனற்றி வரு பித்தம் ஏய விரக பெரிய வெப்பு எற்கு அவியும்— சரீரத்தையு மதனெலும்புகளையும் அனற்படுத்தியெழுகின்ற பித்தசம்பந்தமாகிய காமமெ ன்னும்பெரியசுரமானது எனக்குத்தணியும் ஏ—று.

ப அசை. (அஅ)

என்றலை மருட்டுகுழ லுக்கினைய கூறித்
துன்றலை கடற்படு துரும்பினிலை யற்றோன்
மன்றலை மிகக்கமழ் மலர்க்கர மெடுத்துத்
தன்றலை குவித்திரு சரண்டொழுது நின்றான்.

இ—ள்: அல்லை மருட்டு குழலுக்கு என்று இனைய கூறி— இருளை யும் (கருமையினால்)வென்ற கூந்தலையுடைய அப்புலைமகளுக்கு என்று இவை

போல்வனவற்றைச்சொல்லி, துன்று அலை கடல் படு துரும்பின் நிலை அற்றோன் — நெருங்கி அலைகின்ற கடலிற்பொருந்திய துரும்பைப்போல நிலையற்ற சுகுமாரன், மன்றலை மிகு சமழ் மலர் கரம் எடுத்து — வாசனையை அதிகமாக வீசுகின்ற மலர்போன்ற கைகளையுயர்த்தி, தன் தலை குவித்து இரு சரண் தொழுது நின்றான் — தனது சிரமேற்குவித்து அவளதிரண்டுபாதங்களையும் வணங்கிநின்றான் எ—று. (அகூ)

மம்மருறு வேள்கணை வருத்தமய லென்னு
மம்மகர வாரிதி யடக்கலரி தாகி
விம்மமன மீந்து வெளிப்படை செய்வாளாய்ப்
பொம்மன்முலை யாள்சிறிது புன்னகை புரிந்தாள்.

இ—ள். மம்மர் உறு வேள் கணை வருத்த — மயக்கமடையும்படி மன்மதனுடைய பாணங்கள் வருத்துதலினால், மயல் என்னும் அம் மகர வாரிதி அடக்கல் அரிது ஆகி — காமமயக்கமெனகின்ற அந்தசமுத்திரப்பெருக்கைத் தடுக்கவியலாது, மனம் மீந்து விம்ம — மனத்திற்பொங்க, அது வெளிப்படை செய்வாள் ஆய் — அதனை வெளியிலேபுலப்படுத்தக்கருதினவளாய், பொம்மல் முலையாள் சிறிது புன்னகை புரிந்தாள் — பூரித்த ஸ்தனங்களையுடைய அப்புலைமாது சிறிதுபுன்முறுவல்செய்தாள் எ—று.

மகரவாரிதி என்பது சாதியடை. (கூo)

செம்பவள வாயிதழ் திறந்தெயி றிலங்கக்
கும்பமுலை யாண்முறுவல் கொண்டகுறி கண்டே
வெம்புதழ லொத்தவிர கத்தினின் மிகுத்தோ
னம்புய மலர்க்கையவ ளங்கைமலர் பற்றி.

இ—ள். செம்பவள வாய் இதழ் திறந்து எயிறு இலங்க — சிவந்த பவளம்போன்ற வாயினுதடுகளைத் திறந்து பற்கள்தோன்றும்படி, கும்பமுலையாள் முறுவல் கொண்ட குறி கண்டு — குடம்போன்ற ஸ்தனங்களையுடைய அப்புலைமாது புன்னகைசெய்தகுறிப்பைக்கண்டு, வெம்பு தழல் ஒத்த விரகத்தினின் மிகுத்தோன் — வெப்பமாகிய அக்கினியையொத்த காமவிரகமதிகரிக்கப்பெற்ற சுகுமாரன், அம்புய மலர் கை அவள் மலர் அம் கை பற்றி — தாமரைமலர்போன்ற தனது கையினால் அவளது மலர்போன்ற அழகிய கையைப்பிடித்து எ—று. (கூக)

ஏகமன மாகியிரு வோருமெவ ராலும்
போகவரி தாகுமொர் பொதும்பரிடை புக்கு
மேகநிற மானபிடி யுங்கரடி மேவு
நாகமு மெனக்கலவி நன்னல நுகர்ந்தே.

இ—ள்: இருவோரும் ஏக மனமாகி—அவ்விருவரும் ஒத்தசிந்தையுடையவர்களாய், எவராலும் போக அரிது ஆகும ஓர் பொதும்பரிடை புக்கு—யாருமுட்புகுந்துச்செல்லவியலாத ஒரு சோலையினுட்போய், மேகம் நிறமாண பிடியும் மடம் மேவும் நாகமும் என—மேகம்போன்ற கரியநிறத்தையுடைய பெண்யானையும் மதம்பாய்சுவட்டையுடைய ஆண்யானையும்போல, கலவி நல் நலம் துய்த்து—புணர்ச்சியாகிய நல்ல இன்பத்தையனுபவித்து எ—று.

வி அவை. (கூஉ.)

வேறு.

இன்றளவு மன்றுடல மெத்துணைநா ளினியிருக்கு
மன்றளவும் பிரியாம லிருப்போமென் றலராத
மென்றளவ முகைநகையும் வேதியனு மிசைந்துதம்மிற்
புன்றசைகண் முடைகமழும் புலைப்பாடி தனிற்புகுந்தார்.

இ—ள்: இன்று அளவும் அன்று—இத்தினம்மாத்திரமன்று, உடலம் எத்துணை நாள் இனி இருக்கும் அன்று அளவும்—எமதுஉடம்பு இன்னும் எவ்வளவுகாலமிருக்குமோ அவ்வளவுகாலம்வரையும், பிரியாமல் இருப்போம் என்று--நாமிருவரும் ஒருவரைவிட்டொருவர் நீங்காமலிருக்கக்கடவோமென்று, அலராத மென் தளவ முகை நகையும் வேதியனும் தம்மில் இசைந்து—முகைவிரியாத மிருதுவாகிய முல்லையரும்பையொத்த பற்களையுடைய புலைமகளும் சுகுமாரனும் தம்முள் மனமொத்து, புன் தசை கள் முடை கமழும் புலைப்பாடிதனில் புகுந்தார்—எளிய மாமிசமும் கள்ளும் முடைநாற்றம்வீசுகின்ற புலைச்சேரியையடைந்தனர் எ—று. (கூ௩)

தரைபயிலான் பசும்பச்சை தனைக்கவ்வி யிசித்துகளுங்
குரைமுகநாய்ச் சிறுபறழின் குறுங்கழுத்தி னெடுங்கயிற்றுற்
சுரைபடர்நீள் புற்குரம்பை துன்றுகரும் புதல்வர்பிணித்
தரையினிசைத் திடுசதங்கை கறங்கிடவீர்த் தாட்டயர்வார்.

இ—ள்: தரை பயில் ஆன் பசும் பச்சைதனை கவ்வி—பூமியின்கண்ணே வாசஞ்செய்கின்ற பசுவினது பசியதோலைக் கௌவிக்கொண்டு, இசித்து உகளும் குரை முக நாய் சிறு பறழின் குறும் கழுத்தில்— இழுத்துக்கொண்டு துள்ளுகின்ற குரைக்கும்வாயையுடைய சிறிய நாய்க்குட்டியின்குறுத்தகழுத்தில், சுரை படர் நீள் புல் குரம்பை துன்று கரும் புதல்வர்— சுரைக்கொடிபடர்ந்த நீண்ட புல்வினால்வேயப்பட்ட சிறுகுடில்களில் நெருங்கிய கரியநிறத்தையுடைய புத்திரர்கள், நெடும் கயிற்றால் பிணித்து—நெடியகயிற்றினாற்கட்டி, அரையில் இசைத்திடும் சதங்கை கறங்கிட—தம்மரையின்கண்ணே தொடுக்கப்பட்ட சதங்கைமணிகள் சத்திக்கும்படி, ஈர்த்து ஆட்டு அயர்வார்—இழுத்து விளையாடுவோர்கள் எ—று. (கூச)

அணைதிரைநன் மணிவரன்றி யார்த்திடுமார் கலியமிழ்திற்
கிணைபுன்மென் மொழிபயிலா விளங்குழவி பசிக்கிரங்கித்
துணைமுலைப்பா லருத்தித்தோற் பாயறனிற் றுயிற்றிப்
பிணைவிழிப்புன் புலைமகளிர் காலாட்டு மிசைபெருகும்.

இ—ள். பிணைவிழிப்புன் புலைமகளிர்—மான்போன்ற கண்களையுடைய இழிந்த பறைப்பெண்கள், அணை திரை நல் மணி வரன்றி ஆர்த்திடும் ஆர்கலி அமிழ்தற்கு இணை புன்மென் மொழி—கரையிலே திரைகளானவை நல்ல இரத்தினங்களைவாரிக்கொண்டு ஆரவாரிக்கின்ற சமுத்திரத்திற்றோன்றிய அமுதத்திற்கொப்பாகிய மெல்லிய சொல்லாகிய, மென்மொழி பயிலா இளங்குழவி பசிக்கு இரங்கி—குதலைவார்த்தைகளேயல்லாது பேசாத சிறுகுழந்தைகளது பசிக்காகவுருகி, துணை முலைப்பால் அருத்தி—இரண்டு ஸ்தனங்களினின்றும் பாலைப்பெருக்கியூட்டி, தோற்பாய் தனில் துயிற்றி—தோலாகிய சயனத்தின்கண்ணே தூங்குவித்து, காலாட்டும் இசை பெருகும்— தாலாட்டுகின்ற ஒலியானது மிகுந்துதொனிக்கும் எ—று, (௬௫)

பிறங்கியபுன் மாலைகளிற் பெருங்குடம்பெய் பிழிபருகிக்
கறங்குபறை முகத்தறைந்து களித்தாடிக் களைத்துவிழுந்
துறங்குபறைப் புருடர்துயி லொழிந்தெழுவான் புலரிதனின்
மறங்குலவு முட்படைக்கால் வாரணங்க ளோலமிடும்.

இ—ள். பிறங்கிய புன்மாலைகளில் பெரும் குடம் பெய் பிழி பருகி— விளங்குகின்ற புல்லிய மாலைக்காலங்களிற் பெரிய குடங்களில் வார்க்கப்பட்ட மதுவைககுடித்து, கறங்கு பறை முகத்து அறைந்து களித்து ஆடி களைத்து விழுந்து உறங்கு பறை புருடர்—ஒலிக்கின்ற பறைமுகத்திலடித்து களித்துக்கூத்தாடி களைத்துவிழுந்து நித்திரைசெய்கின்ற புலையர்கள், துயில் ஒழிந்து எழுவான்—நித்திரைநீங்கியெழும்படி, புலரிதனில்— விடியற்காலத்தில், மறம் குலவும் முள் படை கால் வாரணங்கள் ஓலமிடும்—வலிமைபொருந்திய முள்ளாகிய படையமைந்த கால்களையுடைய சேவல்கள்கூவும் எ—று. (௬௬)

இத்தகைய புலைச்சேரி தன்னிலிருந் திருண்டமன
மத்தனெனப் புலவுதின்று மதுப்பருகி வசமழிந்து
முத்தநகைப் புலைமகடன் முலைநலத்தே றலுநுகர்ந்து
சித்தமிகக் களிகூர்ந்து சிலவைகல் கழித்ததற்பின்.

இ—ள்: இத்தகைய புலைச்சேரி தன்னில் இருந்து— இத்தன்மையையுடைய பறைச்சேரியில்வாசஞ்செய்து, இருண்ட மனமத்தன் என— அறிவழிந்த மனத்தையுடைய பைத்தியகாரனைப்போல, புலவு தின்று மதுப்பருகி—மாமிசத்தையுண்டு மதுபானஞ்செய்து, வசம் அழிந்து—(காமமிகு

தியினால்) தன்வசமழிந்து, முத்த நகை புலைமகள் தன் முலை நல தேறலு
ம் நுகர்ந்து—முத்துப்போன்ற பற்களையுடைய அப்புலைப்பெண்ணினது ஸ்
தனயோசமாகிய தேனையுமுட்கொண்டு, சித்தம் மிக களி கூர்ந்து—மனமா
னது மிகவும் களிப்படைந்து, சில வைகல் கழித்ததற்பின்—சிறிதுநாட்செ
ன்றபின்னர் எ—று. (கஎ)

பங்கயக்கட் புலைமகளாற் பன்னமெனப் பகர்வயிற்றுச்
செங்கண்மழ விடைபோலச் செனித்துதித்தார் சிறுவரைவ
ரங்கவர்க்கு மதுப்பிசித மருத்தியருத் தியின்வளர்க்கப்
பங்கமிகுங் கடற்புவியிற் பாதகமைந் தெனவளர்ந்தார்.

இ—ள்: பங்கய கண் புலைமகள் ஆல் பன்னம் என பகர் வயிற்று—
தாமரைமலரையொத்து விளங்குகின்ற கண்களையுடைய அப்புலைமாதினது
ஆலமிலையென்று உருவகித்துக் கூறத்தக்க வயிற்றினிடமாக, செம் கண் ம
ழவிடை போல—சிவந்த கண்களையுடைய இளமையாகிய இடபங்களைப்
போல, ஐவர் சிறுவர் செனித்து உதித்தார்—ஐந்துசிறுவர்கள் கருப்பமாகிப்
பிறந்தனர், அங்கு அவர்க்கு மது பிசிதம் அருத்தி—அவ்விடத்தே அப்புத்தி
ரர்களுக்குக் கள்ளையும் மாமிசத்தையுமூட்டி, அருத்தியின் வளர்க்க—அன்
புடனேவளர்த்தலும், பங்கம் மிகும் கடல் புவியில்—சேறுமிகுந்தசமுத்திரத்
தாற்சூழப்பட்ட பூமியின்கண்ணே, பாதகம் ஐந்து என வளர்ந்தார்—கொ
லை களவு கள்ளுக்காமம் குருநிந்தையாகிய பஞ்சபாதகங்களென்று கண்டோ
ர்சொல்லும்படி வளர்ந்தனர் எ—று. (கஅ)

மன்னுநெடும் பொதியவரை மன்றல்கமழ் தென்றலுடன்
பன்னுதமிழ் பயந்ததெனப் பண்ணவர்பற் பலர்பயிலும்
பொன்னுலகி லரம்பையுருப் பசிநிகராம் பொற்பினுடன்
பின்னுமிரு கன்னியரைப் பெற்றுமனப் பிரியமுற்றான்.

இ—ள்: மன்னு நெடும் பொதிய வரை மன்றல் கமழ் தென்றலுட
ன் பன்னு தமிழ் பயந்தது என—நிலைபெற்ற நெடிய பொதியமலையானது ந
றுமணத்தையுடையதாகி வீசுகின்ற வசந்தமாருதத்தையும் கூறப்படுகின்ற தமி
ழையும் பெற்றாற்போல, பண்ணவர் பற்பலர் பயிலும் பொன்னுலகில் அரம்
பை உருப்பசி நிகராம் பொற்பினுடன்—தேவர்கள் பலரும் வாசஞ்செய்கின்
ற [illegible]லோகத்திலுள்ள அரம்பை உருப்பசியென்னும் தேவமாதர்களை
யொ[illegible] அழகினோடு, பின்னும் இரு கன்னியரை பெற்று—பின்னரும் இர
ண்டு கன்னிகைகளைப்பெற்று, மனப்பிரியம் உற்றான்—மனத்தின்கண்ணே மகி
ழ்வடை[illegible]ந்தனன் எ—று. (கக)

ம[illegible]யவரென வளருமைந்து மைந்தருடன்
க[illegible]படைக்கதைகூர்ங் கணைநெடுங்கார் முகந்தாங்கி

யறைதரு பேரடவிகளி லாறலைத்துப் பொருள்வவ்விச்
சிறைபடுநீர்க் கயல்கவர்ந்த சிரலையெனக் கடிதகல்வான்.

(இ—ள்: மற மறவி ஐவர் என வளரும் ஐந்து மைந்தர் உடன்—வலிமைபொருந்திய ஐந்துஇயமர்களென்றுசொல்லும்படி வளர்ந்த தனது ஐந்துபுத்திரர்களோடும், கறை வடி வாட்படை கதை கூர்ங்கணை நெடும் கார்முகம் தாங்கி—இரத்தக்கறையையுடைய வாட்படை தண்டு கூரியஅம்பு நெடிய வில்லாகிய ஆயுதங்களைத்தாங்கி, அறை தரு பேரடவிகளில்—கூறப்படுகின்ற பெரிய காடுகளில், ஆறலைத்து பொருள்கள் வவ்வி—வழிச்செல்வோரை வருத்தி அவர்களது திரவியத்தைக்கவர்ந்து, சிறை படு நீர் கயல் கவர்ந்த சிரலை என—அடைபட்டுள்ள நீரின்கண்ணே வாசஞ்செய்கின்ற கயல்மற்சங்களைக்கவர்ந்துசெல்லும் சிரலைப்பட்சியைப்போல, கடிது அகல்வான்— வேகமாயோடிப்போவான் எ—று. (௪00)

அந்தணரெண் ணிலர்குழக்கன் றானிடப மளவிறந்த
கொத்தவிழ்நாண் மலர்க்கோதைக் கோதையர்கள் குதலைமொழி
மைந்தர்நரை முதிர்விருத்தர் வருந்துறவர் வருந்துறக்கொல்
விந்தவிதக் கொலைகடம்மை யாவர்கணித் தெடுத்துரைப்பார்.

இ—ள்: எண்ணிலர் அந்தணர்—அளவில்லாத பிராமணர்களும், குழக்கன்று—இளமையாகிய பசுக்கன்றுகளும், ஆன்—பசுக்களும், இடபம்—எருதுகளும், அளவிறந்த கொத்து அவிழ் நாள் மலர் கோதை கோதையர்கள்—அளவில்லாத கொத்துவிரிந்த புதிய மலர்மாலையையணிந்த கூந்தலையுடைய பெண்களும், குதலை மொழி மைந்தர்—மழலைவார்த்தையையுடைய சிறுவர்களும், நரை முதிர் விருத்தர்—நரைமுதிர்ந்தவயோதிபர்களும், வருந்துறவர்—வழிச்செல்லுகின்றதுறவிகளும், வருந்துற கொல் இந்தவித கொலைகள் தம்மை—துன்புறும்படி கொலைசெய்த இந்தவிதமாகிய கொலைகளின் தொகையை, யாவர் கணித்து எடுத்து உரைப்பார்—யார் அளவிட்டு எடுத்துக்கூறவல்லர் (ஒருவருமில்லை) எ—று. (௪0௧)

புக்குபுனற் றடங்கரையிற் புரிதருகண் ணியிற்படுத்துத்
தொக்கநெடுங் கயலிரைதேர் தோலடிப்புட் டுவர்முட்டாண்
மிக்குயர்வண் டானமுடன் விரிந்தசிறைப் பெரும்போதாக்
கொக்குமுதற் பக்கிகளைக் கொன்றுகொன்று தின்றுபின்னும்.

இ—ள்: புனல் தடம் கரையில் புக்கு—நீர்நிறைந்த தடாகக்கரைகளிற்சென்று, தொக்க நெடும் கயல் இரை தேர் தோலடிப்புள்— கூட்டமாகிய நெடிய கயல்மீன்களை உணவாகத்தேடுகின்ற தோலடிப்பறவைகளையும், துவர் முள் தாள் மிக்கு உயர் வண்டானமுடன்—சிவந்த முட்கள்பொருந்திய கால்களையுடைய மிகவுயர்ந்த கொய்யடிநாரைகளையும், விரிந்த சிறை பெரும் போதா—பரந்த சிறகுகளையுடைய பெருநாரைகளையும், கொக்கு முதல்

பக்கிகளை—சொக்குமுதலாகிய பட்சிகளையும், புரிதரு கண்ணியில் படுத்து கொன்று கொன்று தின்று—அமைக்கப்பட்ட கண்ணிகளிலகப்படுத்திக்கொலைசெய்து கொலைசெய்து புசித்து, பின்னும்—பின்னரும் எ—று. (௬0௨)

மேவிவளர் வனங்கடொறும் வில்வணக்கி விறற்பகழி
தூவிவெரு வொடுகுதித்துத் துள்ளுபுள்ளி மானினங்க
டாவியுக ளிரலையுரற் றலைக்கேழன் மரைக்குலங்க
ளாவிசெகுத் தூனருந்தி யடுபுலிபோற் றிரியுமந்நாள்.

இ—ள்: மேவிவளர் வனங்கள் தொறும் வில் வணக்கி விறல் பகழி தூவி—அடர்ந்துவளர்ந்த காடுகள்தோறும்போய் வில்லைவளைத்து வலிய அம்புகளைச்செலுத்தி, வெருவொடு குதித்து துள்ளு புள்ளி மான் இனங்கள்—அச்சத்தோடு துள்ளிப்பாய்கின்ற புள்ளிபொருந்திய மான்கூட்டங்களையும், தாவி உகள் இரலை—தாவிப்பாய்கின்ற கலைமான்களையும், உரல் தலை கேழல்—உரல்போன்ற தலையையுடைய பன்றிகளையும், மரைக்குலங்கள்—மரைக்கூட்டங்களையும், ஆவி செகுத்து ஊன் அருந்தி—உயிரைவதைத்து அவைற்றின் மாமிசத்தைப்புசித்து, அடு புலி போல் திரியும் அந்நாள்— கொலைத்தொழிலைச்செய்கின்ற புலியைப்போலத்திரிகின்ற அக்காலத்தில் எ—று. ()

விரிந்தகொடு வினைவசத்தான் மெயிற்பிணிகள் பிடித்தலைத்துப்
புரிந்தசுரு ளிருளோதிப் புலைமகள்பொன் றிடப்புலம்பிப்
பரிந்தனலின் மெழுகாகிப் பற்பலநாட் பயில்பெடையைப்
பிரிந்தவன்றிற் சேவலெனப் பெருந்துயரக் கடல்வீழ்ந்தான்.

இ—ள்: விரிந்த கொடு வினை வசத்தால்—மிகுந்த கொடிய ஊழ்வினையின்வயத்தால், புரிந்த சுருள் இருள் ஓதி புலைமகள் மெய்யில் பிணிகள் பிடித்து அலைத்து பொன்றிட— முறுகிய சுருண்ட கரிய கூந்தலையுடைய அப்புலைப்பெண்ணானவள் சரீரத்தில் நோய்களானவைபற்றி வருத்துதலாலிறக்க, புலம்பி பரிந்து அனலின் மெழுகு ஆகி—புலம்பி இரங்கி அக்கினியிற்பட்ட மெழுகுபோலுருகி, பல்பல நாள் பயில் பெடையை பிரிந்த அன்றில் சேவல் என—அனேககாலங்களாகப்பழகிய பெடையைப்பிரிந்த சேவலன்றிலைப்போல, பெரும் துயர கடல் வீழ்ந்தான்—பெரிய துக்கசாகரத்திலமிழ்ந்தினன் எ—று. (௯0௪)

எழுமயங்கு முளந்தேறு தேங்குமுடற் பொறைசோர்ந்து
விழுமிருகட் புனல்குமிழி விட்டோட விம்மிவிம்மி
யழுமசனிக் குடைந்துபுர ளரவெனநீ ணிலந்தலையா
வழுமிரங்கும் வெதும்புறுநெட் டுயிர்ப்புயிர்த்துப் புழுங்கிடுமால்.

இ—ள்: எழும்—எழும்புவான், மயங்கும்—மயக்கமடைவான், உளம் தேருது ஏங்கும்—மனத்தெளிவற்றவனுயேங்குவான், உடல் பொறை சோர்ந்து விழும்—உடற்பாரஞ்சகியாது சோர்ந்துவிழுவான், இரு கண் புனல் குமிழி விட்டு ஓட விம்மி விம்மி அழும்—இரண்டுகண்களினின்றும் நீர் குமிழியாகப்பாயும்படி விம்மிவிம்மி அழுவான், அசனிக்கு உடைந்து புரள் அரவென நீள் நிலம் தலையால் உழும்— இடிக்கஞ்சி மயங்கிப்புரளுகின்ற சர்ப்பத்தைப்போல நீண்ட பூமியைத் தலையாலுழக்குவான், இரங்கும்— இரக்கமடைவான், வெதும்புறும்—வெப்பமடைவான், நெட்டு உயிர்ப்பு உயிர்த்து புழுங்கிடும்—நெடுமூச்செறிந்து புழுங்குவான் எ—று.

ஆல் அசை.　　　　(கoரு)

கண்மணியே யெனதாசைக் கங்குல்விடிந் திடவுதித்த
விண்மணியே யிப்பியின்வாய் விண்டுமிழும் வெண்டரளத்
தண்மணியே பாற்சலதி தருமமுதே தயங்குகதி
ரொண்மணிநீத் திடுமரவி னுனையிழந்து முய்வேனே.

இ—ள்: எனது கண் மணியே— எனது கண்களிலுள்ளமணிக்குச் சமானமானவனே, ஆசை கங்குல் விடிந்திட உதித்த விண்மணியே— காமாசையாகிய இருள்விடியும்படி தோன்றியசூரியனையொத்தவனே, இப்பியின் வாய் விண்டு உமிழும் வெண் தரள தண் மணியே— இப்பிகள் வாய்திறந்து கக்குகின்ற வெண்ணிறமாகிய குளிர்ந்தமுத்துமணியைப்போன்றவனே, பால் சலதி தரும் அமுதே—திருப்பாற்கடலிற்றோன்றிய அமுதத்தைநிகர்த்தவனே, தயங்கு கதிர் ஒண் மணி நீத்திடும் அரவின் உனை இழந்தும் உய்வேனோ—பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய ஒள்ளிய இரத்தினத்தையிழந்த சர்ப்பத்தைப்போல உன்னைப்பிரிந்தும் யானுய்வேனோ (உய்யமாட்டேனென்பதாம்) எ—று.　　　　(கoசு)

துப்புறள்செவ் வாயிதழுந் துடியிடையுங் கடிதடமு
மைப்புருவக் கார்முகமு மதிமுகமு மிருவிழியுங்
கொப்புலவு மிருகுழையுங் குருகுலவு கரத்தழகு
மெய்ப்பிறவி பிறந்துனைநா னினிக்காண்ப தென்றயரும்.

இ—ள்: உன் துப்பு உறள் செவ் வாய் இதழும்—உனது பவளம்போன்ற சிவந்தவாயிற்பொருந்திய அதரங்களையும், துடி இடையும் கடிதடமும்—உடுக்கைப்போன்றஇடையையும் நிதம்பத்தையும், மை கார் முக புருவமும்—கரிய வில்லையொத்த புருவங்களையும், மதிமுகமும் இருவிழியும்—சந்திரனையொத்தமுகத்தையும் இரண்டுகண்களையும், கொப்பு உலவும் இருகுழையும்—கொப்பணிந்து விளங்குகின்ற இருகாதுகளையும், குருகு உலவு கரத்து அழகும்—வளையல்கிடந்து பிரகாசிக்கின்ற கைகளினலங்காரத்தையும், நான்

இனி எப்பிறவி பிறந்து காண்பது என்று அயரும்— நான் இனி எந்தப்பிற வியிற்பிறந்து காண்பேனென்றுசோர்வடைவான் எ—று. (கoஎ)

ஓங்கிளைய பெருந்துயர முழந்துமிக வருந்துமந்நாட்
பூங்கமலக் குறுமுகைபோற் புடைத்தரும்பிக் குமிழ்த்தெழுந்து
கோங்கமுகை யெனக்குலவக் கொங்கைகளங் கவனளித்த
மாங்குயிற்சொல் லியர்விரக மருவுமங்கைப் பருவமுற்றார்.

இ—ள்: இளைய ஓங்கு பெரும் துயரம் உழந்து மிக வருந்தும் அந்நாள்—இவ்வாறாக மிகப்பெரியதுயரமடைந்து அதிகம் வருத்தமுறுகின்ற அக்காலத்தில், அங்கு அவன் அளித்த மாங்குயிற் சொல்லியர்—அவ்விடத்து அவன்பெற்ற மாங்குயிலினிசைபோன்ற இனியவார்த்தையையுடைய புதல்வியர்கள், பூம் கமல குறு முகைபோல் கொங்கைகள் புடைத்து அரும்பி குமிழ்த்து எழுந்து—அழகிய தாமரையினது குறுகியமொட்டைப்போல முலைகள் விம்மித்தோன்றி முகிழ்த்து உயர்ந்து, கோங்க முகை என குலவ— கோங்கரும்புபோலப்பிரகாசிக்க, விரகம் மருவும் மங்கை பருவம் உற்றார்—கண்டோர்காமுறத்தக்க மங்கைப்பருவத்தையடைந்தனர் எ—று. (கoஅ)

மாரிவளந் தருமுகிலை மணிக்கருநீ ணிறமணலை
வேரிகமழ் செழுந்துணர்கள் விளங்கிதழிக் கருங்கனியை
நீரிலெழுஞ் சைவலத்தை நிகர்த்துநெய்த்து நெறித்திருண்ட
காரிருளின் பிழம்பென்னக் கவின்கொண்ட கருங்குழல்கள்.

இ—ள்: கருங்குழல்கள்—(அப்பெண்களது)கரியகூந்தல்களானவை, மாரி வளம் தரு முகிலை—மழையைப்பெய்கின்ற வளம்பொருந்தியமேகத்தையும், கரு மணி—கருமணியையும், நீல் நிற மணலை—கருமணலையும், வேரி கமழ் செழும் துணர்கள் விளங்கு கரும் இதழி கனியை— தேன்கமழுகின்ற செழித்த பூங்கொத்துகள்விளங்குகின்ற கரியகொன்றைக்கனியையும், நீரில் எழும் சைவலத்தை—நீரிலுண்டாகின்ற பாசியையும், நிகர்த்து—ஒத்து, நெய்த்து நெறித்து இருண்ட கார் இருளின் பிழம்பு என்ன— பசுமைகொண்டு நெறிப்புற்று இருண்ட கரிய இருட்பிழம்பைப்போல, கவின்கொண்ட—அழகையடைந்தன எ—று. (கoக)

கஞ்சநெடுங் கயல்கமழுங் காவிபிணை கணைக்கிணையா
யஞ்சனந்தோய்ந் தடலனங்க னுகமங்கற் றலைகடவி
னஞ்சமுதங் கலந்திலங்கு நருமணிப்பொற் குழைகிழித்து
வஞ்சமிகுங் கொலைபயின்று மதர்த்தனவால் வரிவிழிகள்.

இ—ள்: வரி விழிகள்—இரேகைபொருந்திய கண்களானவை, கஞ்சம்—தாமரைமலரையும், நெடும் கயல்—நெடிய கயல்மீனையும், கமழும் காவி—நறுமணம்பொருந்திய கருங்குவளைமலரையும், பிணை— மானையும், க

லைக்கு இணையாய்—அம்பையும் ஒத்து, அஞ்சனம் தோய்ந்து—மைதீட்டப் பெற்று, அடல் அனங்கன் ஆகமம் கற்று— போராடல்பொருந்திய மன்மத னது மதனனூலைப்பயின்று, அலை கடலின் நஞ்சு அமுதம்கலந்து— திரை பொருந்திய பாற்கடலிற்றோன்றிய நஞ்சோடும் அமுதத்தோடுங்கலப்புற்று, இலங்கும் நகு மணி பொன் குழை கிழித்து—பிரகாசிக்கின்ற ஒளியையுடை ய இரத்தினங்கள்பதித்த பொன்னாலாகிய காதணியிற்பாய்ந்து, வஞ்சம் மி கும் கொலை பயின்று—வஞ்சனைமிகுந்த கொலைத்தொழிலைப்பழகி, மதர்த்த ன—மதர்ப்புற்றன எ-று.

ஆல் அசை. (ககO)

கன்னியர்க ளின்னணநற் கலைவளர்ந்த மதியமொப்பத்
துன்னியமுட் டாட்கமலத் தூயமுகை முறுக்குடைந்து
மன்னியமென் றோடவிழும் பதநோக்கி மதுநுகர்வா
னின்னிசைப்பூம் பொறிச்சுரும்ப ரிருந்ததெனை விருந்தவனும்.

இ—ள்: கன்னியர்கள்—அக்கன்னிகைப்பெண்கள், இன்னணம் ந ல் கலை வளர்ந்த மதியம் ஒப்ப—இவ்விதமாய் நல்ல கலைகள்வளரப்பெற்ற சந் திரனுக்கொப்பாகவளர, துன்னிய முள் தாள் கமல தூய முகை முறுக்கு உ டைந்து மன்னிய மெல் தோடு அவிழும் பதம் நோக்கி—நெருங்கிய முள்நா ளங்களையுடைய தாமரையின் சுத்தமாகியமொட்டானது முறுக்கிளகிப் பொ ருந்திய மிருதுவான இதழ்கள்விரிகின்ற சமயம்பார்த்து, இன் இசை பூம் பொறி சுரும்பர் மது நுகர்வான் இருந்தது என— இனிய இசையைப்பாடுகி ன்ற அழகிய புள்ளிபொருந்திய வண்டுகள் தேனுண்ணும்படி காத்திருந்தாற் போல, அவனும் இருந்து—அச்சுகுமாரனுங்காத்திருந்து எ—று. (ககக)

செக்கரெழு மிளமதியுந் தென்றலுமன் றிலும்பகைப்பக்
கைக்கணைகொண் டடர்ந்துமதன் கடும்பூசல் பொரக்கனலின்
மிக்ககொடுங் காமமெனும் விடந்தலைக்கொண் டாற்றிலனாய்
மக்களிரு வரையுமன மருண்டுமனை யெனமணந்தான்.

இ—ள்: செக்கர் எழும் இள மதியும் தென்றலும் அன்றிலும் பகை ப்-பஅந்திக்காலத்தில் தோற்றுகின்றஇளஞ்சந்திரனும் தென்றற்காற்றும் அ ன்றிற்பட்சியும்பகைமைகொள்ள, கை கணை கொண்டு அடர்ந்து மதன் கடும் பூசல் பொர—கையின்கண்ணே அம்பைக்கொண்டு நெருங்கிநின்று மன்மதனா னவன்பெரும்போர்புரிய, கனலின் மிக்க கொடும் காமம் எனும் விடம் தலைக் கொண்டு ஆற்றிலனாய்—அக்கினியினும் மிக்க கொடியகாமமாகியவிஷமானது தலையிலேறிச் சகிக்கலாற்றாதவனாய், மக்கள் இருவரையும் மனம் மருண்டு ம னை என மணந்தான்—தனதுபுத்திரிகளிருவரையும் மனமயக்கமுற்று மனை வியர்களாகக்கலந்தான் எ—று. (ககஉ)

பெருவரைபோ லகன்மார்பிற் பிறங்கியபொற் சுணங்குபொடித்
திருவரைக ளெனவளரு மிளமுலைக்கோ டுழுதுழக்கப்
பொருவருமா தரவினுடன் புணர்ந்துநல னுகர்ந்திடுநாண்
மருவருபூங் குழலியரு மைந்தரிரு வரைப்பயந்தார்.

இ—ள்: பெரு வரை போல் அகல் மார்பில் பிறங்கிய பொன் சுணங்கு பொடித்து—பெரிய மலையையொத்து விசாலித்த மார்பில் விளங்குகின்ற பொன்னிறமான தேமல்பரந்து, இரு வரைகள் என வளரும் இள முலை கோடுகள் உழுது உழக்க—இரண்டுமலைகளென்று சொல்லும்படி வளர்ந்த இளமையையுடைய ஸ்தனங்களாகிய கொம்புகள் புதைந்து அழுந்த, பொரு அரும் ஆதரவின் உடன் புணர்ந்து நலம் நுகர்ந்திடு நாள்—ஒப்பற்ற அன்போடு கலந்து இன்பசுகத்தையனுபவிக்குங்காலத்தில், மரு வரு பூ குழலியரும் மைந்தர் இருவரை பயந்தார்—வாசனைபொருந்திய பூவணிந்த கூந்தலையுடைய பெண்களிருவரும் இரண்டுபுத்திரரைப்பெற்றார்கள் எ—று. (ககரு)

தரைமிசைத்தன் புதல்வியர்க டாமீன்ற தனையரிரு
வரையுமன மகிழ்ந்தெடுத்து மடிமீது வைத்துமுரி
திரையெறிவா ரிதிபிறந்த தெள்ளமுதக் குதலைகள்கேட்
டுரைதருவெண் ணுரைச்சுரையூ னூட்டிவளர்த் துவப்புற்றான்.

இ—ள்: தரை மிசை தன் புதல்வியர்கள் தாம் ஈன்ற தனையர் இருவரையும்—பூமியிலே தன்புத்திரிகள்பெற்ற புத்திரரிருவரையும், மனம் மகிழ்ந்து எடுத்து மடிமீது வைத்து—மனமகிழ்ச்சியோடு தூக்கி மடிமேல்வைத்து, முரி திரை எறி வாரிதி பிறந்த தெள் அமுத குதலைகள் கேட்டு—முரிகின்ற திரைகளை வீசும்பாற்கடலிற்றோன்றிய தெளிந்த அமுதம்போன்ற மழலை வார்த்தைகளைக்கேட்டு, உரை தரு வெள் நுரை சுரை ஊன் ஊட்டி வளர்த்து உவப்புற்றான்—கூறப்படுகின்ற வெள்ளிய நுரைகள்பொருந்திய கள்ளையும் மாமிசத்தையுமுண்பித்து வளர்த்து மகிழ்வடைந்தான் எ—று. (ககச)

வேறு

இவ்வண்ண மிங்கிவன்று னிருந்திடுநாட் பசும்புரவி யிரவி தன்னை, மைவண்ணப் பாந்தள்பகு வாயினிற்பெய் துமிழ்காலை மறையோர்க் கெல்லாஞ், செவ்வண்ணக் கனகமுதற் கலைமுலைப்பாற் றுரைவிடுஞ் செருத்த னல்லான், கொய்வண்ண மலர்க்கோதை கோமகன்றான் றனமிகக் கொடுப்ப வாங்கி.

இ—ள்: இவ்வண்ணம் இங்கு இவன் தான் இருந்திடுநாள்—இவ்வாறாக இவ்விடத்து இந்தச்சுகுமாரன் வாழ்ந்திருக்குங்காலத்தில், பசும் புரவி இரவி தன்னை மை வண்ண பாந்தள் பகுவாயினில் பெய்து உமிழ்காலை—பசியநிறத்தைக்கொண்ட குதிரைபூண்ட தேரையுடையசூரியனைக் கரிய நிற

ய்பொருந்திய(இராகு)என்னும்பாம்பு தனதுபகிர்ந்தவாயினாலுண்டு விமோசனஞ்செய்கின்ற கிரகணகாலத்தில், கொய் வண்ண மலர் கோதை கோ மகன்—கொய்யப்பட்ட அழகிய மலர்மாலையையணிந்த அரசன், எல்லா மறையோர்க்கும்—சகல பிராமணர்களுக்கும், செவ்வண்ண கனகம்— சிவந்த நிறத்தையுடைய பொன், கலை—வஸ்திரம், முலை பால் தாரை விடும் செருத்தல் நல் ஆன் முதல்—முலைகளினின்றும் பாலைத்தாரையாகச்சொரிகின்ற மடிகளையுடைய நல்லபசுக்கள் ஆகிய இவைமுதலியவற்றை, மிகத் தானம் கொடுப்ப வாங்கி—மிகவும் தானமாகக்கொடுக்க அதனைப்பெற்று எ--று. ()

வந்தநல்லந் தணர்கடமை வனசரியின் மறித்துருத்து மைந்தரோடுங், குந்தநெடுங் கதைவடி வாள் கொடுமரஞ்சா யகங்களினாற் கொடிறு தந்தஞ், சிந்தவுடற் செதுக்கைசெய்து கலக்கியவர் கைப்பொருள்கள் சேரவவ்வி, வெந்தழலார் விழித்தறுகண் மிருகாரி யெனத்தனதின் மேவினானே.

இ—ள்: வந்த நல் அந்தணர்கள் தமை மைந்தரோடும் வனசரியின் மறித்து உருத்து—வந்த நல்ல பிராமணர்களைத்தனது ஐந்து புத்திரர்களோடும் காட்டுவழியிலே தடுத்துக்கோபித்து, குந்தம் நெடும் கதை வடி வாள் கொடுமரம் சாயகங்களினால்—கைவேல் நீண்டதண்டு கூரியவாள் வில் அம்பு ஆகிய இவற்றால், கொடிறு தந்தம் சிந்த உடல் செதுக்கை செய்து கலக்கி—கபோலங்களும் பற்களுஞ்சிதறச்சரீரத்தின்கண்ணே காயங்களையுண்டாக்கிக்கலக்கஞ்செய்து, அவர் கைப்பொருள்கள் சேர வவ்வி—அவர்களது கையிலுள்ள திரவியம்முழுவதையும் பறித்து, வெம் தழல் ஆர் விழி தறுகண் மிருகாரி என—கொடிய அக்கினிபோன்ற கண்களையும் வன்கண்மையையுமுடைய சிங்கத்தைப்போல, தனது இல் மேவினான்-- தன்னுடைய இல்லத்தையடைந்தான் எ—று.

ஏ அசை. (ககசு)

பல்லொடிந்து கவுளொடிந்து பழுவொடிந்து முழவெழுவிற் பணைத்த திண்டோட், கல்லொடிந்து கரமொடிந்து காலொடிந்து மார்பொடிந்து கலங்கி வாயிற், சொல்லொடிந்து பனவரெல்லாம் பகைத்திமிரந் துடைத்திலங்குஞ் சுடர்வேன் மன்னன், செல்லொடிந்து முடிதவழுங் கோயில்வா யிலைநோக்கிச் சென்றாரன்றே.

இ—ள்: பனவர் எல்லாம்—அப்பிராமணர்கள் யாரும், பல்லொடிந்து—பற்களொடிந்தும், கவுள் ஒடிந்து—கபோலங்களொடிந்தும், பழு ஒடிந்து— விலாக்கண்முரிந்தும், முழவு எழு வில் பணைத்த திண் தோள் கல் ஒடிந்து— மத்தளத்தையும் இருப்புலக்கையையும் ஒத்த பருத்த வலிய புயமலைகள் முரியப்பெற்றும், கரம் ஒடிந்து—கைகள் முரிந்தும், கால் ஒடிந்து— கால்

கள்முரிந்தும், மார்பு ஒடிந்து—மார்புகள்சிதைந்தும், கலங்கி வாயில் சொல் ஒடிந்து—கலக்கமடைந்து வாயால் யாதும்பேசவியலாதவராயும், பகை திமிரம் துடைத்து இலங்கும் சுடர் வேல் மன்னன்—பகைவர்களாகியவிருளையகற்றி விளங்குகின்ற ஒளியையுடைய வேற்படையைத்தரித்த அரசனது, செல் ஒடு இந்து முடிதவழும் கோயில் வாயிலை நோக்கிச் சென்றார்—மேகங்களுஞ் சந்திரனும் சிகரங்களிலே தவழாநின்ற மாளிகைவாயிலைப்பார்த்துப்போயினர் எ—று.

அன்று ஏ அசைகள். (ககஎ)

சென்றுமுறை யோமுறையோ வென்றசொற்றிண் டிறல் வேந்தன் செவியிற்கேட்டுக், குன்றுறழ்கோ புரவாயிற் காவலரைக் கூயவரைக் கொணர்மி னென்னப், பொன்றுயிலு மணிமார்ப னரசிருக்கு மண்டபத்திற் புகுத்தப் போனார், கன்றுமனத் துடனவர் தங் காயமுறுங் காயமெலாங் கண்ணிற் கண்டான்.

இ—ள்: சென்று முறையோ முறையோ என்ற சொல் திண் திறல் வேந்தன் செவியில் கேட்டு—சென்று முறையோ முறையோ வென்றலறிய சத்தமானது மிக்க வலிமையையுடைய அரசனது செவியிற்கேட்டு, குன்று உறழ் கோபுர வாயில் காவலரை கூய்—மலையையொத்து விளங்குகின்ற கோபுரவாயிலிலுள்ளகாவலரை அழைத்து, அவரைக்கொணர்மின் என்ன— அவர்களை இங்கேயழைத்துவாருங்களென்று ஆஞ்ஞாபிக்க, பொன் துயிலும் மணி மார்பன் அரசிருக்கும் மண்டபத்தில் புகுத்த போனார்—இலக்குமி வாசஞ்செய்கின்ற அழகிய மார்பையுடைய அரசன் வீற்றிருக்கும் மாளிகையினுட்செலுத்தச்சென்றனர், கன்று மனத்துடன் அவர் தம் காயம் உறும் காயம் எலாம் கண்ணில் கண்டான்—கொதிக்கின்ற மனத்தோடும் அவர்களது சரீரத்திலுள்ள காயங்கள்யாவற்றையுங் கண்ணினாற்பார்த்தனன் எ—று. (கக அ)

யாவரிது செய்தனரிங் கெனவினவ நீயெமக்கீண் டீந்த வெல்லாம், பாவநெறிச் சண்டாள னொருவன்மைந்த ருடன்மறித்துப் பறித்துக் கொண்டே, யாவவென வலைத்தடித்திட் டாயுதத்தாலவஞ்செய்கைமை யடர்ந்தா னென்னக், காவலன்வா யிதழ்துடிப்பக் கண்டழல்கான் றொருகை மற்றைக் கையிற்றாக்கி.

இ—ள்: இங்கு யாவர் இது செய்தனர் என வினவ— இவ்விடத்து யாவரிதனைச்செய்தவரென்று கேட்டலும், நீ எமக்கு ஈண்டு ஈந்த எல்லாம்—நீர் எங்களுக்கு இத்தினத்தில் தானமாகக்கொடுத்த எல்லாப்பொருள்களையும், பாவ நெறிச்சண்டாளன் ஒருவன் மைந்தர் உடன் மறித்து பறித்து கொண்டு—பாவவொழுக்கத்தையுடைய ஒருபுலையனானவன் தனது புத்திர

ர்களோடுங்கூடி வழிமறித்துப்பறித்துக்கொண்டு, ஆவ என வளைத்து அடித்திட்டு ஆயுதத்தால் அவஞ்செய்து எமை அடர்ந்தான் என்ன— ஆவாவென்று (அலறும்படி) வளைத்து அடித்து ஆயுதங்களினால் ஊறுபாடுசெய்து எங்களை நெருக்கினான் என்றுகூறலும், காவலன் வாய் இதழ் துடிப்ப கண் தழல் கான்று—அவ்வரசனானவன் வாயினுதடுகள் துடிக்கக் கண்களினின்றுகோபாக்கினிசொலிக்க, ஒரு கை மற்றைக் கையில் தாக்கி—ஒருகையை மற்றைக்கையோடு மோதி எ—று.

ஏ அசை. (ககக)

முன்னின்ற முடங்குளைவான் மடங்கனிகர் படைத்தலைவர் முகத்தை நோக்கி, மின்னின்ற விறற்றானைக் கரத்தானை சிலகொடுபோய் விளங்கு செங்கேழ், மென்னின்ற கதிர்சுருக்கி யிரவிகுடதிசைக்கடல்வா யெய்து முன்னர்க், கன்னின்ற மனத்தவனைக் கடிதோடிக் கொணர்மினெனக் கற்பித்தானே.

இ—ள்: முன் நின்ற முடங்கு உளை வால் மடங்கல் நிகர் படைத்தலைவர் முகத்தை நோக்கி—முன்னிலையில்நின்ற முடங்கிய பிடர்மயிரையும் வாலையுங்கொண்ட சிங்கங்களையொத்த சேனாதிபதிகளின்முகத்தைப்பார்த்து, மின் நின்ற விறல் தானை கர தானை சில கொடு போய்— ஒளிவீசுகின்ற வலிய ஆயுதங்களைத்தாங்கிய கையையுடைய சில சேனைகளைக்கொண்டு போய், விளங்கு செம் கேழ் எல் நின்ற கதிர் சுருக்கி இரவி குடதிசைக்கடல் வாய் எய்து முன்னர்—விளங்குகின்ற சிவந்தநிறத்தையுடைய ஒளிதங்கியகிரணங்களையொடுக்கிக்கொண்டு சூரியன் மேற்றிசைச்சமுத்திரத்தை அடைதற்குமுன், கல் நின்ற மனத்தவனை கடிதோடி கொணர்மின் என கற்பித்தான்—கல்லைப்போன்ற (வலிய) மனத்தையுடைய (அக்கள்வனை) வேகமாயோடிச்சென்று பிடித்துவாருங்களென்று ஆஞ்ஞாபித்தான் எ—று

ஏ அசை. (கஉ0)

ஆயவரும் விரைந்துகதை யாழிசிலை வாளியொள்வா ளயில்வேலேந்திக், காயவருங் கடுமறலி தூதரிவ ரெனவெருவக் கண்டோர் கானிற், போயவனை முடுக்கர்மரப் பொதும்பர்செறி யடவிதொறும் புழைக்கை வேழஞ், சீயமுய லெண்குபுலி திரிசரிக டுருவியெங்குந் திரியலுற்றார்.

இ—ள்: ஆயவரும்—அச்சேனைத்தலைவர்களும், கதை ஆழி சிலை வாளி ஒள் வாள் அயில் வேல் ஏந்தி—தண்டு சக்கரம் வில் அம்பு ஒளிபொருந்தியவாள் கூரிய வேல் என்னுமிவற்றைத்தாங்கிக்கொண்டு, காய வரும் கடு மறலி தூதர் இவர் என கண்டோர் வெருவ விரைந்து கானில் போய்—கொலைத்தொழிலைச்செய்யும்படி வருகின்ற கொடிய யமதூதுவர்களிவரென்

று கண்டவர்களஞ்சும்படி வேகமாய்க்காட்டையடைந்து, மூடுக்கர் மரப்பொ தும்பர் செறி அடவி தொறும்— மலைமுழைஞ்சுகளிலும் மரச்சோலைகள் நெருங்கிய காடுகளிலும், புழைக்கை வேழம் சீயம் முயல் எண்கு புலி தி ரி சரிகள்— உட்டுளைபொருந்திய துதிக்கையையுடைய யானைகளும் சிங்க ங்களும் முயல்களும் கரடிகளும் புலிகளும் திரிகின்றவழிகளிலே, அவனைத் துருவி எங்கும் திரியலுற்றார்— அவனைத்தேடியெவ்விடமுந்திரிவாராயினார் எ—று. (கஉக)

கையரிக்கொண் டிடுஞ்சேனைக் கணங்கண்டு மருண்டு மனங் கலங்கிக் காதன், மையரிக்கண் ணியரோடு மக்களொடு மவ்வன த்தின் மறைந்து வைகி, நெய்யரியிற் றீக்கொண்டு நன்ககற்றும் படிற்றொழுக்க னெடிக ளோதை, செய்யரிற்கா னகன்றிரவிற் ப ற்பலகா வதங்கடந்து சென்ற பின்னர்.

இ—ள்: கையரி கொண்டிடும் சேனை கணம் கண்டு மருண்டு மன ம் கலங்கி—தேடிச்செல்கின்ற சேனைகளின் கூட்டத்தைக்கண்டு வெருண்டு மனக்கலக்கமுடையவனாய், காதல் மை அரி கண்ணியரோடும் மக்களொடும் அவ்வனத்தின் மறைந்து வைகி—அன்புபொருந்திய மைதீட்டப்பட்ட ரே கைகள் பரந்த கண்களையுடைய மனைவியர்களோடும் புத்திரர்களோடும் அக் காட்டின்கண்ணே யொளித்திருந்து, நெய் அரியில் தீக்கொண்டு நன்கு அக ற்றும் படிற்று ஒழுக்கன்—(கழிக்கப்படவேண்டியபொருள்களைவைத்துக்கொ ண்டு நல்லபொருள்களைச்சிந்தவிடுகின்ற) பன்னாடையைப்போலத் தீயசெய ல்களைச்சைக்கொண்டு நற்செயல்களைவிலக்கிய தூர்த்தவொழுக்கத்தையுடை ய சுகுமாரன், நெடிகள் ஓதை செய் அரில் கான் அகன்று—சிள்வண்டுகள்ச த்திக்கின்ற சிறந்த பருக்கைக்கற்களையுடைய காட்டைவிட்டுநீங்கி, இரவில் பல் பல காவதம் கடந்து சென்ற பின்னர்—இராக்காலத்தே அதிககாததூரம் கடந்துபோயபின்பு எ—று. (கஉஉ)

காட்டியசெந் நிறச்சூட்டு வாரணங்கூ யழைப்பவொற்றை க் காற்றேர் தூண்டிச், சேட்டிளஞ்செங் கதிர்ப்பரிதி கீழ்த்திசை க்க ணுதயவரை சேருங்காலை, நாட்டியதீ வினைக்கொடியோன் ப யமுற மாநடந்து நாருக் கின்ட', மூட்டியவூ ணவதேயப் புடை யிலொரு வரைச்சார லொளித்திட்டானே.

இ—ள்: செந்நிறம் காட்டிய சூட்டு வாரணம் கூய் அழைப்ப— சிவ ந்த நிறத்தைக்காட்டுகின்ற சூட்டையுடைய சேவல்கள்கூவியழைத்தலும், ஒ ற்றை கால் தேர் தூண்டி சேட்டு இளம் செம் கதிர் பரிதி கீழ்த்திசைக்கண் உதய வரை சேரும் காலை—ஒருருளைபொருந்திய இரதத்தைச்செலுத்தி மிக் க இளமையாகிய சிவந்த கிரணங்களையுடைய சூரியன் கிழக்குத்திசையின்

கண்ணே உதயகிரியையடையும்பொழுது, நாட்டிய தீவினைக் கொடியோர் ன்—நிலையான தீச்செயல்களையுடைய கொடிய சுகுமாரன், பய மூலமா ந டந்து—அச்சமே காரணமாகச்சென்று, நரருக்கு இன்பம் ஊட்டிய— மனு டர்களுக்குச்சுகத்தையூட்டிய, ஊணவதேய புடையில் ஒரு வரை சாரல் ஒளி த்திட்டான்—ஊணவம் என்னுந்தேசத்தின் பக்கத்தே ஓர்மலைச்சாரலில் ஒ ளித்திருந்தான் எ—று.

ஏ அசை. (கஉ.ங)

தொல்வினையின் படிநெடிய வரைவனங்க டொறுமுழன்று தொடர்ந்து கானிற், பல்வினையும் புரிந்துவழி மறித்திரலை முயலு டும்பு பன்றி மான்கள், கொல்வினையுஞ் செய்துகடுங் கொடுங்கூ ற்ற மிவனெனப்பேர் கொண்டு நாளு, நல்வினைய மொன்றுமின் றித் தீவினைமேம் படச்செலுத்தி வாழு நாளில்.

இ—ள்: தொல் வினையின்படி நெடிய வரை வனங்கள் தொறும் உழ ன்று—பழைய ஊழின்படி நீண்ட மலைகளிலும் காடுகளிலும் அலைந்துதிரிந் து, கானில் தொடர்ந்து பல் வினையும் புரிந்து—வனங்களிற்சென்று பலதீச் செயல்களையுஞ்செய்து, இரலை முயல் உடும்பு பன்றி மான்கள் வழி மறித்து கொல் வினையம் செய்து—கலைமான்களையும் முயல்களையும் உடும்புகளையு ம் பன்றிகளையும் மான்களையும் செல்லும்வழிகளில் தடுத்துக்கொலைபுரிந்து, க டும் கொடும் கூற்றம் இவன் என பேர் கொண்டு— மிக்க கொடிய யமன் இ வனென்று பேர்படைத்து, நல் வினையம் ஒன்றும் இன்றி—சற்கருமமொன்று யினுமில்லாது, நாளும் தீவினை மேம்படச் செலுத்தி வாழும் நாளில்— நா டோறும் தீச்செயல்களை அதிகரிக்கநடாத்தி வாழுங்காலத்தில் எ—று.(கஉச)

அவ்வரையி னெடுஞ்சாரற் கரைக்காதத் தளவையின்மா லயன்புத் தேளிர், தெவ்வரைவென் றிடுகுலிசப் படையோன்மா னுடரெவரும் திரண்டு போற்றக், கைவரையொன் றுரித்தருளு ங் கறைமிடற்றுக் கண்ணுதல்கட் கருணை நல்கிச், சைவரையீ டேற்றுகிற்பான் விற்றிருக்கு நாகநகர் தானென் றுண்டால்.

இ—ள்: அவ் வரையின் நெடும் சாரற்கு அரைக்காதத்து அளவையி ல்—அம்மலையினது நெடிய சாரலினின்றும் அரைக்காததூரத்தில்," மால் அ யன் புத்தேளிர் தெவ்வரை வென்றிடு குலிசப்படையோன் மானுடர் எவரு ம் திரண்டு போற்ற—மகாவிஷ்ணுவும் பிரமதேவரும் தேவர்களும் பகைவ ரைவென்ற வச்சிராயுதத்தையுடைய இந்திரனும் மனுடர்களுமாகிய யாவ ருமொருங்கேநின்று துதிக்க, கை வரை ஒன்று உரித்து அருளும் கறை மிட ற்று கண்ணுதல்—யானையையுரித்த நஞ்சுபொருந்திய கண்டத்தையும்நெற் றிக்கண்ணையுமுடைய சிவபிரான், கண் கருணை நல்கி சைவரை ஈடேற்றுகி ற்பான் வீற்றிருக்கும்—கிருபாநோக்கஞ்செய்து சைவரையுய்விக்கும்பொரு

ட்டு எழுந்தருளியிருக்கின்ற, நாக நகர்தான் ஒன்று உண்டு— திருநாகேச்சுரம் என்னுந்தலமொன்றுள்ளது எ—று.

ஆல்-அசை. (கஉ௫)

அந்தநகர்ப் பூசுரர்பார்த் திவர்வணிகர் சூத்திரர்முன் னாயினோரும், பந்தணிகைச் சந்தமுலைப் பண்டருசொற் பைந்தொடியார் பலரும் பானற், கொந்தவிழ்நாண் மலர்வாசங் கமழோடைகளிற்குழுமிக் குளிர் நீராடிச், சுந்தரஞ்சே ராசார முடுத்தபின்னு சாரமிகு சுத்த ராகி.

இ—ள்: அந்த நகர் பூசுரர் பார்த்திவர் வணிகர் சூத்திரர்முன் ஆயினோரும்— அந்தநகரத்தில் வசிக்கின்ற பிராமணர் அரசர் வைசியர் சூத்திரர் முதலிய யாவரும், பந்து அணி கை சந்த முலை பண் தரு சொல் பைந்தொடியார் பலரும்—பந்தாடுகின்ற கைகளையும் சந்தனமணிந்த ஸ்தனங்களையும் இனிய வார்த்தையையும் பசிய வளையல்களையுமுடைய பெண்கள்பலரும், கொந்து அவிழ் நாள் பானல் மலர் வாசம் கமழ் ஓடைகளில் குழுமி— இதழ் விரிந்தபுதிய கருங்குவளைமலர்கள் வாசனையைவீசுகின்ற பொய்கைகளிற் கூடி, குளிர் நீர் ஆடி—குளிர்ந்த சலத்திஸ்முழுகி, சுந்தரம் சேர் ஆசாரம் உடுத்தபின்—அழகிய வஸ்திரங்களைத்தரித்தபின்னர், மிகு ஆசார சுத்தராகி—மிக்க ஆசாரசீலராய் எ—று. (கஉ௬)

வெய்யகொடும் பாதகங்க ணீறுக்குந் திருநீறு விரவச் சாத்தித், தூய்யமணிக் கண்டிகையின் றொடைபுனைந்தஞ் செழுத்தோதித் துலங்குஞ் சோதிச், செய்யமணிக் குண்டலங்கண் முதலாம் பொற் கலனிலங்கச் செக்கர் மேனி, யையனுறைந் தருடருநா கேச்சுரத்திற் சென்றுதொழு தன்பு கூர.

இ—ள்: வெய்ய கொடும் பாதகங்கள் நீறுக்கும் திருநீறு விரவ சாத்தி—மிக்க கொடிய பாவங்களைத்தகிக்கவல்ல விபூதியைப்பரவப்பூசி, தூய்ய கண்டிகை மணியின் தொடை புனைந்து— சுத்தமாகிய உருத்திராக்கமாலைகளைத்தரித்து, அஞ்சு எழுத்து ஓதி—பஞ்சாக்ஷரஞ்செபித்து, சோதி துலங்கு செய்ய மணிக்குண்டலங்கள் முதலாம் பொன் கலன் இலங்க— ஒளி விளங்குகின்ற மாணிக்கரத்தினங்கள் பதித்துச்செய்யப்பட்ட குண்டலம்முதலிய பொன்னாபரணங்கள் பிரகாசிக்க, செக்கர் மேனி ஐயன் உறைந்து அருள் தரும் நாகேச்சுரத்தில் சென்று அன்பு கூர தொழுது—செக்கர்மேகத்தையொத்த திருமேனியையுடைய சிவபெருமான் வீற்றிருந்து அனுக்கிரகஞ்செய்கின்ற திருநாகேச்சுரமென்னுந்தலத்தையடைந்து அன்பதிகரிக்க வணங்கி எ—று. (கஉ௭)

வெண்டாளத் தொடைநாற்றி விதானித்து நெய்த்தகளி வி
ளக்கு மேற்றி, வண்டமரும் வலம்புரிமா தவிமுல்லை மல்லிகைசெ
வ் வந்தி பிச்சி, தண்டளிர்சேர் மணமிகுத்த மந்தாரங் கரவீரஞ்
சாதி வாசப், புண்டரிகங் கருங்குவளைப் போதுகடூ யருச்சனைகள்
புரிந்து போற்றி.

இ—ள்: விதானித்து—மேற்கட்டிகட்டி, வெண் தாள தொடை நாற்றி—வெள்ளிய முத்துமாலைகளைத் தூக்கி, நெய் தகளி விளக்கும் ஏற்றி—நெய்விடப்பட்ட தகளிகளில் விளக்குகளையுமேற்றி, வண்டு அமரும் வலம்புரி—வண்டுகள்படிகின்ற நந்தியாவர்த்தமும், மாதவி—துளசியும், முல்லை—முல்லையும், மல்லிகை—மல்லிகையும், செவ்வந்தி— செவ்வந்தியும், பிச்சி—பிச்சியும், தண் தளிர் சேர் மணம் மிகுத்த மந்தாரம்—குளிர்ந்த தளிரையுடைய வாசனைமிகுந்த மந்தாரமும், கரவீரம்—அலரியும், சாதி—சிறுசண்பகமும், வாச புண்டரிகம்—வாசனைபொருந்திய தாமரையும், கருங்குவளை—கருங்குவளையுமாகிய இவைகளின், போதுகள் தூய்—புஷ்பங்களைத் தூவி, அருச்சனைகள் புரிந்து போற்றி—பூசனைகள்செய்து தோத்திரப்பண்ணி எ—று. (கஉஅ)

சங்குபடகந் துடிமத் தளந்தாளந் தளங்கியசல் லரிமல் லாரி
மங்குன்முழக் கெனமுழங்கப் பரதவிதிப் படிநடன மகளி ராடக்
கங்குறனிற் கண்டுயிலா தண்டர்பிரா னருட்கோலக் கடலிற்காரி
னுங்குசிவ நிசிவிரத மாசியிற்பிற் சதுர்த்தசியி னோற்க லுற்றார்.

இ—ள்: சங்கு படகம் துடி மத்தளம் தாளம் தளங்கிய சல்லரி மல்லாரி மங்குல் முழக்கு என முழங்க—சங்கும் ஒருகட்பறையும் உடுக்கும் மத்தளமும் தாளமும் விளங்குகின்ற சல்லரியும் பம்பைமேளமும் ஆகிய இவைகள் மேகமுழக்கத்தைப்போல ஆரவாரிக்க, பரத விதிப்படி நடன மகளிர் ஆட—பரதசாத்திரமுறைப்படி நாடகக்கணிகையர்கள் நடிக்க, கங்குல் தனில் கண் துயிலாது—அவ்விரவின்கண்ணே நித்திரைசெய்யாது, அண்டர் பிரான் அருள் கோல கடலில்—தேவநாயகராகிய சிவபெருமானது அழகிய கிருபாசமுத்திரத்தில், காரின் நுங்கு—மேகமானது நீரையுண்ணுவது போல (அருள்நீரையுண்ணுதற்கிடமாயுள்ள) சிவநிசி விரதம்—சிவராத்திரிவிரதத்தை, மாசியின் பின் சதுர்த்தசியில் நோற்கல் உற்றார்— மாசிமாதத்தில் வருகின்ற அபரபக்கத்துச்சதுர்த்தசியில் அனுஷ்டித்தார்கள் எ—று. (கஉகூ)

ஈதுணரா னல்வினையோன் றிருந்தகனற் சுகுமார னிருபோ
ற் றேட்டின், மீதுலவு தடநெடுங்க ணுமைபாகன் சன்னிதிமுன்
மேவி வாசத், தாதுலவு நந்தனங்க டடவிமட மனைவியர்கூந் தற்
குச் சூட்டப், போதுகொய்வான் போதுமந்தப் போதுகண்டா ன
வணடந்த புதுமை யெல்லாம்.

இ—ள்: சுகுமாரன்—சுகுமாரனெனவன், ஈது உணரான் நல்வினை ஒன்று இருந்த அதனால்-இதனையறியாதவனாய் நல்லூழின்பாகமொன்றுகிடந்தமையால், இரு பொன் தோட்டின் மீது உலவு தட நெடும் கண் உமை பாகன் சந்நிதி முன் மேவி—பொன்னாலாகிய இரண்டு குண்டலங்களையுமணிந்த காதளவோடுகின்ற விசாலமாகிய நெடிய கண்களையுடைய உமாதேவிபங்காகிய சிவபெருமானது திருக்கோயிலின்முன்னேசென்று, வாச தாது உலவு நந்தனங்கள் தடவி—வாசனைபொருந்திய பூஞ்சோலைகளைத்தேடி, மட மனைவியர் கூந்தற்கு சூட்ட போது கொய்வான் போதும் அந்த போது—மடமையையுடைய தன்மனைவியர்களது அளகபாரத்துக்குச்சூட்டுதற்கு மலர்களைக்கொய்யும்பொருட்டுச்செல்லுஞ்சமையத்தில், அவண் நடந்த புதுமை எல்லாம் கண்டான்—அவ்விடத்து நடைபெற்ற அதிசயங்கள்யாவற்றையும் கண்டான் எ—று. (களo)

இங்கொராற் புதமிதுவெ னிரவிலென்றத் திசைநோக்கு
மெல்லை மாந்த, ரங்கணிறைந் தரகரசங் கரவெனமூ வைந்துகன்
ன லகன்ற பின்னர்த், தங்கியபொங் கொளித்தீபத் தட்டேந்திப்
பரிமாறுஞ் சமயந் தன்னிற், றிங்களணி செஞ்சடையோ னினி
துறையுஞ் சிவலிங்கந் தெரிசித் தானே.

இ—ள்: இரவில்—இராக்காலத்தில், இங்கு ஒரு அற்புதம் இது என் என்று—இங்கே ஒரு ஆச்சரியம் இருந்தபடி என்னைஎன்று, அத்திசை நோக்கும் எல்லை—அத்திக்குமுகமாகப்பார்க்கும்பொழுது, மாந்தர் அங்கண் நிறைந்து அரகர சங்கர என—மனுடர்கள் அவ்விடத்துக்கூடி அரகரசங்கரவென்றுஸ்தோத்திரித்து, மூவைந்து கன்னல் அகன்ற பின்னர்—பதினைந்து நாழிகைசென்ற அர்த்தராத்திரிப்போதில், பொங்கு ஒளி தீப தட்டு ஏந்தி பரிமாறும் சமயம் தன்னில்—பொலிவாகிய ஒளிதங்கிய தீபத்தட்டைத் தாங்கி ஆராதனைசெய்கின்ற சமையமாயிற்று அப்போது, திங்கள் அணி செம் சடையோன் இனிது உறையும் சிவலிங்கம் தெரிசித்தான்—சந்திரனைத்தரித்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் நன்குவீற்றிருந்தருளுகின்ற சிவலிங்கத்தைத்தரிசித்தான் எ—று.

ஏ அசை. (களக)

மீட்டுமந்த வனத்திலெய்தி வெவ்வினைகள் பலபுரிந்து விருப்ப நெஞ்சிற், காட்டுமனைக் கிழத்தியரோ டின்பநல நுகர்ந்துசின்னாட் கழிந்தபின்னர், வாட்டுபெரும் பிணியலைப்ப மத்தெறியுந் தயிரின்மன மறுகி மாழ்கி, யீட்டுபெரும் பாதகந்தா னிறந்ததெனத் தனதுடனீத் திறந்திட்டானே.

இ—ள்: மீட்டும் அந்த வனத்தில் எய்தி வெவ் வினைகள் பல புரிந்து—பின்னருமக்காட்டிற்சென்று கொடிய தீமைகள்பலவற்றையுஞ்செய்து,

நெஞ்சில் விருப்பம் காட்டும் மனைக்கிழத்தியரோடு இன்ப நலம் நுகர்ந்து சி ன்னாள் கழிந்த பின்னர்—மனத்தில் ஆசையைக்கொடுக்கின்ற தன்மனைவிய ரோடு இன்பசுகத்தையனுபவித்துச்சிலதினங்கள்சென்றபின்பு, வாட்டு பெ ரும் பிணி அலைப்ப—வருத்துகின்ற பெருநோய்வருத்த, மத்து எறியும் தயி ரின் மனம் மறுகி மாழ்கி—மத்தினாற்கடையப்படுகின்ற தயிரைப்போல மன ங்கலங்கிமயங்கி, ஈட்டு பெரும் பாதகந்தான் இறந்தது என—சம்பாதித்த மி க்கபாவங்களெல்லாம் அழிந்தாற்போல, தனது உடல் நீத்து இறந்திட்டா ன்—தன்னுடம்பைவிடுத்து உயிர் துறந்தனன் எ—று.

ஏ அசை. (கருஉ)

வேறு.

பெரிய வாயரகல் வானி னுற்றசிறு பிறைபெ யிற்றர்சிகை பெற்றெழுந், தெரியு நீள்வடவை யொத்தகுஞ்சிய ரிடித்த சொல் லினர் துடித்துநீர், சொரியு மாரிமுகி லால காலமிவை தொக்க நீ லவரை யொக்குமா, கரியமேனியர் சிவந்த கண்ணினர்கள் கால தூதர்பலர் மேவினார்.

இ—ள்: பெரிய வாயர்—அகன்ற வாயையுடையவர்களும், அகல் வானின் உற்ற சிறு பிறை எயிற்றர்—விசாலமாகிய ஆகாயத்திற் சஞ்சரிக்கி ன்ற சிறிய பிறையையொத்த வக்கிரதந்தங்களையுடையவர்களும், சிகைபெ ற்று எழுந்து எரியும் நீள் வடவை ஒத்த குஞ்சியர்—கொழுந்துவிட்டு மேல் நோக்கியெரிகின்ற நீண்டவடவாமுகாக்கினியைப்போன்ற (சிவந்த) குடுமி யையுடையவர்களும், இடித்த சொல்லினர்—இடிபோன்ற வார்த்தையையு டையவர்களும், துடித்து நீர் சொரியும் மாரி முகில் ஆலு காலம் இவை தொ க்க நீலவரை ஒக்கும் மா கரிய மேனியர்—மின்னி மழையைப்பெய்கின்ற மு கிலும் ஆலகாலவிடமுமாகிய இவை செறியப்பெற்ற நீலமலைகளைநிகர்த்தமி கக்கரிய உருவத்தையுடையவர்களும், சிவந்த கண்ணினர்கள்—சிவந்தகண்க ளையுடையவர்களுமான, கால தூதர் பலர் மேவினார்—யமதூதர்கள் பலர் ஆ ங்குவந்தனர் எ—று. (கருரு)

தால மொத்தகர மீதெ டுத்தசிலை தண்டுவாளிவளை சக்கரஞ், சூல மிக்கவடி வாள்சி ரத்தொகை துணிக்கு நீடிய கணிச்சிகூர், வேல முற்கழுமுள் பிண்டி பாலமொடு வீசு பாசமிவை கொண்டு நீள், வால சைத்துமிகு புலிபுல் வாயினை வளைத்ததா மென வ ளைத்தனர்.

இ—ள்: தாலம் ஒத்த கரம் மீது எடுத்த—பனையைப்போன்ற நீண் ட கைகளிற்றாங்கிய, சிலை—வில்லும், தண்டு—தண்டமும், வாளி—அம்பு களும், வளை—வளைதடியும், சக்கரம்—சக்கரமும், சூலம்—சூலமும், மிக்க வடி வாள்—மிகக்கூரியவாளும், சிர தொகை துணிக்கும் நீடிய கணிச்சி—

(பகைவர்களது) சிரங்களை வெட்டுகின்ற நீண்டமழுவும், கூர் வேல்— கூரிய வேலும், அழல் கழுமுள்——அக்கினிபோன்ற ஈட்டியும், பிண்டிபாலம் ஒடு— இருப்புலக்கையுடன், வீசு பாசம் இவை கொண்டு-வீசப்படுகின்றபாசமும் ஆகிய இவற்றைக்கொண்டு, மிகு புலி நீள் வால் அசைத்து— மிகுதியாகிய புலிகள் நீண்டவாலை அசைத்துக்கொண்டு, புல் வாயினை வளைத்தது ஆம் என வளைத்தனர்—மானைச்சூழ்ந்தாற்போல வந்து வளைத்தார்கள் எ—று. (கநுச)

பற்று மென்பர்சிலர் பாவி யாவிபத றிப்ப தைக்கவிரி பாறை யி, னெற்று மென்பர்சில ரீரநாவதனை யீரு மென்பர்சிலர் பாரெலா, முற்று ணர்ந்துகொலை செய்த கால்கரமொ டித்தி ரென்றி வையுரைத்துமுன், மற்ற டம்புய முரிந்து சிந்திட வரிந்து கட்டினர் வருத்தியே.

இ—ள்: சிலர் பற்றும் என்பர்—அத்தூதரிற் சிலரிவனைப்பிடியுங்களென்பர், சிலர் பாவி ஆவி பதறி பதைக்க விரி பாறையின் எற்றும் என்பர்—சிலர் பாவியாகிய இவனுயிர்துடித்துப் பதைக்கும்படி பரந்தகற்பாறையில் மோதுங்களென்பர், சிலர் ஈர நா அதனை ஈரும் என்பர்— சிலர் ஈரமாகிய நாக்கைவெட்டுங்களென்பர், (சிலர்) பார் எலாம் உற்று உணர்ந்து கொலை செய்த கால் கரம் ஒடித்திர் என்று இவை உரைத்து— (சிலர்) பூமியெங்குந்திரிந்துதேடிக் கொலைசெய்த இவனது கால்களையும் கைகளையும் முரியுங்களென்று இன்னோரன்ன பலவற்றையுங்கூறி, முன்—முதலில், மல் தடம் புயம் முரிந்து சிந்திட வருத்தி வரிந்து கட்டினர்— வலிய விசாலமாகிய புயங்கள்முரிந்து சிதையும்படி வருத்தி (கயிற்றினால்) வரிந்து கட்டினர் எ—று.

ஏ அசை. (கநுரு)

அடிப்பர் பற்பல விலங்கு கொன்றுதசை யன்று மென்றுநனி தின்றபல், லொடிப்பர் மார்புபழு வூடு தைப்பர்கதை யோச்சி மேலிட வுரப்பிமே, லிடிப்பர் பாசமது கொண்டு கண்டமதி லிட்டிறுக்கியிரு கையினும், பிடிப்பர் கண்ணிணை பிதுங்க வீர்த்துநெறி பேருவார்முயலும் வேலையில்.

இ—ள்: அடிப்பர்—அடிப்பார்கள், பற்பல விலங்கு கொன்று அன்று தசை மென்று நனி தின்றபல் ஒடிப்பர்-பலபலமிருகங்களையுங்கொலைசெய்து அந்நாளில் மாமிசத்தை அதுக்கிமிகவுமுண்ட பற்களைச் சிதைப்பார்கள், மார்பு பழு ஊடு உதைப்பர்—மார்பினும் பழுவினுமுதைப்பார்கள், கதை ஓச்சி மேலிட உரப்பி மேல் இடிப்பர்—தண்டாயுதத்தை மேலேபடும்படி வீசி அதட்டிச் சரீரத்திலிடிப்பார்கள், பாசம் அது கொண்டு கண்டம் அதில் இட்டு இறுக்கி—பாசத்தைக்கொண்டு கழுத்தின்மாட்டியிறுக்கி, இரு கையினும் பிடிப்பர்—இரண்டுகைகளினும் பிடிப்பார்கள், கண் இணை பிதுங்க ஈர்த்து நெறி பேருவார் முயலும் வேலையில்—கண்களிரண்டும் புறப்படும்படி இ

மூத்துக்கொண்டு செல்லும்வழியே செல்லுதற்குத் தொடங்கும்பொழுதில் எ—று. (கசுசு)

வணங்கி முந்தியெதிர் நின்ற நந்திதனை வருக வென்றெமது
வாயில்வாழ், கணங்கள் சென்றொரு கணத்தி னெய்தியடு கால
தூதர்கொடு போகமுன், குணங்கெ டாதசுகு மார னைக்கயிலை
கொடுவ ரச்சடுதி கூறெனாப், பணங்கொள் பாம்புமதி பாணி வே
ணியணி பரம னற்கருணை பண்ணினான்.

இ—ள்: பணம் கொள் பாம்பு மதி பாணி வேணி அணி பரமன்—படம்பொருந்திய பாம்புகளையும் சந்திரனையும் கங்கையையும் சடைமுடியிற்றரித்த சிவபெருமான், வணங்கி முந்தி எதிர்நின்ற நந்தி தனை வருக என்று—வணக்கத்தோடு விரைந்து எதிராகநின்ற திருநந்திதேவரை இங்குவருவாயென்று அழைத்து, எமது வாயில் வாழ் கணங்கள் சென்று ஒரு கணத்தின் எய்தி—எமது வாயிலில்வசிக்கின்ற கணத்தவர்கள்போய் ஒருகணப்பொழுதினுட்கிட்டி, குணம் கெடாத சுகுமாரனை—நன்மைநீங்காத சுகுமாரனை, அடு கால தூதர் கொடு போகமுன்—கொலைபுரிகின்ற யமதூதுவர்கள் கொண்டுபோவதற்குமுன்னமே, கயிலை கொடு வர சடுதி கூறு எனா நல் கருணை பண்ணினான்—கயிலாயகிரிக்கு கொண்டுவரும்படி விரைவில் ஆஞ்ஞாபிக்கக்கடவையென்று நல்ல கிருபைசெய்தருளினர் எ—று. (கசுஎ)

போற்றி யங்குவிடை கொண்டு வாயிலிடை போந்து நந்திக
ண நாதர்போய்க், கூற்றி னாருயிர் குடித்த காலனருள் கூர வந்த
சுகு மாரனைத், தேற்றி யாதரவு செப்பி யன்பினொடு செம்பொ
ன் மாமணி விமானமீ, தேற்றி யோர்நொடியில் வம்மி னீரென
வியம்பி யங்கவரை யேவினான்.

இ—ள்: நந்தி போற்றி அங்கு விடை கொண்டு வாயில் இடை போந்து—நந்திதேவர் துதித்து அவ்விடத்தினின்றும் அனுமதிபெற்று முதல் வாயிலையடைந்து, கணநாதர் நீர் போய்—கணாதிபர்காள் நீங்கள் (விரைவிற்) சென்று, கூற்றின் ஆர் உயிர் குடித்த காலன் அருள் கூர வந்த சுகுமாரனை—இயமனைக் (காலாலுதைத்து) அவனது அரிய ஆன்மாவைச்சிதைத்தருளிய சிவபெருமானனுக்கிரகஞ்செய்யும்படி தோன்றிய சுகுமாரனை, தேற்றி ஆதரவு செப்பி—தெளிவித்து உபசாரவார்த்தைகளைக்கூறி, அன்பினொடு செம்பொன் மாமணி விமானம் மீது எற்றி—அன்போடு செம்பொன்னாற்செய்யப்பட்ட சிறந்த இரத்தினமழுத்தப்பெற்ற விமானத்தின்மேலேற்றிக்கொண்டு, ஓர் நொடியில் வம்மின் என இயம்பி அங்கு அவரை ஏவினான்—ஒருமாத்திரைப்பொழுதிலிங்குவரக்கடவீரென்று கூறி அவ்விடத்திற்கவர்களையனுப்பினார் எ—று. (கசுஅ)

நீற ணிந்திலகு நெற்றி யார்மிக நெடுத்த புன்சடை முடித்து ளா, ராற ணிந்தருளு மெந்தை சேவடி யகத்தி ருத்தியரு ளன்பி னோ, ரூற ணிந்துவரு முக்கு றும்பற வொருக்கி யோசைகள் பெ ருக்கநற், பேற ணிந்துகிள ரிரச தக்கிரி பிரிந்தி டாமலுறை பெட் பினோர்.

இ—ள்: நீறு அணிந்து இலகு நெற்றியார்—விபூதியணிந்து விளங்கு கின்ற நெற்றியையுடையவர்களும், மிக நெடுத்த புன் சடை முடித்துளார்—அதிகம்நீண்ட மிருதுவாகிய சடைமுடியையுடையவர்களும், ஆறு அணிந்து அருளும் எந்தை சே அடி அகத்து இருத்தி அருள் அன்பினோர்—கங்கையைத் தரித்தருளிய எமதுபரமபிதாகிய சிவபெருமானது சிவந்தபாதங்களை மனத்தி லிருத்தலால் அனுக்கிரகம்பெற்ற அன்பையுடையவர்களும், ஊறு அணிந்து வரு முக்குறும்பு அற ஒருக்கி—நன்மைக்கிடையூறான காமம் வெகுளி மயக்க ம் ஆகிய முக்குறும்புகளையும் முற்றநசித்து, ஓசைகள் பெருக்க நல் பேறு அணிந்து—கீர்த்திகள்பெருகும்படி நல்ல அருட்பேறுகளைத்தாங்கி, கிளர் இரசதக்கிரி பிரிந்திடாமல் உறை பெட்பினோர்— விளங்குகின்ற வெள்ளியங்கிரியை என்றும்நீங்காது வாழ்ந்திருக்கின்ற பெருமையையுடையவர்களும் எ—று. (கஙகூ)

தாம மாகமிகு கண்டி கைத்தொடை தரித்து ளார்வினை யரித்துளா, ரேம மால்வரை யசைத்தொர் கையினி லெடுக்கு மற்புய மிடுக்கினோர், நாம வேறிகிரி கொந்த ழற்கழுமு ணருக கைதப்ப டைக ணவியநீள், வாம மேவுவடி வாளி னோடுதிறன் மறலி தூத ரிடை மருவியே.

இ—ள்: தாமம் ஆக மிகு கண்டிகை தொடை தரித்துளார்—மாலையாக அதிக உருத்திராக்கவடங்களைத்தரித்தவர்களும், வினை அரித்துளார்—தீவினைகளைநீக்கியவர்களும், ஏம மால் வரை அசைத்து ஓர் கையில் எடுக்கும் மல்புய மிடுக்கினோர்— பெரிய மேருமலையையசைத்து ஒருகையினால் தூக்கத்தகுந்த வலிய புயங்களையுடையவர்களும் (ஆகிய கணநாதர்கள்), நாம வேல்—அச்சம்பொருந்திய வேலும், திகிரி—சக்கரமும், கொந்து அழல் கழுமுள்—கொதித்து அழலுகின்ற ஈட்டியும், நகு கதை படைகள்—ஒளிபொருந்திய தண்டாயுதங்களும், நவியம்—கோடரியும், நீள் வாமம் மேவு வடி வாள்—நீண்ட அழகுபொருந்திய வாளும் ஆகிய இப்படைகளுடன், திறல் மறலி தூதரிடை மருவி—வலிய யமதூதவர்கள்செல்லுமிடத்திற் சென்று எ—று.

ஏ அசை. (கசO)

விடுமி னிந்தமறை வேதி யன்றனை விடுத்தி டாவிடில் விறற் படை, யெடுமி னெம்முட னெதிர்த்து வெஞ்சம ரியற்றி யுங்கள்

வலி யாவையுங், கெடுமி னங்கமுடி புயமெ னும்பெரிய கிரியி ழ
ந்துயிரை யெமதுகைக், கொடுமி னென்றுசில வாசகங்களெதிர்
கூறி னார்வலிமை கூறவே.

இ—ள்: இந்த மறை வேதியன் தனை விடுமின்—இந்த வேதத்தைய
றிந்த பிராமணனை விடுங்கள், விடுத்திடாவிடில் விறல் படை எடுமின்—வி
டுக்காவிடின் வலிய ஆயுதங்களையெடுங்கள், எம்முடன் எதிர்ந்து வெம்ச
மர் இயற்றி உங்கள் வலி யாவையும் கெடுமின்—எங்களோடு எதிர்த்துக்கொ
டிய யுத்தத்தைச்செய்து உங்கள் வன்மைமுற்றையுமழித்துக்கொள்ளுங்கள்,
அங்கம் முடி புயம் எனும் பெரிய கிரி இழந்து உயிரை எமது கை கொடுமி
ன் என்று— அவயவங்களும் தலைகளும் புயங்களென்கின்ற பெரியமலைக
ளும் ஆகியஇவற்றை இழந்து நும்முயிரை நமதுகைவசப்படுத்துங்களென்று,
சில வாசகங்கள் வலிமை கூற எதிர் கூறினார்— சிலவார்த்தைகளைத் தம்வலி
மை அதிகரிக்க எதிர்த்துக்கூறினார்கள் எ—று.

ஏ அசை. (கசக)

வேறு.

முனிவர் போன்மிக நீறு பூசி முறுக்கி வேணி முடித்துளீர்
தினையி லோரொரு பாதி நீதிகள் செய்தி லீரெமை வெய்யதீ
யனைய வாய்மொழி பேசி யேசி யடர்த்து வன்மை நடத்துவீ
ரினைய ராயிது செய்த நீரிவண் யாவ ரேவலி னெய்தினீர்.

இ—ள்: முனிவர் போல் மிக நீறு பூசி வேணி முறுக்கி முடித்துளீ
ர்— முனிவர்களைப்போல மிக விபூதியைத்தரித்துச் சடையைமுறுக்கி முடி
த்திருக்கின்றீர், ஓர் தினையில் ஒருபாதி நீதிகள் செய்திலீர்—ஒரு தினையின்
பாதியளவாயினும் நீதிகளைச்செய்தீரல்லீர், எமை வெய்ய தீ அனைய வாய்
மொழி பேசி ஏசி அடர்த்து வன்மை நடத்துவீர்—எங்களைக் கொடிய அக்கி
னிபோல உமதுவாயினின்றுந்தோற்றிய கடுமொழிகளினாலிகழ்ந்து வைது
நெருக்கி உமது வலிமையைச்செலுத்துகின்றீர், இனையராய் இது செய்த நீ
ர்—இத்தன்மைகளையுடையராய் இச்செயல்களைச்செய்த நீவிர், யாவர் ஏவ
லின் இவண் எய்தினீர்—எவரது ஏவலினாலிங்குவரப்பெற்றீர் எ—று.(கசஉ)

என்று வன்றிற லியம தூத ரியம்ப லுந்தவ ரென்றுபொற்
குன்று கொண்டுமுன் முப்பு ரந்தழல் கொள்ள மென்னகை கோட்
கன்று கொண்ட கரத்த னையெதிர் காம னைக்குள விழியழற்[டி மான்
கன்ற ளித்தரு ளாதி நாயக னன்பர் பின்பிது கூறுவார்.

இ—ள்: என்று வன் திறல் இயமதூதர் இயம்பலும்—என்று இவ்வி
தமாய் மிக்கவலிமையுடைய யமதூதுவர்கள்கூறுதலும், பொன்குன்று தவர்
என்று கொண்டு முன் முப்புரம் தழல் கொள்ள மெல் நகை கோட்டி— மே

ருமலையை வில்லாகத்தாங்கி முன்னைக்காலத்தில் திரிபுரங்களேயும் அக்கினிக துவும்படி புன்னகைசெய்து, மான் கன்று கொண்ட கரத்தனும்—மான்கன்றைத்தாங்கிய திருக்கரத்தையுடையராய், எதிர் காமனை குளவிழி அழற்கு அன்று அளித்து அருள் ஆதி நாயகன் அன்பர்— எதிர்த்துவந்த மன்மதனை நெற்றிக்கண்ணிற்றோன்றிய அக்கினிக்கு அந்நாளிலிரையாகக்கொடுத்தருளிய ஆதிதலைவராகிய சிவபிரானது அன்பர்களாய கணநாதர்கள், பின்பு இது கூறுவார்—பின்னரிவ்வசனங்களைக் கூறுவாராயினர் எ—று. (கசங)

துண்ட வான்மதி கங்கை மாநதி சூடி னேனிசை பாடிமா
வண்ட ருமலர் முண்ட காசன மறைய வன்பொறை மண்டல
முண்ட மான்முத லும்பர் மங்குவ ரிம்ப ரென்பதை யுன்னிமு
னெண்ட ராவிட முண்ட ராவணி கண்ட மீதி லிருத்தினேன்.

இ—ள்: துண்ட வான்மதி கங்கை மா நதி சூடினேன்— வெள்ளிய பிறைச்சந்திரனையும் பெரிய கங்கைநதியையுந்தரித்தவரும், இசை பாடி மா வண்டு அரு மலர் முண்ட காசன மறையவன்—கீதம்பாடிப் பெரியவண்டுகள்நீங்காத தாமரைமலராசனராகிய பிரமதேவரும், பொறை மண் தலம் உண்ட மால் முதல் உம்பர்—பாரமாகிய பூமியையுண்ட விஷ்ணுமூர்த்தியும் முதலாகிய தேவர்கள், இம்பர் மங்குவர் என்பதை உன்னி— இவ்விடத்து இறந்துபடுவரென்று கருதி, முன் எண் தரா விடம் உண்டு அரா அணி கண்ட மீது இருத்தினேன்—பண்டைக்காலத்து அளவற்ற நஞ்சையுண்டு சர்ப்பங்களையணிந்த திருக்கண்டத்திலேநிறுத்தியவரும் எ—று. (கசச)

கால னாருயிர் கால வேயொரு காலி னாலுதை செய்துநீ
டால மேநிக ரந்த காசுர னவனை முத்தலை யயினெடுஞ்
சூல மேகொடு குத்தி மார்பு துளைத்து வானி லுயர்த்தியோ
லோல மேயென வாவி பாவி யுலக்கு மட்டு முணக்கினேன்.

இ—ள்: காலன் ஆர் உயிர் காலவே ஒரு காலினால் உதைசெய்து— யமனது உயிரிறந்துபடும்படி ஒரு திருப்பாதத்தினாலுதைத்தருளியவரும், நீடு ஆலமே நிகர் அந்தகாசுரன் அவனை— மிக்க நஞ்சையொத்த அந்தகாசுரனை, முத்தலை அயில் நெடும் சூலமே கொடு குத்தி—முக்கவர்பொருந்திய கூரிய நெடிய சூலாயுதத்தாற்குத்தி, மார்பு துளைத்து வானில் உயர்த்தி—மார்பைத்துளைத்து ஆகாயத்தின்கண்ணேயுயரத்தூக்கி, ஓல ஓலம் ஏ என—அபயமபயமென்றலற, பாவி ஆவி உலக்குமட்டும் உணக்கினேன்— அப்பாதகனது உயிர் இறந்துபோகும்வரையும் வருத்தியவரும் எ—று. (கசரு)

திரிக ளுஞ்சல மதனை யம்மை திடுக்க மெய்த வெடுத்தவ
னுரிய மாமணி முடிபு னைந்தக மொருப துங்கர மிருபது
நெரிய நாரண னேன மாய்முத னேடு பாத மிரண்டிலோர்
விரியு நாண்மல ரடியி னுயக விரல மூர்த்தி மிதித்துளான்.

இ—ள்: திரிகோணசலம் அதனை அம்மை திடுக்கம் எய்த எடுத்தவன் உரிய—திரிகோணசலத்தை உமாதேவியார் திடுக்கிடும்படி தூக்கிய இராவண னது, மா மணி முடி புனைந்த கம் ஒருபதும் கரம் இருபதும் நெரிய—பெரி ய இரத்தினகிரீடங்களணிந்த பத்துச்சிரசுகளும் இருபதுகைகளும் நெரியும்ப டி, நாரணன் எனமாய் முதல் நேடு பாதம் இரண்டில்—மகாவிஷ்ணுமூர்த் தி பன்றிவடிவங்கொண்டு முன்னைநாளில் தேடிச்சென்ற இரண்டுதிருவடிக ளுள், விரியும் நாள் மலர் ஓர் அடியின் நாயக விரல் அழுத்தி மிதித்துளா ன்—விரிந்த புதியதாமரைமலரைநிகர்த்த ஒருபாதத்தின்பெருவிரலாலூன்றி மிதித்தருளியவரும் எ—று. (சசசு)

உறுதி வானவர் மான வர்க்கிடை யூறு றுமல் விலக்கவுஞ்
சிறுமை தீர்தர முத்தி புத்திகள் செய்த வர்க்கருள் செய்யவு
மறு விலாமதி போல வால மருப்பு நெற்றியி னுங்கணும் [ன்.
பெறும தாசல வதன னுமொரு பிள்ளை பெட்பொடு பெற்றுளோ

இ—ள்: உறுதி வானவர் மானவர்க்கு இடையூறு உறுமல் விலக்கவு ம்—நிலையுள்ள தேவர்களுக்கும் மனுடர்களுக்கும் துன்பம்வராது தடுத்தற்கும், அவர்க்கு சிறுமை தீர்தர முத்தி புத்திகள் செய்து அருள் செய்யவும்— அவர் களின் சிறுமைகள்நீங்கும்படி மோட்சசுகத்தையும் போகவின்பங்களையுங்கொ டுத்து அனுக்கிரகஞ்செய்யவும், மறு இலா மதி போல வால மருப்பும் நெற் றியின் கணும் பெறும்—களங்கமற்ற சந்திரனைப்போல வெண்மையான கொம்பையும் திருநெற்றியிற்கண்ணையும்பெற்ற, மத அசல வதனனும்—மத ம்பாய்கின்ற யானைமுகத்தையுடையராய், ஒரு பிள்ளை பெட்பொடு பெற்று ளோன்— ஒரு புத்திரராகிய விநாயகக்கடவுளை அன்போடுபெற்றருளியவரு ம் எ—று.

நெற்றியினும் என்றதில் உம்மை அசைநிலை. கண்ணும் கணுமெனத் தொக்கது. (கசஎ)

நாலு மாமறை யோது நான்முக னரி நாசி கறுக்கிவந்
தாலு நீடிரை யத்தி யுற்றெழு மர்க்கர் பற்க டகர்த்துநற்
சாலு மாமதி விட்டி கற்புரி தக்க னைந்தலை வெட்டிமுற்
கோலும் வேள்வி யழித்தி யென்றொரு கோர வீரனை நல்கினோன்.

இ—ள்: நாலு மா மறை ஓது நான்முகன் நாரி நாசி கறுக்கி—நான் குவேதங்களையுமோதிய பிரமதேவரது தேவியாகிய சரசுவதியினது மூ க்கையரிந்து, வந்து ஆலும் நீள் திரை அத்தி உற்று எழும் அர்க்கர் பற்கள் தகர்த்து—ஒலிம்பிஒலிக்கின்ற நீண்ட திரைகளையுடைய சமுத்திரத்தில்வந்து தோன்றுகின்ற ஆதித்தர்களதுபற்களைச் சிதைத்து, நல் சாலும் மா மதி வி ட்டு இகல் புரி தக்கனை தலை வெட்டி—நன்மைமிக்க சிறந்த புத்திகளைவிடுத் துப் பகைபுரிந்ததக்கனது சிரசையறுத்து, முன் கோலும் வேள்வி அழித்தி

என்று—அவன் முன்னரேசெய்யும்படிதொடங்கிய யாகத்தை அழிக்கக்கட வையென்று, ஒரு கோர வீரனை நல்கினேன்—ஒப்பற்ற உக்கிரகுணத்தையு டைய வீரபத்திரரைப்பெற்றருளியவரும் எ—று. (கசஅ)

கொடிய தாரக னுயி ரந்தலை கொண்ட சிங்க முகன்கடற்
படியின் மிக்குயர் சூர நீதிசெய் பற்ப றானவர் குலமெலாம் [ற்
வடிகொள் வேல்கொடு கொன்று பொன்றிகழ் வானநாடு புரப்பத
கடியர் தீவினை யறவ ருட்டரு மறுமு கத்தனை யருளினேன்.

இ—ள்: கொடிய தாரகன்—கொடியவனாகிய தாரகாசுரனையும், ஆயிரம் தலை கொண்ட சிங்கமுகன்—ஆயிரஞ்சிரசுகளையுடைய சிங்கமுகாசுரனையும், கடல் படியில் மிக்கு உயர் சூர்—கடலாற்சூழப்பட்ட பூமியிலே மிகவுமுயர்ந்தசூரபன்மனையும், அநீதி செய் பல் பல் தானவர் குலம் எலாம்-நீதியற்றவைகளைச்செய்த பலவாகிய அசுரர்குலம்முழுவதையும், வடி கொள் வேல் கொடு கொன்று—கூரிய வேலாயுதத்தாலழிவுசெய்து, பொன் திகழ் வான நாடு புரப்பதற்கு—பொன்மயமாய்விளங்குகின்ற தேவருலகத்தைக்காக்கும்படியும், அடியர் தீவினை அற அருள்தரும் அறுமுகத்தனை அருளினேன்—அடியார்களது தீயவினைப்பகுதிகளெல்லாம் அழியும்படியும் அனுக்கிரகிக்கின்ற ஆறுதிருவதனங்களையுடைய சுப்பிரமணியக்கடவுளைப்பெற்றருளியவருமாகிய பரமபதியானவர் எ—று. (கசகூ)

ஏவ யாமிவ ணெய்து கின்றன மிங்கி வன்றனை விட்டுநீர்
போவ தேகட னென்று நின்றுள பொறுமை யோடிவை புகலவும்
பாவ சாகர மாகு மானமில் பனவ னைப்பல நரகின்வாய்
மேவ வேவிட லன்றி மீள விடோமெ னுவலி பேசினார்.

இ—ள்: ஏவ யாம் இவண் எய்துகின்றனம்—விடைகொடுத்தனுப்ப யாங்களிங்குவருகின்றோம், இங்கு இவன் தனை விட்டு நீர் போவதே கடன் என்று- இச்சுகுமாரனைவிடுத்து நீங்கள் செல்லுதலேமுறையென்று, உள பொறுமையோடு நின்று இவை புகலவும்—மனப்பொறுமையுடன்நின்று இவைகளைக்கூறவும், பாவசாகரமான மானம் இல் பனவனை— பாவசமுத்திரமாகவிருக்கின்ற தகுதியில்லாத இப்பார்ப்பானை, பல நரகின் வாய் மேவவே விடல் அன்றி—பலநரகங்களிற் செல்லும்படி செலுத்துவதேயன்றி, மீள விடோம் என வலி பேசினார்—மீண்டுவரும்படி விடோமென்று தமதுவன்மையைப்புகன்றனர் எ—று. (கரு0)

மட்ட றப்புரி புன்றொழிற்சுகு மார னரவ ரைப்புயக்
கட்ட றுத்தன ருட்க றுத்தனர் கட்க னற்பொறி கக்கவாய்
விட்ட ழைத்திதழ் பற்க டித்து விடுத்து நேமி யெடுத்துவே
றெட்டி லக்கமில் வாளி மாமழை தூவி னார்சிவ தொண்டரே.

இ—ள்: சிவ தொண்டர்—அச்சிவகணங்கள், புன் தொழில் மட்டு அற புரி சுகுமாரன் ஆர வரை புய கட்டு அறுத்தனர்— எளிய தொழில்களை அளவில்லாமற்செய்த சுகுமாரனது மலைபோன்ற புயத்திலுள்ள கட்டுகளைய றுத்து, உள் கறுத்தனர்— கோபங்கொண்டு, கண் கனல் பொறி கக்க வாய் விட்டு அழைத்து இதழ் பல் கடித்து—கண்களினின்றும் அக்கினிப்பொறிகள்சிந்த வாயினாலுரத்து அழைத்து அதரங்களைப் பற்களினாற்கடித்து, நேமி எடுத்து விடுத்து—சக்கராயுதத்தையெடுத்துச் செலுத்தி, வேல் தொட்டு—வேற்படையையுமேவி, இலக்கம் இல் வாளி மா மழை தூவினார்— அளவிடற்கரிய அம்புகளை மழைபோலச்செலுத்தினர் எ—று.

ஏ அசை. (கருக)

கரமு றிந்தனர் வார்க ழற்புனை காறு ணிந்தனர் கவுளுடன்
சிரமு டைந்தனர் சூல வேல்கதை திகிரி கால்வளை சிலைநெடுஞ்
சரமி ழந்தனர் குடர்ச ரிந்தனர் சவிகு றைந்தனர் தமதுவெந்
நுரநெ ரிந்தனர் தென்பு லத்திடை யோடினார்யம தூதரே.

இ—ள்: யமதூதர்— யமதூதுவர்கள், கரம் முறிந்தனர்—கைகள்முறிந்தும், வார் கழல் புனை கால் துணிந்தனர்—நீண்ட வீரக்கழலணிந்த கால்கள் வெட்டுண்டும், கவுளுடன் சிரம் உடைந்தனர்— கபோலங்களுஞ் சிரசுகளும்உடைந்தும், சூலம் வேல் கதை திகிரி கால் வளை சிலை நெடும் சரம் இழந்தனர்—சூலம் வேல் தண்டு சக்கரம் காலுறவளைக்கப்பட்ட வில்லு நெடிய அம்புகளாகிய இவற்றையிழந்தும், குடர் சரிந்தனர்—குடர்களீசரிந்தும், சவி குறைந்தனர்—வலிமையழிந்தும், தமது வெம் உரம் நெரிந்தனர்—தங்கள்முதுகுகளும் மார்புகளும் நெரியப்பெற்றும், தென் புலத்திடை ஓடினார்— யமபுரத்துக்கு ஓடிச்சென்றனர் எ—று.

ஏ-அசை. (கருஉ)

வேறு.

படிபுகழ்விஞ் சையர்நரப்புக் கருவிதட விச்சுருதிப் பண்கள் பாட, விடியொலியின் மிகவதிரு மந்தரதுந் துபிமுழங்க விரண்டு பாலும், கொடிகுடைகள் பலநிலவக் குலவியநற் கற்பகப்பொற் கோட்டிற் பூத்த, கடிகமழ்பூ மழைபொழியக் கற்றைமணித் திரணெடுங்காற் கவரி வீச.

இ—ள்: படி புகழ் விஞ்சையர் நரப்பு கருவி தடவி சுருதி பண்கள் பாட-பூமியில்வியக்துரைக்கப்படுகின்றவித்தியாதரர்கள் தமதுநரம்புகள்தொடுக்கப்பட்ட இசைக்கருவிகளைக் கையினாற்றடவி வேதகீதப்பண்களைப்பாடவும், இடி ஒலியின் மிக அதிரும் அந்தர துந்துபி முழங்க—இடியினதுசத்தம்போல மிகவுமாரவாரிக்கின்ற தேவதுந்துபிவாத்தியமொலிக்கவும், இரண்டு பாலும் கொடி குடைகள் பல நிலவ— இரண்டுபக்கத்திலும் பலகொடிகளும்

குடைகளும் பிரகாசிக்கவும், குலவிய நல் கற்பக பொன் கோட்டில் பூத்தக டி கமழ் பூ மழை பொழிய— விளங்குகின்ற நல்ல கற்பகவிருட்சத்தினது பொன்மயமான கொம்பரிற்பூத்த பரிமளமிகுந்த பூக்களை மழைபோலச்சொ ரியவும், சற்றை மணி திரள் நெடும் கால் கவரி வீச— கூட்டமாகிய இரத்தி னங்கள்பதித்துத் திரண்டுநீண்ட கால்களையுடைய சாமரங்கள் வீசவும் எ-று.

நகுமார நகைக்கருங்க ணரம்பையர்பல் லாண்டிசைப்ப நவை யிற்றீர்ந்த, சுகுமாரன் றனைக்கவின்செய் மானமிசைக் கொண்ட ணைந்தார் சுரர்கள் போற்றத், தகுமார னுடலடலை படவிழித்த தனிநுதற்கட் டலைவன் வைகு, மிகுமாரத் திரள்சாயத் தள்ளியரு விப்புனல்பாய் வெள்ளி வெற்பில்.

இ—ள்: நகும் ஆர நகை கரும் கண் அரம்பையர் பல்லாண்டு இசைப்ப—ஒளிருகின்ற முத்தன்ன பற்களையும் கரியகண்களையுமுடைய தேவப் பெண்கள் பல்லாண்டுகூறவும், நவையில் தீர்ந்த சுகுமாரன் தனை—குற்றத்தி னின்றும்நீங்கிய சுகுமாரனை, கவின் செய் மானம மிசை கொண்டு— அழுக மைந்த விமானத்தின்மேலேற்றிக்கொண்டு, தகு மாரன் உடல் அடலை பட விழித்த தனி நுதல் கண் தலைவன் வைகும்—தகுதியான மன்மதனதுசரீர ம் சாம்பராகும்படி திருநோக்கஞ்செய்தருளிய ஒப்பற்ற நெற்றிக்கண்ணையு டைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற, மிகும் ஆர திரள் சாய தள்ளி அருவி புனல் பாய் வெள்ளி வெற்பில்— மிக்கசந்தனவிருக்ஷங்களைக்கூட்ட மாய்ச் சரித்துத்தள்ளி அருவிநீர்பாய்கின்ற வெள்ளியங்கிரியில், சுரர்கள் போ ற்ற அணைந்தார்—தேவர்கள் துதிக்கப் போனார்கள் எ—று. (கருச)

பொங்குகதிர் விமானத்தி னின்றிழிந்து நந்திவிடப் புகுந்து பொற்பார், மங்குறவழ் வரையரசன் மடப்பாவை யிடப்பாக ம ருவத் தான, வெங்கரிக்கூற் றேந்தணையின் வீற்றிருக்கும் விம லனைவெண் டிரைகள் வீசுங், கங்கைநதி முடித்தசடைக் கண்ணு தலைக் கண்குளிரக் கண்ணுற் றானே.

இ—ள்: பொங்கு கதிர் விமானத்தின் நின்று இழிந்து— பொலிந்த கிரணங்களையுடைய தெய்வவிமானத்தினின்றிறங்கி, நந்தி விட புகுந்து— நந்திதேவர்வழிவிட உட்பிரவேசித்து, பொற்பு ஆர் மங்குல் தவழ் வரைய ரசன் மட பாவை இட பாகம் மருவ—அழகுநிறைந்த மேகங்கள்படிகின்ற ம லையரசன்பெற்ற உமாதேவியார் வாமபாகத்தமர, தான வெம் கரி கூற்று எ ந்து அணையில் வீற்றிருக்கும் விமலனை—மதம்பாய்கின்ற வெவ்விய யானைக ளுக்குப்பகையாயுள்ள சிங்கங்களினாலே தாங்கப்படுகின்ற ஆசனத்தின்மீது வீற்றிருந்தருளும மலரகிதரும், வெண் திரைகள் வீசும் கங்கை நதி முடித்த சடை கண் ணுதலை—வெள்ளிய திரைகளையெறிகின்ற கங்காநதியைத்தரித் த சடையையுடைய நெற்றிக்கண்ணருமாகிய சிவபெருமானை — கண் கு

ளிர கண்ணுற்ருன்— கண்கள் (மகிழ்விஞற்)குளிரலடையும்படி தரிசித்தான் (அச்சுகுமாரன்) எ—று.

ஏ—அசை. (கருரு)

கறைசெறியுங் கருந்தாதைச் செந்தாதிற் புரிந்ததன்மை க
டுப்ப நீதி, பொறையறிவொன் றில்லேனை நல்லறிஞ ருடன்கூ
ட்டிப் புரந்தாய் போற்றி, யிறைவபரம் பரவெனவீழ்ந் திறை
ஞ்சுதலு மெமதுருப்பெற் றிருத்தியிங்ங, னறைதருநற் கணங்க
ளுட னெனத்திருவாய் மலர்ந்தமல னருளிச் செய்தான்.

இ—ள்: கறை செறியும் கரும் தாதை செம் தாதில் புரிந்த தன்மை கடுப்ப—கறைபொருந்திய காரிரும்பைச் செம்பொன்ஞகமாற்றிஞற்போல, நீதி பொறை அறிவு ஒன்று இல்லேனை— நீதி பொறுமை நல்லறிவு என்பவற்றிலொன்றுமில்லாத எளியேனை, நல் அறிஞர் உடன் கூட்டி புரந்தாய்—நல்லஞானத்தையுடைய மேலோர்களுடன்சேர்த்துக் காத்தருளியவரே, இறைவ பரம்பர போற்றி என வீழ்ந்து இறைஞ்சுதலும்— தலைவரே முன்னவரே நமஸ்காரம் என்றுபலதுதிகளைக்கூறிவிழுந்துவணங்க, அமலன்—சிவபெருமான், எமது உரு பெற்று அறைதரு நல் கணங்களுடன் இங்ஙன் இருத்தி என திருவாய் மலர்ந்து அருளி செய்தான்—எமது சாரூபத்தையடைந்து கூறப்படுகின்ற நல்ல கணத்தவர்களோடு இவ்விடத்திலேவசிக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினுர் எ—று. (கருசு)

அக்கணத்திற் சுகுமார னரனுருப்பெற் ருண்டிருந்தா னம
ரிற்ருேற்றுத், தெக்கணத்திற் சென்றடைந்த தூதர்சமன் றனை
த்தொழுது திரைநீ ருண்ட, மைக்கணத்தி னசனியென வந்தெ
ம்மை யடித்தறிவின் மறையோன் றன்னைப், பொக்கணத்திற் ப
லியிரப்பான் கணங்கள்கயி லையிற்கொண்டு போனு ரென்ருர்.

இ—ள்: அக்கணத்தில் சுகுமாரன் அரன் உரு பெற்று ஆண்டு இருந்தான்—அப்பொழுதுசுகுமாரன் சிவபெருமானது சாரூபத்தையடைந்து ஆங்குவசித்தான், அமரில் தோற்று தெக்கணத்தில் சென்று அடைந்த தூதர்—யுத்தத்திற்ருேல்வியடைந்து யமபுரத்தைச்சேர்ந்ததூதுவர்கள், சமன் தனை தொழுது—யமனை வணங்கி, பொக்கணத்தில் பலி இரப்பான் கணங்கள்—பாத்திரங்கொண்டு (தாருகவனத்திற்) பலியிரந்தவராகிய சிவபெருமானதுகணத்தவர்கள், திரை நீர் உண்ட மை கணத்தின் அசனி என வந்து—திரைபொருந்திய கடல்நீரைப்பருகிய மேகக்கூட்டங்களினின்றும்வருகின்ற இடியைப்போல ஆரவாரித்து வந்து, எம்மை அடித்து—எங்களையடித்து, அறிவு இல் மறையோன் தன்னை—அறிவற்ற சுகுமாரனை, கயிலையில் கொண்டு போனுர் என்ருர்— கயிலாயகிரிக்குக்கொண்டுபோயினுர் என்று கூறினுர்கள் எ—று. (கருஎ)

கேட்டவுட னிருவிழியுங் கனற்பொறிகான் றிடச்சினமீக் கிளரச்செய்ய, வாட்டடக்கை புடைத்துநன்றெம் மதிகார மெனப்புகன்று வரைகள் போலுந், தோட்டடங்கள் குலுங்கநக்குச் சித்திரகுத் தனைநோக்கிச் சுகுமா ரன்பா, லீட்டருநற் புண்ணியங்களுண்டுகொனீ தெரிந்துவிரைந் தியம்பென் றானல்.

இ—ள்: கேட்டவுடன்—அதனைக்கேட்டமாத்திரத்தில், இரு விழியும் கனல் பொறி கான்றிட—இரண்டுகண்களினின்றுமக்கினிப்பொறிகள்சிதற, சினம் மீ கிளர—கோபம்அதிகரித்து, செய்ய வாள் தடக்கை புடைத்து—சிறந்த வாட்படையைத்தாங்கிய கைகளையொன்றோடொன்றுமோதி, எம் அதிகாரம் நன்று என புகன்று— எமதுஅதிகாரம் நன்றாயிருக்கின்றதென்றுகூறி, வரைகள் போலும் தடம் தோள்கள் குலுங்க நக்கு—மலைகளுக்குச்சமானமாகிய விசாலித்தபுயங்கள் குலுங்கும்படி சிரித்து, சித்திரகுத்தனை நோக்கி—சித்திரகுத்தனென்னும் கணக்கனைப்பார்த்து, சுகுமாரன் பால்—சுகுமாரனிடத்து, ஈட்டரும் நல் புண்ணியங்கள் உண்டு கொல் நீ தெரிந்து விரைந்து இயம்பு என்றான்—சம்பாதித்தற்கரிய நல்ல புண்ணியச்செயல்களுண்டோ அதனை நீயாராய்ந்து விரைவிற்சொல்லுவாயென்றான் எ—று.

ஆல் அசை. (கருஅ)

மற்றவனுந் தேர்ந்துசுகு மாரனெனுங் கோரமிகு மறையோன் றீமை, முற்றுமியற் றித்திரிந்தான் சென்மமுத லின்றுடல முடியுங் காறு, நற்றவம்புண் ணியமொழுக்க மிறையளவு மில்லெனப்பின் னமனு நெஞ்சிற், செற்றமுட னெழுந்துநதிச் சென்னியான் முன்னியான் செல்வ னென்றே.

இ—ள்: அவனும் தேர்ந்து—அச்சித்திரகுத்தனுமாராய்ந்து, சுகுமாரன் எனும் கோரம் மிகும் மறையோன் தீமை முற்றும் இயற்றி திரிந்தான்—சுகுமாரனென்னும் கொடுமைமிகுந்த பார்ப்பான் பாவங்கள் எல்லாவற்றையுஞ்செய்து திரிந்தான், சென்மம் முதல் இன்று உடலம் முடியும் காறும் நல் தவம் புண்ணியம் ஒழுக்கம் இறை அளவும் இல் என—சனனந்தொட்டு உடலிறக்குமிற்றைநாள்வரையும் நன்மைபொருந்திய தவமும் புண்ணியச்செயல்களும் நல்லொழுக்கமும் இறையளவாயினும் செய்ததில்லையென்றுகூற, பின் நமனும் நெஞ்சில் செற்றம் உடன் எழுந்து—அதன்மேல்யமனும் மனக்கோபத்தோடெழுந்து, நதி சென்னியான் முன் யான் செல்வன் என்று—கங்காநதியைத் திருமுடியிற்றரித்த சிவபெருமான்முன்னர் யான் செல்லக்கடவேனென்று எ—று.

மற்று ஏ அசைகள். (கருகூ)

நிழலுமிழுஞ் சனக்கிரியி னீலமுகி லிருந்ததனை நிகர்ப்ப நீண்
சுழறருநாக் கண்டைகண்டத் தசைந்தடிபேர்த் திடுந்தோறுங்

தொனிக்கவந்த, வழலுமிழ்கட் பெரும்பகட்டின் மிசையேறிக் குறையிறைவற கறைவான் செம்பொற், கழலணிசித் திரகுத்தனு டனமூதர் சூழ்வரத்திண் கயிலையெய்தி.

இ—ள் நிழல் உமிழ் அஞ்சனக்கிரியில் நீல முகில் இருந்ததனை நிகர்ப்ப—நிழலைச்செய்கின்ற கரிய மலையின்மேல் நீலநிறமாகிய மேகம்வந்து படிந்தாறபோல, நீண்ட அழல் தரு நா கண்டை கண்டத்து அசைந்து அடியெடுத்திடும் தோறும் தொனிக்க—நீண்டு சுழலுகின்ற நாக்கைகொண்ட கண்டாமணியானது கழுத்திற்கிடந்து அடியெயாக்கும்பொழுதெல்லாம் அசைந்து சத்திக்க, வந்த அழல் உமிழ் கண் பெரும் பகட்டின் மிசை எறி—தன்முன் பாசலுத அக்கினியைககாலுங் கண்களையுடைய பெரிய எருமைக்கடாவின்மேலேர்ந்து, இறைவற்குக் குறை அறைவான—சிவபெருமானுககுத்தனகுறையைமுறையிடும்பொருட்டு, செம் பொன் சழல் அணி சித்திரகுத்தனுடன்—செம்பொன்னாலாகிய வீரக்கழலணிந்த சித்திரகுத்தனோடு, தூதர் சூழ் வர திண் கயிலை எய்தி— தூதுவர்கள் பககததேசுற்றிவரததிண்ணிய கயிலாயகிரியையடைந்து எ—று. (கசு0)

அண்ணலுவ ணப்பாக னடலயிரா வதப்பாக னன்னப்பாகன், பண்ணமர்யாழ்க் கந்தருவர் விஞ்சையர்வா னவர்முனிவர் பலரும் போற்ற, வொண்ணறுமா மலர்க்கரத்திற் பிரம்புபற்றிச் சுற்றிநந்தி யுலவ வந்தி, வண்ணவுறை பேரவைக்கட் புகுந்தொதுங்க வொல்கிநின்று வழுத்தல் செய்வான்.

இ—ள அண்ணல் உவணப்பாகன்—தலைமைபொருந்திய கருடவாகனராகிய விஷ்ணுமூர்த்தியும், அடல் அயிராவத பாகன்— வலிமைபொருந்திய அயிராவதயானையின்மேலேறிவருகின்ற இந்திரனும், அன்னப்பாகன —அன்னவாகனராகிய பிரமதேவரும், பண்ணமர் யாழ் கந்தருவர்—பண்ணமைந்த யாழையிசைக்கின்ற கந்தருவர்களும், விஞ்சையர் வானவர் முனிவர் பலரும் போற்ற—வித்தியாதரர்களும் தேவர்களும் முனிவர்களுமாகிய பலரும்ஸ்தோத்திரிக்க, நந்தி ஒள் நறு மா மலர் கரத்தில் பிரம்பு பற்றி சுற்றி உலவ— நந்திதேவர் ஒளிபொருந்திய நறுமணம்வீசுகின்ற மகத்தாகிய மலரபோன்ற திருக்கரத்திலே பிரம்பைத்தாங்கிச்சுற்றிஉலாவ, அந்திவண்ணன் உறைபேர் அவைக்கட் புகுந்து- செக்கர்வானததைடுயாதத திருமேனியையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற பெரிய சபையையடைந்து, ஒதுங்கி ஒல்கி நின்று வழுத்தல் செய்வான்—ஓர்பக்கத்தில் ஒதுங்கி ஒடுக்கமாய்நின்று ஸ்தோத்திரஞ்செய்வானாயினன் எ—று. (கசுக)

ஆதிநடு வீறிலியா யானுடன்பெண் ணலியலனு யவையுமாகிச், சோதிபெறு மருவுருவாய்த் தோற்றுசரா சரமனைத்துந் தோய்ந்துந் தோயாப், பாதிமதி நுதற்பேதை பாசனுமா யோகனுமாய்

ப்பகர்தற் கெட்டாப், பூதிபுனை திருமேனிப் புனிதநின்றா மரைத்
தாள்கள் போற்றி போற்றி.

இ—ள்: ஆதி நடு ஈறு இலியாய்—ஆதிமத்தியாந்தரகிதராயும், ஆ
ண் உடன் பெண் அலி அலனாய்—ஆண்பெண் அலியென்னும் பேதமில்லா
தவராயும், அவையுமாகி—அப்பேதங்களுடையராயும், சோதி பெறும் அரு
உரு ஆய்—பிரகாசம்பொருந்திய அரூபியாயும் ரூபியாயும், தோற்றம் சராசர
ம் அனைத்தும் தோய்ந்தும்—உண்டாகிய இயங்கியற்பொருள்கள் நிலையியற்
பொருள்களெல்லாவற்றினுங்கலந்தும், தோயா— அவற்றோடு கலப்பின்றியி
ருக்கின்ற, பாதி மதி நுதற் பேதை பாகனுமாய்—பிறைச்சந்திரனை ஒத்த நெ
ற்றியையுடைய உமாதேவியாரோடு கூடிய போகியாகியும், ஏகனுமாய்—அவ்
வுமையோடுகலவாது தனித்த யோகியாயும், பகர்தற்கு எட்டா பூதி புனை
திருமேனி புனித—சொல்லுதற்கடங்காத விபூதிதரித்து விளங்குகின்ற தி
ருமேனியையுடைய பரிசுத்தரே, நின் தாமரை தாள்கள் போற்றி போற்றி—உ
மது தாமரைமலர்போன்ற திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் நமஸ்காரம்
எ—று. (௧௬௨)

இத்தலையா ரமுதமெழ வேண்டுமெனப் பாப்புவட மியாப்பு
ற்றோங்கன், மத்தலையா வமரர்கடைந் திடவடவை கருநிறமாய்
வந்த தென்னக், கத்தலைவா ரிதியுதிக்குங் கடுவொடுக்கு மணிமி
டற்றாய் கருதா ரூனுண், முத்தலைவேற் கரநாலு மறைபுகழு மை
ந்துமுக முதல்வா போற்றி.

இ—ள்: இ தலை ஆர் அமுதம் எழ வேண்டும் என— இவ்விடத்தே
நிறைவாகிய அமுதந்தோன்றவேண்டுமென்று, பாப்பு வடம் யாப்புற்று—
வாசுகியாகியபாம்பைக்கயிறாகமாட்டி, ஓங்கல் மத்து அலையா அமரர் கடைந்தி
ட—மந்தரமாகிய மலையை மத்தாகச்சுழற்றி தேவர்கள் கடைந்தபொழுது, வ
டவை கருநிறமாய் வந்தது என்ன—(உள்ளிருந்த) வடவாமுகாக்கினி கருநிற
ங்கொண்டு வெளியேவந்தாற்போல, கத்து அலை வாரிதி உதிக்கும் கடு ஒடுக்
கு மணி மிடற்றாய்—ஒலிக்கின்ற திரைகளைக்கொண்ட திருப்பாற்சமுத்திர
த்திற்றோன்றிய நஞ்சையுண்டடக்கிய அழகிய நீலகண்டரே, கருதார் ஊன்
உண் முத்தலை வேல்கர—பகைவர்களது மாமிசத்தையுண்ணுகின்ற முக்கவர்
கொண்ட சூலாயுதத்தைத்தாங்கிய திருக்கரத்தரே, நாலு மறை புகழும் ஐந்
துமுக முதல்வா போற்றி—சதுர்வேதங்களும் புகழ்ந்துகூறுகின்ற ஐந்துமுக
ங்களையுடைய கடவுளே நமஸ்காரம் எ—று. (௧௬௩)

உலகுயிர்யா வையும்படைத்தற் கயனாகிப் புரந்திடுதற் குவ
ணமூரு, மிலகுமணி மார்பினனாய்த் துடைத்திடுதற் குருத்திரனா
யிவையு மன்றி, யலகிறிரு விளையாடல் புரிந்தருளும் பராபரனீ
யாதலாலுன், சலசமலர் மருட்டியசே வடியடியேன் புன்றலையி
ற் சாத்தினேனால்.

இ—ள்: உலகு உயிர் யாவையும் படைத்தற்கு அயன் ஆகி—உலகங்களையும் அவற்றில் வாழாநின்ற உயிர்கள்யாவற்றையுஞ்சிருட்டித்தற்குப்பிரமனாகியும், புரந்திடுதற்கு உவணம் ஊரும் இலகு மணி மார்பினனாய்— அவற்றைக்காக்கும்பொருட்டு கருடவாகனத்தின்கண் இவர்ந்து வருகின்ற ஒளி பொருந்திய கௌத்துவமணியையணிந்த திருமார்பையுடைய விஷ்ணுவாகியும், துடைத்திடுதற்கு உருத்திரனாய்—சங்கரித்தற்கு உருத்திரமூர்த்தியாகியும், இவையும் அன்றி—இப்பேதரூபமன்றி, அலகில் திருவிளையாடல் புரிந்து அருளும் பராபரன்—இன்னும்பற்பல திருவிளையாடல்களையுஞ்செய்கின்றபரம்பொருள், நீ ஆதலால்—தேவரீரேயாதலால், உன் சலச மலர் மருட்டிய சே அடி அடியேன் புன்தலையில் சாத்தினேன்—உமது தாமரைமலரையும் வென்ற சிவந்த திருப்பாதங்களை அடியேன் எனது புல்லிய சிரசின்மேல் சூட்டினேன் எ—று.

ஆல் அசை. (கசுச)

என்றினைய துதிகூறி விழுந்தெழுந்து வாய்புதைத்தங் கெறியும்பாசம், வன்றிறல்சேர் தண்டமுதன் முத்திரையைத் திருமுன்னே வைத்துத் தாழ்ந்து, நின்றினிமே லடியேற்கிவ் வதிகாரம் போதுமென நிகழ்த்த வீச, னுன்றிறம்யா துன்னுளத்தி னுறுகுறையே தெம்முனீ யுரைத்தி யென்றான்.

இ—ள்: என்று இனைய கூறி விழுந்து எழுந்து வாய்புதைத்து— என்றிவ்வாறாகிய ஸ்தோத்திரங்களைச்சொல்லி கீழேவிழுந்து நமஸ்கரித்துப் பின்னரெழுந்து வாய்பொத்தி, எறியும் பாசம் வன் திறல் சேர் தண்டம் முதல் முத்திரையை திருமுன்னே வைத்து தாழ்ந்துநின்று— வீசுகின்ற பாசக்கயிறு மிக்கவலிமையைக்கொண்ட தண்டாயுதம் முதலாகிய சின்னங்கள்யாவற்றையும் சந்நிதியில்வைத்து தாழ்மையாக நின்று, இனி மேல் அடியேற்கு இவ் அதிகாரம் போதும் என நிகழ்த்த— இனிமேல் அடியவனாகிய எனக்கு இந்த அதிகாரம் போதுமென்றுகூற, ஈசன்— சிவபெருமானானவர், உன் திறம் யாது—உனதுதன்மைகளென்ன, உன் உளத்தில் உறு குறை ஏது—உனதுமனத்திற்பொருந்திய குறைகள்யாது, எம்முன் நீ உரைத்தி என்றான்—எமக்குமுன்னே நீ கூறக்கடவையென்று ஆஞ்ஞாபித்தருளினர் எ—று.

அங்கு-அசைநிலை. (கசுரு)

அரியயனே முதலமரர்க் கடுத்ததொழில் செயப்புரிந்தாயவர்களங்கங், குரியபடி நினதேவற் படிபுரிந்தார் குறையிலரெற் குலகத் துள்ளோர், புரிகொடுந்தீ வினைகளறிந் தியைபுடைய தண்டமெனைப் புரிதி யென்று, மெரிநரகி னவரவர்கள் வினைகளறிந் தூட்டுவித்தே னின்று காறும்.

இ—ள்: அரி அயனே முதல் அமரர்க்கு அடுத்த தொழில் செயப்பு ரிந்தாய்—விஷ்ணு பிரமா முதலிய தேவர்களையவரவர்களுக்குச்சார்பாகியசெ யல்களைநடாத்தும்படி ஆஞ்ஞாபித்தருளுவீர், நினது ஏவற்படி-தேவரீரது ஆஞ்ஞையின்படி, அவர்கள் அங்கு அங்கு உரியபடி புரிந்தார்—அவர்களும் ஆங்காங்கே தமததிகாரங்களை நடாத்திவந்தனர், குறை இலர்—யாதுங்குறைவ டைந்திலர், எற்கு உலகத்துள்ளோர் புரி கொடும் தீவினைகள் அறிந்து— அடியேனுக்கு உலகத்தின்கண்ணே வாசஞ்செய்கின்ற ஆன்மாக்கள்செய்யும் கொடிய தீமைகளையறிந்து, இயல்பு உடைய தண்டம் எனை புரிதி என்றாய்— அவ்வவற்றிற்கு ஏற்ற தண்டனைகளைச்செய்யும்படி என்னை ஆஞ்ஞாபித்தரு ளினீர், அவர் அவர்கள் வினைகள் அறிந்து—அவ்வவர்கள்செய்ததீமைகளையுள் ளபடியுணர்ந்து, எரி நரகில் இன்று காறும் ஊட்டுவித்தேன்—எரிகின்றநர கங்களிலே இன்றுவரையுந்துன்பங்களையனுபவிக்கும்படி செய்தேன் எ—று.

எம்பெருமா னீபணித்த கற்பனைக டவறிலனீ டிஞ்சி யோங்கி, யும்பருல களவளவுங் குஞ்சரநற் புரியினிரைத் தொலிக்கு முந்நீ, ரம்பரவம் பரப்புடவித் தேவர்குலத் தினிற்றோன்றி யறத்தை நீத்துக், கம்பமிலா துளத்திரவிற் கலைகலன்பொன் றினந்திருடுங் கள்வ னாகி.

இ—ள்: எம்பெருமான் நீ பணித்த கற்பனைகள் தவறிலன்— எமது பரமபதியே தேவரீர் ஆஞ்ஞாபித்தகட்டளைகளினின்றும் (யான்சிறிதும்) தவ றப்பெற்றிலேன், நீடு இஞ்சி ஓங்கி உம்பர் உலகு அளவு அளவும் குஞ்சர நல் புரியில்—நீண்டமதிலானது உயர்ந்து தேவருலகம்வரையுமளாவிய நல்ல குஞ் சரபுரியென்னும்நகரத்தில், இரைத்து ஒலிக்கும் முந்நீர் அம்பர அம்பர ம்—இரைத்து ஆரவாரிக்கின்ற ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீராகிய மூவகை நீரால்நிறைந்த சமுத்திரத்தைஆடையாகவுடைய, புடவி தேவர் குலத்தி னில் தோன்றி—பூமியில் தேவர்களென்று சொல்லப்படுகின்ற பிராமணர்கு லத்திற்பிறந்து, அறத்தை நீத்து—தருமவொழுக்கத்தை விடுத்து, உளத்து க ம்பம் இலாது—மனநடுக்கஞ்சிறிதுமின்றி, தினம் இரவில் கலை கலன் பொ ன் திருடும் கள்வன் ஆகி-நாடோறும் இராக்காலத்தில் வஸ்திரங்களையும் ஆபர ணங்களையும் பொன்னையுங்களவுசெய்கின்ற திருடனாகி எ—று. (கசுஎ)

விலைமகளி ரல்லார்தங் கற்பழித்து முலைப்போகம் விழைவிற் றுய்த்துப், புலைமகடே ணலநுகர்ந்தங் கவளுயிர்த்த புதல்விய ரைப் புணர்ந்து சாதி, நிலைதவறி யூனருந்தி வேதியரா னினமட வார் நீத்தோர் தம்மைக், கொலைபுரிந்த கொடுமறவன் சுகுமார னென் றொருபேர் கொண்ட தீயோன்.

இ—ள்: விலை மகளிர் அல்லார் தம் கற்பு அழித்து முலை போகம் வி ழைவில் துய்த்து—வேசியரல்லாதபதிவிரதைகளது கற்பையழித்துஅவர்கள

து ஸ்தனபோகங்களையாசையோடு அனுபவித்து, புலமகள் தோள் நலம் நுகர்ந்து—புலைப்பெண்ணினது தோளைத்தழுவுதலால் வரும் இன்பத்தையனுபவித்து, அவள்உயிர்த்த புதல்வியரை புணர்ந்து—அப்புலைப்பெண்பெற்ற புத்திரிகளைச்சேர்ந்து, சாதி நிலை தவறி—தன்வருணாச்சிரமத்தினின்றும் வழுவி, ஊன் அருந்தி—மாமிசத்தைப்புசித்து, வேதியர் ஆனினம் மடவார் நீத்தோர் தம்மை கொலைபுரிந்த கொடு மறவன்—பிராமணர்களையும் பசுக்கூட்டங்களையும் பெண்களையும் துறவிகளையுங்கொலைசெய்த கொடிய கெட்டமனத்தையுடையனாகிய, சுகுமாரன என்று ஒரு பேர் கொண்ட தீயோன்—சுகுமாரனென்னும்ஒருபெயரையுடைய கொடியவன் எ—று.

அங்கு அசை. (கசுஎ)

உயிருலக்குங் காலமது கண்டெனது தூதரடைந் துருத்து நெஞ்சி, லயிரளவு மிரக்கமின்றிப் பாசமதிற் பிணித்துவரு மந்த வேலை, மயிருறுசென் னிகண்மூளை யுகத்தகர்த்து நின்கணங்கள் வலிமை காட்டிச், செயிருடனஞ் சேனையெலா முரிந்திரிந்து குன்ற வென்றி செய்த பின்னர்.

இ—ள்: உயிர் உலக்கும் காலம் அது கண்டு—அவனிறக்குங்காலம்பார்த்து, எனது தூதர் அடைந்து—எனதுதூதுவர்கள்போய், உருத்து நெஞ்சில் அயிர் அளவும் இரக்கம் இன்றி—கோபித்து மனதில் அற்பமாயினுந்தயையில்லாமல், பாசமதில் பிணித்து வரும் அந்த வேலை—பாசத்தாற்கட்டிக்கொண்டு வரும்பொழுது, நின் கணங்கள்—தேவரீரது கணத்தவர்கள், மயிர் உறு சென்னிகள் மூளை உக தகர்த்து செயிருடன் வலிமை காட்டி—உரோமத்தைக்கொண்ட தலைகளை மூளைசிந்தும்படி சிதைத்து கோபத்துடன் தமதுவலிமையைக்காண்பித்து, நம் சேனை எல்லாம் முரிந்து இரிந்து குன்ற—எனதுசேனைகளெல்லாமுடைந்து புறங்கொடுத்து வலிமைகுன்ற, வென்றி செய்த பின்னர்—வெற்றிகொண்டபின்பு எ—று. (கசுஅ)

மைதவழுங் கிரிச்சிறையீர் வச்சிரத்தோன் முதலமரர் வணங்கி வாழ்த்தச், செய்தவமொன் றில்லானை நவமணிக ளிழைத்திடும்பொற் றேரி லேற்றிக், கைதவமற் றருந்தவங்க ளிழைத்துமிக விளைத்தவர்க்குங் கற்பஞ் சென்று, மெய்தரிய நினதுபதந் தெய்துவித்தா ரிதுகுறையென் றியம்பிப் பின்னும்.

இ—ள்: மை தவழும் கிரி சிறை ஈர் வச்சிரத்தோன் முதல் அமரர் வணங்கி வாழ்த்த—மேகங்கள் படிகின்ற மலையின்சிறகுகளைவெட்டிய வச்சிராயுதத்தையுடைய இந்திரன்முதலிய தேவர்கள்கும்பிட்டுநின்றுஸ்தோத்திரஞ்செய்ய, செய் தவம் ஒன்று இல்லானை—செய்யப்பட்ட தவங்களொன்றுமில்லாதவனாகிய சுகுமாரனை, நவ மணிகள் இழைத்திடும் பொன் தேரில் ஏற்றி—நவரத்தினங்களும் பதித்துச்செய்த பொற்றேரிலேற்றி, கைதவம் அற்

று—கபடமின்றி, அரும் தவங்கள் இழைத்து மிக இளைத்தவர்க்கும்— அரிய தவங்களைச்செய்து மிகவும் இளைப்படைந்தவர்களுக்கும், கற்பம் சென்றும் எய்தரிய நின்று பதத்து எய்துவித்தார்—கற்பகாலஞ்சென்றும் அடைதற்கரிய உமதுபதவியையடையச்செய்தனர், இது குறை என்று இயம்பி பின்னும்—இதுவே குறையாகுமென்றுகூறி பின்பும் எ—று. (கஎ0)

கனமிருண்டு துளித்தமழைத் தாரைகளைக் கணக்கிடினுங் கடலின்றீர, வனவரிவா லுகங்கடனை வான்மீனைக் கணித்தொருவர் மதித்திட்டாலுந், தினமிவன்றான் புரிந்தகொடும் பாதகங்கட் கிலக்கமில்லைச் செப்பு மன்னே, எனவரத தாண்டவநின் பதம்பெறவும் வழக்குளதோ வறைதி யென்றான்.

இ—ள்: கனம் இருண்டு துளித்த மழை தாரைகளை கணக்கிடினும்—மேகங்கள் கருக்கொண்டு பெய்த மழைத்துளிகளை இவ்வளவென்றுகணக்கிட்டாலும், கடலின் தீர வனவரி வாலுகங்கள் தனை வான் மீனை கணித்து ஒருவர் மதித்திட்டாலும்— கடற்கரையின்கணுள்ள அழகிய நிரையான வெண்மணல்களையும் ஆகாயத்தின்கணுள்ள நட்சத்திரங்களையும் ஒருவர்எண்ணிக்கணக்கிட்டாலும், தினம் இவன் தான் புரிந்த கொடும் பாதகங்கட்கு இலக்கம் இல்லை—தினந்தோறும் இச்சுகுமாரன்செய்த கொடிய பாவங்களுக்கு அளவில்லை—செப்பும் அன்னேன்—இங்ஙனங்கூறப்பட்டதன்மையையுடைய அவன், அனவரத தாண்டவ—எந்நாளும் திருநடனம்புரிகின்ற கடவுளே, நின் பதம் பெறவும் வழக்கு உளதோ அறைதி என்றான்— உமதுபதவியையடைதற்கும் உரிமையையுடையனோ திருவாய்மலர்ந்தருளுகவென்று வேண்டினன் எ—று. (கஎக)

அந்தகனைக் கடைக்கணித்தங் கரனுரைப்பா னந்தணரா னினமா னேர்கட், பைந்தொடியார் பாலர்வதை மீன்மிருகம் பறவைகொன்று பகர்த றின்ற, றந்தைகுரு தாய்பிரம சந்நியாசி சதுர்வேதந் தம்மை நாளு, நிந்தைசெய்த னீதிபிழைத் தொழுகல் பொய்ச்சான் றுரைத்துநிதி கவர்த லின்னும்.

இ—ள்: அரன் அந்தகனை கடைக்கணித்து அங்கு உரைப்பான்—சிவபெருமான் யமனைத் திருக்கடைக்கண்ணோக்கஞ்செய்து திருவாய்மலர்கின்றார், அந்தணர் ஆன் இனம் மான் நேர் கண் பைந்தொடியார் பாலர் வதை—பிராமணர்களையும் பசுக்குழாங்களையும் மான்நோக்கம்போன்ற கண்களையுடைய பசிய வளையல்களணிந்த பெண்களையும் சிசுக்களையுங்கொல்வதும், மீன் மிருகம் பறவை கொன்று பகர்தல் தின்றல்—மீன் விலங்கு புள்ளாதியவற்றை கொலைபுரிந்து விற்றல் உண்ணலும், தந்தை குரு தாய் பிரம சந்நியாசி சதுர்வேதம் தம்மை நாளும் நிந்தை செய்தல்— பிதாவையும் குருவையும் தாயையும் பிராமணசந்நியாசியையும் நான்குவேதங்களையும் நாடோறும் அவமதித்தலும், நீதி பிழைத்து ஒழுகல்—நீதிதவறிநடத்தலும்,

பொய்ச்சான்று உரைத்து நிதி கவர்தல்— பொய்ச்சாட்சிகூறி பிறர்பொருளைபாபகரித்தலும், இன்னும்—மேலும் எ—று. (கஎஉ)

கன்னிகைபொற் கலனிழந்த கைமைகுரு வின்றேவி கணிகை தாசி, அன்னியர்பெண் ணன்னையவ ளுடன்பிறந்தார் தன்புதல்வி யன்றிமாமன், பன்னிசகோ தரிதூரத் திரியுடனே பதிவிரதை பழிக்குஞ் சாதி, மின்னிடையார் தமைக்கூடன் மிருகங்கடமைப்புணர்தல் விரதம் விடல்.

இ—ள்: கன்னிகை—(விவாகஞ்செய்யாத) கன்னிகையும், பொன் கலன் இழந்த கைமை—பொன்னாற்செய்த மங்கிலியத்தையிழந்த விதவையும், குருவின் தேவி—குருபத்தினியும், கணிகை—உருத்திரகணிகையும், தாசி—வேசியும், அன்னியர்பெண்— பிறர்மனைவியும், அன்னை—தாயும், அவள் உடன் பிறந்தார்—அவளுடன்பிறந்த சிற்றன்னையரும், தன் புதல்வி—தான்பெற்றபுத்திரியும், அன்றி மாமன் பன்னி— அல்லாமலும் மாமன் மனைவியும், சகோதரி–தன்னோடுகூடிப்பிறந்தவளும், தூரத்திரி உடனே–விலக்காகவுள்ளபெண்ணுடன், பதிவிரதை—கற்புநெறிவழுவாதவளும், பழிக்கும் சாதி—இழிகுலப்பெண்ணும் ஆகிய, மின் இடையார் தமை கூடல்—பெண்களைச்சேருதலும், மிருகங்கள் தமை புணர்தல்— மிருகங்களைப்புணர்ச்சிசெய்தலும், விரதம் வீடல்—அனுஷ்டித்தவிரதங்களை விடுதலும் எ—று. ()

குளங்கூப நந்தவனங் கோயின்மடங் களைச்சிதைத்தல் குதிரை யானை, யளந்திடுமெள் ளெண்ணெய்நெய்பொன் னுபயகோமுகிதான மாக வாங்கல், வளர்ந்தபெரு மரங்கடமைத் தறித்தன் முகை விரியாத மலரைக் கொய்தல், விளங்குசிவா லயந்தீர்த்தங்களின்மலமூத் திரம்விடுதல் விளம்பி வற்றில்.

இ—ள்: குளம் கூபம் நந்தவனம் கோயில் மடங்களை சிதைத்தல்—தடாகங்களையுங் கிணறுகளையும் பூஞ்சோலைகளையுங் கோவில்களையும் மடங்களையுமழித்தலும், குதிரை யானை அளந்திடும் எள்ளெண்ணெய் நெய் பொன் உபய கோமுகி தானம் ஆக வாங்கல்—குதிரை யானை அளவைசெய்யப்படுகின்ற எள்ளெண்ணெய் நெய் பொன் (ஈனுஞ்சமையத்துப்புறப்பட்டிருக்குங் கன்றின்தலையும் தாய்ப்பசுவின்தலையுமாக) இருபுறத்துந்தலையிருக்கும்பசுவுமாகியவிவைகளைத் தானமாகவாங்குதலும், வளர்ந்த பெரு மரங்கள் தமை தறித்தல்—வளர்ந்திருக்கின்ற பெரிய விருட்சங்களைத்தறித்தலும், முகை விரியாத மலரை கொய்தல்—இதழ்விரியாத மலர்களைப்பறித்தலும், விளங்கு சிவாலயம் தீர்த்தங்களில் மலம் மூத்திரம் விடுதல்—பிரகாசிக்கின்ற சிவதலங்களிலுந் தீர்த்தங்களிலும் மலசலமோசனஞ்செய்தலும், விளம்பு இவற்றில்—சொல்லப்பட்ட இவ்விடங்களில் எ—று. (கஎச)

மனமறிய வுச்சிட்ட மிடல்கனகந் திருடல்கள்ளூன் மதித்து
விற்றல், சொனகுலரூண் சூதகவீட் டனம்பிதிர்போ சனந்தூர்த்
தர் சோறு தின்றல், தினகரனை யராத்தீண்டு நாளேகா தசிதசமி
திகழு வாவி, லனமருந்த லிடக்கரத்தா லெடுத்தொன்றை யயிற
லநு சாரஞ் செய்தல்.

இ—ள்: மனம் அறிய உச்சிட்டம் இடல்—புத்திபூருவமாக எச்சிலுமிழ்தலும், கனகம் திருடல்—பொன்னைத்திருடுதலும், கள் ஊன் மதித்து விற்றல—கள்ளையும் மாமிசங்களையும் நினைத்துவிற்றலும், சொன குலர் ஊண்—பொன்வினைமாக்களிடத்துண்ணுதலும், சூதக வீட்டு அனம்—ஆசௌசவீட்டிலன்னம்புசித்தலும், பிதிர் போசனம்—சிராத்தஅன்னம் புசித்தலும், தூர்த்தர் சோறு தின்றல்—காமுகர்கள்கொடுக்கும் அன்னத்தைப்புசித்தலும், தினகரனை அரா தீண்டு நாள் ஏகாதசி தசமி திகழ் உவாவில் அனம் அருந்தல்—சூரியனை சர்ப்பம்விழுங்குகின்ற கிரகணகாலத்தும் ஏகாதசியிலும் தசமியிலும் விளங்குகின்ற அமாவாசி பூரணைகளிலும் அன்னத்தைப் புசித்தலும், இடக்கரத்தால் எடுத்து ஒன்றை அயிறல்—இடக்கரத்தினால் எவ்வகையுணவுகளையாவது எடுத்துண்ணுதலும், அநுசாரம் செய்தல்— ஆசாரமற்றசெயல்களைச்செய்தலும் எ—று. (கஎரு)

துள்ளுநடைப் பரிமுலைப்பால் சுரந்தொழுகு செருத்தனல்
லான் சுருதி தூயோர், விள்ளுமுருத் திரமணிமந் திரந்தேவ விக்
கிரகம் விபூதி வேகங், கொள்ளுமத கரியடிமை யவுடதங்கன் னி
கைதவளங் குலவு பன்னல், லெள்ளுநறு நெய்தயிர்பா லெண்ணெ
யொடு கள்ளுவிற்ற லிவைக ளாதி.

இ—ள்: துள்ளு நடை பரி—தாவிப்பாய்கின்ற குதிரைகளும், முலைப்பால் சுரந்து ஒழுகு செருத்தல் நல் ஆன்—முலைகளினின்றும் பால்சுரந்துபாய்கின்ற மடியையுடைய நல்லபசுக்களும், சுருதி—வேதங்களும், தூயோர் விள்ளும் உருத்திரமணி—மேலோர்களினால் வியந்துகூறப்படுகின்ற உருத்திராக்கமணிகளும், மந்திரம்—மந்திரங்களும், தேவவிக்கிரகம்—தேவவிக்கிரகங்களும், விபூதி—விபூதியும், வேகம் கொள்ளு மதகரி—வேகம்பொருந்திய மதம்பாய்கின்ற யானைகளும், அடிமை—அடிமைகளும், அவுடதம்—மருந்துகளும், கன்னிகை—விவாகஞ்செய்யாத கன்னிகைகளும், தவளம் குலவு பன்னல்—வெண்மைநிறம்விளங்குகின்ற பஞ்சும், எள்ளு—எள்ளும், நறுநெய்—நறிய நெய்யும், தயிர்—தயிரும், பால்—பாலும், எண்ணெய்—எண்ணெயும், கள்ளு விற்றலொடு—கள்ளும் ஆகிய இவைகளை விற்றலும், இவைகள் ஆதி—இவைகள்முதலாகிய எ—று. (கஎசு)

என்னருந்தீ வினைபுரிந்த கொடியோருஞ் சிவநிசிநோற் றி
யாம நான்குந், தண்ணறும்பூ வாலுறங் கடையாம லருச்சித்தோ

ர் சமான மில்லார், நண்ணருமா மகம்புரிந்து நதிபடிந்து தானமி
க நல்கி னாலும், பண்ணருநற் பலவிரத மிழைத்தாலு மிதுபோல
ப் பயன்ற ராவே.

இ—ள்: எண்ணரும் தீ வினை புரிந்த கொடியோரும்—கணக்கற்ற தீ
ச்செயல்களைச்செய்த கொடியவர்களும், சிவநிசி நோற்று இயாமம் நான்கும
தண் நறும் பூவால் ஊறு அங்கு அடையாமல் அருச்சித்தோர்— சிவராத்திரி
விரதத்தையனுஷ்டித்து அவ்விரவின்நான்குயாமங்களினுங் குளிர்ந்த பரிமள
ம்வீசுகின்ற புஷ்பங்களினால் ஆங்கே எவ்வகைக்குற்றங்களும்வராதபடி பூசை
செய்தவர்கள், சமானம் இல்லார்—ஒப்பற்றவராவார்கள், நண்ணரும் மா மக
ம் புரிந்து—அடைதற்கரிய பெரிய யாகங்களைச்செய்தும், நதி படிந்து—தீர்
த்தமாடியும், தானம மிக நலகினாலுங்—பலதானங்களைக் கொடுத்தாலும், ப
ண்ணரும் நல் பல விரதம் இழைத்தாலும்—செய்தற்கரிய வேறு பலவிரதங்
களையனுஷ்டித்தாலும், இது போல பயன் தரா—இச்சிவராத்திரிவிரதத்தை
ப்போல அதிகபலனைத்தரமாட்டா எ—று.

ஏ அசை.                                                  (கஎஎ)

அன்னசிவ நிசிவிரதத் தாசகனு கேச்சுரத்தி லமுத மூறுங்,
கன்னன்மொழி யுமையொடெமைக் கண்டிடப்பெற் றனனதனாற்
காயும் வெய்யோன், முன்னரெதி ரிருளிமம்போ லுடைந்தகன்ற
திவன்முதனாண் முயன்ற பாவ, மென்னருநற் கணங்களுடன் கூ
டுகின்ற வின்பமுத்தி யீது பெற்றான்.

இ—ள்: அன்ன சிவ நிசி விரதத்து—அவ்விதமானசிவராத்திரிதின
த்தில், ஆசு அகல் நாகேச்சுரத்தில்—குற்றமில்லாத திருநாகேச்சுரமென்னு
ந்தலத்தில, அமுதம் ஊறும் கன்னல் மொழி உமையோடு எமை கண்டிட
பெற்றனன்— இனிமைமிக்க கரும்பையொத்த வார்த்தையையுடைய உ
மையோடு எம்மைத்தரிசிக்கப்பெற்றான், அதனால்—அக்காரணத்தால், இவ
ன் முதல் நாள் முயன்ற பாவம்—இவன் முன்னைநாளிற்செய்த பாவங்களெ
ல்லாம், காயும் வெய்யோன் முன்னர் எதிர் இருள் இமம் போல் உடைந்து
அகன்றது—சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனுக்குமுன்னே எதிராக வ
ருகின்ற இருளும்பனியுமழிந்துபட்டதுபோல அழிந்து நீங்கியது, (ஆகையி
னால்) என் அரு நல் கணங்களுடன் கூடுகின்ற இன்ப முத்தி ஈது பெற்றா
ன்—எமதருமையாகிய நல்லகணநாதர்களோடு வாழுகின்ற பதமுத்தியாகிய
இதனைப்பெற்றான் எ—று.                                                  (கஎஅ)

என்றிறைவன் கூறுதலுந் தண்டதரன் மீண்டுரைப்பா னிர
க்க மின்றிக், கொன்றினமான் றசையருந்தி மதுக்குடித்துப் புலை
மகளிர் குழற்குச் சூட்ட, மன்றன்மலர் கொய்திடுவான் வந்ததன்
றி யன்புகொடு வந்தா னல்ல, னுன்றனரு ளிதுவெனின்மற் று
ரைப்பதெவ னெனப்பரம னுவனை நோக்கி.

இ-ள். என்று இறைவன் கூறுதலும்-என்றிவ்வாறு தலைவராகியசிவபெருமான் திருவாய்மலர்ந்தருளவும், தண்டதரன் மீண்டு உரைப்பான்-தண்டாயுதத்தைத்தாங்கியயமன் அதனைக்கேட்டுப்பின்னருங்கூறுவான், இரக்கம் இன்றி கொன்று இனமான் தசை அருந்தி-இரக்கஞ்சிறிதுமில்லாமல் கூட்டமாகிய மான்களைக்கொன்று அவற்றின்மாமிசத்தையுண்டும், மது குடித்து-கள்ளைப்பருகியும், புலைமகளிர் குழற்கு சூட்ட மன்றல் மலர் கொய்திடுவான் வந்தது அன்றி--தனது புலைப்பெண்களின் கூந்தலுக்குச்சூட்டும்பொருட்டுச் சுகந்தம்வீசுகின்ற புஷ்பங்களைப்பறிப்பதற்கு வந்தவனல்லாது, அன்பு கொடு வந்தான் அல்லன்-தேவரீரிடத்து அன்புகொண்டுவந்தவனல்லன், உன் தன் அருள் இது எனில் உரைப்பது எவன் என—உமது அனுக்கிரகமித்தன்மையாயின் யான்சொல்வதென்னையென்று விண்ணப்பஞ்செய்ய, பரமன் உவனை நோக்கி—சிவபெருமான் அந்த அந்தகனைப்பார்த்தருளி எ—று.

மற்று அசை. (கஎகூ)

எண்டருமெட் டுணையுளத்தன் பிலரேனு முளரேனு மிந்நாளெம்மைக், கண்டவர்நோற் றவர்பூசை பண்ணினர்நற் கதியடைவர் கால நீநந், தொண்டர்தமைக் கொடும்பாசந் தனில்வீக்கித் துட்டவுருத் தோன்றக் காட்டித், தண்டமிழைக் குதறவிருன் தூதருக்கு மிந்தவழி சாற்று கென்றான்.

இ—ள்: கால— யமனே, எண் தரும் எள் துணை உளத்து அன்பு இலரேனும் உளரேனும்—மதிக்கத்தகுந்த எள்ளளவேனும் மனத்தில் அன்பில்லாதவராயினும் அன்புடையாராயினும், இந்நாள் எம்மை கண்டவர் நோற்றவர் பூசை பண்ணினர் நல் கதி அடைவர்— இச்சிவராத்திரியில் எம்மைத் தரிசித்தவரும் விரதமனுஷ்டித்தவரும் பூசித்தவரும் நல்ல மோட்சத்தையடைவர், நீ நம் தொண்டர் தமை கொடும் பாசம் தனில் வீக்கி—நீ நமது அடியார்களைக்கொடியபாசத்தாற்கட்டி, துட்ட உரு தோன்ற காட்டி— கோரரூபத்தைக்காண்பித்து, தண்டம் இழைக்குதல் தவிர்— தண்டனைசெய்வதை விடுக்குதி, உன் தூதருக்கும் இந்த வழி சாற்றுக என்றான்— உன்னுடைய தூதுவர்களுக்கும் இம்முறையைக்கூறக்கடவையென்று அருள்புரிந்தனர் எ—று. (கஅ௦)

செறிந்தவுயிர் கவருதற்குச் சேணெறிபோய் மறந்தெனது சினவேற் றூதர், நெறிந்த புரிச்சடைப் பரம நின்னடியா ரென்பவரை நினைவிற் றேரா, தறிந்தறியா திழைப்பர் தண்ட மவர்செயன்மற் றடையாள மறைதி யென்ன, மறிந்ததிரைக் கடல்விடமுண் டருடிருவாய் மலர்ந்திறைவன் வகுத்துச் சொல்வான்.

இ—ள்: நெறிந்த புரி சடை பரம—நெறிப்புற்று முறுகிய சடையையுடைய பரமபதியே, எனது சின வேல் தூதர்—எனது கோபத்தையு

டைய வேற்படையைத்தாங்கிய தூதுவர்கள், செறிந்த உயிர் கவருதற்கு சேண் நெறிபோய்—நெருங்கிய ஆன்மாக்களைக் கவரும்பொருட்டு ஆகாயவழிச் சென்று, நின் அடியார் என்பவரை நினைவில் தோாது மறந்து—தேவரீரது அடியார்களென்று கூறப்படுவோரை மனத்திலுணராது மறந்து, அறிந்து அறியாது இழைப்பர் தண்டம்-அறிந்தும் அறியாதும் தண்டனையைச்செய்வர், அவர் செயல் அடையாளம் அறைதி என்ன—அவர்களுடையசெயலையும் அடையாளங்களையுந்திருவாய்மலர்ந்தருளுகவென்று வேண்டலும், மறிந்த திரை கடல் விடம் உண்டு அருள் திருவாய் மலர்ந்து இறைவன் வகுத்து சொல்வான்—திரைமறிகின்ற பாற்கடலிற்றோன்றிய நஞ்சையுண்டருளிய திருவாயைத்திறந்து தலைவராகிய சிவபெருமான் வகுத்துக்கூறுவாராயினர் எ—று.

மற்று அசை.　　　　　　　　　　　　　　　　　　　　(கஅக)

சிரங்களங்கா திரண்டுதடந் திண்டிறற்றோ டாழ்ந்தவிரு செங்கை வாய்ந்த, வுரந்தனிற்கண் டிகைபுனைவோ ருருத்திரமந் திரநவில்வோ ருற்று வேண்டும், வரங்கடரு கரடகட மாமுகனைப் பூமுகங்கொள் வடிவேற் றானை, கரங்கொள்விறற் சண்முகனைத் தசமுகனோ டரக்கர்தமைக் காய்ந்த மாலை.

இ—ள்: சிரம்—சிரசிலும், களம்—களத்திலும், இரண்டு காது—இரண்டுகாதுகளிலும், தடம் திண் திறல் தோள்—விசாலித்த திண்ணிய வலிமையையுடைய தோள்களிலும், தாழ்ந்த இரு செங்கை—தாழ்வாகவிருக்கின்ற இரண்டு சிவந்த கரங்களிலும், வாய்ந்த உரம் தனில்— சிறந்தமார்பிலும், கண்டிகை புனைவோர்— உருத்திராக்கமணியைத்தரிப்பவர்களும், உருத்திர மந்திரம் நவில்வோர்—உருத்திரமந்திரத்தைச்செபிப்பவர்களும், உற்று வேண்டும் வரங்கள் தரு கரடகட மாமுகனை—விரும்பிக்கேட்கின்ற வரங்களையெல்லாம் கொடுத்தருளுகின்ற மதம்பாயசுவட்டையுடைய யானைவதனத்தைக்கொண்ட விநாயகனையும், பூ முகம் கொள் வடிவேல் தானை கரங்கொள் விறல் சண்முகனை—மலர்மாலையையணிந்த கூரிய வேலாயுதத்தைக் கையிற்றாங்கிய வலிய சுப்பிரமணியனையும், தசமுகனோடு அரக்கர் தமை காய்ந்த மாலை—பத்துமுகங்களையுடைய இராவணனையுட் இராட்சதர்களையும் அழிவுசெய்த விஷ்ணுவையும் எ—று.　　　　　　　　　　　　(கஅஉ)

பரைசிவரு பமதாகுஞ் சிவலிங்கந் தனைப்பூசை பண்ணுவோர்கள், விரைகமழு நந்தவனம் வைத்திடுவோர் கற்புடைய மின்னார் மிக்க, வுரைபெறுவெண் டிருநீறு பூசிடுவோர் சிவாலயங்க ளுளுற்று கின்றோர், திரையெறிவா ரிதியுலகி லெமதடியார் தமைப்பூசை செய்யு மேலோர்.

இ—ள்: பரை சிவ ரூபமது ஆகும் சிவலிங்கம் தனை பூசை பண்ணுவோர்— சத்திசிவவடிவமாயிருக்கின்ற சிவலிங்கத்தைப்பூசனைசெய்பவர்களும், நல் விரை கமழும் நந்தவனம் வைத்திடுவோர்— நல்ல வாசனைவீசுகின்ற பூஞ்சோலைகளையுண்டாககுபவர்களும். கற்பு உடைய மின்னார்—கற்புநெறியில் தவறுதலில்லாத பெண்களும், மிக்க உமை பெறு வெண் திருநீறு பூசிடுவோர்—மிகப்புகழ்பெற்ற வெள்ளியவிபூதியைத்தரிப்பவர்களும், சிவாலயங்கள் உ ஞற்றுகின்றோர்— சிவாலயங்களைகட்டுவிப்பவர்களும், திரை எறிவாரிதி உலகில் எமது அடியார் தமை பூசை செய்யும் மேலோர்—திரைவீசுகின்ற சமுத்திரத்தாற்சூழப்பட்ட பூமியின்கண்ணே எமது அடியவர்களைப்பூசைசெய்கின்ற மேலவர்களும் எ—று. (கஅரு)

நின்மலமா மஞ்செழுத்தை யுளத்தழுத்திச் செபித்திடுவோர்
நிகரின் மாக, நன்மதிநீ ராடிடுவோர் பஞ்சபா தகந்தவிர்ந்தோர்
நாள்க டோறுந், துன்மதியி லாததுற வந்தணருக் காடையன்ன
ஞ் சொன்ன மீவோர், மன்மதியாற் குளங்கூவல் கல்லுவிப்போர்
நிழல் சாலை வழியில் வைப்போர்.

இ—ள். நின்மலமாம் அஞ்சு எழுத்தை உளத்து அழுத்தி செபித்திடுவோர்—குற்றமற்ற பஞ்சாக்ஷரங்களை மனத்திலேபதித்துச்செபிப்பவர்களும், நிகரில் மாக நல் மதி நீர் ஆடிடுவோர்—ஒப்பில்லாத நன்மைபொருந்திய மாசிமாதத்தில் தீர்த்தமாடுபவர்களும், பஞ்ச பாதகம் தவிர்ந்தோர்— கொலை களவு கள்ளுக் காமம் குருநிந்தையாகிய பஞ்சபாதகங்களையும் விலக்கியவர்களும், நாள்கள் தோறும் துன்மதி இலாத அந்தணருக்கு ஆடை அன்னம் சொன்னம் ஈவோர்—தினந்தோறும் துர்ப்புத்தியில்லாத பிராமணர்களுக்கு வஸ்திரங்களையும் அன்னத்தையும் பொன்னையுந்தானமாகக்கொடுப்பவர்களும், மன் மதியால் குளம் கூவல் கல்லுவிப்போர்—தருமசிந்தையால குளங்களையும் கூவல்களையும் வெட்டுவிப்பவர்களும், நிழல் சாலை வழியில் வைப்போர்— நிழன்மரங்களையும் சாலைகளையும் வழிகளிலுண்டாக்குபவர்களும் எ—று. (கஅசு)

காசியிரா மேச்சுரம்பொற் கனகசபை யாரூர்கா ளத்தி காஞ்
சி, மாசில்கழுக் குன்றமுது குன்றமொற்றி யூர்மருதூர் மதுரை
யையா, றுசின் மறைக்காடு வெண்கா டானைக்கா மாயூர மருனை
புள்ளூர், தேசுதருஞ் சிரபுரநற் றிருப்புகலூர் முதற்றலங்கள் செ
கத்தி லுண்டால்.

இ—ள். காசி—காசிப்பதியும், இராமேச்சுரம்— இராமேச்சுரமும், பொன் கனகசபை—பொற்சபையையுடைய சிதம்பரமும், ஆரூர்— திருவாரூரும், காளத்தி—திருக்காளத்தியும், காஞ்சி—காஞ்சியம்பதியும், மாசில் கழுக்குன்றம்—குற்றமில்லாத திருக்கழுக்குன்றமும், முதுகுன்றம்— திருமு

துகுன்றமும், ஒற்றியூர்—திருவொற்றியூரும், மருதூர்-திருவிடைமருதூரும், மதுரை—மதுரையும். ஐயாறு—திருவையாறும், ஆசில மறைக்காடு—குற்றமில்லாதவேதாரணியமும், வெண்காடு— திருவெண்காடும், ஆனைக்கா— திருவானைக்காவும், மாயூரம்—மாயூரமும், அருணை—திருவண்ணாமலையும், புள்ளூர்—திருப்புள்ளூரும், தேசு தரும் சிரபுரம்—ஒளிவிளங்குகின்ற திருச்சிரபுரமும், நல திருப்புகலூர் முதல் தலங்கள் செகத்தில் உண்டால-நன்மை தங்கிய திருப்புகலூரும் முதலாகியபுண்ணியஸ்தலங்கள் பூமியின்கண்ணேயுள்ளன எ—று. (கஅரு)

அந்தலங்க டமையடைந்து புனிதநீர் படிந்தாடி யமல மாகிச், சிந்தமகிழ்ந் தியாமுறையுஞ் சிவலிங்க தெரிசனஞ்செய் தோர்கள் யாரு, முத்தர்சிவ நிசிவிரத நோற்றவர்மற் றிவரெவர்க்கு முதற் பேராகு, மித்தகைய ருன்றூதர்க் கெளியரலர் தண்டமிவர்க் கில்லை யென்றான்.

இ—ள். அத்தலங்கள் தமை அடைந்து—அந்தப்புண்ணியஸ்தலங்களையடைந்து, புனித நீர் படிந்து—பரிசுத்தமாகிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, அமலம் ஆகி—சுத்தமுடையவர்களாய், சித்தம் மகிழ்ந்து யாம் உறையும் சிவலிங்கம் தெரிசனம் செய்தோர்கள் யாரும் முத்தர்-மனக்களிப்புடனே யாம் வீற்றிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசிக்கப்பெற்றவர்கள் எல்லோருஞ் சீவன்முத்தர்களாம் (ஆயினும்), சிவநிசி விரதம் நோற்றவர் இவர் எவர்க்கும் முதல் பேர் ஆகும்— சிவராத்திரிவிரதத்தையனுஷ்டித்தவர்கள் முன்கூறப்பட்ட எல்லோரினும் விசேடமுடையராவர், இத்தகையர் உன் தூதர்க்கு எளியர் அலர்—இத்தன்மையையுடைய நமது அன்பர்கள் உனதுதூதுவர்களுக்கு அகப்படத்தக்கவரல்லர், தண்டம் இவர்க்கு இல்லை என்றான்—இவர்களுக்கு நரகதண்டனையில்லையென்று திருவாய்மலர்ந்தருளினர் எ—று.

மற்று அசை. (கஅசு)

கருதியசொற் கேட்டுளத்தி னச்சமுடன் வீழ்ந்திறைஞ்சிக் காலனைய, தருதிவிடை யெனப்பெற்று வைத்திடு முத்திரைதாங்கித் தன்னூ ரெய்தி, வருதிரெனத் தூதர்தமை யழைத்தான் சொன் மாற்றமெலாம் வகுத்துக்கூறி, யொருதிகிரி தனையுருட்டித் தென்புலங்காத் தினிதிருந்தா னுவப்பி னோடும்.

இ—ள்: காலன்—யமனானவன், கருதிய சொல் கேட்டு உளத்தில் அச்சமுடன் வீழ்ந்து இறைஞ்சி—தன்மனத்தின்கண்ணே நினைத்த(சந்தேகத்தை மாற்றுதற்கேற்ற)திருவாக்கைக்கேட்டு மனத்திலச்சங்கொண்டு விழுந்து நமஸ்கரித்து, ஐய தருதி விடை என பெற்று—எமதுபரமபிதாவே அனுமதிதந்தருளுகவென்று விடைபெற்றுக்கொண்டு, வைத்திடு முத்திரை தா

ங்கி—தான் முன்னமேவைத்த சின்னங்களையெடுத்துக்கொண்டு, தன் ஊர் எ ய்தி—தனது தென்புலத்தையடைந்து, தூதர் தமை வருதிர் என அழைத் து—தூதுவர்களை வாருங்களென்று அழைத்து, அரன் சொல் மாற்றம் எலா ம் வகுத்து கூறி—சிவபெருமான் உபதேசித்தன யாவற்றையும் விரித்துரை த்து, ஒரு திகிரிதனை உருட்டி—தனது ஆஞ்ஞாசக்கரமொன்றையே செலு த்தி, தென்புலம் காத்து—தனது யமபுரத்தைப் பரிபாலனஞ்செய்து, உவ ப்பினோடும் இனிது இருந்தான்—களிப்புடனே நன்குவாழ்ந்திருந்தனன் எ—று. (கஅ௭)

இச்சிவராத் திரிவிரத சரிதைதனைக் கேட்டோர்மற் றின்பா ய்க் கற்றோர், கச்சையடுங் கொங்கை மங்கை பங்கனுறை கயிலை யெய்திக் களிப்பரென்றே, யுச்சிதமாய்ச் சூதமுனி மாதவர்கேட் டுள்ளமுற்று முருகி வாயான், மெச்சிமகிழ்ந் திடவேத வியாதமு னி மொழிப்படியே விளம்பி னானே.

இ—ள்: இ சிவராத்திரி விரத சரிதை தனை கேட்டோர்-இந்தச்சிவராத் திரிவிரதத்தின்சரித்திரங்களைச்செவியுறக்கேட்டவர்களும், இன்பாய் கற்றோ ர்—மகிழ்ச்சியோடு படித்தவர்களும், கச்சை அடும் கொங்கை மங்கை பங்கன் உறை கயிலை எய்தி களிப்பர் என்று— கச்சைவருத்துகின்ற பயோதரங்களை யுடைய உமாதேவிபங்கராகிய சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற கயிலா யமலையையடைந்து மகிழ்வோடுவாழ்வரென்று, சூதமுனி— சூதமகாமுனிவ ர், மாதவர் கேட்டு உள்ளம் முற்றும் உருகி வாயால் மெச்சி மகிழ்ந்திட— மி க்க தவத்தையுடைய நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்கள் கேட்டு மனம் முழுவதும் கசிவடைந்து (உள்ளடக்கலாற்றாராய் வெளியே) வாயினாலு ம் புகழ்ந்து ஆனந்தங்கொள்ள, வேத வியாதமுனி மொழிப்படியே- (முன்ன ர்)வேதவியாசமுனிவர்கூறியபடி, உச்சிதமாய் விளம்பினான்—மேன்மைவிள க்கும்படி கூறியருளினார் எ—று.

மற்று ஏ- அசைகள். (கஅஅ)

சுகுமாரச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௪௩.

# அங்குலச்சருக்கம்.

இன்னு மாசியிற் சிவநிசிப் பெருமையொன் றிசைப்பேன்
மின்னு வார்சடைத் துறவிர்கா ளுமக்கென விழைவாற்
றுன்னு நான்மறைப் பொருடெரி வியாதனைத் தொழுது
பின்னு மாதவச் சூதமா முனிவரன் பேசும்.

இ—ள். மா தவ சூத மா முனிவரன்—மிக்கதவத்தையுடைய சூதமகாமுனிவர், மின்னும் வார் சடை துறவிர்காள்-ஒளிபொருந்தியநீண்டசடையையுடைய முனிவர்களே, இன்னும் மாசியில சிவநிசி பெருமை ஒன்று உமக்கு இசைப்பேன் என—இன்னும் மாசிமாதத்தில்வருகின்ற சிவராத்திரிவிரதத்தின்மகிமையொன்றைஉங்களுக்குக்கூறுவேனென்று, விழைவால்-ஆசையினால், துன்னு நால் மறை பொருள் தெரி வியாதனை தொழுது-கூட்டமாகிய நான்குவேதங்களின் பொருள்களையுமறிந்த வேதவியாசமுனிவரை(நினைத்துத்)தொழுது, பின்னும் பேசும்—பின்னுங்கூறுவார் எ—று. (க)

களங்க மாய்க்குறு முயலுறு கதிர்மதி தவழ
விளங்கு மிஞ்சிசூழ்ந் தளகைமா நகரினை வென்ற
வளங்கொள் சாகர புரத்தயல் வளர்வரை வனத்தி |ன்.
லுளங்கொ ளோகையோ டுறைபவன் றோலுடை யுடையோ

இ—ள் குறு முயல் ஆய் களங்கம் உறும்-குறுகியமுயல்வடிவாய்க்களங்கமமையப்பெற்ற, கதிர் மதி தவழ் விளங்கும் இஞ்சி சூழ்ந்து—கிரணங்களையுடைய சந்திரன்தவழும்படி உயர்ந்துவிளங்குகின்ற மதிலாற்சூழப்பட்டு, அளகை மா நகரினை வென்ற—பெருமைபொருந்திய அளகாபுரியையும் (வளத்தினால்)வென்ற,வளம் கொள் சாகர புரத்து அயல்—செழிப்புப்பொருந்திய சாகரபுரமென்னும் நகரத்தின் பக்கத்தே, வளர் வரை வனத்தில—வளர்ந்தமலைகள்பொருந்திய காட்டில், உளம் கொள் ஓகையோடு உறைபவன்— மனம்நிறைந்த மகிழ்ச்சியோடுவாழ்பவனும், தோல் உடை உடையோன்—தோலைவஸ்திரமாகக்கொண்டவனும் எ—று. (உ)

வெண்ணிணத்தடி முடைகமழ் வெடிக்குரல் வாயா
னெண்ணில் வேட்டுவக் கிளைஞரோ டின்பமுற் றென்று
நண்ணி வாழ்பவன் காதினி னூல நால்வாயின்
றண்ணி லாமருப் பரிந்தது குழையெனத் தரிப்போன்.

இ—ள்: வெள் நிண தடி முடை கமழ் வெடி குரல் வாயான்— வெள்ளிய நிணமாகிய தசையினது முடைநாற்றம் வீசப்பெற்ற உரத்த தொனி

யைக்கொண்ட வாயையுடையவனும், எண்ணில் வேட்டுவ கிளைஞரோடு இ ன்பம் உற்று என்றும் நண்ணி வாழ்பவன்—அளவில்லாத தனது வேடர் குல மாகிய சுற்றத்தாரோடு சுகம்பெற்று எந்நாளும் நிலைத்துவாழ்பவனும், காதி னில் நால—காதுகளில் தூங்கும்படி, நால்வாயின் தண் நிலா மருப்பு அரிந்து அது குழை என தரிப்போன்—யானையினது குளிர்ந்தஒளியைவீசுகின்ற கொ ம்மையரிந்து அதனைக் குண்டலமாக அணிபவனும் எ—று. (ரு)

தேனு நீடணில் வாற்குரற் செந்தினை மாவுங்
கானி னீயலுங் கபித்தநற் கனிகளுங் கங்குன்
மானு மேனமான் மரைமுயன் முதலிய மாவி
னூனு மைவனத் துண்டியு முண்டிகொண் டுவப்போன்.

இ—ள்: தேனும்—தேனையும், நீடு அணில் வால் குரல் செந்தினை மாவும்-நெடிய அணில்வால்போன்ற கதிர்களையுடைய செந்தினையின் மா வையும், கானில் ஈயலும்—காட்டிலுள்ள ஈயல்களையும், கபித்த நல் கனிகளு ம்— நல்ல விளாங்கனிகளையும், கங்குல் மானும் ஏனம் மான் மரை முயல் முதலிய மாவின் ஊனும்—இருளையொத்த கரிய பன்றி மான் மரை முயல் ஆகியமிருகங்களின் மாமிசங்களையும், ஐவனத்து உண்டியும்—மலைநெற்சாத த்தையும், உண்டி கொண்டு உவப்போன்— உணவாகப் புசித்து மகிழ்பவனு ம் எ—று. (சு)

பொங்கு வெஞ்சினத் தழல்விழிப் பொறிப்புலி போல்வான்
கங்கு லஞ்சனக் கிரிமுழக் கொடுமழை காலு
மங்கு லோருருக் கொண்டுவந் தாலென வடிவந்
தங்கு மங்குல னென்றுள னொருதனிச் சவரன்.

இ—ள்: பொங்கு வெம் சினத்து அழல் விழி பொறி புலி போல்வா ன்—கொதிக்கின்ற கொடிய கோபத்தையுடைய அக்கினிபோன்றகண்ணைக் கொண்ட புள்ளிபொருந்திய புலியைநிகர்த்தவனும், கங்குல் அஞ்சன கிரி மு ழக்கொடு மழை காலும் மங்குல் ஓர் உரு கொண்டு வந்தால் என— இருளும் நீலமலையும் இடிமுழக்கத்தோடு மழையைச்சொரிகின்ற மேகங்களுங்கூடி ஒ ருவடிவமாய்த்திரண்டுவந்தாற்போன்ற, வடிவம் தங்கும் அங்குலன் என்று ஒ ரு தனி சவரன் உளன்—கரியஉருவத்தைக்கொண்ட அங்குலனென்னும்பெ யரையுடையவனுமாகிய ஒப்பற்ற ஒருவேடனுளன் எ—று. (எ)

பொன்றி கழ்ந்திடு மவ்வரைக் கருகொரு புனத்திற்
குன்றி யின்வடக் குடமுலைக் குழைழங்கலை யுடுக்கு
மின்றி ருந்திடைக் கொடிச்சியோர் கொடிச்சியை வேட்டாங்
கன்றி லுஞ்சிறைச் சேவலு மாமென வணைந்தான்.

இ—ள்: பொன் திகழ்ந்திடும் அவ் வரைக்கு அருகு ஒரு புனத்தில்— அழகு விளங்குகின்ற அந்த மலையின் பக்கத்தேயுள்ள ஒரு புனத்தின்கண்,

குன்றியின் வட குடமுலை—குன்றிமணிமாலைகளையணிந்த கலசத்தையொத்த ஸ்தனங்களையும், குழை கலை உடுக்கும் மின் திருந்து கொடி இடைச்சி ஓர் கொடிச்சியை வேட்டு—இலைகளாற்சமைக்கப்பட்ட வஸ்திரத்தை உடுத்த மின்னலையும்பழிக்கின்ற கொடிபோன்ற இடையையுமுடையளாகிய ஓர் வேட்டுவமாதை விவாகஞ்செய்து, ஆங்கு அன்றிலும் சிறை சேவலுமாம் என அணைந்தான்—அவ்விடத்தே அன்றிற்பேடும் சிறகுகளையுடைய அதன்சேவலுமென்று கூறும்படி சையோகமுற்றிருந்தான் எ—று. (சு)

கொடிய கோளரிப் பிணவுவெங் குருளையின் றென்னப்
பிடிநடைக் குறப் பேதையங் கிருமகப் பெற்றாள்
கடிய புல்லுகிர்ச் சுட்டியோ டரைமணிக் கவடி
வடிவு சேர்தரு புதல்வருக் கணிந்துள மகிழ்வான்.

இ—ள்: கொடிய கோளரி பிணவு வெம் குருளை ஈன்று என்ன—கொடிய குணத்தையுடைய பெண்சிங்கமானது வெவ்விய குட்டியையீன்றாற்போல, பிடி நடை குற பேதை—பெண்யானைபோன்ற நடையையுடைய அந்த வேட்டுமங்கை, அங்கு இரு மகப்பெற்றாள்—அவ்விடத்து இரண்டு புத்திரர்களைப்பெற்றாள், கடிய புல் உகிர் சுட்டியோடு கவடி அரை மணி—கொடிய புலிநகத்தாற்செய்யப்பட்ட நெற்றிச்சுட்டியையும் சோகிகளாற்செய்யப்பட்ட அரைமணிகளையும், வடிவு சேர் தரு புதல்வருக்கு அணிந்து—அழகுவாய்ந்த தன்புத்திரர்களுக்குத்தரித்து, உளம் மகிழ்வான்— மனமகிழ்ச்சி கொள்ளுவான் எ—று. (எ)

உரையிந் நீர்மையிற் களிப்புறு மெயினனங் கொருநாள்
வரையி னீண்மரத் துரித்திடும் வற்கலை வாங்கி
யரையி னீர்த்துமான் றோற்செருப் படிகளிற் றொட்டு
விரையி னீடிருட் குஞ்சிமென் கயிற்றினால் விசித்து.

இ—ள்: உரை இந்நீர்மையில் களிப்பு உறும் எயினன்-கூறப்பட்ட இத்தன்மையாக மகிழ்ச்சியோடு வாழுகின்ற வேடனானவன், அங்கு ஒரு நாள்-அவ்விடத்து ஒரு தினத்திலே, வரையில் நீள் மரத்து உரித்திடும் வற்கலை வாங்கி அரையில் ஈர்த்து—மலையினிடத்து நீண்டுவளர்ந்த மரத்தினின்றுமுரிக்கப்பட்ட தோலாகிய வஸ்திரத்தையெடுத்து அரையிற்றரித்து, மான் தோல் செருப்பு அடிகளில் தொட்டு—மான்தோலாற்செய்யப்பட்ட செருப்பைக் கால்களிலணிந்து, விரையின் நீடு இருள் குஞ்சி மென் கயிற்றினால் விசித்து—வாசனையூட்டப்பட்ட கரிய குடுமியை மிருதுவாகிய கயிற்றினாற்கட்டி எ—று. (அ)

துரக்கும் வெஞ்சரத் தூணிதன் வெரினிடைத் தூக்கித்
தாக்கின் றோலுறைச் சுரிகைசேர்த் தஞ்சன சயிலத்

தூக்குந் தோளில்வார் விற்றரித் துயர்சுவா வினங்கொண்
டிரக்க மச்சமொன் றில்லவன் வேட்டமே லெழுந்தான்.

இ—ள்: தூக்கும் வெய் சர தூணி தன் வெரினிடை தூக்கி—செலுத்தப்படுகின்ற வெவ்விய அம்பறாத்தூணியை தனது முதுகிற்றெருங்கத்தூக்கி, தரக்கின் தோல் உறை சுரிகை சேர்த்து— புலித்தோலாற்செய்யப்பட்ட உறையினிடத்து உடைவாளைவைத்து, அஞ்சன சயிலத்து உரக்கும் தோளில் வார்வில் தரித்து—நீலகிரியைப்போன்ற வலிமைபொருந்திய தோளின்கண்ணே நீண்டவில்லைத்தாங்கி, சுவா இனம் கொண்டு—நாய்க்கூட்டங்களையுங்கொண்டு, இரக்கம் அச்சம் ஒன்றும் இல்லவன் வேட்டமேல எழுந்தான்—மனஇரக்கமும் பயங்கரமும் சிறிதுமில்லாதவனும் வேட்டையாடும்பொருட்டுப்புறப்பட்டான் எ—று. (கூ)

இலவு தேக்ககி லிரத்திவே லெட்டிபுன் னாகங்
குலவு கூவிளங் கொன்றைபூங் குரவசோ கீரப்
பலவு பாடலம் வன்னிசண் பகம்பட ரழிஞ்சி
னிலவு பாலைபைந் தாதுபொன் னிறத்தநீள் வேங்கை.

இ—ள்: இலவு—இலவமும், தேக்கு—தேக்கும், அகில்—அகிலும், இரத்தி—இரத்தியும், வேல்—வேலும், எட்டி—காஞ்சிரையும், புன்னாகம்—புன்னையும், குலவு கூவிளம்—விளங்குகின்ற வில்வமும், கொன்றை—கொன்றையும், பூங்குரவு—புஷ்பங்கள்நிறைந்த குராவும், அசோகு—அசோகும், ஈரப்பலவு— ஈரப்பலாவும், பாடலம்—பாதிரியும், வன்னி—வன்னியும், சண்பகம்—சண்பகமும், படர் அழிஞ்சில்— பரந்த அணிஞ்சிலும், நிலவு பாலை—ஒளிபொருந்தியபாலையும், பொன் நிறத்த பை தாது நீள் வேங்கை—பொன்மயமாகிய பசிய பராகத்தைக்கொண்ட நெடிய வேங்கையும் எ—று. (சo)

விரிதடஞ்சினைச் சந்தனம் பொரியரை வெள்ளில்
பெரிய வாகைபிப் பிலம்பிசு மந்தமுட் பிடவங்
கரிய காதிரங் கழையிருண் மதுமலர்க் கடம்பம்
வரிகொ ளார்பதஞ் செறிதரு மராமரம் வகுளம்.

இ—ள்: விரி தடம் சினை சந்தனம்—விரிந்த விசாலமாகிய சாகைகளையுடைய சந்தனமும், பொரி அரை வெள்ளில்— பொரிந்த அரையையுடைய விளாவும், பெரிய வாகை—பெரிய வாகையும், பிப்பிலம்— அரசும், பிசுமந்தம்—வேம்பும், முள் பிடவம்—முள்ளைக்கொண்டபிடவமும், கரியகாதிரம்—கருநிறம்பொருந்திய கருங்காலியும், கழை—மூங்கிலும், இருள் மது மலர் கடம்பம்—கரியசுகந்த மலர்நிறைந்த கடம்பும், வரி கொள் ஆர்பதம் செறிதரும் மராமரம்—புள்ளிபொருந்திய வண்டுகள் படிகின்ற மராமரமும், வகுளம்—மகிழும் எ—று. (சக)

மரவ நாகநல் வழைமுதல் மரங்களா னெருங்கி
யிரவ லாற்பக லில்லையாங் கிலங்குமா யிரஞ்செங்
கரவ ரோதயன் கதிரொளி புகுந்திடாக் கறங்கு
மரவ மாருதம் புகுந்திடா வனத்திலங் கடைந்தான்.

இ—ள்: மரவ நாக நல் வழை முதல் மரங்களால் நெருங்கி, குங்குமங்ளும் நாகமும் நல்லசுரபுன்னையும்முதலாகியமரங்களினால் நெருக்குண்டு, ஆங்கு இரவு அலால் பகல் இல்லை—அவ்விடத்து இரவேயன்றிப்பகலானது இல்லையென்றுசொல்லும்படி, இலங்கும் செம் ஆயிரம் கர வர உதயன் கதிர் ஒளி புகுந்திடா— ஒளிவிளங்குகின்ற சிவந்த ஆயிரங்கிரணங்களையுடைய மேன்மைதங்கிய சூரியனதுவெயில் செல்லப்பெறாததும், கறங்கும் அரவ மாருதம் புகுந்திடா—வீசுகின்ற ஒலிமிகுந்த காற்றுச்செல்லப்பெறாததுமாகிய, வனத்தில் அடைந்தான்—காட்டினுட்பிரவேசித்தனன் எ—று.

அங்கு அசை. (௧௨)

புட்ட ருக்குலந் தொறும்பயில் பொங்கிருட் புனத்திற்
கட்ட ழற்பொறிக் கூருகிர்க் கவிழ்தலை யுளிய
மட்ட றச்சித லெடுத்துயர் பாழிவன் மீகந்
தொட்ட கழ்ந்ததிற் சோறுக ளருந்துமங் கொருபால்.

இ—ள்: புள் தரு குலம் தொறும் பயில் பொங்கு இருள் புனத்தில்—பட்சிகள் விருட்சங்கடோறும்வசிக்கின்ற மிக்க இருள்நிறைந்தவனத்தில், தழல் பொறி கண் கூர் உகிர் கவிழ் தலை உளியம்—அக்கினிப்பொறிபோன்ற கண்களையும் கூரியநகங்களையும் கவிழ்ந்ததலையையுமுடைய கரடிகள், மட்டு அற சிதல் எடுத்து— அளவற்றகறையான்களாலெடுக்கப்பட்டு, உயர் பாழி வன்மீகம் தொட்டு அகழ்ந்து— உயர்ந்த பாழிகளையுடைய புற்றுகளைத் தோண்டிக் குடைந்து, அதில் சோறுகள் எடுத்து—அங்குள்ளபுற்றுஞ்சோறுகளையெடுத்து, அங்கு ஒருபால் அருந்தும்—ஆங்கேஓரிடத்துஉண்ணும் எ—று.

துறுமயிர்ச்செறி மடிசெவித் துடிக்குரற் செந்நாய்
தெறுசி னத்துடன் சிலீமுகஞ் செல்கதி யினிற்சென்
றுறுசெ வித்துணை நிமிர்த்துகள் குமிழிநே ரொண்கட்
குறுமு யற்சிறு குருளையைத் துரத்திடு மொருபால்.

இ—ள்: துறு செறி மயிர் மடி செவி துடி குரல் செந்நாய்—நெருங்கி அடர்ந்த மயிரையும் மடிந்தசெவியையும் அஞ்சுதற்கேற்ற குரலையுமுடைய செந்நாய்கள், தெறு சினத்துடன் சிலீமுகம் செல் கதியினில் சென்று—கடுங்கோபத்துடன் அம்புகள்செல்லுகின்ற வேகத்தைப்போல விரைந்துசென்று, உறு செவி துணை நிமிர்த்து உகழ் குமிழி நேர் ஒண் கண் குறு முயல் சிறு குருளையை—பொருந்திய இரண்டு செவிகளையும் நெறித்துக்கொண்டு பாய்கின்றநீர்க்குமிழியையொத்த ஒளிபொருந்திய கண்களையுடையகுறுத்

த சிறியமுயற்குட்டிகளை, தூரத்திடும் ஒருபால்— தூரத்திச்செல்லும் ஓர்பக்க த்தில் எ—று. (கச)

வளைந்த வாலுளை மடங்கல்கைம் மாவின்மத் தகத்தைப்
பிளந்து கோடுகள் பிடுங்கியே கறித்திடத் தெறித்து
விளங்கு நித்திலஞ் சோரியிற் றுவண்டதால் விரிமா
துளஞ்செழுங்கனி விதையெனத் துளங்குமங் கொருபால்.

இ—ள்: வளைந்த வால் உளை மடங்கல்—வளைந்தவாலையும் பிடர்மயிரையுமுடைய சிங்கம், கை மாவின் மத்தகத்தை பிளந்து—யானையினுடைய சிரசையுடைத்து, கோடுகள் பிடுங்கி கறித்திட— கொம்புகளைப்பிடுங்கிக் கடித்தலினால், தெறித்து விளங்கு நித்திலம்—நிலத்திலே சிதறிக்கிடந்து பிரகாசிக்கின்ற முத்துக்கள், சோரியில் துவண்டதால்-இரத்தத்திற்றோய்ந்தமையால், விரி செழும் மாதுளம் கனி விதை என—(வெடித்து)விரிந்தசெழுமையாகிய மாதுளம்பழங்களினது வித்துக்களைப்போல, துளங்கும் அங்கு ஒருபால்—பிரகாசிக்கும் அங்கோர் பக்கத்தில் எ—று.

ஏ—அசை. (கரு)

இடிமுகிற்குரற் றழைசெவித் துணைமருப் பெய்ந்த
கடிசினப்புழைக் கரக்கடக் கவுட்பெருங் களிறு
துடியடிக்கய முனிகள்பின் றொடர்ந்திடத் துன்னும்
பிடிநதிப்புனல் படிந்துடன் பிளிறுமங் கொருபால்.

இ—ள். இடி முகில் குரல்—மேகத்தினிடியைப்போன்றசத்தத்தையும், தழை செவி—தழைத்த செவிகளையும், துணை மருப்பு—இரண்டுகொம்புகளையும், கடி எய்ந்த சினம்—அச்சத்தைவருவிக்கின்ற கோபத்தையும், புழை கரம்—துதிக்கையையும், கட கவுள் பெரும் களிறு— மதம்பாயுங்கபோலங்களையுமுடைய பெரிய ஆண் யானைகளும், துடி அடி கயமுனிகள் பின்தொடர்ந்திட துன்னும் பிடி—உடுக்குப்போன்றஅடிகளையுடைய யானைக்கன்றுகள் பின்றொடர்ந்துவர நெருங்கிச்செல்கின்ற பெண்யானைகளும், நதி புனல் படிந்து— ஆற்றுச்சலத்திற்றோய்ந்து, உடன் பிளிறும் அங்கு ஒருபால்— ஒன்றாய்க்கூடிச்சத்திக்கும் அங்கோர்பக்கத்தில் எ—று. (கசா)

முழைக்கட் டுஞ்சிடு கொடுவரிப் புலியினம் முழங்கி
யுழைத்த பேரொலி கேட்டுவல் லுளிமரை வரையா
டிழைந்த காரிரும் பெண்ணவே நீண்டகோட் டிரலை
யுழைக்குலம்பயந் தொதுங்கியே யொடுங்குமங் கொருபால்.

இ—ள்: முழை கண் துஞ்சிடும் கொடு வரி புலி இனம் முழங்கி உழைத்த பேர் ஒலி கேட்டு—மலைக்குகைகளிலே உறங்குகின்ற வளைந்த வரிகளையுடைய புலிக்கூட்டங்களானவை உறுமுதலாலுண்டாகிய பெரியசத்தத்

தைக்கேட்டு, வல்லுளி—பன்றிகளும், மரை—மரைகளும், வரை ஆடு—மலையாடுகளும், இழைத்த கார் இரும்பு என்ன நீண்ட கோட்டு இரலை—கரியஇரும்பினாற்செய்யப்பட்டாற்போன்ற நீண்ட கொம்புகளையுடைய கலைமான்களும், உழை குலம்—மான்கூட்டங்களும், பயந்து ஒடுங்கி ஒதுங்கும் அங்கு ஒருபால்—பயந்து ஒடுங்கி பதுங்கும் அங்கோர்பக்கத்தில் எ—று.

ஏ இரண்டும் அசைகள். (கஎ)

நீடு வேற்கரக் குமரவே ணெடியமா குலங்க
ளூடு வைத்தபல் லாயிரஞ் சுடர்விளக் கொப்பப்
பாடு சேர்படம் விரித்துயிர்ப் பெறிந்துநற் படிநின்
றாடு நாகநன் மணிகிடந் தவிருமங் கொருபால்.

இ—ள்: நீடு வேல் கர குமரவேள் நெடிய மா குலங்கள் ஊடு வைத்த—நீண்ட வேற்படையைத்தாங்கியதிருக்கரத்தையுடைய சுபிரமணியக்கடவுளது பெருமைபொருந்திய திருவாலயங்களில்ஏற்றப்பட்ட, பல் ஆயிரம் சுடர் விளக்கு ஒப்ப-அளவற்றஆயிரக்கணக்கான ஒளிவிளங்குகின்ற தீபங்களுக்குச்சமானமாக, பாடுசேர் படம் விரித்து உயிர்ப்பு எறிந்து- அகன்ற படங்களைவிரித்து மூச்செறிந்து, நல் படியில் நின்று ஆடும் நாக நல் மணி கிடந்து அவிரும் அங்கு ஒரு பால்— நல்ல பூமியிலேநின்று ஆடுகின்ற சர்ப்பங்களின் நல்ல இரத்தினங்கள் கிடந்துபிரகாசிக்கும் அங்கோர்பக்கத்தில்எ—று. (கஅ)

வேறு.

இத்திற நிகழும் வனத்திலவ் வேட னிருஞ்சிறைப் புட்குலம் படுக்குங், குத்திரக் கண்ணி பற்பல வூன்றிக் குலவுமா வினங்கொலை புரிவான், புத்தியி னியற்று மியந்திரப் பொறிகள் புடவியிற் புதைத்துய ரடவிப், பத்திர மரத்தி னடிகளிற் றொடுத்துப் பலவலை வளைவுறப் பூட்டி.

இ—ள்: இத்திறம் நிகழும் வனத்தில்—இவ்வாறுநடைபெறுகின்ற அக்காட்டின்கண்ணே, அவ்வேடன்—அந்த அங்குலன், குலவும் மா இனம் கொலை புரிவான்—உலாவுகின்றமிருககூட்டங்களைக் கொலைசெய்யும்பொருட்டு, இரும் சிறை புள் குலம் படுக்கும் குத்திர கண்ணி பல்பல ஊன்றி—பெருமைபொருந்திய சிறகுகளையுடைய பட்சிக்குழாங்களை அகப்படுத்துகின்ற வஞ்சகமாகிய பலபலகண்ணிகளைப் பதித்தும், புத்தியில் இயற்றும் இயந்திர பொறிகள் புடவியில் புதைத்து— யூகமாகச்செய்யப்பட்ட இயந்திரப்பொறிகளைப் பூமியில்மறையப்புதைத்தும், உயர் அடவி பத்திர மரத்தின் அடிகளில் பல வலை தொடுத்து வளைவு உற பூட்டி—உயர்ந்த காட்டிலுள்ள இலைகள்நிறைந்த மரங்களின் அடிகளில் பலவலைகளைத் தொடுத்து வளைத்துக்கட்டியும் எ—று. (கக)

மடிசெவி வளைவான் ஞாளிக ளேவி வாளிக டொரந்துபின் கு
றிய, தடிகளி னெறிந்து கற்றிர ளிருத்துந் தட்டைகள் சுற்றியே
வீசிச், செடிவளர் வனத்தில் விலங்குகள் கலங்கச் செய்தவன்று
ரத்தலும் வலையி, னடிகளிற் பிணிக்கப் புதைத்திடும் பொறியி ல
கப்படா தகன்றவங் கனைத்தும்.

இ—ள்: மடி செவி வளை வால் ஞாளிகள் எவி—மடிந்தசெவிகளையும்
வளைந்த வால்களையுமுடைய நாய்களையேவிவிட்டும், வாளிகள் துரந்து—அம்பு
களைச்செலுத்தியும், பின் குறிய தடிகளின் எறிந்து— பின்பு குறுகியதடிக
ளினாலெறிந்தும், திரள் கல் இருத்தும் தட்டைகள் சுற்றியே வீசி— திரண்
டகற்கள்வைக்கப்பட்ட கவண்களைச் சுற்றிவீசியும், செடி வளர் வனத்தில் வி
லங்குகள் கலங்க செய்து அவன் துரத்தலும்--செடிகள்வளர்ந்த அக்காட்டில்
மிருகங்களைக் கலங்கும்படிசெய்து அவன்துரத்தவும், வலையின் அடிகளில் பி
ணிக்க புதைத்திடும் பொறியில் அகப்படாது— வலையின்கீழ்ப்பக்கங்களில் க
ட்டும்படி புதைக்கப்பட்ட கண்ணிகளில் அகப்படாமல், அங்கு அனைத்தும் அ
கன்ற—அவ்விடத்து எல்லாமிருகங்களும் பிழைத்தோடின எ—று. (உ௦)

புன்புல வருந்துந் தந்தவாய் திறந்து பொதும்பரிற் புகுந்து
மா வினங்கள், மென்சிறைப் பறவைக் குலமெலா மருள விளித்
தவை போலநின் றழைக்குந், துன்புட னுழையின் கவையடி மி
தித்த சுவடுகண் டன்றெறித் தொடரு, மென்செய்கே னினியென்
றங்கைகள் வங்கி விடும்புகு முடம்புநே டற்கே.

இ—ள். பொதும்பரில் புகுந்து— சோலைகளிற்சென்று, புன் புலவு
அருந்தும் தந்த வாய் திறந்து—எளிய மாமிசத்தையுண்ணுகின்ற பற்களையு
டைய வாயைத்திறந்து, மா இனங்கள் மென் சிறை பறவை குலம் எலாம் ம
ருள அவை போல விளித்துநின்று அழைக்கும்—கூட்டமாகிய மிருகங்களு
ம் மிருதுவாகியசிறகுகளையுடைய பட்சிக்கூட்டங்களும் முற்றமருளும்படி
அவ்வம்மிருகங்களும் அவ்வப்பட்சிகளும்போலக்கத்தியழைப்பான், துன்பு உ
டன்—மனக்கவலையோடு, உழையின் கவை அடி மிதித்த சுவடு கண்டு அன்
றெறி தொடரும்—மான்களின் பிளவாகியகால்கள் மிதிக்கப்பட்டசுவட்டை
ப்பார்த்து அந்தவழியேதொடர்ந்துசெல்வன், இனி என் செய்கேன் என்று--
இனிமேல் நான் யாதுசெய்வேனென்றுதுன்புற்று, புகும் உடம்பு நேடற்கு
அம் கைகள் வங்கில் இடும்—புகுந்திருக்கின்ற உடம்புகளைத் தேடும்பொருட்டு
அழகியதன்கைகளைப்புற்றிற்செலுத்துவன் எ—று.

ஏ-அசை. (உக)

வார்சிலை வணக்கி விடுத்திடும் வயிர வாளியான் ஞாளியால்
வயங்கும், கோரவெங் குந்தப்படையினற் றிரண்ட கொடுங்கடுங்

கதையினாற் குணிலா, லேர்பெறும் பெருங்கண் வலையினாற் புதைத்த வியந்திரப் பொறியினா லெதிர்ந்தங், கோர்விலங் கோர்புட் கொன்றிடக் கிடையா துள்ளுறு கவலையுற் றுடைந்தான்.

இ—ள்: வார்சிலை வணக்கி விடுத்திடும் வயிர வாளியால்—நீண்ட வில்லைவளைத்துச்செலுத்திய வயிரமாகிய அம்புகளினாலும், ஞாளியால்—நாய்களினாலும், வயங்கும் கோர வெம் குந்த படையினால்—பிரகாசிக்கின்ற உக்கிரமாகிய கொடிய கைவேலினாலும், திரண்ட கொடும் கடும் கதையினால்—திரட்சியான கொடிய வேகமாகிய தண்டாயுதத்தினாலும், குணிலால்—குறுந்தடியினாலும், ஏர் பெறும் பெரும் கண் வலையினால்—அழகிய பருத்தகண்களையுடைய வலைகளினாலும், புதைத்த இயந்திர பொறியினால்—நிலத்திற்பதித்துவைத்த சூத்திரப்பொறிகளினாலும், எதிர்ந்து அங்கு ஓர் விலங்கு ஓர் புள் கொன்றிட கிடையாது—எதிராக அவ்விடத்தே ஒருமிருகமாவது ஒருபட்சியாவது கொலைபுரிதற்கு வரப்பெறாமல், உள் உறு கவலை உற்று உடைந்தான்—உள்ளாகப்பொருந்தியகவலையினால் மனக்கலக்கமடைந்தான் எ—று. (உஉ)

இன்னணம் வேட்டத் தலைந்தவன் மேனி யிளைத்திடத் தளைத்தகட் டெழுந்து, துன்னரு முதாத் தழல்சுட மெலிந்து சோகமோ டிருந்தபின் பரமன், பன்னரு மிரவீ தென்றறிந் தவன்போற் பதங்கனோர் பதங்கொடேர் கடவி, மன்னெடுங் கயிலை மலைவலங் கொள்வான் வாருண திசையத்தின் மறைந்தான்.

இ—ள்: இன்னணம் வேட்டத்து உலைந்தவன்—இவ்விதமாக வேட்டையினால் அலைந்த அங்குலன், மேனி இளைத்திட—சரீரங்களைகொள்ள, தளைத்து அகட்டு எழுந்து துன்னரும் உதாத்து அழல் சுட—சுவாலித்து வயிற்றிலெழுந்து சகித்தற்கரிய உதராக்கினியானதுசுட, மெலிந்து சோகமோடு இருந்தபின்—வாடித் துக்கத்தோடு இருந்தபின்பு, பதங்கன்—சூரியனானவன், பரமன் பன்னரும் இரவு ஈது என்று அறிந்தவன்போல்—சிவபிரானது சொல்லுதற்கரிய சிவராத்திரிதினம் இதுவென்று அறிந்தவனைப்போல, ஓர் பதம் கொள் தேர் கடவி—ஒற்றைச்சக்கரத்தைக்கொண்ட தனது இரதத்தைச்செலுத்தி, மன் நெடும் கயிலை மலை வலம் கொள்வான்—நிலைபெற்ற நெடிய கயிலாயகிரியை பிரதக்ஷணஞ்செய்யும்படி, வாருண திசையத்தின் மறைந்தான்—மேற்றிசையிலஸ்தமனமாயினான் எ—று. (உரு)

கொய்யுளைப் பரியேழ் கொளுவுமோ ராழிக் கொடிஞ்சியந் தேரொடு குடபால், வெய்யவன் கற்றைக் கதிர்க்கரஞ் சுருக்கி விரிதிரைப் புணரிவீழ்ந் திடலுஞ், செய்யகோ லோச்சி யுலகினி தளிக்குந் திறன்மிகு மரசர்போ யொதுங்க, வய்யமா ளுதற்குக் குறுநில வேந்து வந்தபோல் வந்ததான் மாலை.

இ—ள்: வெய்யவன் கொய்யுளை எழ் பரி கொளுவும் ஓர் ஆழி கொ
டிஞ்சி அம் தேரொடு—சூரியனுனவன் கொய்துவெட்டப்பட்ட உளைமயிரை
யுடைய எழுகுதிரைபூண்ட ஒற்றைச்சக்கரத்தைக்கொண்ட கூம்புகள்பொ
ருந்திய அழகியஇரதத்தோடு, குட பால் சுற்றை கதிர் கரம் சுருக்கி விரிதிரை
புணரி வீழ்ந்திட லும்—மேற்றிசையின்கண் கூட்டமாகிய ஒளிபொருந்திய கி
ரணங்களையொடுக்கி விரிந்த திரைகளையுடைய சமுத்திரத்தில் அமிழ்ந்தத
லும், செய்ய கோல் ஓச்சி உலகு இனிது அளிக்கும் திறல் மிகும் அரசர் போ
ய் ஒதுங்க —செங்கோல்செலுத்தி உலகத்தை நன்குபரிபாலனஞ்செய்கின்ற
வலிமைமிகுந்த போரசரொதுங்கிப்போக, வய்யம் ஆளுதற்கு குறு நிலவே
ந்து வந்த போல்—பூமியை ஆளுதற்குச் சிற்றரசர்கள்வந்தாற்போல, மாலை
வந்தது —மாலைக்காலம்வந்து தோற்றியது எ—று.

ஆல் அசை. (உச)

ஒருருட் டேரோன் குடதிசைக் கடலி லொளித்துறக் குளித்
தகற் பின்னர், வாருறு வரிவிற் றடக்கையங் குலன்றன் வடிவுமு
ன் னகற்றிவெந் தீமை, கூருறு மவன்றன் செய்கைகுத்திரங்கள்
குடிகொளு முளம்போற் கருகிப், பேருல கனைத்தும் விழுங்கி
மா திரம்விண் புதைத்தது காரிருட் பிழம்பே.

இ—ள்: கார் இருள் பிழம்பு—கரிய விருட்கூட்டமானது, ஒருருள்
தேரோன் குடதிசை கடலில் ஒளித்து உற குளித்ததன் பின்னர்— ஒற்
றைச்சக்கரத்தைக்கொண்ட தேரையுடைய சூரியன் மேற்றிசைச்சமுத்திர
த்தின்கண் மறைந்துமுற்ற அமிழ்ந்தியபின்பு, வார் உறு வரிவில் தடக்கை
அங்குலன் தன் வடிவும்—நீண்ட வரிந்துகட்டியவில்லையுடைய விசாலமாகி
ய கையைக்கொண்ட அங்குலனது சரீரத்தையும், நன்கு அகற்றி வெம் தீ
மை கூர் உறும் அவன் தன் குத்திர செய்கைகள் குடிகொளும் உளமும்
போல் கருகி —நன்மையை முற்றவிலக்கி கொடிய தீவினைகளதிகரிக்கப்பெற்
ற அவனுடைய குத்திரமாகியசெய்கைகள் குடிகொண்டிருக்கின்ற மனதையு
ம்போலக் கருநிறமாகி, பேர் உலகு அனைத்தும் விழுங்கி மாதிரம் விண் புதை
த்தது—பெரிய பூமிமுழுவதையும் தன்னுளடக்கித் திக்குகளையும் ஆகாயத்
தையும் மறைவுசெய்தது எ—று.

ஏ அசை. (உரு)

குனிசிலைச் சவரர் குலத்தினி லுதித்துக் கொடுங்கொலை புரி
ந்தவங் குலனுந், தனியிருந் தாண்டு மீண்டியா மெய்தச் சரிதெரி
யாதிவண் டரிக்கி, லினியவூ ணின்றி மனைவியுஞ் சிறுவ ரிருவரு
ம்பசிப்பரென் றிரங்கித், துனியுற லொழிந்து தெளிந்துளந் தேறி
ச் சொல்லருஞ் சூட்சியொன் றுணர்ந்தான்.

இ—ள் குனி சிலை சவரர் குலத்தினில் உதித்து கொடுங்கொலை புரிந்த அங்குலனும்— வளைந்த வில்லையுடைய வேட்டுவர்குலத்திற்றோன்றிக் கொடியகொலைத்தொழிலைச்செய்த அங்குலனும், ஆண்டு தனி இருந்து—அவ்விடத்தே தனித்தவனாயிருந்து, இவண் தரிக்கில் மீண்டு யாம் எய்த சரி தெரியாது—இவ்விடத்தில் தங்குவேனாயின் திரும்பி யான்செல்லுவதற்கும் வழிதெரியாது, இனிய ஊண் இன்றி மனைவியும சிறுவர் இருவரும் பசிப்பர் என்று இரங்கி—இனியஉணவுஇல்லாமையால் எனதுமனைவியும் புத்திரர்களிருவரும் பசியால்வருந்துவர்களென்றும் மனவிரகங்கொண்டு, துனி உறல் ஒழிந்து—பின்னர் துன்புறுதலைத்தவிர்ந்து, உளம் தெளிந்து தேறி—மனத்தெளிவடைந்து துணிந்து, சொல்லரும் சூட்சி ஒன்று உணர்ந்தான்—பகர்தற்கரிய உபாயமொன்றை ஆலோசித்தனன் எ—று. (உசு)

பாவியேன் வாளா வெறுங்கையோ டெய்திற் பயனிலை பனி
யிருட் பொழுதில், வாவிக டுருவிக் குளிர்புனல் பருக வருமிருக
ங்களுக் கயிலம், பேவியே வதைத்துத் தடிகொடு போத லியல்பெ
ன மதித்துட னெழுந்து, தூவியஞ் சிறைப்புட் குலம்பயின் றிடு
மோர் சூழியின் கரைக்கணுற் றனனே.

இ—ள். பாவியேன் வாளா வெறும் கையோடு எய்தில் பயன் இலை—பாவியாகிய யான் விருதாவாகக் கையிலொன்றுமின்றிச்செல்வதிற் பிரயோசனமில்லை, பனி இருள் பொழுதில்—பனிநிறைந்த இருளிலே, வாவிகள் துருவி குளிர் புனல் பருக வரு மிருகங்களுக்கு—தடாகங்களைத்தேடிக் குளிர்ச்சிபொருந்திய சலத்தையுண்ணும்படிவருகின்ற மிருகங்களுக்கு, அயில் அம்பு ஏவி வதைத்து—கூரியஅம்புகளைச்செலுத்திகொலைசெய்து, தடி கொடு போதல் இயல்பு என மதித்து— இறைச்சியைக்கொண்டுபோதலே தக்கதென்று தீர்மானித்து, உடன் எழுந்து—உடனே அவ்விடம்விட்டெழுந்து, தூவி அம் சிறை புள் குலம் பயின்றிடும்— தூவியையுடைய அழகிய சிறகு பொருந்திய பட்சிசாலங்களவாசஞ்செய்கின்ற, ஓர் சூழியின் கரைக்கண் உற்றனன்— ஒரு தடாகக்கரையையடைந்தனன் எ—று.

எ இரண்டும் அசைகள். (உஎ)

முறுகிய சினக்கோ ளரிவயப் புலிவெம் மும்மதக் கரடமால்
யானை, குறுகுமென் றஞ்சிப் பாழிநீர்ச் சூறிக் கோட்டுறு கூவிள
க்கோட்டி, லுழுவலொன் றேறிச் சுரிகையான் மறைக்கு முலவை
க ளரிந்தரிந் தொதுக்கி, மறுகிய மனத்தா னேனமான் மரைகள்
வருமென வரவுபார்த் திருந்தான்.

இ—ள்: முறுகிய சின கோளரி வயப்புலி வெம் மும்மத கரட மால் யானை குறுகும் என்று அஞ்சி— மிக்ககோபத்தையுடைய சிங்கங்களும் வலிய புலிகளும் கன்னமதம் கோசமதம் கைமதமாகிய மும்மதங்களும்பாய்கின்ற

சுவடுகளையுடைய பெரிய யானைகளும் வருமென்றுபயந்து, பாழி நீர் சூழி கோட்டு உறு கூவிள கோட்டில் உறுவன் என்று ஏறி— ஆழமாகிய நீரையுடைய அத்தடாகக்கரையில்நிற்கின்ற வில்வமரக்கொம்பில் மறைந்திருப்பேனென்று ஏறி, சுரிகையால் மறைக்கும் உலவைகள் அரிந்து அரிந்து ஒதுக்கி— உடைவாளினால் தனதுகண்களை மறைக்கின்ற தழைகளைவெட்டி வெட்டியொதுக்கி, ஏனம் மான் மரைகள் வரும் என— பன்றிகளும் மான்களும் மரைகளும் வருமென்று, மறுகிய மனத்தான்— தளர்ந்த மனத்தையுடையவனாய், வரவு பார்த்து இருந்தான்— அவைகளின்வருகையை எதிர்பார்த்திருந்தனன் எ—று. (உஅ)

வடிசெய்து வகுத்த வைதிகசைவ வழிமொழி வழாமன்மந்திரத்தாற், படியின்முற் பகலோர் முனிவரன்பூசை பண்ணிய தெண்ணிய படியே, கடியவெந் தொழிற்செய் கிராதனுங் காணான் கவடுவிட் டுயருமா லூரத், தடியினுக் கருகிற் புராதன விலிங்க மமர்ந்தினி திருந்ததொன் றன்றே.

இ—ள்: வடி செய்து வகுத்த வைதிக சைவ வழி மொழி வழாமல்— களங்கமறவகுக்கப்பட்ட வேதாகமங்களின் விதிமுறைதவறாமல், மந்திரத்தால் படியில் முன்பகல் ஓர் முனிவரன் பூசைபண்ணிய புராதன இலிங்கம் ஒன்று— மந்திரங்களையுச்சரித்து பூமியின்கண்ணே முன்னைக்காலத்து ஒருமுனிவராற்பூசிக்கப்பட்ட பழைய சிவலிங்கமொன்று, கவடுவிட்டு உயரும் மாலூரத்து அடியினுக்கு அருகில்— கொம்பர்கள்விட்டுயர்ந்த வில்வமரத்தினடியின் பக்கத்தில், அமர்ந்து இனிது இருந்தது— எழுந்தருளி நன்மையாகவிருந்தது, எண்ணியபடியே கடிய வெம் தொழில் செய் கிராதனும் காணான்— தன்மனத்திலெண்ணிய எண்ணத்தின்படியே கொடிய தீத்தொழில்களைச்செய்பவனாகிய அவ்வேடனும் (அதனைக்) கண்டிலன் எ—று.

அன்று எ அசைகள். (உகூ)

அன்றர னிரவென் றறிந்திலன் றொடுக்கு மம்பிடை தடுக்குமென் றறிந்து, தன்றடங் கையா லெறிந்தபைந் தழையுந் தனியிருந் திடிற்றுயில் வருமே, யென்றதுவிலக்கி யிருட்பொழு தகற்றற் கெண்ணினன் கொய்துவிட் டெறிந்த, மென்றழை முழுதும் பழுதிலவ் விலிங்க வியன்முடி மீதுவீழ்ந் தனவே.

இ—ள்: அன்று அரன் இரவு என்று அறிந்திலன்— அத்தினம் சிவராத்திரிதினமென்று அறியாது, தொடுக்கும் அம்பு இடை தடுக்கும் என்று அறிந்து— செலுத்தப்படுகின்ற அம்புகளை இடையிலேதடைசெய்யுமெனக் கருதி, தன் தடம் கையால் எறிந்த பைம் தழையும்— தன்னுடைய விசாலமாகிய கைகளினால் பறித்து எறிந்த பசியதழைகளும், தனி இருந்திடில் துயில் வருமே என்று— தனித்துத் தொழிலின்றியிருந்தேனாகில் நித்திரைவரு

மேயென்றுநினைத்து, அது விலக்கி இருள் பொழுது அகற்றற்கு எண்ணின ன்—அந்நித்திரையைநீக்கி அவ்விரவைக்கழித்தற்கு எண்ணினவனாய், கொய் துவிட்டு எறிந்த மென் தழை முழுதும்—பறித்துவிட்டெறிந்த மிருதுவாகிய தழைகள்முழுவதும், பழுது இல் அவ் இலிங்க வியன் முடி மீது வீழ்ந்தன— குற்றமில்லாத அச்சிவலிங்கத்தின் பெருமைதங்கிய திருமுடியின்கண் விழுந் தன எ—று.

ஏ அசை. (௬௦)

குறுந்துளித் திவலைப் பனிநனி மூழ்கிக் கொடும்பசிக் கருந்தி டாதொழிந்து, றுறுந்துயி லுறந்து புராரிசந் நிதியி லூறின்மா லூரவெண் டழையாற், றெறுந்தழ னுதற்கட் சிவநிசி யதனிற் சிவார்ச்சனை புரிந்துவெந் தீமை, யறுந்தவ முடையோ ரொத்தன ன் வேடன் கொடிச்சிதன் றிறமினி யறைவாம்.

இ—ள்: வேடன்—அவ்வங்குலன், குறும் துளி திவலை பனி நனி மூழ்கி—சிறிய துள்ளிகளாய்ச்சிந்துகின்ற பனியில் மிகவும்நனைந்து, கொடும் பசிக்கு அருந்திடாது ஒழிந்து—கொடிய பசியைத்தணித்தற்கு உணவு கொள்ளாது உபவாசமிருந்து, உறும் துயில் துறந்து—பொருந்தியநித்திரை யையும்விலக்கி, புராரி சந்நிதியில்—சிவலிங்கத்தினது முன்னிலையில், ஊறு இல் மாலூர வெண் தழையால்—குற்றமில்லாத வில்வத்தின் வெண்ணிறமா கிய பத்திரங்களினால், தெறும் தழல் நுதல் கண் சிவ நிசி அதனில்—சுடுகி ன்ற அக்கினியாகிய நெற்றிக்கண்ணைக்கொண்ட சிவபெருமானுடைய இர வில், சிவார்ச்சனை புரிந்து வெம் தீமை அறும் தவம் உடையோர் ஒத்தன ன்—சிவபூசைசெய்து கொடிய தீவினைகள்யாவும் நீங்கப்பெற்ற தவத்தையு டையவர்களை நிகர்த்தனன், இனி கொடிச்சி தன் திறம் அறைவாம்—இனி மேல் வேட்டுவமங்கையாகிய அவன்மனைவியின் தன்மைகளைக் கூறுவாம் எ—று. (௬௧)

வேறு.

உன்ன ரும்பெருங் காட்டினில் வேட்டமே லுற்றான்
வன்ன வார்சிலை வலவனென் னுயிர்த்துணை மகிழ்ந
னின்ன மெய்திலனென்கொலோ வெனமனத் தெண்ணி
யன்ன மென்னடைக் குறத்திகண் டுயின்றிடா தரற்றும்.

இ—ள்: அன்ன மெல் நடை குறத்தி—அன்னம்போன்ற மிருதுவா கிய நடையையுடைய அவ்வேட்டுவப்பெண்ணானவள், வன்ன வார் சிலை வ லவன் என் உயிர் துணை மகிழ்நன்—அழகிய நீண்ட வில்வலிமையையுடைய எனது உயிர்த்துணையாகிய நாயகன், உன் அரும் பெரும் காட்டினில வேட் டமேல உற்றான்—நினைத்தற்கரிய பெரியவனத்தில் வேட்டையாடும்பொரு ட்டுச்சென்றான், இன்னம் எய்திலன் என்கொலோ என மனத்து எண்ணி—

இன்னும் வந்தானல்லன் யாதுகாரணமோவென்று மனதில்நினைத்து, கண் துயின்றிடா தரற்றும்—நித்திரைசெய்யாதவளாய்ப் புலம்புவாள் எ—று. ()

தஞ்ச மொன்றிலன் றமியனுச் சென்றனன் றகைசா
லஞ்சனக் கிரியாமென வுருத்தெதி ரடர்ந்து
மஞ்செ னப்பொழி மதசதட் படத்துணை மருப்புக்
குஞ்சரக்குலங் கொன்றவோ வென்றுளங் குலையும்.

இ—ள்: தஞ்சம் ஒன்று இலன் தமியனு சென்றனன்—துணையொன்றுமில்லாது தனிததவனுய்ச்சென்ருன், தகைசால் அஞ்சன கிரி ஆம் என—தக்க பெரிய நீலமலையைப்போல, மஞ்சு என பொழி மத சதட்பத துணை மருப்பு குஞ்சரக்குலம்— மேகத்தைப்போலச்சொரிகின்ற மதத்தையும் நான்குகால்களையும் இரண்டுகொம்புகளையுமுடைய யானைக்கூட்டங்கள், உருத்து எதிர் அடர்ந்து கொன்றவோ என்று உளம் குலையும்—கோபித்து எதிராகநெருங்கிவந்து கொலைசெய்தனவோவென்று மனந்தளருவாள் எ—று.()

கரிய நீண்மயிர்க் கூருகிர்க் கவிழ்தலைக் காடி
சரியில் வந்துயிர் கவர்ந்ததோ வென்னமெய் தளரு
முரிய வெஞ்சினக் கொடுவரி கறுத்தொறுத் துடலைப்
பெரிய வாயினிற் பெய்ததுவோவெனப் பிதற்றும்.

இ—ள்: கரிய நீள் மயிர் கூர் உகிர் கவிழ் தலை காடி—கரிய நீண்ட மயிரையுங் கூரிய நகங்களையுங் கவிழ்ந்ததலையையுமுடைய காடியானது, சரியில் வந்து உயிர் கவர்ந்ததோ என்ன மெய் தளரும்—வழியிலேவந்து உயிரைக்கவர்ந்து கொண்டுபோய்விட்டதோவென்றுஞ் சரீரஞ்சோர்வடைவாள், உரிய வெம் சின கொடுவரி—பொருந்திய கடுங்கோபத்தையுடைய புலியானது, கறுத்து ஒறுத்து உடலை பெரிய வாயினில் பெய்ததுவோ என பிதற்றும்—கோபித்து வருத்திச் சரீரத்தைத் தனது பெரியவாயின்கண்இட்டு உண்டதோ என்றும் பிதற்றுவாள் எ—று. (ருசு)

அளையு றும்பணி விடங்கலுழ்ந் துமிழ்ந்திடு மகல்வாய்த்
துளையெ யிற்றினே றுண்டதுவோவெனச் சோருங்
கிளையு டன்றிரி கரிவழிப் பகையதாங் கிளர்வா
லுளைம டங்கலா லுயிருலந் தனன்கொலென் றுன்னும்.

இ—ள். அளை உறும் பணி விடம் கலுழ்ந்து உமிழ்ந்திடும்—புற்றினிடமாகவசிக்கின்ற பாம்பானது விஷத்தைச்சுரந்து கக்குகின்ற, அகல் வாய் துளை எயிற்றின் எறு உண்டதுவோ என சோரும்—விசாலமாகிய வாயின்கணுள்ள துளைபொருந்திய பற்களினுல் கடியுண்டனனே என்றுஞ்சோருவாள், கிளையுடன் திரி கரி வழி பகையதாம் கிளர் வால் உளை மடங்கலால்—கூட்டமாகத்திரிகின்ற யானைகளுக்குக் குலப்பகையாயுள்ள உயர்ந்த வாலையும் பிட

ர்மயிரையுமுடைய சிங்கத்தினால், உயிர் உலந்தனன் கொல் என்று உன்னு ம்—ஆன்மா நீங்கப்பெற்றனனோ என்றுஞ்சிந்திப்பாள் எ—று. (ருரு)

நாட்ட மன்ன நின் புதல்வர்வெம் பசியினு னலிந்து
கோட்ட முற்றனர் கொழுந்தசை கோற்கொளீஇ வெதுப்பி
யூட்ட வந்திலை யுன்றனக் குரிமையா மெனது
வாட்ட நோக்கிலை யென்சொல்செய் தாயென மயங்கும்.

இ—ள்: நாட்டம் அன்ன நின் புதல்வர் வெம் பசியினால் நலிந்து கோட்டம் உற்றனர்—கண்ணையொத்த உனதுபுத்திரர்கள் கொடிய பசியினா லவருந்தி வாட்டமடைந்தனர், கொழுந்தசை கோல் கொளீஇ வெதுப்பி ஊட்ட வந்திலை—கொழுமையாகிய தசைகளை அம்பிற்கோத்து (அக்கினியில்) வேகும்படிசெய்து உண்பிக்கும்பொருட்டு வந்தாயிலலை, உன் தனக்கு உரிமையாம் எனது வாட்டம் நோக்கிலை—உனக்கு மனைவியாகிய எனது சோர்வையும் பார்த்திலை, என் சொல் செய்தாய் என மயங்கும்— யாதுசெய்தா யென்று மயக்கமடைவாள் எ—று. (ருசு)

என்றி ருந்தருந் துயருழந் திடைக்கொடிக் கொடிச்சி
குன்றி யின்வடங் கிடந்தொளிர் கொங்கைகள் குளிப்ப
வென்றி யங்கதிர் வேல்விழி நீருகுத் திடும்பை
யன்றி யொன்றில ளயர்ந்தன ளிருந்திடு மமையம்.

இ—ள்: கொடி இடை கொடிச்சி—கொடிபோன்ற இடையையுடைய அவ்வேட்டுவப்பெண்ணானவள், என்று இருந்து அரும் துயர் உழந்து—இவ்வாறாக இருந்து அரியதுன்பத்தையடைந்து, குன்றியின் வடம் கிடந்து ஒளிர் கொங்கைகள் குளிப்ப—குன்றிமணிமாலைகள்கிடந்து பிரகாசிக்கின்ற ஸ்தனங்கள்நனையும்படி, வென்றி அம் கதிர் வேல் விழி நீர் உகுத்து—வெற்றிபொருந்திய அழகிய கிரணம்வீசுகின்ற வேலையொத்த கண்களினின்றும் நீரைச்சொரிந்து, இடும்பை அன்றி ஒன்றிலள் அயர்ந்தனள் இருந்திடும் அமையம்—துன்பமேயன்றி வேறொன்றுமில்லாதவளாய்ச் சோர்வடைந்து இருந்த சமையத்தில் எ—று. (ருஎ)

பரவி யந்தணர் வந்தனை புரிந்துமுன் பழிச்ச
விரவி யம்புயம் பொற்கதிர்க் கரங்களால் விரித்துப்
புரவி யேழ்நுகம் பூட்டிய பொற்றடந் தேரூ
ரிரவி யுங்குண புலத்துய ரிரவியி லெழுந்தான்.

இ—ள்: அந்தணர் பரவி வந்தனை புரிந்து முன் பழிச்ச—பிராமணர்கள் பரந்துநின்று வந்தனங்களைச்செய்து முன்னேதுதிக்க, விரவி— நெருங்கி, அம்புயம் பொன் கதிர் கரங்களால் விரித்து—தாமரைமலர்களைச் சிவந்த கிரணங்களாகிய கைகளால்விரியும்படிசெய்து, எழ் புரவி நுகம் பூட்டியபொ

ன் தடம் தேர் ஊர் இரவியும்—ஏழுகுதிரைகளை நுகத்திற்பூட்டிய அழகிய விசாலித்த தேரின்கண்ணேறிச்செல்லுகின்ற சூரியனும், குண புலத்து உயர் இரவியில் எழுந்தான்—கீழ்த்திசைக்கணுள்ள உயர்ந்த உதயகிரியில்தோற்றினான் எ—று. (௬அ)

புலவு வாய்கம ழங்குலன் றினந்தொறும் புரிந்த
வலகில் பாவவல் லிருள்களைத் துரந்தகற் றுதலா
னிலவு னீறணி நீள்புரி சடைச்சிவ னிசியு
முலகி னீடிருட் கடிபகற் கதிருமொத் துளதால்.

இ—ள்: நிலவு நீறு அணி நீள் புரி சடை சிவ நிசி— ஒளியைவீசுகின்றவிபூதியையணிந்த நீண்டமுறுகிய சடையையுடைய சிவபெருமானது சிவராத்திரியானது, புலவு வாய் கமழ் அங்குலன் தினந்தொறும் புரிந்த—நிணநாற்றம்வாயில்வீசுகின்ற அங்குலனெனவன் எந்நாளும்செய்த, அலகில் பாவ வல் இருள்களை—அளவற்ற பாவமாகிய கொடிய இருள்களை, துரந்து அகற்றுதலால்—தொடர்ந்து நீக்குதலால், உலகில் நீடு இருளும் கடி பகற்கதிரும் ஒத்து உளது—உலகத்தின்கண்ணே வருகின்ற மிக்க இருளையும் அவ்விருளையோட்டுகின்ற சூரியனையும்போன்றிருந்தது எ—று.

ஆல் உம் அசைகள். (௬௯)

மேவி ளங்கதிர் விரிந்திட விடிந்ததன் பின்னர்
வாவி ளஞ்சிறு மான்விழி யெயிற்றிதன் மைந்த
ராவி ளந்தகன் றுவரென் றங்குல னினைந்து
கூவி ளம்பணை நின்றிழிந் தனன்வழிக் கொண்டான்.

இ—ள்: அங்குலன்—அங்குலனெனவன், மேவு இளங் கதிர் விரிந்திட விடிந்ததன் பின்னர்—பொருந்திய இளங்கிரணமானது பரவப்பெற்று விடிந்தபின்பு, வாவு இளம் சிறு மான் விழி எயிற்றி— பாய்கின்ற இளமையாகிய சிறிய மான்நோக்கியன்ற கண்களையுடைய வேட்டுவமாதும், தன் மைந்தர்—தனது புத்திரர்களும், ஆ இழந்த கன்று ஆவர் என்று நினைந்து—தாய்ப்பசுவையிழந்த கன்றுபோல வருந்துவரென்றுநினைத்து, கூவிளம் பணை நின்று இழிந்தனன் வழி கொண்டான்—வில்வக்கொம்பரினின்று கீழிறங்கிச் சென்றனன் எ—று. (௭0)

ஈறி லாத்துய ருற்றிடு மெயிற்றிதன் னிதயந்
தேறி வேடனைத் தேடுவா னடந்துறு செட்பத்
தூறி லான்வரல் கண்டெதிர்ந் தோகையிற் றழுவி
மாறி லாதுயர் புற்குடின் மேவினர் வந்தார்.

இ—ள்: ஈறு இலா துயர் உற்றிடும் எயிற்றி—எல்லையில்லாத துன்பமடைந்திருந்த அக்குறமாது, தன் இதையம் தேறி வேடனைத் தேடுவான் ந

டந்து உற செப்பத்து—தன்மனமானது தெளியப்பெற்று நாயகனைத் தேடு ம்படிசென்ற வழியிலே, ஊறு இலான் வரவு கண்டு—இடையூறு யாது மில்லாதவனாய் வருதலைக்கண்டு, எதிர்ந்து ஓகையில் தழுவி—எதிர்சென்று மகிழ்ச்சியோடு தழுவி, மாறு இலாது உயர் புல்குடில் மேவினர் வந்தார்— மாறுபாடில்லாது உயர்வுபொருந்திய தமதுபுற்களால் வேயப்பட்ட குடிலைச யினிடத்துவந்துசேர்ந்தனர் எ—று. (௬௧)

வந்து செந்தினை மாவுடன் வம்பமர் வரைத்தேன்
முந்து புற்புத மேவுநீ வாரவெண் மூர
னந்து நற்றசை நறவுக ளூறொடு நாடித்
தந்து மற்றவ ளோடுபன் னாளவண் சார்ந்தான்.

இ—ள் வந்து— தமது இல்லத்தையடைந்து, செந் தினை மா உடன்—செந்தினைமாவுடனே, வம்பு அமர் வரைதேன்— வாசனைபொருந்திய மலைத்தேனையும், முந்து புற்புதம்—சிறந்த புல்லரிசிச்சாதத்தையும், மேவு நீ வார வெண் மூரல்—மலைநெல்லினின்றும வருகின்ற வெள்ளிய சாதத்தை யும், நந்து நல் தசை—செழித்த நல்லமாமிசங்களையும், நறவுகள் நாள் தோ றும் நாடி தந்து—கள்ளையுந் தினந்தோறுஞ் சம்பாதித்துக்கொடுத்து, அவ ளொடு பல் நாள் அவண் சார்ந்தான்—அக்குறப்பெண்ணோடு பலநாட்களாக் அக்காட்டிற்சீவித்தனன் எ—று.

மற்று அசை. (௬௨)

முருந்தி யற்றரும் பற்கழன் றிடநரை முதிர்ந்திட்
டருந்து தற்கரி தாயுடல் பலங்கெடு மந்நாட்
பொருந்தி ரைக்கடற் கடுவுறழ் பெரும்பிணி பிணிக்க
வருந்தி மற்றவன் சடந்துறந் திறந்தனன் மன்னோ.

இ—ள் முருந்து இயல் தரும் பல் கழன்றிட—இறகினடியைப்போலு ம் இயல்பைக்கொண்ட பற்கள்கழன்றுவிழ, நரை முதிர்ந்திட்டு—நரைமுதிர் ச்சியடைந்து, அருந்துதற்கு அரிதாய் உடல் பலம் கெடும் அந்நாள்— உண வுகளையுண்ணுதற்கியலாமல் சரீரவலிமைகுன்றுமக்காலத்து, பெரும் திரை கடல் கடு உறழ் பெரும் பிணி பிணிக்க வருந்தி—பெரிய திரைகளையுடைய கடலிற்றோன்றிய நஞ்சையொத்த கடுமையாகிய நோய்கள்வந்து பீடிக்கவரு ந்தி, அவன் சடம் துறந்து இறந்தனன்—அவ்வங்குலனனவன் சரீரத்தைவி ட்டு ஆன்மாநீங்கப்பெற்றான் எ—று.

மன் ஓ அசைகள். (௬௩)

வேறு.

சூலமொடு வாளிசிலை தோமர முலக்கை
பாலமயில் வேல்விசிறு பாசமவை கொண்டே

வாலமதி போலெயி றிலங்கவட வைத்தீ
யாலநிகர் தூதுவர்க ளவ்வயி னடைந்தார்.

இ—ள்: சூலமொடு—சூலமும், வாளி—அம்புகளும், சிலை—வில்லும், தோமரம்—தோமரமும், உலக்கை—இருப்புலக்கையும், பாலம்—பிண்டிபாலமும், அயில் வேல—கூரிய வேலும், விசிறு பாசம் அவை கொண்டு—வீசப்படுகின்ற பாசமும் ஆகிய இவற்றைக்கொண்டு, வால மதி போல் எயிறு இலங்க—இளம்பிறைச்சந்திரனைப்போலப் பற்கள் பிரகாசிக்க, வடவைத்தீ ஆல நிகர் தூதுவர்கள்—வடவாமுகாக்கினியையும் ஆலகாலவிஷத்தையும் நிகர்த்த யமதூதுவர்கள், அவ்வயின் அடைந்தார்—அவ்விடத்துவந்தனர் எ—று.

ஏ அசை. (௪௪)

பற்றினர் புயத்துணைகள் பாசமத னாலே
சுற்றின ரடித்தனர் துடித்திட விடித்துக்
குற்றின ருடற்சவி குறைத்தவச மேன்மே
லுற்றிட வுதைத்துவழி யொல்லைபட ரெல்லை.

இ—ள். பற்றினர் புய துணைகள் பாசம் அதனாலே சுற்றினர்—பிடித்துப் புயங்களிரண்டையும் பாசத்தாற்கட்டி, அடித்தனர் துடித்திட இடித்துக் குற்றினர்—அடித்துத் துடிக்கும்படி இடித்துக்குற்றி, உடல் சவி குறைத்து அவசம் மேன்மேல உற்றிட உதைத்து—சரீரத்தின் வலிமையைக்குறைத்து மேலும்மேலும் மயக்கமடையும்படியுதைத்து, வழி ஒல்லை படர் எல்லை—வழியேவேகமாய்ச்செல்லும்போது எ—று. (௪௫)

மங்கையொரு பங்கன்மழு மான்மறி மரைப்பூஞ்
செங்கையி லிருத்திறை சிலாதனன் மகற்கூய்ச்
சங்கைபெறு மங்குலனெ னுஞ்சவ ரனைத்தம்
மங்கைகொள் கயிற்றினிடை யாத்தியம தூதர்.

இ—ள். மங்கை ஒரு பங்கன்—உமாதேவியாரை இடப்பாகத்திற்கொண்டவராகிய, மழு மான் மறி மரை பூ செங்கையில் இருத்து இறை—கோடரியையும் மான்கன்றையும் தாமரைமலர்போன்ற சிவந்த திருக்கரங்களிற்றாங்கிய எம்பெருமான், சிலாதனன் மகற் கூய்—சிலாதரமுனிவரின் புத்திரராகிய நந்திதேவரை வரவழைத்து, சங்கை பெறும் அங்குலன் எனும் சவரனை—மேன்மைபொருந்திய அங்குலன் என்னும் வேட்டுவனை, யமதூதர் தம் அங்கை கொள் கயிற்றினிடை யாத்து—யமதூதுவர்கள் தமது அகங்கையிற்பொருந்திய பாசத்தாற்கட்டிக்கொண்டு எ—று. (௪௬)

சென்றனர் விலக்கியொளிர் செம்பொனணி தேர்மே
லின்றவனை யேற்றியொ ரிமைப்பினிவ ணெய்தக்

குன்றன புயத்துவலி குன்றமரு வாரை
வென்றகண நாதரை விடுத்திடுதி யென்றான்.

இ—ள்: சென்றனர்—போகின்றனர், விலக்கி—அவ்வியமதூதுவர்களினின்று விடுவித்து, இன்று அவனை ஒளிர் செம்பொன் அணிதேர் மேல் ஏற்றி—இத்தினத்தில் அவ்வேடனை ஒளிபொருந்திய சிவந்த பொன்னினாற் செய்த அழகிய தேரின்மேலேற்றிக்கொண்டு, ஒரு இமைப்பின் இவண் எய்த—ஒருமாத்திரைப்பொழுதினுளிங்குவரும்படி, குன்று அன புயத்து வலி குன்ற மருவாரை வென்ற கணநாதரை—மலைபோன்ற தோள்களின் வலிமைகுறையும்படி பகைவர்களைவென்றிகொண்ட கணத்தலைவர்களை, விடுத்திடுதி என்றான்—அனுப்புவாயாகவென்று ஆஞ்ஞாபித்தனர் எ—று. (சஎ)

நாதன்விடை கொண்டுகண நாதரை யழைத்தே
யேதமறு மங்குலனை யின்றுகொடு போகுந்
தூதர்தமை வென்றுவிரை விற்சுடர் விமான
மீதினிலிருத்தி யிவண் மேவவிடு கென்றான்.

இ—ள்: நாதன் விடை கொண்டு—சிவபெருமானுடைய உத்தரவைப்பெற்று, கணநாதரை அழைத்து—கணத்தலைவர்களை வரவழைத்து, ஏதம் அறும் அங்குலனை இன்று கொடு போகும் தூதர் தமை வென்று—குற்றமில்லாத அங்குலனென்னும்வேடனை இப்பொழுது கொண்டுசெல்லுகின்ற யமதூதுவர்களை வெற்றிகொண்டு, விரைவில் சுடர் விமானம் மீதினில் இருத்தி—வேகமாயொளிதங்கிய விமானத்தின்மேலேற்றி, இவண் மேவவிடுக என்றான்—இவ்விடத்துக்கு அழைத்துவாருங்களென்று திருவாய்மலர்ந்தருளினர் எ—று.

ஏ அசை. (சஅ)

நந்திமொழி கொண்டுகண நாதர்கள் விரைந்து
வந்தியம தூதரை வருத்திவலி செய்தே
முந்தியவன் மொய்ம்புகளி முரிக்கவிசி பாசம்
சிந்திமணி மொய்த்தொளிகொ டேரின்மிசை வைத்தார்.

இ—ள்: கணநாதர்கள் நந்தி மொழி கொண்டு—கணத்தலைவர்கள் நந்திதேவருடைய ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு, விரைந்து வந்து யமதூதரை வருத்தி வலி செய்து—வேகமாய்வந்து யமதூதுவர்களைத் துன்புறும்படிசெய்து தமது வலிமையைக்காட்டி, முந்தி அவன் மொய்ம்புகள் முரிக்க விசி பாசம் சிந்தி—முன்னரே அவனதுவலிமைகெடும்படி கட்டியபாசத்தையறுத்து, மணி மொய்த்து ஒளிகொள் தேரின் மிசை வைத்தார்—இரத்தினங்கள்நெருங்கி ஒளியைக்கக்குகின்ற இரதத்தின்மேலேற்றினர் எ—று.

ஏ அசை. (சகூ)

யாவர்பணி கொண்டிவ ணெதிர்ந்திது புரிந்தீர்
போவ திவ னெங்ஙனமொர் புண்ணிய மிலாதான்
மேவவுவ ணுமினி விடோமென வெகுண்டு
காவல்புரி காலபடர் காய்ந்தெதிர் கதித்தார்.

இ—ள்: காவல் புரி காலபடர்—அவனைக்காத்துநின்ற யமதூதுவர்கள், யாவர் பணி கொண்டு இவண் எதிர்ந்து இது புரிந்தீர்- எவரது ஆஞ்ஞையின்படி இங்குவந்து எதிர்த்து இவைகளைச்செய்தீர்கள், ஒரு புண்ணியம் இலாதான் இவன் போவது எங்ஙனம்—ஒருபுண்ணியமுமில்லாதவனுகிய இவன் போவது எப்படி, உவண் மேவ நாம் இனி விடோம் என வெகுண்டு காய்ந்து எதிர் கதித்தார்— உவ்விடத்துக்குப் போகும்படி யாங்களினிமேல் விடோமென்று கோபங்கொண்டு மனங்கொதித்து எதிர்த்துக்கூறினர் எ—று,

உங்கடலை வன்றனை தூரத்திடை யுதைத்தோ
னெங்கடலை வன்பணியி தென்றுமுச லத்தாற்
செங்கடலை நேர்குருதி சிந்தவெம தூதர்
தங்கடலை யோதினர் தரித்தில ரகன்றார்.

இ—ள்: உங்கள் தலைவன் தனது ஊரத்திடை உதைத்தோன்- உங்கள் தலைவனுகியயமனதுமார்பின்கண்ணே உதைத்தவரும், எங்கள் தலைவன் பணி இது என்று--எங்கள்தலைவருமாகிய சிவபெருமானது ஆஞ்ஞையிதுவாகுமென்று, செம் கடலை நேர் குருதி சிந்த—செங்கடலைப்போன்ற இரத்தம்பாயும்படி, எமதூதர் தங்கள் தலை முசலத்தால் மோதினர்— யமதூதுவர்களுடைய தலைகளிலிருப்புலக்கைகொண்டடித்து, தரித்திலர் அகன்றார்---தங்காது சென்றார்கள் எ—று. (ருக)

வென்றிதரு வானவர் விரைத்தருவி னற்பூப்
பொன்றிகழ் செழுந்துணர் பொழிந்தனர்கள் வாழ்த்த
வன்றியர மங்கையர்க ளங்கிரு மருங்கு
நின்றிணைகொள் வெண்கவரி நேசமொடு வீச.

இ—ள்: வென்றி தரு வானவர்— வெற்றியையுடையதேவர்கள், விரை தருவின் நல் பொன் திகழ் செழும் பூ துணர் பொழிந்தனர்கள் வாழ்த்த—வாசனைபொருந்திய கற்பகதருவிற்றேன்றிய நல்ல பொன்போலவிளங்குகின்ற செழுமையாகிய பூங்கொத்துக்களைச் சொரிந்து வாழ்த்தொலிசெய்யவும், அன்றி—அதுவுமல்லாமல், அர மங்கையர்—தேவமாதர்கள், அங்கு இரு மருங்கும் நின்று— அவ்விடத்து இருபக்கங்களினும் நின்று— இணைகொள் வெண் கவரி நேசமொடு வீச—இணையாகிய வெண் சாமரங்களை உள்ளன்புகொண்டு வீசவும் எ—று, (ருஉ)

விண்டல முதிக்குமதி வெண்குடை நிழற்றப்
பண்டரு மிசைப்பனுவல் கந்தருவர் பாடக்
கொண்டலிடி யொத்ததிர் குரற்குட முழாநற்
றொண்டகம தோடமர துந்துபி முழங்க.

இ—ள்: விண் தலம் உதிக்கும் மதி வெண் குடை நிழற்ற—ஆகாயத்தில்வந்துதோற்றுகின்ற சந்திரனனைவன் வெள்ளிய குடையைத்தாங்கி நிழலைச்செய்யவும், பண் தரும் இசை பனுவல் கந்தருவர் பாட— பண்ணமைந்த இசைப்பாக்களைக் கந்தருவர்கள் பாடவும், கொண்டல் இடி ஒத்து அதிர் குரல் குடமுழா— மேகத்தினிடியைப்போல ஒலிக்கின்ற சத்தத்தையுடைய குடமுழாப்பறையும், நல் தொண்டகமதோடு—நல்லதொண்டகப்பறையுடனே, அமர துந்துபி முழங்க —தேவதுந்துபிப்பறையுமாரவாரிக்கவும் எ—று.

போயமலன் முன்புக விடுத்தபொழு தெம்பா
லேயகண மாயிவ ணிருந்திடுதி யென்றே
நேயமிக வைத்தெழில்கொ ணெற்றிவிழி யுற்ற
நாயக னுரைத்துவர நல்கின னயந்தே.

இ—ள்: போய் அமலன் முன் புக விடுத்த பொழுது—சென்று மலரகிதராகிய சிவபெருமானது சந்நிதியிற்பிரவேசிக்கும்படி விட்டசமயத்தில், எழில் கொள் நெற்றி விழி உற்ற நாயகன்— அழகுபொருந்திய நெற்றிக்கண்ணையுடைய பரமபதியானவர், எம் பால் ஏய கணமாய் இவண் இருந்திடுதி என்று உரைத்து, எம்மிடத்துப்பொருந்திய கணத்தவருள் ஒருவனாய் நீயுமிங்கே வாழக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளி, மிக நேயம் வைத்து நயந்து வரம் நல்கினன்—அதிகமாகியஅன்புவைத்து ஆசைப்பெருக்கமுற்று வரங்களைக்கொடுத்தருளினர் எ—று.

ஏ இரண்டும் அசைகள். (ருச)

செங்கணெயி னன்கயிலை சேர்கணம தாகி
யங்கணமர் வுற்றபி னருந்துயர்கொ டூதர்
திங்கண்முடி யானடியர் செய்ததிற மெல்லாம்
வெங்கண் மறலிக்குமுன் விளம்பவிரை வுற்றார்.

இ—ள்: செம் கண் எயினன்—சிவந்தகண்களையுடைய அவ்வங்குலன், கயிலை சேர் கணமது ஆகி அங்கண் அமர்வு உற்ற பின்— கயிலாயகிரியில்வசிக்கின்ற கணநாதருளொருவனாய் அவ்விடத்துவீற்றிருந்தபின்னர், அரும் துயர் கொள் தூதர்—மிக்கதுன்பமடைந்த யமதூதர்கள், திங்கள் முடியான் அடியர் செய்த திறம் எல்லாம்— சந்திரனைச் சடைமுடியிற்றரித்த சிவபெருமானது அடியார்கள்செய்த செய்கைகள் யாவற்றையும், வெம் கண் மறலிக்கு முன் விளம்ப விரைவு உற்றார்—தறுகண்மையையுடைய யமராசனுக்கு முன்னே கூறும்படி விரைந்துசென்றனர் எ—று. (ருரு)

பாசமெறி தாரைதொடர் பாறுபடி சூலம்
வீசுசுடர் வேன்முசல மின்னுகதை நன்னா
ராசமுட னங்குசம தங்கையிரு நான்கிற்
றேசுற வுரத்தினிடை செந்தொடை விளங்க.

இ—ள்: பாசம்—பாசமும், எறி தாரை—எறிவல்லயமும், தொடர் பாறு படி சூலம்—தொடர்ந்து பருந்துகள் (பிணங்களைப் புசிக்கும்பொருட்டு) படிகின்ற சூலமும், சுடர் வீசு வேல்—ஒளியைக்கக்குகின்றவேலும், முசலம்—இருப்புலக்கையும், மின்னு கதை—பிரகாசம்பொருந்தியதண்டமும், நல் நாராசம் உடன்—நல்ல நாராசமும், அங்குசம் அது—தோட்டியுமாகிய இவ்வாயுதங்கள், அம் கை இரு நான்கில் தேசு உற—அழகிய எட்டுக்கைகளிலும் பிரகாசிக்கவும், உரத்தினிடை செம் தொடை விளங்க—மார்பின்கண்ணே சிவந்த மலர்மாலைவிளங்கவும் எ—று. (ருசு)

எற்றிய கடற்றிரை யிருத்திய தெனக்கார்
முற்றிநெளி வுற்றபுரு வத்துணை முரிப்பும்
பெற்றிடி யெனக்குரல் பிறங்குபில வாயும்
பற்றிய தழற்குநிகர் பங்கியும் விளங்க.

இ—ள்: எற்றிய கடல் திரை இருத்தியது என—எறிகின்றகடற்றிரைகளைப் பதித்தாற்போல, கார் முற்றி நெளிவுற்ற துணை புருவ முரிப்பும்—கருமைமுதிர்ந்து நெளிந்த இரண்டு கட்புருவத்தின் நெறிப்புகளும், இடி என குரல் பெற்று பிறங்கு பில வாயும்—இடிபோன்ற தொனியையுடைத்தாய் விளங்குகின்ற பகிர்ந்த வாயும், பற்றிய தழற்கு நிகர் பங்கியும் விளங்க—எரிகின்றவக்கினிக்கொப்பாகச் சிவந்தகுடுமியும் பிரகாசிக்கவும் எ—று. (ருஎ)

வாதகப பித்தமுத லான பிணி மற்று
மேதமிகு சொற்பணி யியற்றியய னிற்பப்
பாதகர் வெருக்கொடு பதைத்திட வருத்துந்
தூதரிரு பக்கமுறை சுற்றினர்கள் சூழ.

இ—ள்: வாத கப பித்தம் முதலான பிணி—வாதம் சேடம் பித்தம் முதலான நோய்களும், மற்றும் ஏதம்—பிறதுன்பங்களும், மிகு சொல் பணி இயற்றி அயல் நிற்ப—அவனாற்சொல்லப்படுகின்ற மிகுதியாகிய தொண்டுளைச்செய்துகொண்டுபக்கத்தேநிற்கவும், பாதகர் வெருக்கொடு பதைத்திட வருத்தும் தூதர்—பாவிகள் அஞ்சிப்பதைக்கும்படிவருத்துகின்ற தூதுவர்கள், இரு பக்கம் முறை சுற்றினர்கள் சூழ—இரண்டுபக்கத்திலும் முறைப்படி சுற்றிச் சூழ்ந்துநிற்கவும் எ—று. (ருஅ)

சாலமொழி மாதர்பலர் சாமரை யிரட்ட
வாலமதி யாமென வளைந்தெயி றிலங்க
நீலவரை போனிதி நெடுந்தவி சிருக்குங்
காலனிரு காலிலிவர் கைதொழுது வீழ்ந்தே.

இ—ள்: சால மொழி மாதர் பலர் சாமரை இரட்ட— சாலவார்த்தைக ளைவசனிக்கின்றபெண்கள்பலருஞ் சாமரங்களையசைக்கவும், வால மதியாம் என வளைந்து எயிறு இலங்க—இளம்பிறைச்சந்திரனைப்போல வளைந்து தந்தங்கள்பிரகாசிக்கவும், நீல வரை போல்—நீலமலையைப்போல, நிதி இரும் தவிசு இருக்கும் காலன் இரு காலில்—பொன்னாற்செய்யப்பட்ட உயர்ந்தசிங்காசனத்தில்வீற்றிருக்கின்ற யமராசனது பாதங்களில், இவர் கைதொழுது வீழ்ந்து— இத்தூதர்கள் கைகூப்பி நமஸ்கரித்து விழுந்து எ—று.

ஏ அசை. (ருகூ)

மூடனை யறத்திற முயன்றறித லில்லா
வேடனை வடத்தினிடை வீக்கிவரு காலை
பாடனை வருக்குமிது பண்ணிவள ரொற்றைக்
கோடனை யளித்தவர் கணங்கள்கொடு போனார்.

இ—ள்: மூடனை அற திறம் முயன்று அறிதல் இல்லா வேடனை— அறிவீனனாய்த் தருமங்களொன்றையும் முயன்றுசெய்தற்கறியாத அங்குலனாகும் வேடனை, வடத்தினிடை வீக்கி வரு காலை—பாசத்தினாற்கட்டிக்கொண்டுவருஞ்சமையத்தில், அனைவருக்கும் இது பாடு பண்ணி-நம்மெல்லோருக்கும் இத்துன்பங்களைச்செய்து, வளர் ஒற்றைக்கோடனை அளித்தவர் கணங்கள்—வளர்ந்த ஒற்றைக்கொம்பையுடைய விநாயகரைப்பெற்றருளிய சிவபெருமானது கணத்தவர்கள், கொடு போனார்—கொண்டுபோயினர் எ—று. (சுo)

என்றிவை யுரைத்திட வெயிற்றித ழதுக்கித்
தென்றிசை நகர்க்கிறை திரண்டெழ வளர்ந்த
குன்றின்மிகை பெற்றிடு புயத்துணை குலுங்க
நன்றிது வெனத்தனி நகைத்துட னெழுந்தே.

இ—ள். என்று இவை உரைத்திட—என்றிவ்வாறாகத் தூதர்கள்சொல்ல, தென் திசை நகர்க்கு இறை —தென்றிசையிலுள்ள நகரத்துக்கரசனாகிய யமன், எயிற்று இதழ் அதுக்கி—பற்களினாலதரங்களைக் கடித்து, திரண்டு எழ வளர்ந்த குன்றின் மிகை பெற்றிடு துணை புயம் குலுங்க—திரண்டு உயர்ந்துவளர்ந்த மலைகளினும் மேம்பாடுற்ற இரண்டுதோள்களுங் குலுங்கும்படி, இது நன்று என தனி நகைத்து—இதுநல்லது என்று மிகவுஞ்சிரித்து, உடன் எழுந்து—உடனே எழுந்து எ—று.

ஏ அசை. (சுக)

சஞ்சரிக மொயத்துமுர றார்களசை யப்போ
யஞ்சன வரைக்குநிக ரானபக டேறி
விஞ்சிய கணக்கனொடு வீரர்பலர் சூழ
மஞ்சன மிடற்றிறைவன் வாழ்கயிலை வந்தான.

இ—ள்: சஞ்சரிகம் மொய்த்து முரல் தார்கள் அசைய போய்—வண்டுகள்மொய்த்துக் கீதம்பாடுகின்ற மாலைகளசையும்படி சென்று, அஞ்சன வரைக்கு நிகர் ஆன பகடு ஏறி—நீலமலையையொத்த எருமைக்கடாவின்மேலிவர்ந்து, கணக்கனொடு விஞ்சிய வீரர் பலர் சூழ—சித்திரகுத்தனென்னுங் கணக்கனோடும் மிகுதியாகிய வீரர்கள் பலருஞ்சூழ்ந்துவர, மஞ்சு அன மிடற்று இறைவன் வாழ் கயிலை வந்தான்—மேகம்போன்ற நீலகண்டத்தையுடைய தலைவராகிய சிவபெருமான் எழுந்தருளிய கயிலாயகிரியையடைந்தான் எ—று. (சுஉ)

வேறு.

அரியமா தவத்தோ ருள்ளமொத் துயர்ந்தோ ரணுவினுங் களங்கமொன் றின்றிக், கரியமா முகில்கள் படிதடஞ் சாரற் கயிலையிற் கனகமா மணியால், உரியநான் முகத்து விதிவிதிக் கரியவொளிதிகழ் கதிர்களா யிரமும், விரியுமா தவரோர் கோடிவந் துதித்து விளங்கல்போற் றுளங்குமண் டபத்தின்.

இ—ள்: அரிய மா தவத்தோர் உள்ளம் ஒத்து—செய்தற்கரிய பெரிய தவத்தையுடைய மேலோர்களது மனத்தைநிகர்த்து, உயர்ந்து—உன்னதமுடைத்தாய், ஓர் அணுவினும் களங்கம் ஒன்று இன்றி—ஒரு அணுவளவாயினும் மறுவொன்றமில்லாமல், கரிய மா முகில்கள் படி தடம் சாரல் கயிலையில்—கறுத்த பெரிய மேகங்கள்படிகின்ற விசாலமாகிய பக்கங்களையுடைய கயிலாசமலையில், கனக மா மணியால்—பொன்னினாலும் பெருமைபொருந்திய இரத்தினங்களினாலும், உரிய நால் முகத்து விதி விதிக்கரிய—படைத்தற்றொழிலுக்குரிய நான்குமுகங்களையுடைய பிரமாவாலுஞ் சிருட்டித்தற்கரிய, ஒளி திகழ்—ஒளிவிளங்குகின்ற, ஆயிரம் கதிர்களும் விரியும் ஓர்கோடி ஆதவர் வந்து உதித்து விளங்கல் போல் துளங்கும்—ஆயிரங்கிரணங்களையும் பரவச்செய்யும் ஒருகோடிசூரியர்கள் வந்து உதயஞ்செய்து பிரகாசிப்பதுபோல விளங்குகின்ற, மண்டபத்தில்—திருக்கோயிலில் எ—று. (சுரு)

ஐம்படை தரித்த தண்ணறுந் துளபத் தண்ணலு மண்முதற் படைத்த, வம்படை கமலத் தவிசுறை யயனும் வரைச்சிறை யறுத்திடும் வசிச்சம், பம்படை யெனக்கொள் பாகசா தனனும் பன்னிரண் டருக்கரு மொற்றைக், கொம்படை களிற்று முகம்படைத் தருளுங் குடவயிற் றைங்கரக் கோவும்.

இ—ள்: ஐம் படை தரித்த தண் நறும் துளபத்து அண்ணலும்—சங்கு சக்கரம் தண்டம் தனு வாளாகிய பஞ்சாயுதங்களையுந்தரித்த குளிர்ந்த வாசனை கமழுகின்ற துளசிமாலையையணிந்த மகாவிஷ்ணுமூர்த்தியும், மண்முதல் படைத்த வம்பு அடை கமல தவிசு உறை அயனும்— பூமிமுதலாகிய யாவற்றையுஞ்சிருட்டித்த வாசனைதங்கிய தாமரையாசனராகிய பிரமதேவரும், வரை சிறை அறுத்திடும் வசிசம்பம் படை என கொள் பாகசாதனனும்—மலைகளின்சிறகுகளை வெட்டிய கூரிய வச்சிரத்தை ஆயுதமாகக்கொண்ட இந்திரனும், பன்னிரண்டு அருக்கரும்—பன்னிரண்டாதித்தர்களும், ஒற்றை கொம்பு அடை களிற்று முகம் படைத்து அருளும் குட வயிற்று ஐங்கரோவும்—ஒற்றைக்கொம்பைகொண்ட யானைவதனத்தைபொருந்தி அனுக்கிரகிக்கின்ற பெரிய உதரத்தையுடைய விநாயகப்பெருமானும் எ—று. ()

வார்பெறு கலச முலைக்குறக் கொடியை மணந்தருண் மகிழ்நனற் கடப்பந், தார்பெறு புயத்தோன் றாரகன் சினக்கேசரிமுகன் றகுவர்கட் கிறையாஞ், சூர்பெறு வரங்க டொலைத்தவை வேலோன் றோகைமே லொகரமூர்ந் தருள்வோன், கூர்பெறு முட்டாட் செந்நிறக் குடுமிக் கோழிசேர் கொடிக்கரக் குகனும்.

இ—ள்: வார் பெறு கலச முலை குறக்கொடியை மணந்து அருள் மகிழ்நன்—கச்சிறுக்கிய பூரணகும்பத்தைநிகர்த்த தனங்களையுடைய வள்ளிநாயகியாரை மணம்புரிந்தருளிய நாயகரும், நல் கடப்பம் தார் பெறு புயத்தோன்—நல்ல கடப்பமலர்மாலையையணிந்த திருப்புயங்களையுடையவரும், தாரகன் சின கேசரிமுகன் தகுவர்கட்கு இறையாம் சூர் பெறு வரங்கள் தொலைத்த வை வேலோன்—தாரகனும் கோபத்தையுடைய சிங்கமுகாசுரனும் அசுரர்கட்கெல்லாம் தலைவராகிய சூரபன்மனும்பெற்ற வரங்களை அழித்த கூரிய வேலாயுதத்தையுடையவரும், தோகை மேவு ஒகரம் ஊர்ந்து அருள்வோன்—தோகையையுடைய மயில்வாகனத்தின்மேலிவர்ந்து சென்று அனுக்கிரகஞ்செய்பவரும், கூர்பெறு முள் தாள் செந்நிற குடுமி கோழி சேர் கொடி கர குகனும்—கூர்மைபொருந்திய முள்ளைக்கொண்ட கால்களையும் சிவந்தகுடுமியையுமுடைய சேவலமைந்த துவசத்தைத்தாங்கிய திருக்கரத்தையுடையவரும் ஆகிய சுப்பிரமணியப்பெருமானும் எ—று. (சுரு)

உலகமுற் றெடுங்குங் காலையி லெழுந்த வாலிலைத் துயின்றோ னுந்தியிலெழுந்த, திலகமுற் றிடுவா ணுதன்மறைக் கொடிதோள் சேர்ந்திடுஞ் சிறுவிதி விதியிற், கலகமுற் றிகலிப் புரிமக மனைக்காற் கணத்தினிற் சிதைத்தவன் பிறைபோ, லிலகவிட் டெறிக்குங் கதிரெயிற் றலகை யேறிடும் வீரபத் திரனும்.

இ—ள்: திலகம் உற்றிடும் வாள் நுதல் மறைக்கொடி தோள் சேர்ந்திடுஞ் சிறுவிதி—பொட்டணிந்த ஒள்ளியநெற்றியையுடைய வேதவல்லியி

னது தோள்களைப்புணர்ந்த தக்கனானவன், விதியில் கலகம் உற்று இகலி புரி மகம்— பிரமதேவரோடு மாறுபட்டு பகைத்துச்செய்தயாகத்தை, உலகம் முற்றும் ஒடுங்குங்காலையில் எழுந்த ஊழி வெம் தீ என உருத்து அரைக்கால் கணத்தினில் சிதைத்தவன்— சர்வ உலகங்களுமழிந்துபடுகின்ற ஊழிகாலத்தில் உண்டாகிய கொடிய அக்கினியைப்போலக் கோபங்கொண்டு அரைக காற்கணத்திலழிவுசெய்தவரும், பிறைபோல் இலக விட்டு எறிக்கும் கதிர் எயிற்று அலகை ஏறிடும் வீரபத்திரனும்— பிறைச்சந்திரனைப்போல ஒளிவிட்டுக்காலுகின்ற கிரணங்களையுடைய பற்களைக்கொண்ட பேய்வாகனத்திலேறுகின்றவருமாகிய வீரபத்திரக்கடவுளும் எ—று. (கசு)

புடத்திடு பசும்பொற் குழைகிழித் திடுங்கட் பூரணை புட்கலை தரள, வடக்குட முலைக ளுழுதுழு துழக்கு மார்பினன் மாலென முழங்க, முடக்கிய தடக்கை நீட்டிமூச் சொடுக்கி முரிதிரைக் கடலெலா முகந்துள், ளடக்கியே யுமிழ்வெள் ளானைமே லேறு மரிகர குமாரனானவனும்.

இ—ள் புடத்திடு பசும்பொன் குழை கிழித்திடுங் கண் பூரணை புட்கலை— புடமிட்ட பசியபொன்னினால் செய்யப்பட்ட காதணிகளை ஊடுருவிச்செல்லுகின்ற கண்களையுடைய பூரணைபுட்கலையாகிய இருதேவியர்களது, தரள வட குட முலைகள் உழுது உழுது உழக்கும் மார்பினன்— முத்துமாலைகளணிந்த குடம்போன்ற ஸ்தனங்கள் தோய்ந்துதோய்ந்து தழும்புண்டாகிய மார்பையுடையவரும், மால் என முழங்கி—மேகத்தைப்போலச்சத்தித்து, முடக்கிய தடக்கை நீட்டி—முடக்கப்பட்ட விசாலித்த துதிக்கையை நீட்டி, மூச்சு ஒடுக்கி முரி திரை கடல் எலாம் முகந்து—மூச்சையடக்கிக்கொண்டு திரைமுரிகின்ற சமுத்திரம் முழுவதையுமுண்டு, உள் அடக்கி உமிழ் வெள் ஆனைமேல் ஏறும்— உள்ளேயடக்கி வைத்திருந்து வெளியே கக்கத்தகுந்த வெள்ளையானையின்மேலேறுபவருமாகிய, அரிகரகுமாரன் ஆனவனும்— ஐயனாரும் எ—று.

ஏ, அசை. (கஎ)

வள்ளெனக் குரைக்குங் கரியநா யூரும் வடுகனு மாருதத் தேவு, மள்ளலஞ் சேற்றுக் கருங்கடற் கிறையு மக்கினிக் கடவுளு மளகைக், கெள்ளருந் தலைமை பூண்டபிங் கலனு மிருஞ்சிறைச் சுரும்புபாட் டயர்ந்து, கள்ளருந் திடுந்தார் நிருதியுஞ் சுருதி கருதுமீசானனென் பவனும்.

இ—ள் வள் என குரைக்கும் கரிய நாய் ஊரும் வடுகனும்—வள் என்னுஞ்சத்தமுண்டாகும்படி குரைக்கின்ற கரிய நாய்வாகனத்தையுடையவராகிய வயிரவக்கடவுளும், மாருத தேவும்— வாயுதேவனும், அள்ளலம் சேற்று க

ரும் கடற்கு இறையும்—குழைந்த சேறுபொருந்திய கரிய சமுத்திரராசனுகி ய வருணனும், அக்கினிக்கடவுளும்—அக்கினிதேவனும், அளகைக்கு என் அரும் தலைமை பூண்ட பிங்கலனும்—அளகாபுரிக்கு இகழ்வில்லாத அதிகார த்தைப்பொருந்திய குபேரனும், இரும் சிறை சுரும்பு பாட்டு அயர்ந்து கள் அருந்திடும் தார் நிருதியும்— பெருமைபொருந்திய சிறகுகளையுடைய வண்டுக ளானவை இசைகளைப்பாடித் தேனையுண்ணுகின்ற மாலையையணிந்த நிருதி யும், சுருதி கருதும் ஈசானன் என்பவனும்—வேதங்களினால் மதிக்கப்படுகின் ற ஈசானனும் எ—று. (சுஅ)

மேவரு விரிவெண் டிரைக்கட லேழும் விலங்கலின் குலங்க ளோ ரேழும், பூவருங் கங்கை முதனதி யேழும் பொற்புறு கற்ப க நிழல்வாழ், தேவரு முயர்கந் தருவரு நித்த சித்தரு முத்தரா முனிவர், யாவருஞ் செங்கை குவித்தர கரவென் றிருமருங் கினு ந்திரண் டேத்த.

இ—ள்: மேவரு வெண் திரை விரி கடல் ஏழும்— செல்லுதற்கரிய வெண்மையான திரைகள்விரிகின்ற எழுகடல்களும், விலங்கலின் குலங்கள் ஓர் ஏழும்—குலமலைகளேழும், பூ வரும் கங்கை முதல் நதி எழு ம்—பூவுலகத்திலுள்ள கங்காநதிமுதலிய எழுநதிகளும், பொற்புறு கற்பக நி ழல் வாழ் தேவரும்—அழகமைந்த கற்பகதருநிழலில்வசிக்கின்ற தேவர்களும், உயர் கந்தருவரும்—உயர்ந்த கந்தருவர்களும், நித்த சித்தரும்— நித்தியமாய் வசிக்கின்ற சித்தர்களும், முத்தராம் முனிவர் யாவரும்—சீவன்முத்தர்களாயு ள்ள முனிவர்களுமாகிய எல்லோரும், செங்கை குவித்து அரகரவென்று இ ருமருங்கினும் திரண்டு ஏத்த—சிவந்தகைகளைச் சிரமேற்குவித்து அரகரவெ ன்று இரண்டுபக்கங்களினும் கூட்டமாய்நின்று துதிக்கவும் எ—று. (சுகூ)

பாரதன் மேலா மண்டகோ ளகைபொற் பருப்பதந் திருப்ப வும் வல்ல, சாரதர் குழுவுங் குழி விழிப் பேழ்வாய்த் தளர்நடைப் பேய்களுஞ் சார, நாரதன் மகதி யாழ்நரம் புளர நந்திகைப் பிரம் பெடுத் துலைக், காரதன் வடிவு பொறுகறுங் கூந்த லரம்பையர் க வரி காலசைப்ப.

இ—ள்: பாரதன் மேலாம் அண்டகோளகை பொன் பருப்பதம் திரு ப்பவும் வல்ல சாரதர் குழுவும்— பூமிக்கப்பாலுள்ள அண்டகடாகத்தையும் பொன்மலையாகிய மகாமேருகிரியையும் நிலைமாற்றத்தக்க வலிமையையுடை ய பூதசேனைகளும், குழி விழி பேழ் வாய் தளர் நடை பேய்களும் சார—ஆ ழ்ந்தகண்களையும் பிளந்தவாயையும் தள்ளாடுகின்ற நடையையுமுடைய பி சாசங்களும் பக்கத்தேநிற்கவும், நாரதன் மகதியாழ் நரம்பு உளர—நாரதமு னிவர் மகதி யாழின்நரம்புகளைத் தடவியிசைபாடவும், நந்தி கை பிரம்பு எடுத்து உலவ—நந்திதேவர் தமதுதிருக்கரத்திற் பிரம்பைத்தாங்கிநின்று

உலாவவும், கார் அதன் வடிவு பெறு நறும் கூந்தல் அரம்பையர் கவரி கால் அசைப்ப—முகிலையொத்த கரிய நிறத்தையுடைய வாசனையூட்டப்பட்ட கூந்தலைக்கொண்ட அரம்பையர்கள் சாமரங்களால் காற்றுண்டாகும்படி வீசவும் எ—று. (எ0)

கொலைபயி னயனத் தஞ்சன மறுவுங் குளிர்மொழி யமிழ்த முங் குலவு, மலைமகள் வதன முழுமதிக் குடைந்து வாளெயிற் றரவினுக் கிடைந்து, கலைவளா ராம லுடல்குறைந் தொதுங்கிக் கடுக்கைமா லூரமார் கபித்த, நிலைபெறு சடைக்காட் டலைநதிக் கயல்வெண் ணிலவுகான் றிளமதி கிடப்ப.

இ—ள்: கொலைபயில் நயனத்து அஞ்சன மறுவும்—கொலைத்தொழிலைப்பயின்ற கண்களின்கண்ணே தீட்டிய மையின்மறுவும், குளிர் மொழி அமிழ்தமும் குலவும்— குளிர்ச்சிபொருந்திய திருவார்த்தையாகிய அமிர்தமும்விளங்குகின்ற, மலைமகள் வதன முழு மதிக்கு உடைந்து— மலையரசன்புதல்வியாகிய உமாதேவியாரது முகமாகிய பூரணசந்திரனுக்குத்தோற்று, வாள் எயிற்று அரவினுக்கு இடைந்து—ஒளிபொருந்திய பற்களைக்கொண்டசர்ப்பத்திற்கு அஞ்சி, கலை வளராமல் உடல் குறைந்து ஒதுங்கி—சோடசகலைகளும் நிரம்பப்பெறுமல் தேய்ந்த உடலோடு ஓர்பக்கத்தொதுங்கி, கடுக்கை மாலூரம் ஆர் கபித்தம் நிலை பெறு சடைக்காட்டு— கொன்றைமலரும் வில்வமும் ஆத்திமலரும் விளாப்பத்திரமும் நிலையாயுள்ள சடையாகியகாட்டில், அலை நதிக்கு அயல்—அலைபொருந்திய கங்கைநதிக்குப்பக்கத்தில், இளமதி—இளம்பிறைச்சந்திரன், வெண் நிலவு கான்று கிடப்ப— வெள்ளியநிலாக் கிரணத்தைவீசிக்கொண்டிருக்க எ—று. (எக)

கறங்கிடுந் திரைநீர்க் கங்கையஞ் சடையிற் கட்செவிக் கடும்பணி சீற, வுறங்கிட றவிர்ந்து கரநக நுதியா லுரித்துமுன் மருங்குற வுடுத்த, மறங்கிளர் தழற்கட் கொடுவரிப் புலித்தோ லுடையனுங் கிடுந்தொறு மருண்மா, னிறங்கிட வெருவிக் குதித்தெழுந் தற்ற நோக்கியங் கிடக்கரத் திருப்ப.

இ—ள்: மருள் மான்—வெருட்சியையுடைய மானனது, கறங்கிடும் திரை நீர் கங்கை அம் சடையில் கண் செவி கடும் பணி சீற—சத்திக்கின்றதிரைபொருந்திய நீரையுடைய கங்காநதிதங்கப்பெற்ற அழகியசடையில் கண்ணைச்செவியாகக்கொண்ட கொடிய சர்ப்பங்கள்கிடந்து சீறுதலினால், உறங்கிடல் தவிர்ந்து—துயிலுதலையொழிந்து, கர நக நுதியால் உரித்து முன் மருங்குஉற உடுத்த—திருக்கரத்திற்கொண்ட நகத்தினுனியால் முன்னைநாளிலுரித்து அரைக்கட்சாத்திய, மறம் கிளர் தழல் கண் கொடுவரி புலி தோல் உடைஅனுங்கிடும் தொறும்—கொடுமைமிகுந்த அக்கினிபோன்ற கண்களையும் வளைந்த ரேகைகளையுமுடைய புலித்தோலுடையானது அசையும்பொழுதெ

கலாம், இறங்கிட வெருவி—கீழேயிறங்குவதற்கு அஞ்சி, குதித்து எழுந்து—துள்ளிப்பாய்ந்து, அங்கு அற்றம் நோக்கி இடக்கரத்து இருப்ப—அங்கே (ஓடுதற்குச்) சமயம்பார்த்துக்கொண்டு இடத்திருக்கரத்திலிருக்கவும் எ—று. ()

கோல்வரை நிகர்க்கும் வரிநெடுந் தடங்கட் குவிதனத் திரதி தோ டோய்ந்த, சேல்வரை துவசச் சித்தச னெரியத் திறந்தகண் டிருநுதற் றிகழக், கால்வரை யளித்தற் கரிதென விரிந்த கடுநுகர் களனும்வித் துருமமால்வரை யருவி யென்னமுப் புரிநூல் வயங்குமார் பமுமிக விளங்க.

(இ—ள்) கோல் (நிகர்க்கும்) வரி நெடும் தடம் கண்—(கூர்மையில்) அம்பையொத்த ரேகைகள்பரந்த நீண்ட விசாலமாகியகண்களையும், வரை நிகர்க்கும் குவி தனத்து இரதி தோள தோய்ந்த—மலையையொத்த குவிந்த தனங்களையுமுடைய இரதியென்பாளது தோள்களைத்தழுவுகின்ற, சேல் வரை துவச சித்தசன் எரிய—மற்சமெழுதிய கொடியையுடைய மன்மதனானவன் எரியும்படி, திறந்த கண் திரு நுதல் திகழ—திறக்கப்பட்ட அக்கினிக்கண் திருநெற்றியில்விளங்கவும், கால் வரை அளித்தற்கு அரிது என விரிந்த கடுநுகர் களனும்—கால்மாத்திரைப்பொழுதாயினுங் காத்தற்குஇயலாதென்று சொல்லும்படி பரவிய நஞ்சை யுண்டருளிய திருக்கண்டமும், வித்துருமமால் வரை அருவி என்ன முப்புரி நூல் வயங்கு மார்பமும்—பெரிய பவளமலையினின்றுபாய்கின்ற அருவியைப்போல முப்புரியாகச்செய்யப்பட்ட உபவீதம் விளங்குகின்ற திருமார்பும், மிக விளங்க—மிகவும் ஒளியையுடையனவாகவும் எ—று. ()

தூயசெந் தமிழ்ச் சுந்தரன் றனக்காய்த் தூதுபோய்ப் பரவைபா னடந்து, மேயவன் றிறல்சே ரந்தக விலங்கன் முன் கலங்கி யுதைத்துச், சேய செங்கமல மெனச்சிறந் தன்பர் சிந்தையம் போருக மலராக், காய்கதிர் விரிக்குஞ் செழுமணிச் செம்பொற் கழற்றாளிணை கவின.

(இ—ள்) தூய செந்தமிழ் சுந்தரன் தனக்கு ஆக பரவைபால் தூது போய் நடந்தும்—சுத்தமான செந்தமிழாலாகிய தேவாரங்களைப்பாடியசுந்தரமூர்த்திநாயனாருக்காகப் பரவையாரிடத்துத் தூதாகப்போய் நடந்தும், மேய வன் திறல சேர் அந்தகன் ஆக விலங்கல் முன் கலங்கிட உதைத்து—பொருந்திய மிக்கவலிமையையுடைய யமனது சரீரமாகியமலையானது முன்னைநாளிற் கலக்கமடையும்படியுதைத்தும், சேய செம் கமலம் என சிறந்து—அழகிய செந்தாமரைமலர்போலச் சிறப்படைந்து, அன்பர் சிந்தை அம்போருகம் மலர—அடியார்களது மனமாகிய தாமரைமலரும்படி, காய் கதிர் விரிக்கும் செழு மணி செம்பொன் கழல் தாள் இணை கவின—எறிக்கின்ற கிரணங்களைப் பரவச்செய்யுஞ் செழுமையாகிய மாணிக்கசாதிகளைப்பதித்துச் சிவ

ந்த பொன்னினாற்செய்யப்பட்ட ஒளிபொருந்திய வீரக்கழலேயணிந்த திருப் பாதங்களிரண்டும் பிரகாசிக்கவும் எ—று. (எச)

சும்மையார் கலிசூ ழுலகினிற் புகலி தோன்றிய கவுணியச் சேய்க்குக், கொம்மைவார் முலையா ரமுதமுத் தமிழுங் குழைத் துமுன் குடித்திடப் பருக்கு, மம்மையோர் பாக மாகமற் றெவர் க்கு மருள்குளித் திடும்விழி பரப்பி, வெம்மையார் மடங்க லாச னத் தெமையாள் விமலனங் கினிதுவீற் றிருந்தான்.

இ—ள்: சும்மை ஆர்கலி சூழ் உலகினில் புகலி தோன்றிய கவுணிய சேய்க்கு— ஒலிநிறைந்த சமுத்திரத்தாற்சூழப்பட்ட பூவுலகத்தின்கண்ணே யுள்ள சீகாழிப்பதியிற் கவுணியர் கோத்திரத்திற்பிறந்த திரு ஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்கு, கொம்மை வார் முலை ஆர் அமுதம் முத் தமிழும் குழைத்து முன் குடித்திட பருக்கும் அம்மை—அழகிய கச்சிறப்படிந் த ஸ்தனங்களினின்றும்சிந்திய பாலையும் இயல் இசை நாடகமென்னும் முத் தமிழையுமொன்றாகக்குழைத்து முன்னைநாளிற்குடிக்கும்படியூட்டிய பார்ப்ப திதேவியார், ஓர் பாகம் ஆக—இடப்பாகமாகவும், மற்றெவர்க்கும் அரு ள் குளித்திடும் விழி பரப்பி—மற்றைய சர்வான்மாக்களுக்கும் அருளாகியநீரி ற் குளிக்கும்படி திருநோக்கஞ்செய்தருளி, வெம்மை ஆர் மடங்கல் ஆசனத் து—உக்கிரம்நிறைந்த சிங்காசனத்தில், எமை ஆள் விமலன் அங்கு இனிது வீற்றிருந்தான்— எம்மையடிமைக்கொள்ளுகின்ற அனுமயராகிய சிவபெரு மான் அவ்விடத்து நன்கு வீற்றிருந்தருளினர் எ—று. (எரு)

முந்தைநாள் களினித் தன்மையி னிகழ்ந்த முழுவது நினைந் துநீண் முடிக்கிட், கிந்தைமா விந்த நிகர்த்தகோ புரஞ்சேர் கீழ்த் திசை வாயில்போய் நந்தி, யெந்தையே வலினு லடுந்திறற் கால னிருகர மிருசர ணந்தன், சிந்தைகம் பிதத்தோ டெம்பிரா னிரு க்குந் திருச்சபை யூடுபோய்த் துதிப்பான்.

இ—ள்: முந்தை நாள்களின் இ தன்மையின் நிகழ்ந்த முழுவதும் நி னைந்து—முன்னாட்களிலே இவ்விதமாக நடைபெற்றயாவற்றையுஞ் சிந்தித் து, நீள் முடி கிட்கிந்தை மாவிந்தம் நிகர்த்த கோபுரம் சேர் கீழ் திசை வா யில் போய்—உயர்ந்த சிகரங்களையுடைய கிஷ்கிந்தாநகரத்திலுள்ள விந்தம லையைப்போன்ற கோபுரத்தைக்கொண்ட கிழக்குவாயிலையடைந்து, எந்தை நந்தி ஏவலினால்— எமதுபிதாவாகிய திருநந்திதேவரது ஆஞ்ஞையினால், அ டும் திறல் காலன்—கொலைத்தொழிலைச்செய்கின்ற வலிமையையுடைய யம னவன், தன் இரு கரம் இரு சரணம் சிந்தை கம்பிதத்தோடு— தனது இரண்டுகைகளும் இரண்டுகால்களும் மனமுமாகிய இவைகளின்நடுக்கத் தோடு, எம்பிரான் இருக்கும் திருச்சபை ஊடு போய் துதிப்பான்—எமது ப

ரமபிதாவாகிய சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற சபாமண்டபத்தைய டைந்து ஸ்தோத்திரஞ்செய்வான் எ—று. (எசு)

பொங்கர விதழிப் புதுமலர் புனைந்த புரிசடைப் புனிதவம் புயத்தோன், கங்கர கங்காதரகர வரையுங் காய்சினத் தரக்குமுன் னுரித்த, துங்கர வியனன் மதியமுக் கண்ணுஞ் சுரநரை விடைவரை துவச, சங்கர வமல திகம்பர வும்பர் தலைவநின் றாண்மலர் போற்றி.

இ—ள்: பொங்கு அரவு புதா இதழி மலர் புனைந்த புரிசடை புனித—சொதித்தெழும்புகின்ற சர்ப்பங்களையும் புதியகொன்றைமலரையுந் தரித்தருளிய முறுகிய சடையையுடைய பரிசுத்தரே, அம்புயத்தோன் கம் கர—பிரமகபாலத்தைக்கொண்ட திருக்கரத்தையுடையவரே, கங்காதர— கங்கையைத் தரித்தவரே, கரவரையும் காய் சின தரக்கும் முன் உரித்த துங்க—துதிக்கையையுடைய மலைபோன்ற யானையையும் கொதிக்கின்ற கோபத்தையுடைய புலியையும் பண்டைக்காலத்திலுரித்தருளிய மேன்மையையுடையவரே, ரவி அனல் மதியம் முக்கண்ணும் சுர— சூரியனையும் அக்கினியையுஞ் சந்திரனையும் மூன்றுகண்களாகக்கொண்ட தேவரே, நரை விடைவரை துவச—வெண்மையான இடபமெழுதிய கொடியையுடையவரே, சங்கர—ஆன்மாக்களுக்கெல்லாஞ் சுகத்தைச்செய்பவரே, அமல—அழுக்கற்றவரே, திகம்பர—திக்குகளை ஆடையாகவுடையவரே, உம்பர் தலைவ—தேவநாயகரே, நின் மலர் தாள் போற்றி—தேவரீரது தாமரைமலர்போன்ற திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் எ—று. (எஎ)

மன்றன்மைக் கூழை மலைமகட் புணர வருத்துதி யென்ற சொன் மறும, லன்றம ரருக்காச் சென்றுடற் றுவனென் றங்கணை யைங்கணைக் கிழவன், பொன்ற மத்தகக்கட் புலக்கனல் கொழுத்திப் புன்னகை புரிந்துமுப் புரமுங், குன்றவிற் கனகக் குன்றவிற் குனித்த குழகநின் குரைகழல் போற்றி.

இ—ள்: மன்றல் மை கூழை மலைமகள் புணர வருத்துதி என்ற சொல் மறுமல்—வாசனைபொருந்திய கரிய கூந்தலையுடைய உமையம்மையாரைச்சேரும்பொருட்டு (புஷ்பபாணங்களைச்செலுத்தி) வருத்தக்கடவையென்று (தேவர்கள்) கூறிய வாக்கைமறுக்காமல், அன்று அமரருக்கா சென்று உடற்றுவன் என்று அங்கு அணை ஐங்கணை கிழவன் பொன்ற— அக்காலத்திலே அத்தேவர்கள்பொருட்டாகச் சென்று யுத்தஞ்செய்வேனென்று அவ்விடத்துவந்த (அரவிந்தம் மா அசோகு முல்லை நீலோற்பலமாகிய) பஞ்சபுஷ்ப பாணங்களையுமுடைய மன்மதனானவன் இறந்துபடும்படி, மத்தக கண் புலகனல் கொழுத்தி—நெற்றிக்கண்ணிற்பொருந்திய அக்கினியினாலெரித்து, புன் நகை புரிந்து முப்புரமும் குன்ற வில் கனக குன்ற வில் குனித்த குழ

க—புன்முறுவல்செய்து முப்புரங்களுமழியும்படி ஒளிபொருந்திய பொன்மயமாகிய மேருமலையை வில்லாகவளைத்த இளமைநீங்கப்பெறுதவரே, நின் குரை கழல் போற்றி—தேவரீரது ஒலிபொருந்திய வீரக்கழலணிந்த திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் எ—று. (௭அ)

ஒருமலை யெடுத்த விருந்திற லரக்க னுரங்குறைந் துட்கமுன் னூன்றிப், பொருமலைச் சலதி கடைந்திடு மந்நாட் புத்தமு தத்தட னுதித்து, வருமலைப் பழித்த குழற்றிரு மணாளன் மலர்விழிப் போதணிந் தடியார், கருமலை கெற்றி யின்பவீ டளிக்குங் கனைகழற் றாண்மலர் போற்றி.

இ—ள்: ஒரு மலை எடுத்த இரும் திறல் அரக்கன் உரம் குறைந்து உட்க முன் ஊன்றி—ஒப்பற்ற கயிலாசமலையைத்தூக்கிய மிக்கவலிமையையுடைய இ ரா வ ண ன் வலிமைகுன்றி நடுங்கும்படி முன்னைநாளிலூன்றிமிதித்தருளி, பொரும் அலை சலதி கடைந்திடும் அந்நாள்— திரைமோதுகின்ற பாற்கடலைக்கடைந்த அற்றைக்காலத்து— புது அமுதத்துடன் உதித்து வரும் அல்லை பழித்த குழல் திரு மணாளன் மலர் விழி போது அணிந்து—புதிய அமுதத்தோடு கூடிப்பிறந்துவந்த (கருமையில்) இருளையும்பழித்தகூந்தலையுடைய இலக்குமிக்குநாயகராகிய மகாவிஷ்ணுமூர்த்தியினது மலராகியகண்ணைப் புஷ்பமாகஅணிந்து, அடியார் கரு மலைவு அகற்றி இன்ப வீடு அளிக்கும்—அடியவர்களினது பிறவியாகிய மயக்கத்தைக்கெடுத்துச் சுககரமாகிய மோட்சபதவியைக்கொடுக்கின்ற, கனை கழல் மலர் தாள் போற்றி—சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த மலர்போன்ற திருப்பாதங்களுக்கு நமஸ்காரம் எ—று. ()

வேறு.

எனப்பல துதிகள் கூறி யீசனை யிறைஞ்சி யேத்தி
மனப்படு மச்ச நீங்கி வாய்புதைத் தொதுங்கி நின்றங்
கனப்பதி பாகன் றன்னை யவனிமுற் படைக்கச் செய்தாய்
கனப்படு முலகங் காக்கக் கண்ணனைக் கற்பித் தாயே.

இ—ள்: என பல துதிகள் கூறி ஈசனை இறைஞ்சி எத்தி— என்றிவ்வாறாகிய பல தோத்திரங்களைச்சொல்லிச் சிவபெருமானை வணங்கித்துதித்து, மனம்படும் அச்சம் நீங்கி வாய் புதைத்து அங்கு ஒதுங்கி நின்று— மனத்திற்கொண்ட பயமொழிந்து வாய்பொத்தி அவ்விடத்துஒதுக்கமாய்நின்று, முன் அன பதி பாகன் தன்னை அவனி படைக்க செய்தாய்—முன்னமே அன்னத்தைவாகனமாகக்கொண்ட பிரமாவை உலகத்தைச் சிருட்டிக்கும்படி பணித்தருளினீர், கண்ணனை கனப்படும் உலகம் காக்க கற்பித்தாய்—விஷ்ணுமூர்த்தியைப் பாரமாகிய அவ்வுலகத்தைக்காக்கும்படி பணித்தருளினீர் எ—று.

எ அசை. (அ0).

கண்ணழல் கதுவும் வெள்ளைக் கரடமால் யானை யூரு
மண்ணலைப் புலவர் பொன்னு டளித்திடற் கருளிச் செய்தாய்

தண்ணெனுங் கதிர்கள் வீசுஞ் சந்திரா தித்தர் தம்மை
விண்ணினி னுலவி வையம் விளக்குவீ ரெனவி டுத்தாய்.

இ—ள்: கண் அழல் கதுவும் வெள்ளை கரட மால் யானை ஊரும் அண்ணலை—கண்களினின்றுமக்கினிப்பொறிசொலிக்கின்றவெண்ணிறத்தைக்கொண்ட மதம்பாய்சுவட்டையுடைய பெரிய ஐராவதயானைவாகனருகிய இந்திரனை, புலவர் பொன் நாடு அளித்திடற்கு அருளி செய்தாய்—தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்கலோகத்தைப்பரிபாலிக்கும்படி பணித்தருளினீர், தண் எனும் கதிர்கள் வீசும் சந்திர ஆதித்தர் தம்மை—குளிர்ந்த கிரணங்களைக் காலுகின்ற சந்திரனையுஞ் சூரியனையும், விண்ணினின் உலவி வையம் விளக்குவீர் என விடுத்தாய்—ஆகாயத்தின்கண்ணேசஞ்சரித்துப் பூமிக்கு ஒளிகொடுக்கும்படி பணித்தருளினீர் எ—று. (அக)

ஏர்பெறு மளகை தன்னை யிருநிதிக் குபேரற் கீந்தாய்
பார்முத லெங்கும் வீசப் பவனனைப் பணித்தாய் மற்றை
வார்தருஞ் சலதி யாள வருணனை வைத்தாய் தன்மச்
சீர்கெடு மவர்க்குத் தண்டஞ் செய்வதற் கமைத்தா யென்னை.

இ—ள். ஏர் பெறும் அளகை தன்னை இரு நிதி குபேரற்கு ஈந்தாய்—பெருமைபொருந்திய அளாகாபுரியை மிக்கசெல்வப்பெருக்கையுடைய குபேரனுக்குக் கொடுத்தருளினீர், பார் முதல் எங்கும் வீச பவனனை பணித்தாய்—பூமிமுதலெவ்விடங்களினுமுலாவும்படி வாயுதேவனுக்கு ஆஞ்ஞாபித்தருளினீர், மற்றை வார் தரும் சலதி ஆள வருணனை வைத்தாய்—ஏனைய நீண்ட சமுத்திரத்தைப் பரிபாலிக்கும்படி வருணனுக்குப்பணித்தருளினீர், தன்ம சீர் கெடும் அவர்க்கு தண்டம் செய்வதற்கு என்னை அமைத்தாய்— தருமவொழுக்கந்தவறியவர்களுக்குத் தண்டனைபுரியும்படி அடியேற்குக்கற்பித்தருளினீர் எ—று. (அஉ)

திரிபுவனத்து நீதான் செய்தகற் பனைக ளெல்லாஞ்
சரிவர நடந்த வொன்றுந் தமியனேன் பிழைத்த தில்லை
புரிசடைப் பரம வென்று புரிநெடும் பாசத் தோடு
முரிசெயற் கரிய தண்ட முதலமுத் திரைமுன் வைத்து.

இ—ள்: திரிபுவனத்து நீதான் செய்த கற்பனைகள் எல்லாம் சரிவர நடந்த—(பூமி அந்தரம் சுவர்க்கமாகிய)மூவுலகத்துந் தேவரீராஞ்ஞாபித்த ஆஞ்ஞைகள் யாவுங் கிரமமாய் நடைபெற்றன, தமியேன் ஒன்றும் பிழைத்தது இல்லை—அடியேன் யாதுந்தவறிழைத்தேனல்லேன், புரி சடை பரம என்று—முறுகியசடையையுடைய பரம்பொருளேயென்று, புரி நெடும் பாசத்தோடு முரி செயற்கு அரிய தண்டம் முதல முத்திரை முன் வைத்து— புரிபொருந்திய நீண்டபாசமும் முரித்தற்கியலாத தண்டாயுதமும் முதலாகிய சின்னங்களைத் திருமுன்னிலையில் வைத்து எ—று. (அரு)

ஆக்குவா னழிக்க வெண்ணி லாரது காக்க வல்லார்
நீக்குவா யிதனை மற்றோர் பணிசெய நிறுத்து கென்று
தூக்குநீ டுலைக்கோ லன்னான் சொற்றது கேட்டு நெஞ்சிற்
றாக்குமா றின்று வந்த தாழ்வென்கொல் சாற்று கென்றான்.

இ—ள்: ஆக்குவான் அழிக்க எண்ணில் ஆர் அது காக்க வல்லார்—(ஒருபொருளை) உண்டாக்குபவனே அழிக்கவும் நினைப்பானாகில் ஆர் அதனைத்தடுத்துக்காத்தற்குவல்லவர், நீக்குவாய் இதனை—(அடியேனிடத்திலிருந்து) இத்தொண்டை நீக்கியருளுக, மற்று ஓர் பணிசெய நிறுத்துக என்று—பின்னோர்தொழிலை நடாத்துதற்கு ஆஞ்ஞாபித்தருளுகவென்று, தூக்கும் நீள் துலை கோல் அன்னான் சொற்றது கேட்டு— தூக்கப்படுகின்ற நீண்டதராசுக்கோலையொத்த நீதியையுடையவனாகிய யமராசன் கூறியதை (சிவபெருமான்) கேட்டு, நெஞ்சில் தாக்குமாறு இன்று வந்த தாழ்வு என்கொல் சாற்றுக என்றான்—உனதுமனத்தை வருத்தும்படி இற்றைத்தினத்தில்வந்த குறை யாது அதனைக்கூறக்கடவையென்று ஆஞ்ஞாபித்தனர் எ—று. (அச)

கண்ணிக ளூன்றிக் கையிற் கார்முகங் குனித்தம் பேவி (த்தும்
மண்ணின்மா வினங்கள் கொன்றும் வாய்த்தபுட் குலங்கண் மாய்
வெண்ணிணந் தடிகடின்று வீக்கிய சடத்தா னன்றொன்
றுண்ணிகழ் வில்லா வேட னுன்பதத் துறைத லுற்றான்.

இ—ள்: கண்ணிகள் ஊன்றி—கண்ணிகளைப்பதித்து, கையில் கார் முகம் குனித்து அம்பு ஏவி— கரத்திற்கொண்ட வில்லைவளைத்துப்பாணங்களைச் செலுத்தி, மண்ணில் மா இனங்கள் கொன்றும்— பூமியின்கண் ணேவாசஞ்செய்கின்ற மிருகங்களைவதைத்தும், வாய்த்த புள் குலங்கள் மாய்த்தும்—அகப்பட்ட பறவைக்கூட்டங்களைக் கொலைபுரிந்தும், வெள் நிண தடிகள் தின்று வீக்கிய சடத்தான்—வெண்ணிறமாகிய நிணத்தையுடைய மாமிசங்களைப் புசித்தலினால் பாரித்த சரீரத்தையுடையவனாய், நன்று ஒன்று உள் நிகழ்வு இல்லா வேடன்—ஒருநன்மையாவது மனத்தின்கண்ணே பொருந்தப்பெறாத வேடனாகிய அங்குலன், உன் பதத்து உறைதல் உற்றான்—தேவரீரது மோக்ஷபதத்தை அடையப்பெற்றான் எ—று. (அரு)

பரிமகம் புரிகின் றானோ பகர்தரு மாக மாதத்
துரியநீர் படிகின் றானோ வுயர்சிவ லிங்க பூசை
புரிதர நினைகின் றானோ புண்ணியத் தலத்தி லுன்னைத்
தெரிசனஞ் செய்கின் றானோ சிவநிசி நோற்கின் றானோ.

இ—ள்: பரிமகம் புரிகின்றானோ— அசுவமேதயாகத்தைச் செய்கின்றனனோ, பகர்தரும் மாகமாதத்து உரிய நீர் படிகின்றானோ— சொல்லுதற்கரிய (புண்ணியங்களையுடைய) மாசிமாதத்தில் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்கிறனனோ, உயர் சிவலிங்கபூசை புரிதர நினைகின்றானோ— மேலா

இய சிவலிங்கபூசையைச் செய்வதற்கு நினைக்கின்றனரோ, புண்ணிய தலத்தில் உன்னை தெரிசனம் செய்கின்றாரோ— புண்ணிய ஸ்தலங்களிலே தேவரீரைத்தெரிசனஞ்செய்கின்றனரோ, சிவநிசி நோற்கின்றாரோ—சிவராத்திரிவிரதத்தையனுஷ்டிக்கின்றனரோ எ—று. (அசு)

எத்தவம் புரிந்தா னிங்ங னெய்துதற் கிறைவ வுன்றன்
சித்தமே தெரிந்து நீதி திறம்பிடி லறங்க டேயு
முத்தரும் பவங்கள் செய்யு மூர்க்கருஞ் சரியா யெண்ணிற்
றத்தலைக் கடனீர் சூழ்ந்த தாரணி கவிழு மன்றே.

இ—ள்: இறைவ—தலைவரே, இங்ஙன் எய்துதற்கு எத்தவம் புரிந்தான்—இப்பதவியில் அடைதற்கு எவ்விதமாகிய தவத்தைச்செய்துகொண்டான், உன் தன் சித்தமே தெரிந்து நீதி திறம்பிடில் அறங்கள் தேயும்—தேவரீர் உம்முடைய திருவுள்ளத்திலுணர்ந்தும் நீதி வழுவுவீராயின் சர்வ தருமங்களுமழிந்துபடும், முத்தரும் பவங்கள் செய்யும் மூர்க்கரும் சரியாய் எண்ணில்—(பற்றனைத்துமொழித்த) சீவன்முத்தர்களும் பாவங்களையெல்லாம் இயற்றுகின்ற துஷ்டர்களுஞ்சமமாக மதிக்கப்படுவாராயின், தத்து அலை கடல் நீர் சூழ்ந்த தாரணி கவிழும்—தத்திப்பாய்கின்ற திரைகளையுடைய சமுத்திரத்தாற்சூழப்பட்ட நிலவுலகமானது அங்நீரிலமிழ்ந்திவிடும் எ—று.

அன்று ஏ அசைகள். (அஎ)

என்னுடைத் தூதர் தம்மை யிகல்புரிந் திவனு லின்றிங்
குன்னுடைக் கணங்கள் செய்த துரைத்திடக் கேட்டி யோட்டி[னி
மின்னுடைப் படையாற் றண்டால் வெட்டியும் புடைத்துஞ் சென்
முன்னுடைத் துதிரத் தோடு மூளைகள் சிந்தி னாரே.

இ—ள்: இவனால்—இவ் அங்குலன்பொருட்டாய், இன்று இங்கு உன்னுடை கணங்கள்—இத்தினத்திலே இவ்விடத்துள்ள தேவரீரது கணநாதர்கள், என்னுடை தூதர் தம்மை இகல் புரிந்து செய்தது உரைத்திட கேட்டி—எனது தூதுவர்களைப்பகைபுரிந்து செய்தனயாவற்றையுங் கூறுகின்றேன் கேட்டருளுக, ஓட்டி—துரத்தி, மின் உடை படையால் தண்டால் வெட்டியும் புடைத்தும்—ஒளிபொருந்திய படைகளினால் வெட்டியும் தண்டாயுதங்களினாலடித்தும், சென்னி முன் உடைத்து உதிரத்தோடு மூளைகள் சிந்தினர்—சிரசுகளை முன்னரே உடைத்து (பின்) இரத்தத்துடன் மூளைகள் சிந்தும்படிசெய்தார்கள் எ—று.

ஏ அசை. (அஅ)

தாவரும் பவங்கள் செய்வார் தாஞ் சிவலோக மேவில்
யாவரைத் தண்டஞ் செய்வ தென்றெதி ரியமன் கூறத்

தேவரும் முனிவர் தாமுஞ் சிந்தையிற் றியானஞ் செய்யு
மூவருந் தானாய் நின்ற மூர்த்தியு மொழிவ தானான்.

இ—ள்: தா அரும் பவங்கள் செய்வார் தாம் சிவலோகம் மேவில்—நீங்குதற்கரிய பாவங்களைச்செய்பவர்களுஞ் சிவலோகத்தையடைவாராயின், யாவரைத் தண்டம் செய்வது என்று இயமன் எதிர் கூற—வேறு எவரைத்தண்டிப்பது என்று இயமராசன் திருமுன்னேநின்றுகூற, தேவரும் முனிவர் தாமும் சிந்தையில் தியானம் செய்யும்—தேவர்களும் முனிவர்களும் மனத்தில் தியானஞ்செய்கின்ற, மூவரும் தானாய் நின்ற மூர்த்தியும்— பிரமாவிஷ்ணு உருத்திரனாகிய மும்மூர்த்திகளும் தாமாகவிருக்கின்ற சிவபெருமானும், மொழிவதானான்—திருவாய்மலர்ந்தருளுவாராயினார் எ—று. (அக)

விற்பயில் வேடன் முன்னாள் வேட்டமே லெழுந்து நந்த
மற்படு காலை யுண்டி யனந்தலற் றருகிற் சார்ந்து
பொற்பமர் வில்வஞ் சாத்திப் பூசனை புரித லாலே
சொற்பயில் பாவ வேலை சுவறிடத் தூர்த்திட் டானே.

இ—ள்: வில் பயில் வேடன் முன்னாள் வேட்ட மேல் எழுந்து—விற்றொழிலைப்பயின்ற அவ்வேடனானவன் முன்னைக்காலத்து வேட்டையின் பொருட்டுச்சென்று, நம் தம் அல் படு காலை உண்டி அனந்தல் அற்று அருகில் சார்ந்து—எமக்குரிய சிவராத்திரிதினத்திலே உணவும் நித்திரையுமின்றி நமதுபக்கத்திலிருந்து, பொற்பு அமர் வில்வம் சாத்தி பூசனை புரிதலாலே—அழகமைந்த வில்வபத்திரங்களை எமக்குச்சூட்டி அருச்சனைசெய்தமையால், சொல் பயில் பாவ வேலை சுவறிட தூர்த்திட்டான்—கூறப்படுகின்ற பாவமாகிய சமுத்திரம்வற்றும்படி தூர்த்தான் எ—று.

ஏ அசை. (கூ0)

இத்திற மறியாய் நீயு மெழுதருங் கணக்கில் வல்ல
சித்திர குத்தன் றானுந் தெரிந்தில னென்று திங்கட்
சந்திரன் றன்னைக் காய்ந்த சங்கர னுரைப்பத் தீட்டும்
பத்திர மெடுத்துப் பார்த்துக் கணக்கனும் பரிந்து போற்றி.

இ—ள்: நீயும் இத்திறம் அறியாய்— யமனே நீயுமித்தன்மையையறிந்திலை, எழுதரும் கணக்கில் வல்ல சித்திரகுத்தன் தானும் தெரிந்திலன் என்று—எழுதுதற்கரிய கணக்கில் வல்லமையுடைய சித்திரகுத்தனும் (இதனை) அறியப்பெற்றிலானென்று, திங்கள் சந்திரன் தன்னைக் காய்ந்த சங்கரன் உரைப்ப—சந்திரனைக்குடையாகவுடைய மன்மதனை எரித்த சிவபிரான் திருவாய்மலர்ந்தருள, கணக்கனும் தீட்டும் பத்திரம் எடுத்துப் பார்த்து பரிந்து போற்றி—அக்கணக்கனும் தான் (முன்) எழுதிய கணக்கேட்டை எடுத்துப்பார்த்து அன்புடனேதுதித்து எ—று. (கூக)

சிவநிசி யென்ப தோரான் றின்பதற் கூன்கிட் டாம
லுவவசி யாகி நின்று னுவாப்புலி யெண்கு சிங்க
மவமெனைச் செய்யு மாலென் றஞ்சியவ் வில்வத் தேறித்
தவர்விடுங் கணைக ளேவிற் றடைசெயு மிடையி லென்றே.

இ—ள்: சிவநிசி என்பது ஓரான்—அன்று சிவராத்திரி என்பதை அறிந்திலன், தின்பதற்கு ஊன் கிட்டாமல் உவவசி ஆகி நின்றான்— உண்பதற்கு மாமிசமகப்படாமையால் பட்டினியாயிருந்தான், உவா புலி எண்கு சிங்கம் எனை அவம் செய்யும் என்று அஞ்சி—யானையும் புலியும் கரடியும் சிங்கமும் என்னை இடையூறுசெய்யுமென்று பயந்து, அவ் வில்வத்து ஏறி— அவ் வில்வமரத்திலேறியிருந்து, தவர் விடுங் கணைகள் ஏவில் இடையில் தடை செயும் என்று—வில்லினின்றுஞ்செலுத்தப்படுகின்ற அம்புகளை ஏவினால் இடையில் தடைசெய்யுமென்றுகருதி எ—று.

ஆல் ஏ அசைகள்.　　　　(கஉ)

கூர்தருஞ் சுரிகை யாலக் குழைகளைக் கொய்து வீழ்த்தா
னீர்தரு கண்க டம்மி னித்திரை வந்தா லிந்தப்
பார்தனில் வீழ்வே னென்று பயந்ததிற் பன்னம் பண்ணி
யேர்தரு மரைமான் பன்றி யின்றிவண் வருமென் றெண்ணி.

இ—ள்: கூர் தரும் சுரிகையால் அ குழைகளை கொய்து வீழ்த்தான்—கூரிய உடைவாளினால் அப்பத்திரங்களை அறுத்துவிழுத்தினான் (அதுவுமன்றி), நீர் தரு கண்கள் தம்மில் நித்திரை வந்தால் இந்தப் பார் தனில் வீழ்வேன் என்று பயந்து—நீர்பெருகுகின்ற கண்களில் நித்திரைவருமாயின் இந்தப்பூமியின்கண்ணே வீழுவேனென்று அஞ்சி, அதில் பன்னம் பண்ணி—அதின் இலைகளைப்பறித்து (வீழ்த்தி), ஏர் தரு மரைமான் பன்றி இன்று இவண் வரும் என்று எண்ணி—அழகுபொருந்திய மரை மான் பன்றியாகிய மிருகங்கள் இன்றைக்கு இவ்விடத்தே வருமென்று நினைத்து எ—று.　　　　(கா)

சுசிகர மில்லா வேடன் றுயிறுறந் திருந்தா னீச
னிசியென நினைந்து தொன்னூ னீதியிற் செய்த தன்றென்
றுசித மாய்க் கணக்க னோத வொண்டழற் சுடலை தன்னிற்
பசிதமே பூசு மேனிப் பரமனும் பகரும் பின்னும்.

இ—ள்: சுசி கரம் இல்லா வேடன் துயில் துறந்து இருந்தான்— ஆசாரமில்லாத அவ்வேடனுனவன் நித்திரையில்லாது இருந்தனன், ஈசன் நிசி என நினைந்து தொல் நூல் நீதியில் செய்தது அன்று என்று—சிவராத்திரியென்றெண்ணிப் பழமையாகிய சாஸ்திரமுறைப்படி அனுஷ்டித்தவனல்லனென்று, உசிதமாய்க் கணக்கன் ஓத— தக்கபடி கணக்கன்கூற, ஒ

ள் தழல் சுடலை தன்னில் பசிதம் பூசும் மேனி பரமனும் பின்னும் பகரு ம்—ஒளிபொருந்திய அக்கினியைக்கொண்ட மயானபூமியின்கணுள்ள சாம்ப ரையணிந்த திருமேனியையுடைய சிவபெருமானும் பின்னருந்திருவாய்ம லர்ந்தருளுவாராயினர் எ—று.

ஏ அசை. (கஃ)

அதையுனக் கறைவங் கேட்டி யறிந்திடா தியற்ற லாலே
சிதைவிலாக் கணத்திற் சேர்ந்தான் சித்திநன் முத்தி நல்கும்
விதைநிகர் கங்கு றன்னில் விதித்தநூல் வழிவ ழாம
லிதையமீ தறிந்து செய்தா லியாமவ னவ னன்றே.

இ—ள்: அதை உனக்கு அறைவம் கேட்டி— அத்தன்மையையுனக்கு விளங்கக்கூறுவேம் கேட்கக்கடவை, அறிந்திடாது இயற்றலால் சிதைவிலா கணத்தில் சேர்ந்தான்—(சிவராத்திரிதினமென்று) அறியாது அனுஷ்டித்தமையால் அழிவில்லாத நமது கணத்தவர்களுளொருவனுய்ச்சேர்ந்திருக்கின்றான், சித்தி நல் முத்தி நல்கும் விதை நிகர் கங்குல் தன்னில்—சர்வசித்திகளையும் நன்மைபொருந்திய மோட்சத்தையும் கொடுக்கவல்ல விதையையொத்திருக்கின்ற அச்சிவராத்திரிதினத்தில், நூல் விதித்த வழி வழாமல் இதைய மீது அறிந்து செய்தால்—சாஸ்திரங்களிற்கூறிய விதிமுறைதவறுதலின்றி மனத்திலறிந்து அனுஷ்டிப்பானாயின், அவன் யாம் அவன்— அவன் சாயுச்சியத்தையடைவான் எ—று.

ஏ இரண்டும் அசைகள். (கரு)

செவ்விர வனைய கூந்தற் சிவைமுத னோற்றல் செய்யு
மிவ்விர தத்தின் மேன்மை யாவரே கணிக்க வல்லார்
கைவிரல் கண்ணிற் பட்டாற் செய்வதென் கவலை நீக்கி
மைவிர வியகார் மேனி மறலிநின் றூத ரோடும்.

இ—ள்: மை விரவிய கார் மேனி மறலி—மிக்க கருமைசெறிந்த முகிலையொத்த சரீரத்தையுடைய இயமனே, செவ் இரவு அனைய கூந்தல் சிவை முதல் நோற்றல் செய்யும் இவ்விரதத்தின் மேன்மை—நிறைந்த இருளையொத்த கரிய கூந்தலையுடைய உமாதேவி ஆதிகாலத்திலனுஷ்டித்த இச்சிவராத்திரிவிரதத்தின்மகிமையை, யாவரே கணிக்க வல்லார்— யாவரளவுபடுத்திக்கூறவல்லர், கை விரல் கண்ணில் பட்டால் செய்வது என்— (தனது) கைவிரலானது கண்ணிலேதாக்குமாயின் அதற்கு யாது (தண்டனை) செய்வது, கவலை நீக்கி நின் தூதரோடும்—உனதுமனதிற்கொண்ட துன்பத்தை நீக்கி உன் தூதுவர்களுடனே எ—று. (கசு)

வைத்தமுத் திரையை வாங்கி வழிக்கொள்வா யென்னஞான
வித்தகன் கருணை யோடு விடைகொடுத் தருள வேண்டி

முத்தலைப் படைகொள் காலன் முதல்வனை முறையிற் றாழ்ந்து
சித்தமுந் தெளிந்து தேறித் தென்புலத் தெய்தி னானே.

இ—ள்: வைத்த முத்திரையை வாங்கி வழிக்கொள்வாய் என்ன— இவ்விடத்தில்வைத்த சின்னங்களையெடுத்துக்கொண்டு செல்லக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருள, முத்தலை படைகொள் காலன் முதல்வனை முறையில் தாழ்ந்து—முக்கருப்பொருந்திய சூலாயுதத்தைக்கொண்ட இயமன் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானை முறைப்படிவணங்கி, ஞான வித்தகன் கருணையோடு விடை கொடுத்து அருள வேண்டி—எல்லாவற்றையுமறியுந்தன்மையையுடைய அறிவுருவராகிய சிவபெருமான் உத்தரவுகொடுத்தருள அதனைப்பெற்று, சித்தமும் தேறி தெளிந்து—தன்மனத்திற்கொண்ட சந்தேகமுந்தேறித்தெளிவடைந்து, தென் புலத்து எய்தினான்— தக்கணபுரத்தையடைந்தனன் எ—று.

ஏ அசை.　　　　(கஎ)

வேறு.

வெங்கொ டுங்கொலை புரிந்த வங்குலனும் வெள்ளி வெற்பிலொரு புள்ளிமான், செங்கை கொண்டருளு மண்ணல் கண்ணருடினந்தொ றும்பெறு கணங்களுக், கங்க ணற்றலைமை பெற்றி ருந்தபினொ ரைந்து பைந்தரு வளந்தரும், துங்க முற்றகன கந்தி கழ்ந்திலகு சுரர்கள் வாழுலக மேவினான்.

இ—ள்: வெம் கொடும் கொலை புரிந்த அங்குலனும்— மிகக்கொடிய கொலைத்தொழிலைச்செய்த அங்குலனாகியவேடனும், வெள்ளி வெற்பில்—கயிலாசமலையில், ஒரு புள்ளி மான் செங்கை கொண்டு அருளும்—ஒப்பற்ற புள்ளிபொருந்திய மானகன்றைச் சிவந்த திருக்கரத்திற்கொண்டருளிய, அண்ணல் கண் அருள் தினம் தொறும் பெறு கணங்களுக்கு— பெருமையிற்சிறந்த சிவபெருமானுடைய திருக்கண்ணோக்கத்தை எந்நாளும் பெறுகின்ற கணத்தவர்களுக்கு, நல் தலைமை பெற்று அங்கண் இருந்த பின்— நன்மையாகிய முதன்மையையடைந்து அவ்விடத்துச்சிலநாளிருந்தபின்னர், ஓர் ஐந்து பைந்தரு வளந்தரும்— பசிய பஞ்ச தருக்களின் செல்வத்தைப்பொருந்திய, துங்கம் உற்ற கனகம் திகழ்ந்து இலகு சுரர்கள் வாழ் உலகம் மேவினான்—உயர்வையுடைய பொன்னானது ஒளிகொண்டு பிரகாசிக்கின்ற தேவர்கள் வசிக்குஞ்சுவர்க்கலோகத்தையடைந்தனன் எ—று.　　　　(கஅ)

ஆட கப்பொனுல கத்தி னீடுகொடி யாடு மாடுதிகழ் மாடமேற், காட கத்தினுறை வேட னுற்றலர்கொள் கற்ப கத்தினிழ லுற்றடிப், பாட கத்தொலி பரப்ப ரம்பையர்கள் பலரு நின்றருகு பணிசெய, மாட கத்திவவின் யாழின் விஞ்சையர்கள் வந்து பாடனி வைகினான்.

இ—ள்: ஆடக பொன் உலகத்தில்—ஆடகம் என்னும் பொன்னையுடைய சுவர்க்கலோகத்தில், நீடு கொடி ஆடு மாடு திகழ் மாட மேல்—நீண்ட துவசங்களசையப்பெற்ற பக்கங்கள்விளங்குகின்ற மண்டபத்தில், காடகத்தின் உறை வேடன் உற்று—காட்டிலேவசித்த வேடனனவனிருந்தும், அலர் கொள் கற்பகத்தின் நிழல் உற்று—மலர்கள்நிறைந்த கற்பகவிருட்சநிழலிலிருந்தும், அடி பாடகத்து ஒலி பரப்பு அரம்பையர்கள் பலரும் அருகு நின்று பணி செய—கால்களிலணிந்த பாடகங்களினொலியானது பரவுகின்ற அரம்பாஸ்திரிகள் பலரும் பக்கத்துநின்று தொண்டுகள்செய்யவும், மாடகத்திவவின் யாழின் விஞ்சையர்கள் வந்து பாட— முறுக்காணிகளில் (நரம்புகள்)கட்டப்பட்ட யாழினிசையைப்பாடுகின்ற வித்தியாதரர்கள் வந்துநின்று இசையைப்பாடவும், நனி வைகினன்—நன்குவாழ்ந்திருந்தனன் எ—று. (கஅகூ)

அளவி லாததின மங்கி ருந்துபுக ழளகை மாநகரின் வளமெலாந், தளர்வி லாதவ னருந்தி முந்திமிகு சாடி யிற் றயிர்நெய் தேடியே, களவி னலிடையர் பாடி யிற்றிருடு கண்ணன் வண்ணமுறு கன்றினை, விளவின் மீதெறி முகுந்த னங்கணர விந்தன் வாழுலக மேவினன்.

இ—ள்: அளவு இலாத தினம் அங்கு இருந்து—அளவற்றநாட்களாக அவ்விடத்தில் வாழ்ந்திருந்து, புகழ் அளகை மா நகரின் வளம் எலாம் தளர்விலாது அவண் அருந்தி— கீர்த்தியையுடைய அளகாபுரியின்கணுள்ள செல்வங்கள் யாவற்றையுங் குறைவில்லாது அவ்விடத்தனுபவித்து, முந்தி—பண்டைக்காலத்தில், களவினல் இடையர் பாடியில் மிகு சாடியில் தயிர் நெய் தேடி திருடும் கண்ணன்—சோரத்தன்மையாய் இடையர்சேரியில் மிகுந்த சாடிகளிலிருக்கின்ற தயிரையும் நெய்யையும் ஆராய்ந்துதிருடிய கண்ணபிரானும், வண்ணமுறு கன்றினை விளவின் மீது எறி முகுந்தன்—அழகிய பசுக்கன்றை விளாமரத்தின்மேல் எறிந்த முகுந்தரும், அம் கண் அரவிந்தன்—அழகியகண்கள் தாமரையாகவுடையவருமாகிய மகாவிஷ்ணுமூர்த்தியானவர், வாழ் உலகம் மேவினன்—வாழ்ந்திருக்கின்ற வைகுந்தபதவியையடைந்தான் எ—று.

ஏ அசை. (௯00)

கொண்டல் வண்ணமுடல் கொண்ட கண்ணனருள் கொண்டு வைகுடுவை குண்டமீ, தண்ட ரண்டினர்செய் தொண்டு கொண்டதனி லானபோகமவை யாவுமுண், டெண்ட விர்ந்ததின மங்கி ருந்துபி னிருந்த வத்தினர் பொருந்திடு, முண்ட கந்தனி லிருந்தி டுஞ்சதுர் முகன்றி ருப்பதவி முன்னினன்.

இ—ள்: கொண்டல் வண்ணம் உடல் கொண்ட கண்ணன்—மேகநிறத்தையொத்த திருமேனியைக்கொண்ட கண்ணபிரான், அருள் கொண்டு

வைகிடு வைகுண்டமீது— அருளோடு எழுந்தருளியிருக்கின்ற வைகுந்தபத வியில், அண்டர் அண்டினர் செய் தொண்டு கொண்டு— தேவர்கள்நெருங் கிவந்து செய்கின்ற ஏவல்களைப்பெற்று, அதனில் ஆன போகம் அவை யாவும் உண்டு—அவ்விடத்திலுள்ள சுகபோகங்கள்யாவையுமனுபவித்து, எண் தவிர்ந்த தினம் அங்கு இருந்து—அளவற்றகாலம் அங்கேவாழ்ந்திருந்து, பின்— அதன்மேல், இரும் தவத்தினர் பொருந்திடும்—பெருமையிற்சிறந்த தவசிரேஷ்டர்களடையப்பெற்ற, முண்டகம் தனில் இருந்திடும் சதுர்முகன் திருப்பதவி முன்னினன்—தாமரைமலரின்மேல் வீற்றிருக்கின்ற நான்குமுகங்களையுடைய பிரமதேவரது சத்தியலோகத்தையடைந்தான் எ—று.(கoக)

ஓதி மக்கொடி யுயர்த்த நான்முக னுவந்த லோகமதி லுற்றதிற், கோதி லுட்புரவு துய்த்த பின்புநகை கொண்டு முப்புர மெரித்திடு, மாதி நற்கயிலை யுற்று ளத்தினி லரும்பெ ரும்பொருள் விரும்பவே, யீதி வற்கரன் மறுது தந்தருள வின்ப முற்றினி திருந்தனன்.

இ—ள்: ஓதிம கொடி உயர்த்த நான்முகன் உவந்த லோகம் அதில் உற்று—அன்னக்கொடியுயர்த்திய நான்குமுகங்களையுடைய பிரமதேவரால் விரும்பப்பட்ட சத்தியலோகத்தையடைந்து, அதில் கோது இல் துப்புரவு துய்த்த பின்பு—ஆங்குள்ள குற்றமில்லாத அனுபவங்கள்யாவற்றையும் அனுபவித்தபின்னர், நகை கொண்டு முப்புரம் எரித்திடும் ஆதி நல் கயிலை உற்று—புன்னகையாகிய அக்கினியினால் முப்புரங்களையுந்தகித்தருளிய தலைவராகிய சிவபெருமானது நல்ல கயிலாசமலையையடைந்து, உளத்தினில் அரும் பெரும் பொருள் விரும்ப—மனத்தினிடத்திலே பெறுதற்கரிய மோக்ஷத்தைவிரும்ப, ஈது இவற்கு அரன் மறுது தந்து அருள—அந்த மோக்ஷப்பேற்றைச் சிவபெருமான் இவனுக்கு மறுக்காது கொடுத்தருள, இன்பம் உற்று இனிது இருந்தனன்—நித்தியஇன்பத்தை அனுபவித்து நன்கு வாழ்ந்திருந்தனன் எ—று.

ஏ அசை. (கoஉ.)

கைத வத்தினுயர் வேட னீடுசிவ கங்கு லென்பதுண ராமலே, செய்த வத்திலிது பெற்ற னனபரம சிவநி சிப்பெருமை சிந்தையிற், பெய்த ருச்சனை புரிந்து கண்டுயில் பிரிந்த ருந்துத றவிர்ந்துளா, ரெய்து தற்கரிய முத்தி வீடதனி லெய்து வார்களிலை யையமே.

இ—ள்: கை தவத்தின் உயர் வேடன்— வஞ்சகமிகுதியையுடைய அங்குலன், நீடு சிவ கங்குல் என்பது உணராமல்— பெருமைமிகுந்த சிவராத்திரியென்று அறியாமல், செய் தவத்தில் இது பெற்றனன்—(அறியாமற்)

செய்த தவப்பலனால் இப்பேற்றையடைந்தனன், பரம சிவசிசி பெருமை சிந்தையில் பெய்து—மேலாகியசிவராத்திரியின் மகிமையைமனத்திற் சிந்தித்து, அருச்சனை புரிந்து கண் துயில் பிரிந்து அருந்துதல் தவிர்ந்துளார்— பூசனைசெய்து துயில்நீத்து உணவகற்றியிருந்தமேலவர்கள், எய்துதற்கு அரிய முத்தி வீடு அதனில் எய்துவார்கள்— அடைதற்கரிய மோக்ஷவீட்டையடைந்திருப்பார்கள், ஐயம் இலை—இதற்குச்சந்தேகமில்லை எ—று.

ஏ இரண்டும் அசைகள். (க0௩)

என்று சூதமுனி யோத மாதவர்கள் யாரு மேருவி லெடுத்தெயி, லன்று நீறுபட நூறு மாறுபுனை யரச னுக்குரிய விரசனி, யொன்று பாவவல் லிருட்க ருக்கனிக ரொக்கு மென்பதை யுணர்ந்தன, நன்று தேசிகநின் றாலெ னாமுடி துளக்கி நன்மொழிக ணல்கினார்.

இ—ள்: என்று சூதமுனி ஓத—என்று இவ்விதமாகச் சூதமுனிவர் கூறுதலும், மாதவர்கள் யாரும்—முனிவர்களெல்லோரும், மேரு வில் எடுத்து—மேருவாகிய வில்லைத்தாங்கி, எயில் அன்று நீறுபட நூறும்— முப்புரங்களும் அக்காலத்திலே நீறாகத்தகித்தருளிய, ஆறு புனை அரசனுக்கு உரிய இரசனி ஒன்று—கங்கையைத்தரித்த சிவபெருமானுக்குரிய சிவராத்திரிவிரதமொன்றுமே, பாவ வல் இருட்கு அருக்கன் நிகர் ஒக்கும் என்பதை—பாவமாகியகொடியஇருளுக்கு (அதனைநீக்குகின்ற) சூரியனையொத்திருக்குமென்னுமுண்மையை, தேசிக நின்றால் நன்று உணர்ந்தனம் எனா முடி துளக்கி—எமதுகுருவே தேவரீரால் நன்றாயறிந்தனமென்று சிரசுகளையசைத்து, நல் மொழிகள் நல்கினார்— நல்லஉபசார வார்த்தைகளைக் கூறினார்கள் எ—று. (க0௪)

அங்குலச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௪௭.

# சௌமினிச்சருக்கம்.



வாதரா யணனென் றோது மறைதெரி முனிவர் கோமான்
பாததா மரைக ளுன்னிப் பரவசத் தோடும் போற்றிச்
சீதநாண் மதியஞ் சூடுஞ் சிவனிசிப் பெருமை யின்னுஞ்
சூதமா முனிவன் மற்றை முனிவரர் தமக்குச் சொல்வான்.

இ—ள்: சூதமா முனிவன்— சூதமகாமுனிவர், வாதராயணன் என்று ஓதும் மறை தெரி முனிவர் கோமான் பாததாமரைகள் உன்னி—வியாதரென்று கூறப்படுகின்ற வேதங்களையறிந்த முனிசிரேஷ்டரது தாமரைமலர்போன்ற பாதங்களைத்தியானித்து, பரவசத்தோடும் போற்றி—பரவசமாகித்தோத்திரஞ்செய்து, சீத நாள் மதியம் சூடும் சிவநிசிப் பெருமை— குளிர்ந்த ஒருகலைச்சந்திரனைத்தரித்த சிவபெருமானுக்குரிய சிவராத்திரிவிரதத்தின துமகிமையை, முனிவரர் தமக்கு இன்னும் சொல்வான்— (அந்தநைமிசாரணியவாசிகளாகிய) முனிவர்களுக்குப்பின்னருங்கூறுவார் எ—று.

மற்று அசை. ஐ சாரியை. (க)

தோடுறு கமலந் தோடு துளிமதுக் குவளை யாம்பற்
காடுறு கமல வாவிக் கயலினங் குதித்தங் காடக்
கோடுறு தவளக் கோடு குமிறுந்தண் பணைசூழ்ந் தம்பொன்
னாடுறு மமரர் தாமு நாடுங்கே கயநன் னாடு.

இ—ள். தோடு உறு கமலந் தோடு துளிமது குவளை ஆம்பல் காடு உறு—இதழ்கள்பொருந்திய தாமரையும் துளிக்கின்ற தேன்பொருந்திய குவளையும் ஆம்பலும் காடாகநிறைந்துள்ள, கமல வாவி கயல் இனம் குதித்து அங்கு ஆட—நீர்நிறைந்த தடாகத்திலுள்ள கெண்டைமற்சங்கள் குதித்து அங்கே விளையாட, கோடு உறு தவள கோடு குமிறும் தண் பணை சூழ்ந்து—வரம்பின்கணுள்ள வெண்ணிறமாகிய சங்குகள் முழங்குகின்ற குளிர்ந்த வயல்களினாற்சூழப்பட்ட, அம் பொன் நாடு உறும் அமரர் தாமும் நாடும்— அழகிய தேவலோகத்தின்கண் வாசஞ்செய்கின்ற தேவர்களும் விரும்புகின்ற, கேகய நல் நாடு—கேகயம் என்னும் (பெயரையுடைய) நல்லநாடு (ஒன்றுளது) எ—று. (உ)

அரும்புறு கமலச் சூழி யதனினின் றெழுந்து வாளை
சுரும்புறு மலர்த்தண் சோலைச் சூதநற் கனிகள் சிந்துங்
கரும்புறு வேலி சூழ்ந்த கழனியிற் கதிர்ச்செஞ் சாலி
விரும்புறு முத்து நத்தி னித்திலம் விளங்கு மெங்கும்.

இ—ள்: வாளை—வாளைமற்சங்கள், கமலம் அரும்புறும் சூழி அதனி ல் நின்று எழுந்து—தாமரைகளரும்புகின்ற தடாகத்தினின்றுந்தள்ளி எழு ந்து, சுரும்பு உறு மலர் தண் சோலை சூத நல் கனிகள் சிந்தும்— வண்டுகள் படிகின்ற புஷ்பங்களைக்கொண்ட குளிர்ந்த சோலையின்கணுள்ள நல்ல மாங் கனிகளைச்சிதறும்படி செய்கின்ற, கரும்பு உறு வேலி சூழ்ந்த கழனியில்—க ரும்புகள் வேலியாகச்சூழ்ந்திருக்கின்ற வயல்களின்கணுள்ள, கதிர் செம் சா லி விரும்புறு முத்தும்—கதிர்களையுடைய செந்நெற்களிலுண்டாகின்ற விரு ம்பப்படத்தகுந்த முத்துக்களும், நத்தின் நித்திலம்—சங்குகளீன்ற முத்துக்க ளும், எங்கும் விளங்கும்—எவ்விடமுங்கிடந்து பிரகாசிக்கும் எ—று. (௩)

புன்றலைக் கரிய செங்கட் புரிமருப் பெருமை வாயான்
மன்றலைக் கமழும் வாவி மலர்பல மேய்ந்து வாவித்
துன்றலைப் புனல தார்ந்து சுரந்துறச் சொரியுந் தீம்பால்
கன்றலைத் துண்ண வூட்டிக் காஞ்சிமா நிழலிற் றுஞ்சும்.

இ—ள்: கரிய புன் தலை செங்கண் புரிமருப்பு எருமை—கரிய புல்லி ய தலையையும் சிவந்த கண்களையும் முறுகிய கொம்புகளையுமுடைய எருமை களானவை, வாயால் மன்றலை கமழும் வாவி மலர் பல மேய்ந்து— வாயினால் வாசனைகமழுகின்ற தடாகத்திலுள்ள பலபுஷ்பங்களையும்மேய்ந்து, வாவி து ன்று அலை புனலது ஆர்ந்து—வாவுகின்ற நெருங்கிய திரைகளையுடைய அந்நீ ரைப்பருகி, சுரந்து உற சொரியும் தீம்பால்— மடியிற்சுரந்து மிகவுஞ்சொரி கின்ற தித்திப்பாகியபாலை, கன்று அலைத்து உண்ண ஊட்டி— கன்றுகளா னவை அலைவுசெய்து உண்ணும்படிபருத்தி, மா காஞ்சி நிழலில் துஞ்சும்— பெரியகாஞ்சிமரநிழலிலேதூங்கும் எ—று. (௪)

நிறம்பயின் முந்நூல் பெற்றோர் நீதிமா மறைநூல் கற்றோர்
திறம்பயி லரசர் வாசச் சீரகத் தாமர் கொங்கைப்
பறம்பயி னெடுங்கட் செவ்வாய்ப் பார்மகள் புதல்வர் முன்னா
வறம்பயில் குடிக டுன்று மந்நாட் டகத்தி லுள்ளான்.

இ—ள்: நிறம் பயில் முந்நூல் பெற்றோர் நீதி மா மறை நூல் கற் றோர்— மார்பிற்பொருந்திய உபவீதத்தையுடையவர்களும் நீதிக்குரிய மகி மையையுடைய வேதங்களையோதியுணர்ந்தவர்களும் ஆகிய பிராமணர்களும், திறம் பயில் அரசர்— வ ன் மை யை அப்பியாசஞ்செய்கின்ற அரசர்க ளும், வாச சீரகத் தாமர்—வாசனைபொருந்திய சீரகமாலையையுடைய செட் டிகளும், பறம்பு கொங்கை அயில் நெடும் கண் செவ்வாய் பார்மகள் புதல்வ ர் முன்னா—மலைபோன்ற ஸ்தனங்களையும் வேற்படையையொத்த நீண்ட க ண்களையும் சிவந்த வாயையுமுடைய பூமிதேவியின் புத்திரராகிய வேளாளர் களும் ஆதியாகவுள்ள, அறம் பயில் குடிகள்—தரும ஒழுக்கத்தையுடைய பிர

சைகள், துன்றும் அந்த நாட்டு அகத்தில் உள்ளான்— நெருங்கியிருக்கின்ற அந்தக்கேகயநாட்டின்கண் வாசஞ்செய்பவனாகிய எ—று. (ரு)

வெந்தழல் வேள்வி செய்யும் விப்பிர னொருவன் முன்னாட்
டந்தருண் மடப்பொற் பாவை சவுமினி யென்னும் பேரா
ளந்தர வானில் வாழு மரம்பையை யனையாண் மாரன்
கந்தமா ரைந்து தண்பூங் கணைக்கிலக் காக நிற்பாள்.

இ—ள்: வெம் தழல் வேள்வி செய்யும் விப்பிரன் ஒருவன்— வெவ்விய அக்கினிகொண்டு யாகஞ்செய்கின்ற பிராமணனொருவன், முன்னாள் தந்தருள் மட பொன் பாவை—முன்னாளில் பெற்ற மடமையையுடைய அழகிய பாவைபோன்றவள், சவுமினி என்னும் பேராள்— சௌமினியென்னும்பெயரையுடையவள், அந்தர வானில் வாழும் அரம்பையை அனையாள்— சுவர்க்கலோகத்தில் வாழும் அரம்பையையொத்தவள், மாரன் கதம் ஆர் ஐந்து தண் பூ கணைக்கு இலக்காக நிற்பாள்—மன்மதனது பரிமளமிகுந்த குளிர்ந்த ஐந்துபுஷ்பபாணங்களுக்கு மிலக்காகநிற்பவள் எ—று. (சு)

வளமிகு செல்வந் தன்னில் வளர்ந்துவற் சரமோ ரேழிற்
றளவமென் முரற் பேதைத் தையலா ரோடு கூடி
யுளமகிழ் சிற்றில் கோலி யுறுகழங் கூச லாடி
யிளமயி லனையாண் மங்கைப் பருவம்வந் தெய்து கின்றாள்.

இ—ள்: இளமயில் அனையாள்— இளமையாகிய மயிலஞ்சாயலையுடைய அப்பெண், வள மிகு செல்வம் தன்னில் வளர்ந்து—செழிப்பான மிக்கசெல்வத்தில்வளர்ந்து, வற்சரம் ஓர் எழில்— வயதேழாகும்போது, தளவ மென் முரல் பேதைத் தையலாரோடு கூடி—முல்லையரும்பையொத்த மிருதுவாகிய பற்களையுடைய பேதைப்பருவம்வாய்ந்த பெண்களோடுகூடி, உளம் மகிழ் சிற்றில் கோலி—மனமகிழ்ச்சியோடு சிறுவீடுகட்டி, உறு கழங்கு ஊசல் ஆடி—பொருந்திய பந்துவிளையாடியும் ஊஞ்சலாடியும், மங்கைப்பருவம் வந்து எய்துகின்றாள்—மங்கைபபருவமானது வந்துபொருந்தப்பெற்றாள் எ—று. (எ)

வேறு.

தடங்கி டந்திடுந் தாமரை யரும்பெனத் தடித்துப்
படங்கி டந்தபாம் பேந்துபார் பகர்ந்திடத் தரள
வடங்கி டந்திப மருப்பிணை மருட்டிமா மணிப்பொற்
குடங்கி டந்தெனக் குலவிய கொம்மைவெம் முலையாள்.

இ—ள்: தடம் கிடந்திடும் தாமரை அரும்பு என தடித்து—தடாகத்திற்பொருந்திய தாமரைமுகையென்றுசொல்லும்படி அரும்பி, படம் கிடந்

த பாம்பு ஏந்து பார் பகர்ந்திட—படத்தைப்பொருந்திய ஆதிசேடனாற்சுமக்கப்படுகின்ற பூமியை விலையாகப்பெறும்படி, தரளவடம் கிடந்து—முத்து மாலைகள் தங்கப்பெற்று, இப இணை மருப்பு மருட்டி—யானையினிரண்டுகோடுகளையும் மருளச்செய்து, மாமணி பொன் குடம் கிடந்தென—மகத்தாகிய இரத்தினங்களழுத்திச்செய்யப்பட்ட பொற்கலசங்கள்கிடந்தாற்போல, குலவிய கொம்மை வெம் முலையாள்—விளங்குகின்ற திரண்ட விரும்பத்தக்க ஸ்தனங்களையுடையவள் எ—று. (அ)

வடித்த நெட்டிலை வேலொடு மாவடு வடிவாட்
டுடித்த செங்கயல் சுரும்புவேள் கரும்பினிற் றொடுக்குங்
கடிக்க ருங்குவ ளைகடமைக் கடுத்துநீள் வள்ளைக்
கொடிக்கி ணைக்குழைக் குழைகளிற் குதிக்குநீள் விழியாள்.

இ—ள். வடித்த நெட்டு இலை வேலொடு—கூரிய நெடிய இலைபோன்ற வேலும், மா வடு—மாமபிஞ்சும், வடிவாள்—கூரியவாளும், துடித்த செம் கயல்—துள்ளுகின்ற சிவந்த கயல்மற்சங்களும், சுரும்பு—வண்டுகளும், வேள் கரும்பினில் தொடுக்கும் கடி கரும் குவளைகள் தமை கடுத்து—மன்மதன் கருப்புவில்லினின்றுஞ் செலுத்துகின்ற வாசனைபொருந்திய கருங்குவளைமலருமாகிய இவைகளைநிகர்த்து, நீள் வள்ளைக் கொடிக்கு இணை குழை குழைகளில் குதிக்கும் நீள் விழியாள்—நீண்ட வள்ளைக்கொடியையொத்த காதுகளிலணிந்த அணிகள்வரையும் பாய்கின்ற நெடிய கண்களையுடையவள் எ—று. (கூ)

கருகு கங்குல் பைங்களங்கனி முழங்கிடுங் கடனீர்
பருகு மங்குனற் பதிகமொத் ததிபரி மளங்கண்
மருவி நெய்த்துநீண் டளிக்குலம் விருந்துண மலர்ந்த
முருக லர்த்தொடை சூட்டியே முடிக்குமொய் குழலாள்.

இ—ள்: கருகு கங்குல்—கரிய இருளையும், பைம் களம் கனி—பசிய களாம்பழத்தையும், முழங்கிடும் கடல் நீர் பருகும் மங்குல்—ஒலிபொருந்திய சமுத்திரநீரைப்பருகுகின்ற மேகத்தையும், நல் பதிகம் ஒத்து—நல்ல பாசியையும்நிகர்த்து, அதி பரிமளங்கள் மருவி—அதிக வாசனைகள்பொருந்தி, நெய்த்து நீண்டு—கொழுமையுடையதாய்நீண்டு, அளிக்குலம் விருந்து உண மலர்ந்த முருகு அலர் தொடை சூட்டி—வண்டுக்கூட்டங்கள் விருந்தாக உண்ணும்படி மலர்ந்த தேன்பொருந்திய மலர்மாலையையணிந்து, முடிக்கும் மொய் குழலாள்—முடிக்கப்பட்ட நெருங்கிய கூந்தலையுடையவள் எ—று.

ஏ அசை (௧௦)

கயிர வங்கவிர் தொண்டைமென் கனிகடற் பவளஞ்
செயிர றுஞ்செழுஞ் செங்கிடை கொங்கிடை யிலவம்

பயில்கொ ழுந்துண ரனைத்தையும் பழித்துமைக் கடைக்க
ணயில்வி டங்கொளு மவர்க்கமு துதவுசெவ் விதழாள்.

இ—ள்: சயிரவம்— செவ்வாம்பன்மலரும், கவிர்— முருக்கமலரும், தொண்டை மென் கனி—மிருதுவாகியகொவ்வைக்கனியும், கடல் பவளம்—சமுத்திரத்திலுண்டாகின்றபவளமும், செயிர் அறம் செழும செங்கிடை—குற்றமில்லாதசெழித்தசெங்கிடைச்சியும், கொங்கு இடை இலவம் பயில் கொழும் துணர் அனைத்தையும் பழித்து—வாசனைக்கிடமாகிய செவ்விலவமரத்தின்கண் விளங்குகின்ற கொழுமைகொண்டமலரும் ஆகிய இவைகளெல்லாவற்றையுமிகழ்ந்து, மை கடை கண் அயில் விடம் கொளும் அவர்க்கு—மைதீட்டிய கடைக்கண்ணாகியவேற்படைதைத்து விடமேறப்பெற்றவர்களுக்கு, அமுது உதவு செவ் இதழாள்—(அவ்விஷத்தைமாற்றும்பொருட்டு) அமுதமாகிய பானத்தைக்கொடுக்கின்ற சிவந்த அதரங்களையுடையவள் எ—று.()

சலந்த ரும்பொலந் தாமரை மலர்நிகர் முகத்தாள்
கலந்த ருந்தட மார்புடைக் காளைய ரெனுமா
வலந்த ருங்கட கரிகளை வணக்குமங் குசமாய்
நலந்த ருந்திலந் திகழ்குமிழ் நாணுநா சியினாள்.

இ—ள். சலம் தரும் பொலம் தாமரை மலர் நிகர் முகத்தாள்—நீரிலே உண்டாகின்றஅழகிய தாமரைமலரைநிகர்த்த முகத்தையுடையவள், கலம் தரும் தட மார்பு உடை காளையர் எனும் மா வலம் தரும் கட கரிகளை— ஆபரணம்விளங்குகின்றவிசாலம்பொருந்திய மார்பகத்தையுடையஆடவர்களாகிய மிக்கவலிமையையுடைய மதயானைகளை, வணக்கும் அங்குசமாய்—வசமாக்குகின்ற தோட்டியைப்போன்று, நலம் தரும் திலம் திகழ் குமிழ் நாணும் நாசியினாள்—நன்மைபொருந்தியஎட்பூவும் பிரகாசிக்கின்றகுமிழமலரும் வெட்கும்படியானமூக்கையுடையவள் எ—று. (கஉ)

தேனலந்தரு சருக்கரை செழுங்கனி கரும்பு
பானறும்பொழிற் பசுங்கிளி மொழிகளைப் பழித்துப்
பேனவெண்டிரை கடைந்துமுன் றுளவணி பெருமான்
வானவர்க்கருண் மருந்தெனு மதுரமென் மொழியாள்.

இ—ள்: தேன்—தேனும், நலம் தரும் சருக்கரை—நன்மைபொருந்திய சர்க்கரையும், செழும் கனி—செழுமையாகியபழங்களும், கரும்பு—கரும்பும், பால்—பாலும், நறும் பொழில் பசும் கிளி மொழிகளை பழித்து—வாசனைபொருந்திய சோலைகளில்வசிக்கின்ற பசியகிளிகளின்பேச்சும் ஆகிய இவைகளை (இனிமையினாற்) பழித்து, முன் துளவு அணி பெருமான்—முன்னொருநாளில் துளசிமாலையையணிந்த மகாவிஷ்ணுமூர்த்தியானவர், பேன வெண் திரை கடைந்து—நுரைபொருந்திய வெள்ளியதிரைகளையுடைய பாற்கடலைக்கடைந்து, வானவர்க்கு அருள் மருந்து எனும் மதுர மெல் மொழியா

ள்—தேவர்களுக்குக்கொடுத்தீருளிய அமுதமென்றுசொல்லத்தகுந்த இனிய மெலிவிய வார்த்தையையுடையவள் எ—று. (௧௩).

பாரின் மேல்வளர் மரங்களிற் படர்ந்தமென் கொடியைக்
காரின் மேலெழு மின்னைநுண் ணூலினைக் கடிந்திட்
டேரினு லுயர் மதனர சிருந்திடு மல்குற்
றேரின் மீதவ னெழுந்துநின் றொத்தசிற் றிடையாள்.

இ—ள்: பாரின் மேல் வளர் மரங்களிற் படர்ந்த மென் கொடியை—பூமியின்மேல் வளருகின்ற விருட்சங்களிற்படர்ந்த மிருதுவாகிய கொடியையும், காரின் மேல் எழு மின்னை—மேகத்தினின்றுந்தோன்றுகின்ற மின்னலையும், நுண் நூலினை கடிந்திட்டு—நுண்ணிய நூலையும்வெறுத்துத்தள்ளி, ஏரினால் உயர் மதன் அரசு இருந்திடும் அல்குல் தேரின் மீது—அழகினுலுயர்ந்த மன்மதன் அரசுசெய்துவீற்றிருக்கின்ற நிதம்பமாகிய இரதத்தின்மேல், அவன் எழுந்து நின்று ஒத்த சிற்றிடையாள்—அம்மன்மதன் எழுந்து நின்றாற் போன்ற சிறிய இடையையுடையவள் எ—று. (௧௪).

ஊற்றி ருந்தமு தொழுகிடு மல்குலுக் குலகின்
மேற்றி ருந்தர சிலையொடு தொடுகடல் விடுதேர்
காற்றி ரும்பசிக் கருந்திடும் கட்செவிப் படமுந்
தோற்றி ருந்தவென் றுலதற் குவமையென் சொல்வாம்.

இ—ள்: அமுது ஊற்று இருந்து ஒழுகிடும் அல்குலுக்கு—அமுதமானது ஊற்றெடுத்து ஒழுகுகின்ற (அவளது) நிதம்பத்திற்கு, உலகின் மேல் திருந்து அரசு இலையொடு—உலகத்திலிருக்கின்ற திருத்தமாகிய அரசிலையுடனே, தொடுகடல்—தோண்டப்பட்ட சமுத்திரமும், விடு தேர்—செலுத்தப்படுகின்ற தேரும், இரும் பசிக்கு காற்று அருந்திடும் கட்செவி படமும்—மிக்க பசிக்குக்காற்றையுணவாகவுண்ணுகின்ற சர்ப்பத்தின்படமும், தோற்று இருந்த என்றால்—உவமித்துச்சொல்வதற்குத்தோற்றிருந்தனவாயின், உவமை என் சொல்வாம்—வேறு யாது உவமையைககூறுவோம் (இல்லையென்பதாம்) எ—று. (௧௫).

மஞ்சஞ் சீறர வணைத்துயின் மாயவன் மணக்கு
நஞ்சஞ் சீர்விழித் திருமக ளுடொரு நயக்குங்
கஞ்சந் தோற்றிடிற் கழியனப் பெடைநடை கற்கு
மஞ்செஞ் சீறடிக் குவமைமற் றியாதெடுத் தறைவாம்.

இ—ள்: கழி பெடை அன நடை கற்கும் அம் செம் சீறடிக்கு—(அப்பெண்ணினது)நீர்க்கழிகளில் வாசஞ்செய்கின்ற பெடைஅன்னத்தின் நடையைப்பழகுகின்ற அழகிய சிவந்தசிறியபாதங்களுக்கு, சீறு அரவு மஞ்சம் என துயில் மாயவன் மணக்கும்—சீறுகின்ற சர்ப்பமேசயனமாகக்கொண்டு யோ

கரித்திரைசெய்கின்ற விஷ்ணுமூர்த்திவிவாகஞ்செய்தருளிய, நஞ்சம் சீர் விழி திருமகள் நாள்தொறும் நயக்கும் கஞ்சம் தோற்றிடில்— நஞ்சைப்பொருந்த அழகிய கண்களையுடைய இலக்குமிதேவியானவர் தினமும் விரும்புகின்ற தாமரைமலரும் தோல்வியடையின், உவமை மற்று யாது எடுத்து அறைவாம்—ஒப்பாக வேறு எதனையெடுத்துக்கூறுவோம் எ—று. (கசு)

இனைய பேரெழில் வாய்ந்திடு மிளங்கொடி தனைக்கண்
டனைய தந்தைதாய் மிகமகிழ்ந் தகமதின் முந்நூல்
புனையும் பூசுரா னொருவனுக் கிசைந்துளம் பொருந்தி
மனையி னுன்மறைச் சடங்குடன் வதுவைசெய் தளித்தார்.

இ—ள்: இனைய பேர் எழில் வாய்ந்திடும் இளம் கொடி தனை கண்டு—இவ்விதபேரழகமைந்த இளமையாகிய கொடியைநிகர்த்த அச்சௌமினியைக்கண்டு, அனைய தந்தை தாய் அகம் அதில் மிக மகிழ்ந்து— அத்தந்தையும் தாயும் மனத்தில் மிக்கசந்தோஷமடைந்து, முந்நூல் புனையும் பூசுரன் ஒருவனுக்கு— உபவீதமணிந்த ஒரு பிராமணனுக்கு, இசைந்து உளம் பொருந்தி—இசைவுகொண்டு மனஞ்சம்மதித்து, மனையில் நால் மறை சடங்குடன் வதுவை செய்து அளித்தார்—தமதில்லத்தில் சதுர்வேதமுறைப்படி நடத்தப்படுகின்ற கிரியைகளோடு விவாகஞ்செய்துகொடுத்தனர் எ—று. (சஎ)

நாம னுங்கலைப் பனவனு நளிர்மதி முகத்துப்
பூம னுங்குழற் பூவையும் புரிவொடு வைகிச்
சோம னும்புக லுரோணியுந் துவசமீ னுயர்த்த
காம னுந்துணைத் தேவியு மெனக்களித் திடுநாள்.

இ—ள்: நா மன்னும் கலை பனவனும்—நாவில் நிலையாகப்பொருந்திய சாஸ்திரங்களையுடைய அப்பிராமணனும், நளிர் மதி முகத்து பூ மன்னும் குழல் பூவையும்— குளிர்ந்த சந்திரனையொத்த முகத்தையும் புஷ்பங்களையணிந்த கூந்தலையுமுடைய அச்சௌமினியும், புரிவொடு வைகி— அன்போடிருந்து, சோமனும் புகல் உரோணியும் (என)—சந்திரனும் வியந்துகூறப்படுகின்ற ரோகிணியும்போலவும், துவச மீன் உயர்த்த காமனும் துணை தேவியும் என—மீனக்கொடியைநாட்டிய மன்மதனும் அவன்மனைவியாகிய இரதியும்போலவும், களித்திடுநாள்- கூடிக்களித்திருக்கின்றகாலத்தில் எ-று.
நாமனும் பூமனும் என்பன தொகுத்தல்விகாரங்கள். (சஅ)

புலந்து றந்துவெம் பிணிகளாற் புணர்ந்துபூ சுரனு
நிலந்து றந்துட லிறந்திட நன்மதி நீங்கிக்
குலந்து றந்திடா நீதியைக் குறித்தவள் களத்திற்
கலந்து றந்துளாள் கலங்கினள் கைமையுற் றிருந்தாள்.

இ—ள்: புலம் துறந்து வெம் பிணிகளால் புணர்ந்து—பஞ்சப்புலன்களும் உணர்வுகுன்றிக் கொடிய ரோகங்களாற் பீடிக்கப்பட்டு, பூசுர

னும் நிலம் துறந்து உடல் இறந்திட—அப்பிராமணனும் பூமியைவிட்டு உட லம்அழிந்துபட, அவள்— அச்சௌமினி, நல் மதி நீங்கி—நல்லறிவழிந்து, குலம் துறந்திடா நீதியை குறித்து— குலவொழுக்கந்தவறாதநீதியை நினைத்து, களத்தில் கலம் துறந்தனள் கலங்கினள்— கழுத்திற்பொருந்திய மங்கிலிய த்தை இழந்தவளாய்க்கலக்கமடைந்து, வைகலம் உற்று இருந்தாள்— விதவை யாகியிருந்தாள் எ—று. (கக)

வேறு.

வனவரிக் குயிலு மன்றிலும் வானில் வருநில வெழுமதிக் கொழுந்தும், தினநிரை புரக்கு மாயர்வேய்ங் குழலுந் திறம்பெற க் கறங்குசே மணியு, மனலெனக் கனலுங் காமவெந்தீயை யனில மொத் தனுதின மூட்டக், கனதனக் கிரிகள் பசலைபூத் தணையிற் கண்படை பொருந்திலள் கலங்கி.

இ—ள்: வன வரி குயிலும்— அழகிய வரிபொருந்திய குயில்களும், அன்றிலும்—அன்றிற்பட்சியும், வானில் வரு நிலவு எழும் மதி கொழுந்து ம்—ஆகாயத்தில்வருகின்ற நிலாக்கிரணத்தைவீசும் பிறைச்சந்திரனும், தின ம் நிரை புரக்கும் ஆயர் வேய் குழலும்— எந்நாளும் பசுக்களைக்காக்கின்ற இ டையர்களினது மூங்கிற்குழலோசையும், திறம் பெற கறங்கு சே மணியு ம்—உரமாய்த்தொனிக்கின்ற எருதிற்கட்டியமணியும், அனல் என கனலும் காம வெம் தீயை—அக்கினிபோலச்சுடுகின்ற காமமாகிய கொடிய நெருப் பை, அனிலம் ஒத்து அனுதினம் மூட்ட—காற்றைப்போன்று பிரதிதினமும் சொலிக்கும்படிசெய்ய, கன தனகிரிகள் பசலை பூத்து—பாரமாகிய மலைபோ ன்ற ஸ்தனங்கள் பசலைநிறத்தையடைந்து, அணையில் கண்படை பொருந்தி லள்—சயனத்தில் நித்திரையில்லாதவளாய், கலங்கி—கலக்கமடைந்து எ—று. (உ0)

கோடுவாய் கூடக் கலைவளர் திங்கட் குடைமதன் படைபடு ம் பசும்புண், ணூடுநீ டழற்கோ னுழைந்தெனத் தென்ற லுலவ நெட் டுயிர்த்துள முருகி, வாடுநூ லிடைபோ லங்கமு மெலிந்து மதனநோய் பொறுக்கரி தாகித், தேடுமா டவர்கள் பலரையுங் க ரவிற் சிந்தனை களித்திடச் சேர்ந்தாள்.

இ—ள்: கோடு வாய் கூட கலைவளர் திங்கள் குடை மதன் படை— வளைந்த நுதிபொருந்தும்படி (சோடச) கலைகளும் வளரப்பெற்ற சந்திரனாகி ய குடையையுடைய மன்மதனது புஷ்பபாணங்கள், படும் பசும் புண் ஊட டு—தைத்த பசிய புண்ணினிடத்தே, அழல் நீடு கோல் நுழைந்தென— அக் கினியிற்காய்ந்த நீண்ட (இருப்புக்) கோல்புகுந்தாற்போல, தென்றலும் உலவ—தென்றற்காற்றும்வீச, நெட்டுயிர்த்து உளம் உருகி—நெடுமூச்செறி ந்து மனமுமுருகி, வாடும் நூல் இடை போல் அங்கமும் மெலிந்து—மெலி

ந்த நூல்போன்ற இடையையொத்துச் சரீரமும்மெலிவடைந்து, மதனநோய் பொறுக்க அரிதாகி—காமநோயைத் தாங்குதற்கியலாது, தேடும் ஆடவர்கள் பலரையும்—தன்னைவிரும்பித்தேடுகின்ற ஆண்மக்கள்பலரையும், காவில் சிந்தனை களித்திட சேர்ந்தாள்— சோரமாய் மனம்மகிழும்படி சையோகித்தனள் எ—று. (உக)

மலைக்கிணை யெனப்பொற் சுணங்கலர்ந் தகன்று வட்டமிட் டெழுந் திறுமாந்த, முலைக்கிடை யிடையுந் தடித்தரி விளரி முரல்செழு முளரி போன் முகமு, மலைக்கடை யுதிக்கு மதியமொத் துடலு மந்நிற மாயமு தூறு, மிலைக்கிடை மலர்ச்செவ் வாயிதழ் வெளுப்பக் கருப்பமுற் றிருந்தன ளிப்பால்.

இ—ள்: மலைக்கு இணை என பொன் சுணங்கு அலர்ந்து— மலைக்கொப்பாகப் (பருத்துப்) பொன்னிறமான தேமல்படர்ந்து, அகன்று வட்டம் இட்டு எழுந்து இறுமாந்த— பரந்துவட்டித்து உயர்ந்துநிமிர்ந்த, முலைக்கு இடை இடையும் தடித்து—ஸ்தனபாரத்தினால் வருந்துகின்ற இடையுமகன்று, அரி விளரி முரல் செழு முளரி போல் முகமும் அலைக்கு இடை உதிக்கும் மதியம் ஒத்து—வண்டுகள் செவ்வழிப்பண்பாடுகின்ற செழுமையாகிய தாமரைமலர்போன்ற முகமும் கடலிற்றோன்றிய சந்திரனைப்போல வெண்ணிறமாய், உடலும் அந்நிறமாய்—தேகமும் அந்தவெண்ணிறமாகி, அமுது ஊறும் இலைக்கு இடை மலர் செவ்வாய் இதழ் வெளுப்ப— அமுதமூறுகின்ற இலைகளினிடையாயுள்ள மலர்போன்ற சிவந்த உதடுகள்வெளுக்க, கருப்பம் உற்று இருந்தனள்— கருப்பமடைந்திருந்தாள், இப்பால்— இதன்பின் எ—று.

கருக்கொண்டார்க்கு இக்குறிகணிகழ்தல் இயல்பாமெனக. (உஉ)

அந்நக ருறையு மறையவ ரெவரு மறிந்தன ரவட்கடிந் தகற்ற, வின்னலுற் றிரங்கித் துணைவிழிப் புனலா லிணைமுலை கனைக்குளிட் டாட்டிக், கன்னலிற் கனிந்த மொழிச்சவு மினியுங் கான்வழிச் சென்றிடுங் காலை, பின்னவர் குலத்தில் வருமொரு காளை பிறைநுத லவள்கரம் பிடித்தே.

இ—ள். அந்நகர் உறையும் மறையவர் எவரும் அறிந்தனர்—அந்நகரத்தில் வசிக்கின்ற பிராமணரெல்லாமிவள்கருக்கொண்டதையறிந்து, இவள் கடிந்து அகற்ற—இவளைக்கோபித்துத்துரத்த, இன்னல் உற்று இரங்கி—துன்புற்றுக்கலங்கி, துணை விழி புனலால் இணை முலைகளை குளிப்பாட்டி—இருகண்களினின்றுஞ்சொரியுநீரினால் இரண்டுஸ்தனங்களையும்முழுகச்செய்து, கன்னலில் கனிந்த மொழிச்சவுமினியும்— கரும்பினுமினியவசனங்களையுடையசௌமினியும், கான் வழி சென்றிடும் காலை—காட்டுவழியிற்போகும்பொழுது, பின்னவர் குலத்தில் வரும் ஒரு காளை— சூத்திரகுலத்திற்றோன்றிய ஒரு

ஆடவன், பிறை நுதல் அவள் கரம் பிடித்து—எண்ணாட்பிறைபோன்ற நெற்றியினையுடைய அவளது கையிற்பிடித்து எ—று.

ஏ அசை. மிகமனநெகிழ்ந்தழுதாளென்பார் 'விழிப்புனலாலிணைமுலைகளைக்குளிப்பாட்டி' என்றார். (உரு)

எக்குலத் துளைநீ யார்மனை பேரே தெவ்விடத் தெய்துதி யென்ன, மைக்குழற் குயிலு முற்றவா றனைத்து மற்றவற் குணர்த்திட மயல்கூர்ந், திக்குவிற் குனிக்கு மதனனுக் குடைந்தாண் டிங்கிவள் கொங்கைமேற் காதல், மிக்குனக் கினியான் பதியெனத் தனது வியன்மனை மீதுகொண் டணைந்தான்.

இ—ள்: நீ எ குலத்து உளை—நீ எக்குலத்தவள், யார் மனை—யாருடைய மனைவி, பேர் ஏது—பெயர்யாது, எவ்விடத்து எய்துதி என்ன—எவ்விடத்துக்குச்செல்கின்றனைஎன்று வினவ, மை குழல் குயிலும்—கரிய கூந்தலையுடைய சௌமினியும், உற்ற ஆறு அனைத்தும் அவற்கு உணர்த்திட-நடந்தவற்றையெல்லாம் அவனுக்குச்சொல்ல, மயல்கூர்ந்து— மயக்கமிகுந்து, இக்கு வில் குனிக்கும் மதனனுக்கு உடைந்து—கரும்பை வில்லாகவளைக்கின்ற மன்மதனுக்குத்தோற்று, ஆண்டு இவள் கொங்கை மேல் காதல் மிக்கு—அங்கே இவளது முலைகளின்மேலாசை அதிகரித்தலினால், உனக்கு இனி யான் பதி என—உனக்கு இனிமேல் நானேகணவனென்று, தனது வியன் மனை மீது கொண்டு அணைந்தான்—தனது வியக்கத்தக்க இல்லிற்கொண்டுசென்றான் எ—று.

மற்று இங்கு அசைகள். யானேஎன்னும் தேற்றேகாரந்தொக்கது. மிக்குஎன்னும்செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. குயில் ஆகுபெயர். அவளிரங்குதற்கேற்ற இங்கிதமாகக்கூறினாளென்பார் 'குயில்' என்றும், உயர்குலப்பெண்ணையிழிகுலத்தான் புணர்தலாகாதென்னுமறிவு சிறிதுமின்றி மயக்கவயத்தனானானென்பார் 'மதனனுக்குடைந்து' என்றும், இவளுக்கோரிடையூறுமின்றிக்காக்கத்தகுந்த வளப்பமுள்ள மனையென்பார் 'வியன்மனை' என்றுங்கூறினார். (உ௬)

மருவுயிர்த் திடுதண் மலர்க்குழ லணங்கு மற்றவன் றானுமா மலரிற், றிருவுயிர்த் திடுமைங் கணைக்கிழ வனுநற் றேவியு மாமெனக் கூடி, யிருவுடற் குயிரொன் றாமெனத் தழுவி யின்பமுற் றிருந்திடு நாளிற், கருவுயிர்த் தனள்பைங் காவியங் கண்ணி கணவனுந் தனதுளங் களித்தான்.

இ—ள்: மரு உயிர்த்திடும் தண் மலர் குழல் அணங்கும்—வாசனைவீசுகின்ற குளிர்ந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய சௌமினியும், அவன் தானும்—அந்தச்சூத்திரனும், மா மலரில் திரு உயிர்த்திடும் ஐங்கணை கிழ

வனும் நல் தேவியும் ஆம் என கூடி—மசத்தாகியதாமரைமலரிலிருக்கின்ற இலக்குமிபெற்ற பஞ்சபாணங்களையுடைய மன்மதனும் அவனது நல்லமனைவியாகிய ரதியும் என்றுசொல்லும்படி கலந்து, இரு உடற்கு உயிர் ஒன்று ஆம் என தழுவி இன்பம் உற்று—இரண்டு சரீரத்துக்கும் உயிரொன்றென்று கூறும்படிபுணர்ந்து இன்பமடைந்து, இருந்திடு நாளில்—இருக்கின்றகாலத்தில், பைம் காவி அம் கண்ணி—பசிய கருங்காவிமலர்போன்ற அழகிய கண்களையுடைய சௌமினி, கரு உயிர்த்தனள்—மகவைப்பெற்றாள், கணவனும் தனது உளம் களித்தான்—நாயகனும் தன்னுடையமனம் மகிழ்ச்சியடைந்தான் எ—று. (உரு)

இன்னணஞ் சிலநாட் கழித்தனன் வேற்றூர்க் கிவளுயிர்க் கணவனே குதலுங், தன்னலங் கெடுக்குங் களிமது நுகர்ந்து தமியளா யிருந்துகங் குலின்வாய், மின்னலங் தருநுண் ணிடைமடக் கொடியும் விரகவெங் தீச்சுட வெதும்பி, நன்னலங் துறந்தூ னருந்திடும் வேட்கை நனியுறத் தனியிது புரிவாள்.

இ—ள்: இவள் உயிர் கணவன்—இவளது உயிர்போன்ற நாயகன், இன்னணம் சில நாள் கழித்தனன் வேற்றூர்க்கு ஏகுதலும்—இவ்வாறு சில தினங்கள் கழித்து பிறதேசத்திற்குச்செல்ல, தன் நலம் கெடுக்கும் களி மது நுகர்ந்து—தனது ஒழுக்கத்தை அழிக்கின்ற களிப்பைத்தருதற்குரிய கள்ளைப்பருகி, தமியளாய் இருந்து—தனித்தவளாக இருந்து, கங்குலின் வாய்—இராக்காலத்தில், மின் நலம் தரு நுண் இடை மட கொடியும்—மின்னலையொத்த அழகுவாய்ந்த நுண்ணிய இடையையுடைய மடமைதங்கிய கொடிபோன்ற சௌமினியும், விரக வெம் தீ சுட வெதும்பி—காமமாகிய கொடிய அக்கினிசுடுதலினால்வாடி, நல் நலம் துறந்து—நல்லஒழுக்கத்தைவிடுத்து, ஊன் அருந்திடும் வேட்கை நனி உற—மாமிசத்தைப்புசிக்கும் ஆசை மிகவுமதிகரித்தலினால், தனி இது புரிவாள்— தனிமையாக இதனைச்செய்வாள் எ—று. (உசு)

நடைதரு கொச்சை நாகுடன் புனிற்றா னல்விளங் கன்றுறு தொழுவி, னிடைபுகுங் தருந்து மதுச்செருக் கதனு லிரங்குமா னீன்றகன் றினைக்கொன், றுடையதன் னகத்திற் கொண்டுசென் றிரவி னூனருந் திடுவதற் கெண்ணி, மிடையிருட் கடியத் தகழிநெய் வாக்கி மென்றிரி விளக்குமேற் றினளால்.

இ—ள்: நடை தரு கொச்சை நாகுடன்—நடக்கத்தகுந்த வெள்ளாட்டின் இளங்குட்டிகளும், புனிற்று ஆன் நல் இளம் கன்று உறு தொழுவின் இடை புகுந்து—ஈன்றணிமையான பசுக்களின் நல்ல இளமைபொருந்திய கன்றுகளுந்தங்கிய தொழுவத்திற்சென்று, அருந்தும் மது செருக்கு அதனால்—குடித்தகள்ளின்வெறியால், இரங்கும் ஆன் ஈன்ற கன்றினை கொண்

று—இறக்குகின்ற பசுவீன்ற (இளங்)கன்றைக்கொன்று, உடைய தன் அகத்தில் கொண்டு சென்று—தனது இல்லத்தில் அதனைக்கொண்டுபோய், இரவில் ஊன் அருந்திடுவதற்கு எண்ணி—இரவிலே மாமிசத்தைப்புசிக்கக்கருதி, மிடை இருள் கடிய தகழி நெய் வாக்கி— நெருங்கிய இருளைப்போக்குதற்குத் தகழியில்நெய்யைவார்த்து, மென் திரி விளக்கும் ஏற்றினன்— மிருதுவாகிய திரியிட்டுத் தீபத்தையேற்றினன் எ—று. (௨௭)

அவ்வயிற் செருத்ததா விளங் கன்றென் றறிந்தன னயர்ந்த
னன் மயங்கிச், செவ்வயிற் கண்ணாள் கன்னலோ ரிரண்டு சிவசி
வ வெனத்தியா னித்துப், பவ்வநீ ருலகோர் பழித்தகட் குடித்த ப
ழுதுவந் ததுவென பயந்து, வெவ்வமி லாம லூனுணத் துணிந்
தாள் யாவரே விதிவலி கடப்பார்.

இ—ள்: செவ் அயில் கண்ணாள்—சிவந்த வேல்போன்ற கண்களையுடையஅச்சவுமினி, அவ்வயின் செருத்தது ஆ இளம் கன்று என்று அறிந்தனள்—அவ்விடத்துக் கொலைசெய்யப்பட்டது பசுவினிளங்கன்றென்றுஅறிந்து, அயர்ந்தனள் மயங்கி—சோர்வடைந்துமயக்கங்கொண்டு, கன்னல் ஓரிரண்டு சிவசிவ என தியானித்து— இரண்டுநாழிகைநேரம் சிவசிவவென்று (இடையறாது) தியானஞ்செய்து, பவ்வ நீர் உலகோர் பழித்த—சமுத்திரத்தாற் சூழப்பட்ட பூமியின்கண்ணுள்ளவர்களாற் பழிக்கப்படுகின்ற, கள் குடித்த பழுது வந்தது என பயந்து—கள்ளைப்பருகியதால்வருங்குற்றம் இப்போது வந்துசம்பவித்ததென்று அஞ்சி, எவ்வம் இலாமல்—மனம்பின்னிடாமல், ஊன் உண துணிந்தாள், மாமிசத்தை உண்ணத்துணிந்தனள், யாவரே விதி வலி கடப்பார்—யார்தாமே ஊழின்வலிமையைக்கடக்கவல்லவர் எ—று. (௨௮)

புள்ளெனுங் கண்ணாள் புள்ளம தெடுத்துப் புறணிக ளுரித்
தரிந் துரிசை, யுள்ளவன் னரங்கள் வேறுவே றமைத்திட் டுவ
ப்புறக் கருணைசெய் தருந்தி, வள்ளவாய்க் கமல நாயகன் பூருவத்
திசை வரும்புல ரியின்வாய், வெள்ளெலும் பனைத்து மள்ளினள்
கொணர்ந்து வீதியிட் டிவையிசைத் திடுவாள்.

இ—ள்: புள் எனும் கண்ணாள்—வண்டையொத்த கண்களையுடைய சௌமினியானவள், புள்ளமது எடுத்து புறணிகள் உரித்து-அரிவாளையெடுத்துத் தோலையுரித்து, அரிந்து உரிசை உள்ள வன்னரங்கள் வேறுவேறு அமைத்திட்டு—வெட்டிச்சுவைகொண்ட தசைகளைவெவ்வேறாகவைத்து, உவப்புற கருணை செய்து அருந்தி—சந்தோஷமாகப் பொரியல்செய்துஉண்டு, வள்ளவாய் கமல நாயகன் பூருவத்திசை வரும் புலரியின்வாய்— கிண்ணம்போன்ற வாயையுடைய தாமரைக்குநண்பனாகியசூரியன் கீழ்த்திசையிலுதயஞ்செய்கின்ற வைகறைப்போதில், வெள் எலும்பு அனைத்தும் அள்ளினள் கொணர்ந்து—வெள்ளியஎலும்புகள்யாவற்றையும் அள்ளிக்கொண்டுவந்து, வீதி இ

ட்டு இவை இசைத்திடுவாள்—தெருவீதியிற்போட்டு இவ்வாறு கூறுவாள் எ—று. (உக)

வெய்யதீச் சுழல்கட் கொடுவரி வடிவால் மென்குழக் கன்றி னை யொறுத்தின், றையகோ இன்று போயது மறுகி லனைவருங் காண்மினென் றெறிந்து, தையன்மீண் டிற்பா லெய்தினள் வே ளாண் டகைபெறு காளைகேட் டெய்திச், செய்யவாய் மையினீ பி ழைத்தனை போலு மெனவவட் டேற்றின னிருந்தான்.

இ—ள்: ஐயகோ—ஐயோ, வெய்ய தீ சுழல் கண் கொடுவரி—கொடிய அக்கினிப்பொறியையொத்த சுழலுகின்றகண்களையுடைய புலியானது, வடி வால் மென் குழ கன்றினை ஒறுத்து இன்று நின்று போயது—கூரியவாலையுடைய மிருதுவாகிய இளங்கன்றைவருத்தி இன்றுகொலைசெய்து நின்றுபோய்விட்டது, அனைவரும் காண்மின் என்று மறுகில் எறிந்து—அனைவருங்காணக்கடவீரென்று வீதியிலெறிந்து, தையல் மீண்டு இல்பால் எய்தினள்—அப்பெண்ணானவள் திரும்பித் தனதுவீட்டையடைந்தனள், வேளாண் தகை பெறு காளை கேட்டு எய்தி—வேளாளனாகிய தகுதிபொருந்திய நாயகன் அதனைக்கேட்டு வந்து, செய்ய வாய்மையில் நீ பிழைத்தனை என—சிறந்தஉண்மைநிலையினின்றும் நீ தவறினாய் என்று, அவள் தேற்றினன் இருந்தான்—அவளது மனத்தைத்தேற்றிக்கொண்டிருந்தான் எ—று.

போலும்-அசை. (௩0)

வெறுத்தன னிகவா னங்கவள் கொங்கை விழைநல வேட்கை மீ தூர்ந்திட்,டிறுத்தபே ரன்பா லன்றுபோ லென்று மின்பமுற் றிருந்திடு நாளிற், கறுத்துவல் விடத்தை நிகர்த்தவெம் பிணிகள் காயமீ துடற்றிடத் தேம்பி, மறுத்தவிர் மதியை மருட்டுவாண் முகத்தாள் வருந்தினண் மரணமுற் றனளே.

இ—ள்: வெறித்தனன் இகவான்—அவளை வெறுத்துநீக்காதவனாய் அவள் கொங்கை விழை நல வேட்கை மீதூர்ந்திட்டு—அவளது ஸ்தனத்தை விரும்புகின்ற ஆசைப்பெருக்கம் அதிகரித்து, இறுத்த பேர் அன்பால்—பொருந்திய பெரியஅன்பினால், அன்று போல் என்றும் இன்பமுற்று இருந்திடும் நாளில்—அற்றைநாட்போல எந்நாளும் இன்பமனுபவித்திருக்குங்காலத்தில், கறுத்த வல் விடத்தை நிகர்த்த வெம் பிணிகள்—கரிய வலியநஞ்சையொத்த கொடியநோய்களானவை, காயமீது உடற்றிட தேம்பி—சரீரத்தை வருத்துதலினாற்கலங்கி, மறு தவிர் மதியை மருட்டு வாண்முகத்தாள்—களங்கமற்ற சந்திரனையும் மருளச்செய்கின்ற ஒளிகொண்டமுகத்தலையுடைய அச்சௌமினியானவள், வருந்தினள் மரணம் உற்றனள்—துன்புற்று இறந்தாள் எ—று.

ஏ—அசை. (௩௧)

வேறு.

அச்சமை யத்தினி லடர்ந்து வாரியிற்
கைச்சமைக் கடுநிகர் கால தூதுவர்
பொய்ச்சமை மின்னிடைப் பூவை மென்மொழி
மச்சமை விழியுயிர் வெளவி யேகினார்.

இ—ள்: அ சமையத்தில்—அந்தச்சமையத்தில், வாரியில் கைத்த மை கடு நிகர் கால தூதுவர்—சமுத்திரத்திற்றோன்றிய கைப்புள்ள கரிய நஞ்சையொத்த யமதூதுவர்கள், அடர்ந்து—நெருங்கிவந்து, பொய்த்தமை மின் இடை—நுண்மையான மேகத்தினின்றுந்தோன்றுகின்ற மின்னலையொத்த இடையையும், பூவை மென் மொழி—நாகணவாய்போன்ற மிருதுவாகிய சொல்லையும், மற்சம் மை விழி-கயல்மீன்போன்ற மைதீட்டிய கண்களையுமுடைய சௌமினியினது, உயிர் வெளவி ஏகினார்— ஆன்மாவைக்கவர்ந்துசென்றனர் எ—று.

கைத்த-கைச்ச எனவும், பொய்த்த பொச்ச எனவும், மற்சம் மச்சம் எனவும் விகாரமாயின்றன. (கூஉ)

நந்தலி றென்புல நண்ணி நண்ணரும்
வெந்திறற் கூற்றின்முன் விடுப்ப நான்முகத்
தந்தமி றீவினை யனைத்து மாய்ந்துபின்
பைந்தொடி முகத்தினைப் பார்த்துக் கூறுவான்.

இ—ள்: நந்தல் இல் தென் புலம் நண்ணி—கெடுதலில்லாத யமபுரத்தையடைந்து, நண்ணரும் வெம் திறல் கூற்றின் முன் விடுப்ப—அடைதற்கரிய கொடிய வலிமையையுடைய யமனுக்கு முன்னேகொண்டுபோய்விடுக்க, நான் முகத்து அந்தம் இல் தீ வினை அனைத்தும் ஆய்ந்து—நாலறிவினால் அவள்செய்த அளவற்ற தீச்செயல்களெல்லாவற்றையும் அவனாராய்ந்து, பின் பைந்தொடி முகத்தினைப் பார்த்து கூறுவான்—பின்பு பசிய வளையலையணிந்த அச்சௌமினியின் முகத்தைப்பார்த்துச்சொல்லுவான் எ—று. ()

அன்றிருட் பொழுதினி லானின் கன்றினைக்
கொன்றிருந் தரன்றிரு நாமங் கூறிய
நன்றியிற் கொடுந்தழ னரகந் துய்த்திடு
மொன்றிய தீவினைக் குரிய ளல்லைநீ.

இ—ள்: அன்று இருள் பொழுதினில் ஆனின் கன்றினை கொன்று-முன்னொருநாளிரவிற் பசுவின்கன்றைக்கொலைபுரிந்து, இருந்து அரன் திரு நாமம் கூறிய நன்றியில்— (இரண்டுநாழிகைநேரம்) இருந்து ஈசனுடைய திருநாமத்தைச்சொல்லிய நன்மையினால், கொடும் தழல் நரகம் துய்

த்திலும் ஒன்றிய தீவினைக்கு— கொடியஅக்கினியையொத்த நரகத்தையனு பவித்தற்கேற்ற தீமைக்கு, நீ உரியள் அல்லை— நீ உரித்துடையையல்லை எ—று. (ருச)

சிலைமக ளாக்கிய தேவன் பின்வரு
மலைமகட் குடலிடம் வழங்கி வானதி
யலைமகட் சூடினே னருளிற் கூறினன்
புலைமக ளாய்ப்புவி போதி நீயென்றே.

இ—ள்: சிலை மகள் ஆக்கிய தேவன் பின்வரும்— (கௌதமமுனிவன் சாபத்தினால்) கருங்கல்லாகவிருந்த அகலிகையைப் பழைய பெண்ணுருவடைந்து வரும்படிசெய்த (இராமாவதாரமாகிய) விஷ்ணுவுக்கு பின்தோன்றிய, மலைமகட்கு உடல் இடம் வழங்கி— மலையரசன்புத்திரியாகிய உமாதேவியாருக்கு வாமபாகத்தைக்கொடுத்தது, வான்நதி அலைமகள் சூடினோன்— தேவகங்கையாகிய அலைபொருந்திய பெண்ணைத திருமுடியிற்சூடியசிவபெருமானது, அருளில்-அனுக்கிரகத்தால், புலைமகளாய் புவி போதி நீ என்று கூறினன்—புலைப்பெண்ணாகிப் பூமியிற்பிறக்கக்கடவையென்றுகூறினன் (யமன்) எ—று. (ருரு)

அந்தக னாணையா லழகின் மேனியு
நொந்துடல் பொறுக்கொணு நோய்க ளுங்கொடு
கந்தமார் குவளைநேர் கண்க ளின்றியே
வந்தொரு புலைமகள் வயிற்றிற் றேன்றினுள்.

இ—ள்: அந்தகன் ஆணையால்—யமனது ஆஞ்ஞையினாலே, அழகு இல் மேனியும்-அழகில்லாதசரீரத்தையும், நொந்து உடல் பொறுக்கொணு நோய்களும் கொடு — வருந்தி உடம்புஞ் சகிக்கலாற்ருததுன்பங்களையும் பொருந்தி, கந்தம் ஆர் குவளை நேர் கண்கள் இன்றி—வாசனைநிறைந்த கருங்குவளைமலர்போன்ற கண்களுமில்லாமல், ஒரு புலைமகள் வயிற்றில வந்து தோன்றினாள்—ஒருபுலைமாதின்வயிற்றில்வந்து பிறந்தாள் எ—று.

ஏ அசை. ருசு)

அறந்தவாத் துறவிர்கா ளணங்கு நோயுடன்
சிறந்தவாட் படைநிகர் திருட்டி யின்றியே
மறம்புரி புலையர்தங் குலத்தில் வந்தவள்
பிறந்தகா ரணமினிப் பேசக் கேட்டிரால்.

இ—ள்: அறம் தவா துறவிர்காள்—தரும வொழுக்கங்கெடாத முனிவர்களே!, அணங்கு நோயுடன் சிறந்த வாட்படை நிகர் திருட்டி இன்றி—வருத்துகின்ற நோய்களோடு அழகிய வாட்படைபோன்ற கண்களுமில்லாமல், மறம்புரி புலையர்தம் குலத்தில் வந்து— கொடுந்தொழிலைச் செய்கின்ற பு

லையர்வம்சத்தில்வந்து, அவள் பிறந்த காரணம் இனி பேச கேட்டீர்—அவள்பிறத்தற்கு சேர்ந்தகாரணத்தை இனிக்கூறுவேன் கேட்கக்கடவீர் எ—று.

ஆல் ஏ அசைகள். (கஎ)

உம்மையிற் கற்பொரீஇ யுளத்த வாக்கொடு
கைம்மையிற் பலரையும் கலந்த தீமையாற்
செம்மையின் மேனியிற் றீய குட்டமும்
வெம்மைகொள் சூலைநோய் முதல்வி யாதியும்.

இ—ள்: உம்மை இல் கற்பு ஒரீஇ—முற்பிறப்பிலே கற்புநெறிதவறி, உளத்து ஆவா கொடு—மனத்திலாசைகொண்டு, கைம்மையிற் பலரையும் கலந்த தீமையால்—விதவையாகவிருந்து பலரோடுஞ்சையோகித்த தீமையினுல், செம்மை இல் மேனியில் தீயகுட்டமும்— அழகற்றசரீரத்தில் கொடியகுட்டநோயும், வெம்மைகொள் சூலைநோய்முதல் வியாதியும்— கொடிய சூலைநோய்முதலியரோகங்களும் எ—று. (கஅ)

பெற்றன ளவளொரு பிடிய தாயினு
மற்றவர் பசிக்கன லவிக்க விட்டுணுக்
குற்றம தாற்பசிக் கொடுமை கூர்துய
ருற்றவ டேம்பிடு முடலந் தாங்கினுள்.

இ—ள்: பெற்றனள்—அடைந்தாள், அவள் ஒரு பிடியது ஆயினும்—அவள ஒருபிடி அன்னத்தையாயினும், அற்றவர் பசி கனல் அவிகக இட்டு உணு குறறமதால்—யாசகர்களது பசியாகிய அக்கினியைத் தணித்தற்குக்கொடுத்துண்ணுத குற்றத்தினுல், பசி கொடுமை கூர்துயர் உற்று—கொடுமைமிகுந்த பசித்துன்பத்தையடைந்து, அவள் தேம்பிடும் உடலம் தாங்கினுள்—அவள் மெலிந்தசரீரத்தைக் கொண்டுபிறந்தாள் எ—று. (கக)

பலத்தினை மிகுத்தரும் பசுவின் கன்றினை
வலத்தினிற் செகுத்துவள் ளூனங்கள் மாந்தலா
னிலத்தினிற் புன்றொழி னீச ரென்றிடுங்
குலத்தினிற் றேன்றினள் கொடிய நீர்மையாள்.

இ—ள்: பலத்தினை மிக தரும் பசுவின் கன்றினை—அநேகநன்மைகளைக்கொடுக்கின்ற பசுவின்கன்றை, வலத்தினில் செகுத்து வள்ளூனங்கள் மாந்தலால்— வலிமையோடு கொன்ற மாமிசத்தைப் புசித்தமையால், கொடிய நீர்மையாள்—கொடுங்குணத்தையுடைய அச்சௌமினியானவள், நிலத்தில் புன்தொழில் நீசர் என்றிடும் குலத்தினில் தோன்றினள்—பூமியின்கண்ணே எளியதொழிலையுடையநீசர்களென்றுகூறப்படுகின்ற புலையர்குலத்தில்வந்துபிறந்தாள் எ—று. (உ0)

எண்ணுநல் வினையினை யிகந்து தீவினை
பண்ணிட வியற்றுகட் குடித்த பான்மையாற்
கண்ணிணை யின்றிமைக் கடலு டுத்திடு
மண்ணின்மேற் றோன்றிமெய் வருந்தி னளரோ.

இ—ள்: எண்ணு நல்வினையினை இகந்து—மதிக்கப்படுகின்ற சற்கிரியைகளெல்லாவற்றையும விட்டு, தீவினை பண்ணிட இயற்று கள் குடித்த பான்மையால்— தீமைகளைச்செய்யும்படி ஏவுகின்ற கள்ளைபருகியதன்மையால், கண் இணை இன்றி—கண்களிரண்டுமில்லாமல், மை கடல் உடுத்திடும மண்ணின் மேல் தோன்றி—கரிய சமுத்திரத்தையாடையாகவுடைய பூமியின்மேற்பிறந்து, மெய் வருந்தினள்--சரீரம்வருந்தப்பெற்றாள் எ—று. அரோ—அசை. (௬௧)

வேறு.

இனைய நீர்மைய ளின்றதாய் தந்தைய ரிறப்ப
மனையெ னத்தனை மணந்துகொள் வார்களு மின்றி
யனைய வூர்ப்புலைச் சேரியி னையமேற் றருந்தித்
தினையி னோர்நல னின்றிநல் குரவொடு திரிந்தாள்.

இ—ள் இனைய நீர்மையள்— இத்தன்மைகளையுடைய அப்புலைமகள், ஈன்ற தாய் தந்தையர் இறப்ப— தன்னைப்பெற்ற தாய்தந்தையர்களிறந்துபட, மனை என தனை மணந்து கொளவார்களும் இன்றி—மனைவியாகத்தன்னை விவாகஞ்செய்பவர்களுமிலலாமல், அனைய ஊர் புலை சேரியின்—அவ்வூரின்கணுள்ள புலைச்சேரியில், ஐயம் ஏற்று அருந்தி— பிச்சையெடுத்துண்டு, தினையின் ஓர் நலன் இன்றி—தினையளவாயினும் ஒருநன்மையுமில்லாமல, நல்குரவொடு திரிந்தாள்—வறுமையோடுதிரிந்தாள் எ—று. (௬௨)

திரைமு திர்ந்தொர்மாத் திரையுநித் திரையிலாள் களத்த
மரைமு திர்ந்திடக் குரைத்திட வளைந்துமெய் கூனி
யுரைமு திர்ந்தவ ருவமமிட் டுரைத்தகொக் கொப்பா
நரைமு திர்ந்துநல் லிளமைபோய் முதுமைநண் ணியபின்.

இ—ள்: திரை முதிர்ந்து— தேகமானது திரைப்புகொண்டு, ஓர் மாத்திரையும் நித்திரை இலாள்—ஒருமாத்திரைப்பொழுதாயினும் நித்திரையில்லாதவளாய், களத்து அமர் ஐ முதிர்ந்திட—கண்டத்திற்பொருந்திய சேடமதிகரிக்க, குரைத்திட மெய் வளைந்து கூனி—இரைப்புண்டாகச் சரீரம் வளைந்துகூனி, உரை முதிர்ந்தவர் உவமம் இட்டு உரைத்த கொக்கு ஒப்பா நரை முதிர்ந்து—கல்வியால்மேம்பட்டவர்கள் உவமித்துக்கூறிய கொக்குக்குச் சமானமாய் நரைமுதிர்ச்சிகொண்டு, நல் இளமை போய் முதுமை நண்ணிய பின்—நல்ல இளமைப்பருவம்நீங்கி வயோதிகப்பருவம்வந்தபின்னர் எ—று.()

சொன்ன மாகநற் சிவநிசி நோற்றிடத் தொடங்கி
யன்ன மாநகர்ச் சனஞ்செல வறிந்தவர் கூடப்
பின்ன மன்றிமற் றொருபுலை மடந்தைதோள் பிடித்துக்
கன்ன லார்வய றுன்னுகோ கன்னமீ தடைந்தாள்.

இ—ள்: சொன்ன நல் மாக சிவநிசி நோற்றிட தொடங்கி— சொல்லப்பட்ட நல்ல மாசிமாதச்சிவராத்திரிவிரதத்தை அனுஷ்டிக்கத்தொடங்கி, அன்ன மா நகர் சனம் செல அறிந்து—அப்பெரிய நகரத்திலுள்ள மனுடர்கள் செல்வதையறிந்து, அவர் கூட பின்னம் அன்றி—அவர்களோடுகூட வேறுபாடில்லாமல், மற்றொரு புலை மடந்தை தோள் பிடித்து—வேறோர்புலைப்பெண்ணின் தோளிற்பிடித்து, கன்னல் ஆர் வயல் துன்னும் கோகன்னமீது அடைந்தாள்—கரும்புகள்நிறைந்த வயல்கள்நெருங்கிய திருக்கோகர்ணத்தையடைந்தாள் எ—று. (சச)

தீய வெம்பசி கனற்றவோர் தெருத்தனி லிருந்து
தூய கண்ணிலேற் குதவுமின் சோறெனை யிரந்து
கூய போதிலம் மறுகிடைக் குறுகுமோர் களிய
னாய வில்வநிற் குணவிதென் றவள்கரத் தளித்தான்.

இ—ள்: தீய வெம் பசி கனற்ற— அக்கினிபோன்ற கொடியபசியானது அழற்ற, ஓர் தெருத்தனில் இருந்து-ஒரு வீதியின்கணிருந்து, தூய கண்ணிலேற்கு உதவுமின் சோறெனை இரந்து கூய போதில்— சுத்தமாகிய கண்ணில்லாத எனக்குச் சோறுகொடுங்களென்று யாசித்துக்கூவுஞ் சமயத்தில், அ மறுகிடை குறுகும் ஓர் களியன்—அத்தெருவின்கண்ணேவந்த களிக்குமியல்பையுடைய ஒருவன், ஆய வில்வம்—வைத்திருந்தவில்வத்தை, நிற்கு உணவு இது என்று அவள் கரத்து அளித்தான்—உனக்கு உணவு இதுவாமென்று அவளதுகையிற்கொடுத்தான் எ—று. (சரு)

புன்மை யாலவ னிட்டகூ விளைதனைப் புசித்தற்
கன்மை யாலய லெறிந்தன ளாங்கது பழைய
தின்மை யாகிய சிவலிங்க நாயகன் றலையிற்
றின்மை தீர்ப்பவர் சாத்திய தழையெனச் சிறந்த.

இ—ள்: புன்மையால் அவனிட்ட கூவிளைதனை—புல்லறிவுகொண்டு அவன்கொடுத்த வில்வத்தை, புசித்தற்கு அன்மையால் அயல் எறிந்தனள்—உண்ணுதற்குத்தக்கதல்லாமையால் பக்கத்தில் எறிந்தாள், ஆங்கு அது—அவ்விடத்து அவ்வில்வபத்திரமானது, பழைய தன்மை ஆகிய சிவலிங்க நாயகன் தலையில்—பூர்வீகத்தில்ஸ்தாபிக்கப்பட்டசிவலிங்கப்பெருமானது திருமுடியில், தின்மை தீர்ப்பவர் சாத்திய தழை என—தீமைகளையெல்லாமொழிக்குமியல்பையுடைய மேலோர்களினால் சாத்தப்பட்ட பத்திரம்போல, சிறந்த—சிறப்படைந்தது எ—று. (சசு)

அற்றை நாட்சிவ ராத்திரி யனந்தலூ ணகற்றிப்
பற்றை நேர்கரப் பரையொரு பாகமாம் பரமன்
கற்றை வார்சடை முடியெறி கவின்கொள் வில்வத்தாற்
பிற்றை நாட்சிவ பூசனை புரிபலன் பெறுவாள்.

இ—ள்: அற்றை நாள் சிவராத்திரி அனந்தல் ஊண் அகற்றி—அந்தச்சிவராத்திரிதினத்திலே நித்திரையையும் உணவையும்நீக்கி, பற்றை நேர் கர பரை ஒரு பாகமாம் பரமன்—செங்காந்தண்மலர்போன்ற கைகளையுடைய உமாதேவியாரை வாமபாகத்திற்கொண்டருளியசிவபெருமானது, கற்றை வார் சடை முடி எறி கவின் கொள் வில்வத்தால்— கூட்டமாகிய நீண்ட சடைமுடியியெறிந்த அழகிய வில்வபத்திரத்தினால், பிற்றை நாள்—பின்னைக்காலத்திலே, சிவபூசனை புரி பலன் பெறுவாள்—சிவபூசைசெய்ததனாலடையும்பலனைப் பெறுபவளானாள் எ—று. (௪௭)

யாம நான்குமன் றிரவுபத் துகமென வெண்ணித்
தூம மாரமுற் பசியினாற் றுயின்றில ளிருந்தாள்
சேம மார்தடந் தேர்கடி தருணன்முன் செலுத்தக்
காமர் செங்கதிர்க் கடவுளுங் குணபுலத் துதித்தான்.

இ—ள்: யாமம் நான்கும் அன்று இரவு பத்து உகம் என எண்ணி—அந்த இரவின் நான்குசாமங்களையும் பத்துயுகம்போலநினைத்து, தூமம் ஆர் அழல் பசியினால்—புகைபொருந்திய அக்கினியையொத்த பசியினாலே, துயின்றிலள் இருந்தாள்—நித்திரைசெய்யாதவளாயிருந்தாள், சேமம் ஆர் தடம் தேர் கடிது அருணன் முன் செலுத்த—காவல்நிறைந்த விசாலமாகிய இரதத்தை (தேர்ப்பாகனாகிய) அருணன் விரைவாக முன்னேசெலுத்த, காமர் செம் கதிர் கடவுளும்— அழகிய சிவந்த கிரணங்களையுடைய சூரியனும், குண புலத்து உதித்தான்— கீழ்த்திசையிலுதயஞ்செய்தான் எ—று. (௪௮)

விடியல் காண்டலு மீண்டொரு தெருத்தலை மேவி
யடிசி லேற்பமற் றப்புலை யரிவைதோள் பற்றி
நெடிது சேறலுங் காறளர்ந் துயிர்நிலை நீங்க
மிடிசெய் மூப்புவெந் நோய்பசி வருத்திட வீழ்ந்தாள்.

இ—ள்: விடியல் காண்டலும்—விடிதலைக்கண்டவுடன், மீண்டு ஒரு தெருத்தலை மேவி—பின்னர் வேறொருவீதியிற்சென்று, அடிசில் ஏற்ப—சோற்றை யாசிக்கும்படி, அப்புலை அரிவை தோள் பற்றி நெடிது சேறலும்—அப்புலைப்பெண்ணினது தோளைப்பிடித்துக்கொண்டு நெடுந்தூரம் நடந்துசெல்லவும், கால் தளர்ந்து உயிர் நிலை நீங்க—கால்கள் சோர்வடைந்து உயிரும் நிலைகலங்க, மிடிசெய் மூப்பு வெம் நோய் பசி வருத்திட— துன்பத்தைச்செய்கின்ற முதுமையும் கொடியநோயும் பசியும் வருத்துதலினால், வீழ்ந்தாள்—கீழேவிழுந்தாள் எ—று. மற்று அசை. (௪௯)

ஆதபத்தழல் கொளுத்திய நிலத்தில்வீழ்ந் தழுந்தி
யேதமுற்றவள் பட்ட வெந் துயரள விலைப்பின்
பாதகப்புலை மகளுட றணந்துயிர் பறிந்து
போதலுற்றிடத் தொடங்கியே புறப்படும் போதில்.

இ—ள்: ஆதப தழல் கொளுத்திய நிலத்தில் வீழ்ந்து அழுந்தி—வெயிலாகிய அக்கினிபற்றியநிலத்தில்விழுந்துவருந்தி, ஏதம் உற்றவள் பட்ட வெம் துயர் அளவிலை—குற்றமுடைய அப்புலைப்பெண்ணானவள் அனுபவித்ததுன்பத்திற்கு எல்லையில்லை, பின்—பின்னர், பாதக புலைமகள் உடல் தணந்து—பாவியாகிய அப்புலைப்பெண்ணினது உடலைவிட்டு, உயிர் பறிந்து போதலுற்றிட தொடங்கியே புறப்படும்போதில்—உயிரானது பிரிந்துபோகத்தொடங்கி நீங்குஞ்சமயத்தில் எ—று. (ரு0)

பணிப்பணிப்புயக் கணிச்சியம் படைப்பர னருளா
லெண்ணிக் கணிக்கருங் கணங்களை யேவிநீர் மேவிக்
குணிக்கரும்புலை மகளுயிர் கொணர்மினென் றுரைப்ப
மணிச்செழுஞ்சுடர் விமானமோ டிம்பரின் வந்தார்.

இ—ள்: பணி பணி புய கணிச்சியம்படை பரன் அருளால்— சர்ப்பங்களையாபரணமாகவணிந்த புயங்கள்பொருந்திய மழுப்படையையுடைய சிவபெருமானது அனுக்கிரகத்தால், எண்ணி கணிக்க அரும் கணங்களை ஏவி—எண்ணிக்கணக்கிடவியலாத கணத்தவர்களையேவி, நீர் மேவி—நீங்கள்சென்று, குணிக்க அரும் புலைமகள் உயிர் கொணர்மின் என்று உரைப்ப— மதித்தற்கரிய அப்புலைப்பெண்ணினது ஆன்மாவைக் கொண்டுவாருங்களென்று( [illegible] )ஆஞ்ஞாபிக்க, மணி செழும் சுடர் விமானமோடு— இரத்தினகசிதமாகிய அழகிய ஒளிவீசுகின்ற இரதத்தோடு, இம்பரின் வந்தார்—இப் பூமியின்கண்ணேவந்தனர் எ—று. எண்ணி கணிக்க குணிக்க என்பன தொகுத்தல்விகாரங்கள். (ருக)

அன்ன காலையிற் புலைமக ளாவியைப் பொலமென்
றுன்ன வேவருந் திவ்விய வுருவினிற் சேர்த்துக்
கின்னராதியர் பாடிடக் கிளிமொழித் துவர்வாய்ச்
சின்ன நூலிடை யரம்பையர் நடம்பயில் செய்ய.

இ—ள்: அன்ன காலையில் புலைமகள் ஆவியை—அச்சமையத்தில் அப்புலைப்பெண்ணினது உயிரை, பொலம் என்று உன்ன வரும் திவ்விய உருவினில் சேர்த்து-பொன்னென்றுநினைக்கத்தக்கதாய்வருகின்றதிவ்வியமாகிய ஒருசரீரத்திற்புகுத்தி, கின்னராதியர் பாடிட— கின்னரர் முதலாயினோர்கீதங்களைப்பாடவும், கிளி மொழி துவர் வாய் சின்ன நூல் இடை அரம்பையர் நடம் பயில் செய்ய—கிளிபோன்ற இனியசொற்களையும் பவளம்போன்ற வாயையும் மெல்லிய நூல்போன்றஇடையையுமுடைய தேவப்பெண்கள் நடனத்தையும் அபிநயத்தையுஞ்செய்பவும் எ—று. ஏ—அசை. (ருஉ)

தக்க துந்துபி முழங்கிடச் சாமர மிரட்ட
வக்க ணத்தினி லவிர்மணித் தேர்மிசை யேற்றித்
தொக்க வெண்ணிறச் சோதிவிட் டொப்பறத் துலங்கு
மிக்க பேரெழிற் கயிலையிற் செல்லுவான் விரைந்தார்.

இ—ள்: தக்க துந்துபி முழங்கிட—தகுதியாகிய தேவதுந்துபியாரவாரிக்கவும், சாமரம் இரட்ட—சாமரங்களசைக்கவும், அ கணத்தினில் அவிர் மணி தேர் மிசை ஏற்றி—அச்சமையத்தில் விளங்குகின்ற இரத்தினகசிதமாகிய இரதத்தின்மேலேற்றி, தொக்க வெள் நிற சோதி விட்டு—தொகுதியாகிய வெள்ளிய பிரபையைப்பரப்பி, ஒப்பு அற துலங்கும் மிக்க பேர் எழில் கயிலையில்—உவமையில்லாமல் விளங்குகின்ற பேரழகுபொருந்திய கயிலாசமலையில், செல்லுவான் விரைந்தார்—விரைவாகச்சென்றனர் எ—று.()

கண்ண னாயிரங் கண்ணனெண் கண்ணனற் கதிர்க
டண்ணெ னாண்மதிக் கடவுளுஞ் சலசநட் புடைய
வண்ண வான்கதிர் வானவர் முனிவர ருரகர்
விண்ணு லாவிய சித்தரோ டியக்கர்விஞ் சையர்கள்.

இ—ள்: கண்ணன்—மாயவனும், ஆயிரங்கண்ணன்—இந்திரனும், எண்கண்ணன்—பிரமனும், நல் கதிர்கள் தண் என் நாள் மதி கடவுளும்—நல்ல குளிர்ந்த கிரணங்களையுடைய ஒளிபொருந்திய சந்திரனும், சலச நட்பு உடைய வண்ண வான் கதிர்—தாமரைக்குநண்பனாகிய அழகிய சிறந்தகிரணங்களையுடைய சூரியனும், வானவர்—தேவர்களும், முனிவரர்—முனிவர்களும், உரகர்—நாகர்களும், விண் உலாவிய சித்தரோடு—ஆகாயசஞ்சாரிகளாகிய சித்தர்களுடனே, இயக்கர்—யக்ஷர்களும், விஞ்சையர்கள்—விஞ்சையர்களும் எ—று. (ருச)

பரிந்து போற்றிநின் றவர்க்கெலா மருள்விழி பரப்பி
வரிந்த நீள்குரல் மாடகத் திவவியாழ் வாங்கிப்
புரிந்த வார்சடை நாரதன் புகலருஞ் சுருதி
தெரிந்து பாடிய பாடலிற் செவித்துணை கொடுத்து.

இ—ள்: பரிந்து போற்றி நின்றவர்க்கு எலாம் அருள் விழி பரப்பி—அன்புகொண்டு ஸ்தோத்திரஞ்செய்துநின்ற யாவருக்கும் கிருபாநோக்கஞ்செய்தருளி, வரிந்த மாடக திவவு நீள் குரல் யாழ் வாங்கி—முறுக்காணிகளில் (நரம்புகள்) வரிந்துகட்டப்பட்ட நீண்டதொனியையுடைய யாழையெடுத்து, புரிந்த வார் சடை நாரதன்—முறுகிய நீண்டசடையையுடைய நாரதமுனிவர், புகல் அரும் சுருதி தெரிந்து பாடிய பாடலில—சொல்லுதற்கரிய பண்களை ஆராய்ந்து பாடிய பாடல்களில், செவி துணை கொடுத்து—இருசெவிகளையுஞ்சாய்த்து எ—று. (ருரு)

கையின் மான்மழுப் பிறங்கிடக் கனற்பிழம் பனைய
மெய்யி னீற்றொளி விளங்கிட விடநுகர்ந் திருண்ட
மையி னிற்றிகழ் கண்டமும் வண்டுபாண் மிழற்றச்
செய்யி னாறுசெங் கமலநேர் வதனமுந் திகழ.

இ—ள்: கையில் மான் மழு பிறங்கிட— திருக்கரங்களின்கண்ணே மானும் மழுவும் பிரகாசிக்கவும், கனல் பிழம்பு அனைய மெய்யில் நீற்று ஒளி விளங்கிட—அக்கினிப்பிழம்புபோன்ற சிவந்ததிருமேனியில் விபூதியின் ஒளிபிரகாசிக்கவும், விட நுகர்ந்து இருண்ட மையினில் திகழ் கண்டமும்—நஞ்சையுண்டதனால் இருண்டு கறுத்துப்பிரகாசிக்கின்ற கண்டமும், வண்டு பாண் மிழற்ற—வண்டுகளிசையைப்பாட, செய்யில் நாறு செம் கமல நேர் வதனமும் திகழ—வயல்களின்கண்ணே பரிமளம்வீசுகின்ற தாமரைமலர்போன்ற முகமும் பிரகாசிக்கவும் எ—று. (ருசு)

படரு மென்கொடி யறுகிலைப் பசுமையாற் பொறிப்பை
விடநெ டும்பணிச் சுடிகையிற் றிகழ்மணி வெயிலா
லடர்ந டந்திரைக் கங்கையா லணிசடா டவியிற்
றொடருஞ் சந்திர னிந்திர சிலையெனத் தோன்ற.

இ—ள்: படரும் மென் கொடி அறுகு இலை பசுமையால்— படருகின்ற மெல்லிய கொடியையுடைய அறுகினிலையின் பச்சைநிறத்தினாலும், பொறி பை விட நெடும் பணி சுடிகையின் திகழ்மணி வெயிலால்— புள்ளிபொருந்திய படத்தையும் நஞ்சையுங்கொண்ட நீண்ட சர்ப்பங்களின்சிரசில் விளங்குகின்ற இரத்தினங்களின் (சிவந்த) ஒளியினாலும், அடர் தடம் திரை கங்கையால்—நெருங்கிய விசாலித்த திரைகளையுடைய கங்காநதியினாலும், அணி சடாடவியில் தொடருஞ் சந்திரன்—அழகிய சடைக்காட்டில் சஞ்சரிக்கின்ற பிறைச்சந்திரன், இந்திர சிலை என தோன்ற— வானவில்லையொத்துவிளங்கவும் எ—று. (ருஎ)

உழலை சேர்பவ வெயிற்கொதுங் கிடத்தன துபய
கழலை நீழலா யடியவர்க் கருள்புரி கந்தன்
குழலை யாழினை யமுதினைக் குழைத்தன குதலை
மழலை கேட்டுள மகிழ்ந்திடு வாணகை வயங்க.

இ—ள்: உழலை சேர் பவ வெயிற்கு ஒதுங்கிட— அலைதலைக்கொண்ட பிறவியாகியவெயிலுக்குஒதுங்கும்படி, தனது உபய கழலை-தமது இரண்டு திருப்பாதங்களையும், நீழலாய் அடியவர்க்கு அருள் புரி கந்தன்— நிழலாக அடியவர்களுக்கு ஈந்தருளுகின்ற குமாரக்கடவுளது, குழலை யாழினை அமுதினை குழைத்தன குதலை மழலை கேட்டு—வேய்க்குழலினோசையையும் யாழினிசையையும் அமுதத்தையும் ஒன்றாகக்குழைத்தாற்போன்ற நிரம்பா

வார்த்தையாகிய மழலைச்சொற்களைக்கேட்டு, உளம் மகிழ்ந்திடும் வாள் நகை வயங்க— மனமகிழ்ச்சிகொள்ளுதலாலுண்டாகிய ஒளிபொருந்திய புன்னகைவிளங்கவும் எ—று. (ருஅ)

கலக வாள்விழி யரம்பையர் கவரிகா லசைப்ப
வுலகி லாருயி ரனைத்தையும் பெற்றசிற் றுதரத்
திலக வாணுத லுமையுடன் செம்பொனு லியன்ற
விலகு மாமணி யாசனத் திருந்தன னிறைவன்.

இ—ள்: கலக வாள் விழி அரம்பையர் கவரி கால் அசைப்ப— (கண்டோர்க்குக்) கலகத்தைவிளைக்கின்ற வாள்போன்ற கூரிய கண்களையுடைய அரம்பாஸ்திரிகள் சாமரங்களைக்காம்பிற்பிடித்தசைக்கவும், உலகில் ஆர் உயிர் அனைத்தையும் பெற்ற சிற்றுதர திலக வாள் நுதல்—உலகத்தின்கணுள்ள சர்வான்மாக்களையும் பெற்றருளிய சிறிய உதரத்தையும் திலகந்தீட்டிய ஒளிபொருந்திய நெற்றியையுமுடைய, உமை உடன்— உமாதேவியாருடனே, செம் பொனால் இயன்ற இலகு மா மணி ஆசனத்து— செம்பொன்னாற்செய்யப்பட்ட ஒளிபொருந்திய சிறந்த இரத்தினசிங்காசனத்தில், இறைவன் இருந்தனன்–(விதிவழிநின்றோரைக்காத்தும் நில்லாரைஒறுத்தும்அருளுகின்ற) எப்பொருட்குமிறைவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளினர் எ—று. (ருகூ)

ஆறு சூடிய வண்ணன்முன் னந்தரத் தியங்கு
மேறு சீர்மணி விளங்கிய விமானநின் றிறக்கிக்
கூறு மிப்புலை மடந்தையை விரைந்துடன் கொடுபோய்
வீறு சேர்கண நாதரக் கணத்தினில் விடுத்தார்.

இ—ள்: ஆறு சூடிய அண்ணல் முன்—கங்கையைத்தரித்த தலைவராகிய சிவபெருமானது திருமுன்னரே, அந்தரத்து இயங்கும் ஏறு சீர் மணி விளங்கிய விமானம் நின்று இறக்கி—ஆகாயமார்க்கமாய்ச்செல்கின்ற மிக்கஅழகிய இரத்தினம்விளங்குகின்ற தேரினின்றும்கீழிறக்கி, கூறும் இப்புலை மடந்தையை–சொல்லப்படுகின்றஇப்புலைச்சியை, விரைந்து உடன் கொடு போய்–வேகமாயுடனேகொண்டுபோய், வீறு சேர் கணநாதர் அக்கணத்தினில் விடுத்தார்—பெருமைமிகுந்த கணதிபர்கள் அப்பொழுதே விடுத்தார்கள் எ-று.

எம்பி ரான்றிரு வுளங்கனிந் திரங்கியங் கவடன்
வம்பு லாந்திரு மலர்முக நோக்கியிவ் வரைக்க
ணம்பு லாம்விழி மாதரோ டிருத்திமற் றதற்பி
னும்பர் நாட்டரு முத்தியுந் தருதுமென் றுரைத்தான்.

இ—ள்: எம்பிரான் திருவுளங் கனிந்து இரங்கி—எமது தலைவராகிய சிவபெருமான் (அப்பொழுது) திருவுள்ளங்கசிந்து இரங்கி, அங்கு அவள்

தன் வம்பு உலாம் திரு மலர் முகம் நோக்கி— அவ்விடத்து அப்புலமாதின் வாசனைவீசுகின்ற அழகிய மலர்போன்ற முகத்தைப்பார்த்து, இவரை க ண்—இந்தக்கயிலாசமலையில், அம்பு உலாம் விழி மாதரோடு இருத்தி— அம்புபோன்ற கூரிய கண்களையுடைய பெண்களோடு வசிக்கக்கடவை, அதன் பின்—அதன்பின்னர், உம்பர் நாடரும் முத்தியும் தருதும் என்று உரைத்தான்—தேவர்களும்தேடற்கரிய மோக்ஷத்தையும் (உனக்குத்) தந்தருளுவேமெ ன்று திருவாய்மலர்ந்தருளினர் எ—று.

மற்று—அசை. (௬௧)

அனைய ளவ்வுரை கேட்டன ளகமகிழ்ந் திருந்தா
ளினைய மாக்கதை படித்தவர் கேட்டவ ரெவரும்
வினை யொழிந்தர னருள்பெறு வாரென விரித்துப்
புனைநெ டுஞ்சடைச் சூதனம் முனிவர்க்குப் புகன்றான்.

இ—ள்: அனையள் அவ் உரை கேட்டனள் அக மகிழ்ந்து இருந்தாள்—அந்தப்பெண்ணானவள் அவ்வருள்வாக்கைச்செவியுற்று மனக்களிப்போடு வாழ்ந்திருந்தனள். இனைய மா கதை படித்தவர் கேட்டவர் எவரும்—இந்தப் பெருமைதங்கிய சரித்திரத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களுமாகிய எல்லவரும், வினை ஒழிந்து அரன் அருள் பெறுவார் என— தமது பாவவினைகளெல்லாம் நீங்கப்பெற்று சிவபெருமானது திருவருளைப்பெற்று வாழ்வார்களென்று, புனை நெடும் சடை சூதன்—அலங்காரம்பொருந்திய நீண்டசடையையுடைய சூதமுனிவர், அம் முனிவர்க்கு விரித்து புகன்றான்—அந்த (நைமிசாரணியவாசிகளாகிய) முனிவர்களுக்கு விரித்துக் கூறினர் எ—று. (௬௨)

மசளமினிச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௰௬.

## கண்டாடபாதச்சருக்கம்.

ஏதமற் றுயர்ந்த சீர்த்தி யெம்பிரா னிரவின் காதை
யோதமற் றுளதொன் றுங்கட் குணர்த்துவன் கேண்மி னென்று
மாதவத் துயர்ந்த செய்ய மறைதெரி முனிவர் கேட்பச்
சூதனுற் றமுத மாரி சொரிந்தெனச் சொல்ல லுற்றான்.

இ—ள்: ஏதம் அற்று உயர்ந்த சீர்த்தி எம்பிரான் இரவின் காதை—குற்றமில்லாத உயர்வுபொருந்தியகீர்த்தியையுடைய எமதுதலைவராகிய சிவபெருமானது சிவராத்திரியின்சரித்திரமானது, ஓதமற்று உளது ஒன்று உங்க

ட்கு உணர்த்துவன் கேண்மின் என்று— கூறுதற்கு இன்னுமொன்றுளது உங்கட்குஅறியும்படி சொல்லுவேன்கேளுங்களென்று, மா தவத்து உயர்ந்த செய்ய மறை தெரி முனிவர் கேட்ப-மகாதவத்தின்மேன்மைபெற்ற செம்மையாகியவேதங்களை அறிந்த முனிவர்கள்கேட்கும்படி, சூதன் உற்று—சூதமகா முனிவர்வீற்றிருந்து, அமுதமாரி சொரிந்தென-தேவாமிர்தமாகியமழையைச்சொரிந்தாற்போல, சொல்லல் உற்றான்-சொல்லத்தொடங்கினார் எ-று. ()

பைம்புலி புலர்த்துங் கொங்கைப் பாவைய ரூடுங் காலச்
சம்புலிவருந்த மாலைச் சமனெயி றென்ன வேக
வெம்புலி யென்ன முன்னி மேற்றிசை தோற்று மென்கீற்
றம்புலிக் கொழுந்தூ ரிஞ்சி யயோத்திமா நகரொன் றுண்டால்.

இ—ள்: பைம் புலி புலர்த்தும் கொங்கை பாவையர் ஊடும் கால்—பசுமையாகிய கலவைச்சாந்தைவரளச்செய்கின்ற ஸ்தனங்களைக்கொண்ட பெண்கள் தம்நாயகரோடு பிணங்கியகாலத்து, அச்சம் புல்லி வருந்த—அச்சமடைந்துவருந்தும்படி, மாலை-மாலைக்காலத்தில், சமனெயிறு என்ன—யமனுடைய வக்கிரதந்தத்தைப்போலவும், வேக வெம்புலி என்ன— வேகத்தையுடைய கொடியபுலியைப்போலவும், முன்னி—எண்ணப்பட்டு, மேல் திசை தோற்றும் மென் கீற்று அம்புலி கொழுந்து ஊர்—மேற்குத்திசையின்கண்ணே காணப்படுகின்ற மிருதுவாகிய இளம்பிறைச்சந்திரன்தவழப்பெற்ற, இஞ்சி—மதில்(சூழ்ந்த), அயோத்தி மாநகர் ஒன்று உண்டு— அயோத்தியாபுரியென்னும்பெரிய ஒருநகரமுளது எ—று.

புல்லி —புலியெனதல்தொக்கது. (உ)

மன்னர்தம் மன்ன னென்ன வருந்தச ரதன்பான் முன்னாட்
பன்னக மீதிற் றுஞ்சும் பசுந்துழாய் முகுந்தன் றோன்று
மந்நக ரளிக்கும் வேந்த னாதபன் குலத்தில் வந்தோன்
கன்னலந் தருதிண் டோளான் கருதலர்க் கடியும் வாளான்.

இ—ள்: மன்னர் தம் மன்னன் என்ன வரும் தசரதன் பால்—அரசர்க்கரசனென்றுசொல்லும்படி வந்துதோற்றிய தசரதமகாராசனிடத்தில், முன் நாள்—பண்டைக்காலத்தில், பன்னக மீதில் துஞ்சும் பசும் துழாய் முகுந்தன் தோன்றும்—சர்ப்பத்தின்மேல் யோகநித்திரைசெய்கின்ற பசியதுளசி மாலையைஅணிந்த மாயவன் (இராமசுவாமியாகப்) பிறந்தருளிய, அந்நகர் அளிக்கும் வேந்தன்- அந்த அயோத்தியாபுரியைப் பரிபாலனஞ்செய்கின்ற அரசனும், ஆதபன் குலத்தில் வந்தோன்—சூரியவம்சத்தில் பிறந்தவனும், கல் நலம் தரு திண் தோளான்—கல்லைப்போன்றவலிய தோள்களையுடையவனும், கருதலர் கடியும் வாளான்—பகைவர்களைக் கொலைபுரிகின்ற வாட்படையையுடையவனும் எ—று. (ங)

குத்திர மறவோர் செய்ய கோல்வளை யாமற் கோளிப்
பத்திர சயன னென்னப் பரிந்துயிர் பாது காப்போ
னத்திர நயனச் செவ்வா யரிவையர்க் கனங்க னன்னான்
மித்திர சகன னுமம் விளங்கிலை யலங்கல் வேலோன்.

இ-ள்: குத்திரம் அற-வஞ்சகச்செயல்யாவும் அழியும்படி, ஓர் செய்ய கோல் வளையாமல்-ஒப்பற்றசெங்கோன்முறைவழுவாதபடி, கோளி பத்திர சயனன் என்ன—ஆலிலையிற் பள்ளிகொள்பவராகிய விஷ்ணுவைப்போல, பரிந்து உயிர் பாதுகாப்போன்— அன்புகொண்டு ஆன்மாக்களைப்பரிபாலனஞ் செய்பவனும், அத்திர நயன செவ்வாய் அரிவையர்க்கு—அம்புபோன்றகண்களையும் சிவந்த வாயையுமுடையபெண்களுக்கு, அனங்கன் அன்னான்—மன்மதனை ஒத்தவனும், மித்திர சகன் நல் நாமம்—மித்திரசகனென்னும் நல்ல நாமத்தையுடையவனும், விளங்கு இலை அலங்கல் வேலோன்— விளங்குகின்ற இலைத்தொழின்முற்றிய மாலையைஅணிந்த வேற்படையையுடையவனும் ஆகிய (ஓர் அரசன் உளன்) எ—று. (ச)

குன்றென வளர்ந்து வீங்குங் குவிமுலைப் பவளச் செவ்வாய்
மன்றலங் கோதைக் கோதை மதயந்தி யென்னு மாதைத்
தன்றடஞ் செங்கை பற்றிச் சடங்குசெய் தழல்சான் றாக
முன்றவ முடிவான் மன்றன் முடித்தவன் முயங்கு நாளில்.

இ—ள்: குன்று என வளர்ந்து வீங்கும் குவிமுலை—மலையைப்போல வளர்ந்துகுவிந்தபயோதரங்களையும், பவள செவ்வாய்—பவளம்போன்ற சிவந்தவாயையும், மன்றல் அம் கோதை கோதை—வாசனைபொருந்திய அழகிய மாலையையணிந்தகூந்தலையுமுடைய, மதயந்தி என்னு மாதை-மதயந்தியென்னும்பெயரையுடையபெண்ணை, தன் தடம் செங்கை பற்றி—தனதுவிசாலமாகிய சிவந்தகரத்தாற்பிடித்து, அழல் சான்றாக சடங்கு செய்து—அக்கினி சாட்சியாகச்செய்யவேண்டிய கிரியைகளையெல்லாஞ்செய்து, முன் தவ முடிவால் மன்றல் முடித்து—முன்னேசெய்த தவத்தின்பலனால் விவாகஞ்செய்து, அவன் முயங்குநாளில்—அவ்வரசன் சுகித்திருக்குங்காலத்தில் எ—று.()

விலங்குபுட் கலங்க மாய்க்கும் வேட்டமேன் விருப்ப முற்றி
யுலங்கெழு வயிரத் தோளா னொண்மலர் பொதுளிப் பூத்த
பொலந்தருச் சினைகள் வானம் போனவெங் கானம் போவான்
பலங்கொள்கா மூகப்பட் டாடை பட்டிகை மருங்கிற் சேர்த்தி.

இ—ள்: விலங்கு புள் கலங்க மாய்க்கும் வேட்டம் மேல் விருப்பம் முற்றி— மிருகங்களையும் பட்சிகளையும் கலங்கும்படிவதைசெய்கின்ற வேட்டையில் விருப்பமதிகரித்து, உலம் கெழு வயிர தோளான்— திரண்டகல்லையொத்த வயிரித்ததோள்களையுடைய அந்த மித்திரசக மகாராசன், ஒண் மலர் பொதுளி பூத்த—ஒளிபொருந்திய புஷ்பங்களைக்கூட்டமாகப் பூத்துள்

ள, பொலம் தரு சினைகள் வானம் போன-அழகியவிருட்சத்தின் கொம்புகள் ஆகாயமட்டும் ஓங்கிவளர்ந்த, வெம் கானம் போவான்—கொடியகாட்டை அடையும்பொருட்டு, பலம் கொள் காழக பட்டு ஆடை பட்டிகை மருங்கில் சேர்த்தி —பலத்த கரியபட்டுவஸ்திரத்தையும் அரைக்கச்சையையும் அரையிலணிந்து எ—று. (௬)

செஞ்சுட ரெறிக்குஞ் செம்பொற் செழுமணி மகுட நீக்கிக்
குஞ்சிபூந் தொடையிற் சூழ்ந்து குலவிட விசித்துக் கூர்மை
விஞ்சிய சுரிகை சேர்த்து வெறுக்கையி னமைந்த பச்சை
மஞ்செனத் தோற்றுஞ் சோதி மரகதக் கவச மிட்டு.

இ—ள்: செம் சுடர் எறிக்கும் செம்பொன் செழுமணி மகுடம் நீக்கி—சிவந்தஒளிவீசுகின்ற செம்பொன்னாற்செய்யப்பட்ட செழுமையாகிய இரத்தினகிரீடத்தைவிலக்கி, குஞ்சி பூ தொடையில் சூழ்ந்து குலவிட விசித்து— குடுமியைப்புஷ்பமாலையினாற்சுற்றி விளங்கும்படிகட்டிக்கொண்டு, கூர்மை விஞ்சிய சுரிகை சேர்த்து—கூர்மைமிகுந்த உடைவாளை வைக்குமிடத்தில்வைத்து, வெறுக்கையின் அமைத்த— பொன்னினாற்செய்யப்பட்ட, பச்சை மஞ்சு என தோற்றும்—பச்சைநிறமாகிய மேகத்தைப்போலத்தோன்றுகின்ற, சோதி மரகத கவசமிட்டு—ஒளியமைந்த மாகத இரத்தினம் பதித்துச்செய்யப்பட்ட சட்டையைத்தரித்து எ—று. (எ)

கைப்புடை கட்டி வெந்நிற் கடுங்கணைத் தூணி தூக்கி
மைப்புடை வரையுங் கண்ணார் நுதனிகர் வரிவில் வாங்கி
மெய்ப்புடை மனங்கா லொத்து விரையுமைங் கதியிற் செல்லு
நெய்ப்புடை மேனி மேக நீனிறப் பரிமேற் கொண்டான்.

இ—ள்: கை புடை கட்டி—கைப்புட்டிலைக் கட்டிக்கொண்டு, வெந்நில் கடுங்கணை தூணி தூக்கி— முதுகின்கண்ணே கொடிய அம்பறாத்தூணியைத் தொங்கக்கட்டி, மை புடை வரையுங் கண்ணார் நுதல் நிகர் வரிவில் வாங்கி—இமைப்பக்கங்களில் மைதீட்டியகண்களையுடைய பெண்களது நெற்றியையொத்த வரிந்து கட்டிய வில்லைவளைத்துக்கொண்டு, மெய் புடை மனம் கால் ஒத்து விரையும் ஐ கதியில் செலலும்—உண்மையாகிய மனத்தையும் காற்றையும்போல ஒருசேரவேகம்பொருந்திய மல்லகதி மயூரகதி வியாக்கிரகதி வானரகதி விடபகதி ஆகியபஞ்சகதிகளினுஞ்செல்லத்தக்க, நெய்ப்பு உடை மேனி மேக நீல் நிற பரிமேல் கொண்டான்—கொழுமைபொருந்தியசரீரத்தையும் முகிலையொத்தநீலநிறத்தையும் உடைய குதிரையின்மேலேறினான் எ—று. (அ)

சங்கொடு படகங் கொம்பு தவிறுடி தழங்கி யார்ப்ப
வெங்கொடுங் கோலெசெய் வாளி வில்லொளி விளங்கும் வைவே

லங்கவை தரித்த தானை யளவில சூழ மண்ணிற்
பொங்குநுண் டூளி யோரெண் புலம்புக விசும்பு போர்ப்ப.

இ—ள்: சங்கொடு படகம் கொம்பு தவில் துடி தழங்கி ஆர்ப்ப— சங்கும் ஒருகட்பறையும் கொம்பும் தவிலும் உடுக்கும் மிக்கசத்தத்தோடு ஆரவாரிக்கவும், வெம் கொடும் கொலை செய் வாளி—மிக்க கொடிய கொலைத்தொழிலைச்செய்கின்ற அம்புகளும், வில்—வில்லும், ஒளி விளங்கும் வை வேல்—ஒளிபிரகாசிக்கின்ற கூரிய வேலும், அங்கு அவை தரித்த தானை அளவில சூழ—ஆகிய அவ்வாயுதங்களைத்தரித்த பலசேனைகள் அங்கேசுற்றிவரவும், மண்ணில் பொங்கு நுண் தூளி— பூமியின்கண்ணே பொங்கியெழும்புகின்ற நுண்ணிய தூளியானது, ஓர் எண் புலம் புக விசும்பு போர்ப்ப— எட்டுத்திக்குகளினுஞ்செல்லவும் ஆகாயத்தை மறைக்கவும் எ—று. (கூ)

பெரும்புரி வலைவார் கூந்தற் பிடியினஞ் சுமந்து செல்ல
விரும்புறு வேடர் கையில் விரைந்தெதிர் குரைக்கு ஞாளி
யிரும்புறு தொடரிற் பூட்டி யீர்த்தனர் செல்ல வல்லே
சுரும்பிமிர் தொடையான் கானச் சூழல்வாய்ச் சென்று புக்கான்.

இ—ள்: பெரும் புரி வலை—பெரிய முறுக்கையுடைய வலைகளை, வார் கூந்தல் பிடியினம் சுமந்து செல்ல—நீண்ட கழுத்துமயிரையுடைய பெண்யானைக்கூட்டங்கள் சுமந்துசெல்லவும், விரும்புறு வேடர் கையில் விரைந்து எதிர் குரைக்கும் ஞாளி இரும்பு உறு தொடரில் பூட்டி ஈர்த்தனர் செல்ல—விரும்பப்படுகின்ற வேடர்கள் தங்கள் கையினால் வேகமாய் எதிர்த்துக்குரைக்கின்ற நாய்களை இருப்புச்சங்கிலியிற்பூட்டி இழுத்துச்செல்லவும், சுரும்பு இமிர் தொடையான்—வண்டுகள் கீதம்பாடுகின்ற மாலையையணிந்த மித்திரசகமகாராசன், கான சூழல்வாய் வல்லே சென்று புக்கான்— மரச்செறிவையுடைய காட்டின்கண்ணே வேகமாய்ச்சென்று புகுந்தான் எ—று. (கய)

வேறு.

வலைவார்பல நிலையாநெடு வானோடு வளைப்பார்
சிலைகோலினர் சிறுநாணொலி திசையேற விடுப்பார்
கலைமான்மரை முயனீடிய களிறேறொடு களிற்றின்
றலைபோயற விறன்மீளிகள் சரமாரி தொடுப்பார்.

இ—ள்: வார் பல வலை நிலையா நெடு வானோடு வளைப்பார்—நீண்ட பலவலைகளை நிலையாகவுயர்ந்த ஆகாயவரையும் வளைத்துக்கட்டுவார்கள், சிலை கோலினர் சிறு நாண் ஒலி திசை ஏற விடுப்பர்—வில்லைவளைத்துச்சிறிய நாணோசையைத்திசைகளெங்குஞ்செல்லும்படியெழுப்புவார்கள், கலை மான் மரை முயல் நீடிய களிறேறொடு களிற்றின் தலை போய் அற— கலைமான் மரை முயல் மிகுதியாகிய ஆண்பன்றி யானை ஆகிய இவைகளின் தலைகள்வெ

ட்டுண்டுபோகும்படி, விறல் மீளிகள் சர மாரி தொடுப்பார்—வலியவீரர்கள் அம்புகளை மழைபோலச்சொரிவார்கள் எ—று. (௧௧)

கொடிகொண்டிடு தருவிற்படர் கொம்பேறி விழிப்பார்
மடியுஞ்செவி வளைவாலகல் வாய்நாய்கள் விடுப்பார்
தடிகொண்டெறி தருவார்சுழல் தழலின்க லுகைப்பார்
பொடிகொண்டிடு நிலனிற்சில பொறிநின்று புதைப்பார்.

இ—ள்: கொடி கொண்டிடு தருவில் படர் கொம்பு ஏறி விழிப்பார்—கொடிகள்படர்ந்த விருட்சங்களிலே பரந்த கொம்பர்களின்மேல் ஏறிப்பார்ப்பார்கள், மடியும் செவி வளை வால் அகல்வாய் நாய்கள் விடுப்பார்—மடிந்த செவியையும் வளைந்தவாலையும் அகன்றவாயையுமுடைய நாய்களை ஏவுவார்கள், தடி கொண்டு எறி தருவார்—வளைதடிகொண்டு எறிவார்கள், சுழல் தழலின் கல் உகைப்பார்— சுழலுகின்ற கவண்களினால் கற்களை எறிவார்கள், பொடி கொண்டிடு நிலனில் சில பொறி நின்று புதைப்பார்— புழுதிநிறைந்த நிலத்திலே சில இயந்திரப்பொறிகளைப்புதைத்து நிற்பார்கள் எ—று. (௧௨)

அடல்சேருழை படர்தாரியி னடிதேடினர் தொடர்வார்
மிடல்சேர்தரு மிருகாரியை விறல்வேலினி லெறிவார்
வடவாமுக வனலார்சின வலுநீடுகி ருளியத்
துடலூறுற வடிவாளிக ளுடனேவினர் விடுவார்.

இ—ள். அடல் சேர் உழை படர் தாரியின் அடி தேடினர் தொடர்வார்—வலிமைமிகுந்த மான்கள்செல்லுகின்றவழியிலே அவற்றின் அடிகளைத்தேடிச்செல்லுவார்கள், மிடல் சேர் தரு மிருகாரியை விறல் வேலினில் எறிவார்—வலிமைமிகுந்த சிங்கத்தை வலிய வேற்படைகொண்டு வீசுவார்கள், வடவா முக அனல் ஆர் சின வலு நீடு உகிர் உளியத்து உடல் ஊறுற— வடவாமுகாக்கினியையொத்த கோபத்தையும் வலிமையையும் நீண்டநகங்களையுமுடைய காடிகளினது உடலத்தை ஊடுருவும்படி, வடி வாளிகள் உடன் ஏவினர் விடுவார்—கூரிய அம்புகளை உடனே வேகமாய்ச்செலுத்துவார்கள் எ—று. (௧௩)

வருமித்திரன் மரபுற்றிடு மனன்முற்றரி யலர்போர்
பொருமித்திர சகனுற்றொரு புரிவிற்றனி குனிவித்
தருமிற்றொடு கணையிற்பல மிருகத்தை யொறுத்துத்
தருமித்திற லெவரிப்புவி தனிலொப்பென நின்றான்.

இ—ள்: வரு மித்திரன் மரபு உற்றிடு மன்னன்—சூரியவம்சத்தில்வந்து தோற்றிய அரசனாகிய, முன் தரியலர் போர் பொரும் மித்திரசகன்— எதிர்த்துவரும் பகைவர்களோடு யுத்தம்செய்கின்ற அம்மித்திரசகன், உற்ற ஒரு புரி வில் தனி குனிவித்து—போய் ஒப்பில்லாத வரிந்துகட்டிய வில்

ஒன்றைவளைத்து, உறும் இல் தொடு சுணையில் பல மிருகத்தை ஒறுத்து—இடியேற்றைப்போலத் தொடக்கப்பட்ட அம்புகளினாற்பலமிருகங்களைக் கொலைபுரிந்து, தரும் இ திறல்—பொருந்திய இந்தவலிமைக்கு, எவர் இப்புவி தனில் ஒப்பு என நின்றான்—எவர்கள் இப்பூமியின்கண்ணே சமமுடையர் என்றுசொல்லும்படி நின்றான் எ—று.

மன்னன் மனன் எனத்தொக்கது. (கச)

வேறு.

இவ்வண்ண நெடுங்கானி லடும்வேட்டம் புரிந்திடுமவ் வெல்லை காலை, மைவண்ணத் தடலரக்க ரிருவரொரு வயிற்றுதித்தோர் வந்து தோன்றிப், பைவண்ணப் பெரும்பாந்த ளேந்துலக மொருகுடைக்கீழ்ப் பாதுகாக்குஞ், செவ்வண்ணக் கதிர்வேலோ னுடன்றருக்கி நெருக்கியமர் செய்கின் றாரால்.

இ—ள்: இ வண்ணம் நெடும் கானில் அடும் வேட்டம் புரிந்திடும் அவ்வெல்லை—இவ்வாறாக நெடியகாட்டில் கொலைபொருந்திய வேட்டையாடும் அச்சமையத்தில், கால மை வண்ணத்து அடல் அரக்கர் இருவர்— (கார்) காலத்து மேகத்தையொத்த கருநிறத்தையுடைய அரக்கர்களிருவர், ஒரு வயிற்று உதித்தோர்—ஒருவயிற்றிற்பிறந்தவர்கள், வந்து தோன்றி—வந்துகாணப்பட்டு, பை வண்ண பெரும் பாந்தள் ஏந்து உலகம் ஒருகுடை கீழ் பாதுகாக்கும்—படத்தையுடைய அழகிய ஆதிசேடனால் தாங்கப்படுகின்ற உலகத்தை ஒருகுடைநிழலிலமைத்துப் பரிபாலிக்கின்ற, செவ் வண்ண கதிர் வேலோன் உடன்—சிவந்த நிறத்தையுடைய ஒளிபொருந்திய வேற்படையைத் தரித்த மித்திரசகமகாராசனுடன், தருக்கி நெருக்கி அமர் செய்கின்றார்—செருக்கடைந்து அடர்த்து யுத்தஞ்செய்கின்றனர் எ—று.

ஆல் அசை. (கரு)

அந்நிலைகண் டன்னவரின் முன்னவனைத் தூரந்தமல ரங்கை வாளாற், சென்னிதுணித் தனன்குருதி நீரோட வாங்கதனைத் தெரிய நோக்கி, யிந்நிலையில் வெல்லற்கரிதென் றிளையோனும் வஞ்சகங்க ளியற்றி யாமை, பின்னரிவனை வெல்வமென வோடோடி யனிகருருப் பெற்று வந்தான்.

இ—ள்: அந்நிலை கண்டு—அத்தன்மையைப்பார்த்து. அன்னவரின் முன்னவனை—அவ்விருவருள் மூத்தவனை, அரசன் தொடர்ந்து—அவ்வரசன் தொடர்ந்துபோய், குருதி நீர் ஓட—இரத்தநீர்பாய, அம் மலர் கைவாளால் சென்னி துணித்தனன்—அழகிய கையிலிருக்கின்ற வாளினால் சிரசை வெட்டினான், ஆங்கு அதனை தெரிய நோக்கி—அங்கே அதனைத் தெரியப்பார்த்து, இந்நிலையில் வெற்கு அரிது என்று—இத்தன்மையால் இவனை வெல்லுதற்கியலாது என்று (எண்ணி), இளையோனும்—இளையவனும், வஞ்சகங்க

ன் இயற்றி யானே பின் இவனை வெல்வன் என—கபடங்கள்செய்து யானே பின்னர் இவனை வெல்லுவேனென்று (நினைத்து), மீண்டு ஓடி மனிதர் உரு பெற்று வந்தான்— புறங்கொடுத்து ஓடி மானிடவடிவங்கொண்டுவந்தான் எ—று. (௧௬)

வந்தரசன் றன்னிருதா டொழுதெழலு மாங்கவனுன் வர வேதென்னச், சந்தணிதிரட்புயமித் திரசகனே யுனதேவல் சலிப்பிலாமலிவ் வுடலுள்ளளவு மிழைத்திடுவா னெண்ணிவந் தேனென்ன முன்னம், கொந்தழலி லடிசிலடும் வாலுவர்தந் தொழிலவற்குக் கொடுத்தான் மன்னே.

இ—ள்: வந்து அரசன் தன் இரு தாள் தொழுது எழலும்—வந்து அரசனுடைய இரண்டுபாதங்களையும் நமஸ்கரித்து எழுதலும், ஆங்கு அவன் உன் வரவு ஏது என்ன—அவ்விடத்தில் அவ்வரசன் உனனுடைய வரவு யாதுகாரணம்பற்றியென்று வினவ, சந்து அணி திரள் புய மித்திரசகனே—சந்தனம் அணிந்த மலையையொத்த புயங்களையுடைய மித்திரசகமகாராசனே, உனது ஏவல்—உமதுதொண்டை, சலிப்பிலாமல் இந்த உடல் உள்ளளவும் இழைத்திடுவான் எண்ணி வந்தேன் என்ன—சோர்வில்லாமல் இவ்வுடலமிருக்கும்வரையும் செய்யும்படி நினைத்துவந்தேன் என்றுகூறுதலும், முன்னம்—முன்னமே, கொந்து அழலில் அடிசில் அடும் வாலுவர்தம் தொழில் அவற்கு கொடுத்தான்—கூட்டமாகிய அக்கினியில் போசனபதார்த்தங்களைச்சமைக்கின்ற சமையற்காரரின்தொழிலை அவனுக்கு நல்கினன் எ—று.

மன் ஓ அசைகள். (௧௭)

வன்புலஞ்சா னனம்பயிலும் வனநீங்கி யயோத்திநகர் வந்து தாங்கும், பின்புலஞ்செய் திரடோளான் மதயந்தி யுடன்வாழ்விற் பெருகு நாளிற், றென்புலஞ்சென் றடைந்தபிதிர்க் கடன்கழிக்குந் திவசமுறச் சிந்தைமேவுந, தன்புலங்கொண் டுத்தரத்திற் சாலிதவன் வரவழைத்துத் தாளிற் றாழ்ந்தே.

இ—ள்: வன் புல் அஞ்சானனம் பயிலும் வனம் நீங்கி—வலியபுலிகளுஞ் சிங்கங்களும் வாழ்கின்ற காட்டைவிட்டு நீங்கி, பின்பு அயோத்திநகர் வந்து—பின்னர் அயோத்திநகரத்தையடைந்து, தாங்கும் உலம் செய் திரள் தோளான்—(உலகபாரத்தைத்) தாங்குகின்ற திரண்ட கல்லையொத்த புயங்களையுடைய மித்திரசகன், மதயந்தி உடன் வாழ்வில் பெருகுநாளில்—மதயந்தியோடு வாழ்ந்திருக்குங்காலத்தில், தென்புலம் சென்று அடைந்த பிதிர் கடன் கழிக்கும் திவசம் உற—(இறந்து) தென்புலத்தையடைந்த (ஆன்மாக்களின்பொருட்டு) பிதிர்தேவதைகளுக்கு உணவுகொடுக்கவேண்டிய தினமானது வந்துசேர, சிந்தை மேவும் தன் புலங்கொண்டு—மனத்திற் பொருந்திய தனது எண்ணத்தினால், உத்தரத்தில் சாலிதவன் வர அழைத்

து—வடதிசைக்கண்வசிக்கின்ற அருந்ததிநாயகராகிய வசிஷ்டரைவரும்படி அழைத்து, தாளில் தாழ்ந்து—பாதங்களில்விழுந்து நமஸ்கரித்து, எ—று.

ஏ-அசை. (கஅ)

ஆசனத்தி லிருத்தியபின் னருக்கியபாத் தியமுதலர்ச் சனை க ளாற்றிப், போசனத்துக் கெழுந்தருளப் புரிதியென வருந்தவ னும் போந்த போதி, னீசனெனத் தகுநிருத னடுமமுதத் தொடு தனது நினைவின் வண்ணம், பாசனத்தின் மனிதருடற் றடியரிந் து சமைத்ததனைப் படைத்திட் டானே.

இ—ள். ஆசனத்தில் இருத்தியபின்—ஆசனத்தின்கண்ணே இருக்கச் செய்த பின்னா. அருக்கிய பாத்தியம் முதல் அர்ச்சனைகள் ஆற்றி—அருக்கியம் பாததீர்த்தம் முதலாகியஉபசாரங்களோடு பூசைசெய்து, போசனத்துக்கு எழுந்தருள புரிதி என—போசனஞ்செய்தற்கு எழுந்தருளுகவென்றுவேண்டவும், அருந் தவனும் போந்த போதில்—அரியதபத்தையுடைய வசிஷ்டமுனிவருஞ் சென்றபோது, ஈசன் எனத்தகும் நிருதன்— சண்டாளனென்று சொல்லத்தக்க இயல்பையுடைய அவ்வரக்கனானவன், அடும் அமுதத்தொடு—சமைக்கப்படுகின்ற சாதத்தோடு, தனது நினைவின் வண்ணம்—தன்னுடைய (வஞ்சக) எண்ணத்தின்படி, மனிதர் உடல் தடி அரிந்து சமைத்து—மனுடர்களுடைய சரீரத்தின்தசையை வெட்டிச்சமைத்து, பாசனத்தில் அதனை படைத்திட்டான்— போசனபாத்திரத்தில் அந்த நரமாமிசத்தைப்படைத்தான் எ—று.

ஏ--அசை. (கக)

வண்டுபடும் பசுந்துளபத் தொடையான்வெள் விடையான்றா ண் மலர்களுள்ளங், கொண்டுபெருந் தவமியற்றும் வசிட்டமுனி முனிவுடனிக் கொற்ற வேந்தன், றொண்டுபடு மிவனுடனிந் நரஊ னிக் கலத்தினிடச் சொன்னா னென்று, கண்டுகனற் பொறிகாலக் கண்ணிணைகள் சிவந்துமிகக் கனன்று நோக்கி.

இ—ள்: வண்டு படும் பசும துளப தொடையான்— வண்டுகள் படிகின்ற பசுமையாகிய துளசிமாலையையணிந்தமாயவனதும், வெள் விடையான் தாள் மலர்கள் உள்ளம் கொண்டு—வெள்ளிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானதும் மலர்போன்றபாதங்களை மனத்திற்சிந்தித்து, பெரும் தவம் இயற்றும் வசிஷ்டமுனி—பெரியதவங்களைச்செய்கின்ற வசிஷ்டமுனிவர், முனிவுடன்—கோபத்தோடு, இக் கொற்ற வேந்தன்—இந்தவெற்றிபொருந்திய அரசனானவன், தொண்டு படும் இவனுடன்—தொண்டுசெய்கின்ற இவ்வேவலனிடத்தில், இ நரர் ஊன் இ கலத்தில் இடச்சொன்னான் என்று கண்டு— இந்தநரமாமிசத்தையிப்பாத்திரத்திற் படைக்கக் கற்பித்தானென்றெ

ண்ணி, கனல் பொறி கால கண் இணைகள் சிவந்து-அக்கினிப்பொறிகள் சிந்தும்படிகண்களிரண்டுஞ் சிவப்பேற, மிகக்கனன்று நோக்கி—மிகவுங்கோபித்துப்பார்த்து எ—று. (உ0)

மறுவையவித் தொளிருமுழு மதிக்கவிகைத் தனிச்செங்கோன் மன்ன முந்நீ, ரறுவையுடைப் பெருநிலத்திற் றிருவிழந்து கருநிறங்கொ ளரக்க யாக்கை, பெறுவையெனச் சபித்திடலு மனத்தழுங்கி யரைக்கணத்துட் பின்பு தேறித், தெறுவையயிற் கரனுயர்மித் திரசகனு மனமதனிற் சினமீக் கொண்டே.

இ—ள்: மறுவை அவித்து ஒளிரும் முழு மதி கவிகை தனி செங்கோல் மன்ன—களங்கத்தைநீக்கிப் பிரகாசிக்கின்ற பூரணசந்திரனையொத்த குடையையுடைய ஒப்பில்லாத செங்கோலைக்கொண்ட அரசனே, முந்நீர் அறுவை உடை பெரு நிலத்தில்—சமுத்திரத்தை ஆடையாகவுடைய பெரிய பூமியின்கண்ணே, திரு இழந்து—செல்வமெல்லாமிழந்து, கரு நிறம் கொள் அரக்க யாக்கை—கருநிறத்தையுடைய அரக்கசரீரத்தை, பெறுவை என சபித்திடலும்—பெறக்கடவையென்று சபித்தலும், மனத்து அழுங்கி-மனத்திலே கலக்கங்கொண்டு, அரைக்கணத்துள் பின்பு தேறி—அரைக்கணப்பொழுதினுள் பின்னர் மனந்தெளிந்து, தெறு வை அயில் கரன் உயர் மித்திரசகனும்—கொலைசெய்கின்ற கூரியவேலைத்தாங்கிய கையையுடைய உயர்ந்த மித்திரசகமகாராசனும். மனம் அதனில் சினம் மீ கொண்டு— மனதிலே மிகவுங்கோபங்கொண்டு எ—று.

எ அசை. (உக)

மனுதிகளிற் பிழைத்தறியா வெனைச்சூளிட் டனையுனையும் வைவே னென்னுத், தனுதிகழ்த்தா மரைக்கரத்துச் சலங்கொண்ட சலங்கண்டு தாழ்ந்து தேவி, தினுதிபகோத் திரமுதல்வ தேசிகனே மாசின்மறை செப்புந் தெய்வ, மெனுதினிநீ சபித்தறகா தெவரரசர் குரவரைச்சூ ளிட்டா ரென்றே.

இ-ள்: மனுதிகளில் பிழைத்து அறியா என்னை சூள் இட்டனை—மனம் வாக்குக்காயங்களாகிய திரிகரணங்களினாலும் தவறுசெய்யாத எனக்குச்சாபங்கொடுத்தீர், (ஆதலினால்) உனையும் வைவேன் என்னு-உம்மையும் யான்சபிப்பேன் என்று, தனுதி இதழ் தாமரை கரத்து சலம் கொண்ட சலம் கண்டு-தன்னுடைய இதழ்விரிந்த தாமரைமலர்போன்ற கையில் தண்ணீர்அள்ளிய கோபத்தைப்பார்த்து, தேவி தாழ்ந்து— அவனது மனைவியாகிய மதயந்தி வணங்கி, தினுதிப கோத்திர முதலவ— சூரியவமிசத்திற்பிறந்த தலைவனே, தேசிகனே மாசில் மறை செப்பும் தெய்வம் எனுது—குருவே குற்றமில்லாத வேதங்களாற்சொல்லப்பட்ட தெய்வம் என்றுநினையாமல், இனி நீ சபித்தல் தகா—இனியேல் நீருஞ்சபித்தல்தக்கதன்று, எவர் அரசர் குரவரை சூ

ள் இட்டார் என்று—எந்த அரசர் தமது குருவைச் சபித்தவர்கள் என்றுகூறி எ—று.

என்னை-எனை எனத்தொக்கது. ஏ அசை (உஉ)

தன்மாடத் தளிரியனின் றுரைத்திடலும் பாணியிற்கொள் சாபப் பாணி, பொன்மாட வயோத்திநகர்ப் புரவலன்றன் குரை கழற்றாட் போதிற் பெய்தான், சொன்மாட மெனக்கறுத்த தக்க ணத்தந் நீர்மையினுற் சுடர்வேல் வேந்தன், கன்மாட பாதனெனப் பேர்படைத்தா னீர்படைத்த கடற்பா ரெங்கும்.

இ—ள்: தன் மாடு அ தளிரியல் நின்று உரைத்திடலும்— தனது பக்கத்தே மாந்தளிர்போன்ற இயல்பையுடைய அம்மனைவியானவள் நின்று கூறுதலும், பாணியில் கொள் சாப பாணி—சபிக்கும்படி தனதுகையில் அள்ளியநீரை, பொன்மாட அயோத்தி நகர் புரவலன்—பொன்னாலாகிய மண்டபங்களையுடைய அயோத்திபாபுரிக்கரசனாகிய மித்திரசகன், தன் குரை கழல் தாள் போதில் பெய்தான்— தனது ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த பாத தாமரையில் சொரிந்தனன், அ கணத்து சொல் மாடம் என கறுத்தது—அப்பொழுதே கூறப்படுகின்ற உழுந்தைப்போல அவனுடையபாதங் கறுப்படைந்தது, அ நீர்மையினால் சுடர் வேல் வேந்தன்—அத்தன்மையினால் பிரகாசம்பொருந்திய வேற்படையைத்தாங்கிய அவ்வரசன், நீர் படைத்த கடல் பார் எங்கும்—நீர்நிறைந்த சமுத்திரத்தாற்சூழப்பட்டபூமி எவ்விடமும், கன்மாட பாதன் என பேர் படைத்தான்—கன்மாடபாதன் என்னும் (காரணப்) பெயரை உடையவனாயினான் எ—று. (உ௩)

வேறு.

கன்றிய வெகுளி நீங்கிக் காவல னிற்ப முன்ன
ரொன்றிய தவத்தின் மேலா முறுவனுங் கோப நீங்கிப்
பின்றிய வரக்கன் செய்த பிழையிது பிழைத்தொன் றென்பா
லின்றிவன் புரிந்த தீமை யின்றெனா யோகிற் றேர்ந்தான்.

இ—ள்: கன்றிய வெகுளி நீங்கி காவலன் முன்னர் நிற்ப—கொதிக்கின்ற கோபமானது தவிர்ந்து கன்மாடபாதனானவன் முன்பாகநிற்கவும், ஒன்றிய தவத்தின் மேலாம் உறுவனும் கோபம் நீங்கி—பொருந்திய தவஒழுக்கத்தால்மேம்பட்ட வசிட்டமுனிவரும் கோபந்தணிந்து, பின்றிய அரக்கன் செய்த பிழை இது—பின்னவனாகிய இந்த இராட்சதன்செய்ததவறு இதுவாகும், இவன் பிழைத்து என்பால் இன்று புரிந்த தீமை ஒன்று இன்று எ ன—இவன் பிழைபட்டு எனக்கு இத்தினத்தில் செய்ததீமை ஒன்றுமில்லையென்று, யோகில் தேர்ந்தான்—யோகத்தினாலறிந்தார் எ—று. (உ௪)

விற்சர நுதற்கட் செவ்வாய் விரிதிரை யமுத மானுஞ்
சொற்சர சுவதி கேள்வன் றோன்றல்மான் றடந்தேர் மன்னை

யற்சர ஞகிக் கானி லடைந்துசஞ் சரித்தீ ராறு
வற்சரங் காறு நிற்றி யாறுமுன் சாப மென்றான்.

இ—ள்: வில் நுதல்—விற்போன்ற நெற்றியையும், சர கண்—அம்புபோன்ற கூரிய கண்களையும், செவ்வாய்—சிவந்த வாயையும், விரி திரை அமுதம் மானும் சொல்—விரிந்த திரைகளைப்பொருந்திய பாற்கடலிற்றோன்றிய அமுதத்தையொத்த சொல்லையுமுடைய, சரசுவதி கேள்வன் தோன்றல்—சரசுவதிக்குநாயகராகிய பிரமாவின்புத்திரராகும் வசிட்டமுனிவர், மான் தடம் தேர் மன்னை—குதிரைபூட்டிய விசாலித்த தேரையுடைய அவ்வரசனைப்(பார்த்து), அற்சரன் ஆகி கானில் அடைந்து சஞ்சரித்து—அரக்கனாகிக் காட்டையடைந்து சீவித்து, ஈராறு வற்சரம் காறும் நிற்றி—பன்னிரண்டு வருடம்வரையும் நிற்கக்கடவை, மாறும் உன் சாபம் என்றான்—அதன்மேல் உனதுசாபம் நீங்குமென்றார் எ—று. (உரு)

உளந்தனி லுணர வொண்ணு வூழ்வினை வசத்தாற் கூத்தர்
வளங்கொண்முற் கோல நீங்கி மற்றொரு கோலங் கொண்டு
துளங்கிடத் தோற்றல் போலத் தொல்லுருக் கரந்து திங்க
ளிளம்பிறைக் குழவி போலு மெயிறுடை யரக்க னானான்.

இ—ள்: உளம் தனில் உணர ஒண்ணு ஊழ்வினை வசத்தால்—மனத்திலறியமுடியாத ஊழ்வினையின்வலிமையினால், கூத்தர்—கூத்தாடிகள், வளம் கொள் முன் கோலம் நீங்கி—இயல்பாயுள்ள தங்களுடைய முந்திய வேடத்தைவிட்டு, மற்று ஒரு கோலம் கொண்டு—வேறு ஒருவேடத்தைப் பூண்டு, துளங்கிட தோற்றல் போல—விளங்கும்படி காணப்படுதல்போல, தொல் உரு கரந்து—பழைய தனது இராசவடிவம்மறைந்து, திங்கள் இளம்பிறை குழவி போலும்—மாதந்தோறும்வருகின்ற இளம்பிறைச்சந்திரனைப் போன்ற, எயிறு உடை அரக்கன் ஆனான்—வக்கிரதந்தங்களைக்கொண்ட இராட்சதனானான் எ—று. (உசு)

மைக்கணைத் திதழ்ப்பூங் கோதை மனைமடந் தையர்க ளெல்லாந்
தெக்கணைத் தியம னென்னச் சிந்தையில் வெருக்கொண் டேகி
யக்கணத் தகன்று போனா ரருந்தவக் கிழமை பூண்ட
மெய்க்கணத் தவர்கள் சாபம் யாவரே விலக்க வல்லார்.

இ—ள்: மை கணைத்து இதழ் பூ கோதை மனை மடந்தையர்கள் எல்லாம்—மேகக்கூட்டங்களையொத்த இதழ்விரிந்த பூக்களைத்தரித்த கூந்தலையுடைய மனைவிமுதலாகிய பெண்கள் யாவரும், தெக்கணைத்து இயமன் என்ன சிந்தையில் வெருக்கொண்டு ஏகி—தென்புலத்தரசனாகிய யமராசனென்று மனத்திலே அச்சங்கொண்டு சென்று, அ கணத்து அகன்று போனார்—அப்பொழுதே தூரமாயகன்று போயினர், அரும் தவ கிழமை பூண்ட மெய்க

ணத்தவர்கள் சாபம்—அருமையாகிய தவஒழுக்கத்தைப்பொருந்தியஉண்மை யைஉடைய முனிவர்களது சாபத்தை, யாவரே விலக்க வல்லார்—யார்தாம் நீக்குதற்குவல்லவர் எ—று. (உஎ)

வேறு.

வடிக்குரன் மணியா ழிசைமுரன் றறுகால் வரிச்சுரும் பரற்றுபூ மாலைக், கடிக்குரன் மடவார் பாற்கடற் றிரையின் கற்றைவெண் கவரிகா லசைப்ப, விடிக்குரன் மடங்கல் சுமந்தபே ரணையி லிருந்தா சியற்றிய விறைவ, னடிக்குா னிகராங் கரிகொடு வரிசேரடவியி னக்கணத் தடைந்தான்.

இ—ள் வடி குரல் மணி யாழ் இசை முரன்று—தெளிவாகிய ஒலியையுடைய அழகிய யாழினிசைபோலச் சத்தித்து, அறு கால் வரி சுரும்பு ஆற்றும்—அறுகால்களையுடைய வரிபொருந்திய வண்டுகள் ஆரவாரிக்கின்ற, பூ மாலை கடி குரல் மடவார்—பூமாலையையணிந்த நறுமணம்பொருந்திய கூந்தலையுடையபெண்கள், பால் கடல் திரையின் கற்றை வெண் கவரி கால் அசைப்ப—பாற்கடலின்கணுள்ள திரையைப்போன்ற திரளான வெள்ளியசாமரங்களைக்காம்பிற்பிடித்துவீச, இடி குரல் மடங்கல் சுமந்த பேரணையில் இருந்து— இடிபோன்றசத்தத்தையுடைய சிங்கங்களாற் றாங்கப்பட்ட பெரிய அரசாசனத்திலிருந்து, அரசு இயற்றிய இறைவன்— இராச்சியபரிபாலனஞ்செய்தஅரசன், அடிக்கு உரல் நிகராம் கரி— கால்களுக்கு உரலைஉவமிக்கப்படுகின்ற யானைகளும், கொடுவரி—புலிகளும், சேர் அடவியில் அ கணத்து அடைந்தான்—வாசஞ்செய்கின்ற காட்டை அப்பொழுதே அடைந்தனன் எ—று. (உஅ)

பாய்கலைப் புரவிப் பவனனு மியங்காப்பசுநிறப் புரவியந் தேரோன், காய்கதிர் நுழையாக் காட்டிடை விலங்கின் கணமெலாங் கொன்றுகொன் றருந்தித், தீயவா ளரக்கன் றிரிதருகாலைத் திருத்தகப் புதுக்கடி புரிந்த, தூயவா ணகையுந் தொழுகுலத் துதித்த தோன்றலு மாங்குறக் கண்டான்.

இ—ள்: பாய் கலை புரவி பவனனும் இயங்கா— பாய்கின்றமான்வாகனத்தையுடைய காற்றுஞ்செலலப்பெறாததும், பசு நிற புரவி அம் தேரோன்—பசியநிறக்குதிரைகளபூட்டிய அழகமைந்த தேரையுடையசூரியனது, காய் கதிர் நுழையா காட்டிடை— சுடுகின்றகிரணங்களுஞ்செல்லப்பெறாததுமாகிய காட்டின்கண்ணே, விலங்கின் கணம் எலாம் கொன்று கொன்று அருந்தி—மிருககூட்டங்களெல்லாவற்றையுங் கொலைசெய்து கொலைசெய்து தின்று, தீய வாள் அரக்கன் திரிதரு காலை—கொடிய வாள்பொருந்திய அரக்கனவன் திரிகின்றகாலத்தில், திரு தக புது கடி புரிந்த— அழகுடனே புதிதாகவிவாகஞ்செய்த, தூய வாள் நகையும்— சுத்தமாகிய ஒளிபொருந்திய

பற்களையுடைய (ஓர் பிராமணப்பெண்ணும்), தொழு குலத்து உதித்த தோன்றலும்—, பிராமணவம்சத்திற்றோன்றிய அவளதுநாயகனும், ஆங்கு உற கண்டான்—அக்காட்டில் வருவதைக்கண்டான் எ-று. (௨௯)

கண்டவா ளரக்க னுவகைமீ தூரக் களித்தன னொளிக்கதிர் மதியிற், றுண்டவா ளெயிறு துலங்கிட நகைத்துத் துன்னென நண்ணியொண் ணிறப்பூ, முண்டகா சனன்றன் குலத்தில் வந்துதித்த முனிவரன் புதல்வனைப் பற்றிக், கொண்டவா வுடன்வெண் ணிணத்தடி யருந்துங் கொள்கையிற் கொல்லுவான் றுணிந்தான்.

இ—ள்: கண்ட வாள் அரக்கன்— அவர்களின்வருகையைக்கண்ட வாட்படையையுடைய அரக்கனானவன், உவகை மீதூரக் களித்தனன்—மனத்தில்மிகவுங்களிப்படைந்து, ஒளிக்கதிர் மதியில் துண்ட வாள் எயிறு துலங்கிட நகைத்து—பிரகாசம்பொருந்திய கிரணங்களையுடைய பிறைச்சந்திரனைப்போன்ற ஒளியைக்கொண்ட வக்கிரதந்தங்கள் விளங்கும்படி சிரித்து, துன் என நண்ணி—வேகமாய்ச்சென்று, ஒள் நிற பூ முண்டக ஆசனன் தன் குலத்தில் வந்து உதித்த—ஒளிபொருந்திய செந்தாமரைப்பூவாசனராகிய பிரமதேவரதுகுலத்தில் வந்துதோன்றிய, முனிவரன் புதல்வனை பற்றி கொண்டு—முனிவர்புத்திரனாகிய அப்பிராமணனைப்பிடித்துக்கொண்டு, அவா உடன் வெள் நிண தடி அருந்தும் கொள்கையில் கொல்லுவான் துணிந்தான்—ஆசையோடு வெள்ளியநிணநீர்ப்பாய்கின்ற மாமிசத்தையுண்ணவேண்டுமென்ற எண்ணத்தோடு கொலைசெய்யத்துணிந்தான் எ—று. (௩0)

அன்னகாலையிலங் கவன்முக நோக்கி யந்தண னருந்துணைத் தேவி, மன்னகேள் சால கடங்கடர் மரபில் வந்தனை யல்லை நீ முனிந்து, முன்னமே யிவனைக் கொல்லுவை யாயின் முளிதரு விறகுதீ மூட்டி, யென்ன தாருயிரு மிறப்பனின் றெனக்கோ ருயிர்ப்பலி யீதியென் றிரங்கி.

இ—ள்: அன்ன காலையில் அங்கு அவன் முகம் நோக்கி—அச்சமையத்தில் அந்தக்கன்மாடபாதனின் முகத்தைப்பார்த்து, அந்தணன் அரும் துணை தேவி—அப்பிராமணனது அரியதுணையாகிய நாயகியானவள், மன்ன கேள்—மகாராசனேகேட்கக்கடவை, நீ சால கடங்கடர் மரபில் வந்தனை அல்லை—நீ அரக்கவம்சத்திற்பிறந்தவனல்ல, முனிந்து முன்னமே இவனை கொல்லுவை ஆயின்—கோபங்கொண்டுமுன்னரே (எனதுநாயகராகிய) இவரைக்கொல்லுவாயாகில், முளி தரு விறகு தீ மூட்டி—காய்ந்தவிறகுகளைக்கொண்டு அக்கினியைவளர்த்து, இன்று என்னது ஆர் உயிரும் இறப்பன்—(இப்பொழுதே) எனது அரிய உயிரையும் விட்டிறப்பேன், (ஆதலினால்)

எனக்கு ஓர் உயிர் பலி ஈதி என்று இரங்கி—எனக்கு ஒருஉயிர்ப்பிச்சை கொடுக்கக்கடைவையென்று மனங்கலங்கி எ—று. (௯௧)

தன்றுணைத் தடங்க ணீர்முலைத் தடத்திற் றாரைவிட் டொழுகநின் றிரங்கே, யன்றுரைத் திடுஞ்சொற் செவிக்கொளா னாகி யந்தணன் மைந்தனை விரைவிற், கொன்றுடற் குருதி பிழிந்துமுன் குடித்துக் கொழுந்தசை கறித்தகல் வாயின், மென்றுட னருந்திப் பைந்தொடிக் கெதிரா வெள்ளெலும் பனைத்தையு முமிழ்ந்தான்.

இ—ள்: தன் துணை தடம் கண் நீர் முலை தடத்தில் தாரை விட்டு ஒழுக நின்று இரந்து—தனது இரண்டு விசாலமாகிய கண்களினின்றும் நீரானது ஸ்தனங்களின்மேல் தாரையாகப்பாயும்படி நின்று யாசித்து, அன்று உரைத்திடும் சொல்— அப்பொழுது அப்பெண்ணானவள் கூறியசொல்லை, செவி கொளான் ஆகி—செவியிலேற்றுக்கொள்ளாதவனாய், அந்தணன் மைந்தனை விரைவில் கொன்று—அப்பிராமணப்புதல்வனை வேகமாய்க் கொலைசெய்து, உடல் குருதி பிழிந்து முன் குடித்து—சரீரத்தின் இரத்தத்தை முன்னரே பிழிந்துகுடித்து, கொழும் தசை கறித்து—கொழுமையாகிய மாமிசத்தைக் கடித்து, அகல் வாயின் மென்று உடன் அருந்தி—அகன்றவாயிலே அதுக்கி உடனேதின்று, பைம் தொடிக்கு எதிரா—பசிய வளையலையணிந்த அப்பெண்ணுக்கெதிரே, வெள் எலும்பு அனைத்தையும் உமிழ்ந்தான்—வெண்ணிறமாகிய எலும்புகள் எல்லாவற்றையும் கக்கினான் எ—று.

ஏ அசை. (௯உ)

என்செயவா ளுமிழ்ந்த வென்பெலா மடியிட் டெடுத்தனளெய்தியவ் வென்பை, மின்செய்தீ யதனிற் பெய்திது செய்த வேந்தர்கோன் றன்பதி மேவிப், பொன்செய்பூண் முலையார் முலைநலப் போகம் புணருநா ளிறக்கவென் றுருத்து, முன்செய்தீ வினையாற் சாபமீ திட்டு முழங்கழ லூடுபுக் கவிந்தாள்.

இ—ள்: என் செய்வாள்— ஏதுஞ் செய்யாதுசெய்குவள், உமிழ்ந்த என்பு எலாம் எடுத்தனள் மடி இட்டு எய்தி —அவ்வரக்கனானவன் கக்கிய என்புகளெல்லாவற்றையும் எடுத்து மடியிலிட்டுக்கொண்டு நடந்துபோய், அவ் என்பை—அவ்வெலும்புகளை, மின் செய் தீ அதனில் பெய்து—மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற அக்கினியிலிட்டு, இது செய்த வேந்தர் கோன் தன் பதி மேவி—இச்செய்கைகளைச்செய்த அரசர்க்கரசனாகிய மித்திரசகன் தனது நகரத்தையடைந்து, பொன் செய் பூண் முலையார் முலை நல போகம் புணரு நாள்-பொன்னாற்செய்த ஆபரணங்களையணிந்த ஸ்தனங்களையுடைய பெண்களோடு ஸ்தனபோகத்தையனுபவிக்குங்காலத்து, முன் செய் தீவினையால் இறக்க என்று உருத்து சாபம் ஈது இட்டு—முன்னமேசெய்த தீவினையின்காரண

ணத்தினால் இறந்துபோகக்கடவனென்று கோபங்கொண்டு இச்சாபத்தையி ட்டு,முழங்கு அழல் ஊடு புக்கு அவிந்தாள்—ஆரவாரித்தெரிகின்ற அக்கினி யில்விழுந்து எரிந்தாள் எ—று. (௩௩)

வேறு.

புரமுனியும் பரமனிரு பதப்போது முப்போதும் போற்றுந் தெய்வ, வரமுனிவன் சாபமகன் றரசனிரு மருப்பொருமும் மத நால் வாய்க்குஞ், சரமுனிவன் பிடிதிரிச ரிகடெரிந்தே யரிதுருவு ந் தடங்கா னீங்கிக், கரமுனியுங் கணையுமில்லாக் காமனென வ யோத்திநகர் கடிதி னுற்றான்.

இ—ள்: புர முனியும் பரமன் இரு பத போது—முப்புரங்களையும ழித்த சிவபெருமானது இரண்டு திருப்பாதங்களையும், முப்போதும் போற் றும் தெய்வ வரமுனிவன் சாபம் அகன்று—காலை உச்சி மாலையாகிய முக்கா லங்களினும் துதிக்கின்ற தெய்வத்தன்மையையுடைய வசிட்டமுனிவரது சா பம்நீங்கப்பெற்று, அரசன்—அரசனாகிய மித்திரசகன், இரு மருப்பு-இர ண்டுகோடுகளையும், ஒரு மும்மதம்-ஒப்பற்ற மும்மதங்களையும், நால் வாய் கு ஞ்சரம்—தூங்குகின்றவாயையுமுடைய ஆண்யானைகளும், முனி-யானைக்கன் றுகளும், வன் பிடி—வலிய பிடியானைகளும், திரி சரிகள் தெரிந்து-திரிகின்றவ ழிகளைத்தேடி, அரி துருவும்—சிங்கங்கள்தொடருகின்ற, தடம் கான் நீங்கி-வி சாலித்த காட்டைவிட்டு நீங்கி, கரமுனியும் கணையும் இல்லா காமன் என— கையிற்பொருந்திய கருப்புவில்லும் புஷ்பபாணமுமில்லாத மன்மதனைப்போ ல, அயோத்திநகர் கடிதில் உற்றான்—அயோத்தியாபுரியை விரைவிற்சென் று அடைந்தனன் எ—று.

ஏ அசை. (௩௪)

நெடிதுதினம் பிரிந்தகன்ற நீர்மையினாற் றிரண்டதிண்டோ ணிருபன் றானு, மடியிணையா மலர்கள் கன்றிச் சேப்பூர விரைந்து நடந் தன்பினோடும், பிடியதனை நாடிவரும் பெருந்தடக்கைக் க ளிறெனவேள் பெய்யும் வெய்ய, வடியயில்வா ளியினுடைந்து வ ருந்தியந்த மதயந்தி மனையுட் புக்கான்.

இ—ள்: நெடிது தினம் பிரிந்து அகன்ற நீர்மையினால்—நெடுநாளா கநீங்கிப் பிரிந்திருந்ததன்மையினால், திரண்ட திண் தோள் நிருபன் தானு ம்—திரண்ட வலிய தோள்களையுடைய அவ்வரசனும், அடி இணையாம் மல ர்கள் கன்றி சேப்பூர—பாதங்களாகிய இரண்டுமலர்களும் கன்றுதலடைந்து செந்நிறங்கொள்ள, விரைந்து நடந்து—வேகமாய் நடந்துசென்று, அன்பி னோடும் பிடி அதனை நாடிவரும் பெரும் தடக்கை களிறென— அன்போடு பெண்யானையைத்தேடிவருகின்ற பெரிய துதிக்கையையுடைய ஆண்யானை யைப்போல, வேள் பெய்யும் வெய்ய வடி அயில் வாளியின் உடைந்து- மன்

மதனாலே செலுத்தப்படுகின்ற கொடிய மிகக்கூரிய அம்புகளினால் மனமழி ந்து, வருந்தி அந்த மதயந்தி மனையுள் புக்கான்— தன்புற்று தனது மனைவி யாகிய மதயந்தியுடைய மாளிகையிற் பிரவேசித்தான் எ—று. (௫௫)

வந்தவடன் றனைமுலைகண் மருவுவான் றுணிந்திடலு மன் னகானி, லந்தநிசி சரனாகி முனிவனைக்கொன் றனையதனா லவன் றன்றேவி, வெந்தழலின் மிகச்சீறி யுன்மனைவி மார்முதலா விள ம்பு மாதர், தந்தனமீ துறத்தழுவி லிறத்தியெனக் கொடுஞ்சாபஞ் சாற்றி வீந்தாள்.

இ—ள்: வந்து அவள் தன் துணை முலைகள் மருவுவான் துணிந்திட லும்—அங்ஙனம் வந்து அவளது இரண்டு ஸ்தனங்களையும் தழுவும்படி து ணிதலும், மன்ன—மகராசனே, கானில அந்த நிசிசரன் ஆகி முனிவனை கொன்றனை—காட்டில் அந்த அரக்கனாகி (இருந்தகாலத்தில்) ஒருபிராமண னைக்கொலைசெய்தாய், அதனால்—அதனாலே, அவன் தன் தேவி வெம் தழ லின் மிக சீறி—அவனுடைய மனைவியானவள் கொடிய அக்கினியிலும்பார் க்க அதிககோபங்கொண்டு, உன் மனைவிமார் முதலா விளம்பும் மாதர் தம் த னமீது உற தழுவில்—உனது மனைவியர்முதலாகக்கூறப்படுகின்ற பெண்க ளது ஸ்தனங்களின்மேல் பொருந்தத்தழுவுவையாயின், இறத்தி என கொ டும் சாபம் சாற்றி வீந்தாள்—இறக்கக்கடவையென்று கொடிய சாபஞ்சொ ல்லி இறந்தாள் எ—று. (௫௬)

ஆதலினா லெனையணைதற் கடாதுனக்கென் றவள்கூற வரச ன் மோகக், காதலினா லிடைந்து செம்பொற் கலத்தமுதம் பெற் றருந்தக் கடனி லான்போ, னோதகவுற் றில்லமிலாற் கருமகப்பே றில்லையுனை நுனித்து நோக்கிற், சாதகருக் கிகபரத்திற் பலன் கிடையா தெனத்தேறித் தலமீக் கொண்டே.

இ—ள்: ஆதலினால் எனை அணைதற்கு அடாது உனக்கு என்று அ வள் கூற—அக்காரணத்தால் என்னைக்கூடிச் சையோகிப்பது உமக்குத்தகா தென்று அம்மதயந்தியானவள் சொல்லவும், அரசன் மோக காதலினால் இ டைந்து—அவ்வரசனானவன் விகார ஆசையினால் மிகவும் வாட்டமடைந்து, செம்பொன் கலத்து அமுதம் பெற்று அருந்த கடன் இலான் போல் நோ தகவு உற்று—சிவந்த பொன்னினாற்செய்யப்பட்டகலசத்தில் அமுதத்தை ப்பெற்றும் அதனை உண்ணுதற்குக்கடனில்லாதவனைப்போலத் துன்பமடைந் து, இல்லம் இல்லாற்கு அருமகப் பேறு இல்லை— மனைவியில்லாதவர்களுக் கு அரிய புத்திரப்பேறு இல்லை, உனை நுனித்து நோக்கில்—இதனை ஆராய் ந்து பார்க்கில், சாதகருக்கு இகபரத்தில் பலன் கிடையாது என தேறி— கொலைஞருக்கு இம்மைமறுமைப்பலன்கள் கிடையாது என்று மனத்திற்றெ

ளிலடைந்து, தலம் மீ கொண்டு—மேலாகிய ஒரு புண்ணியதலத்தையிடமா கக்கொண்டு எ—று. (௩எ)

ஒருமனமா யிருவினையின் றுவக்கறமுக் குறும்பெறிந்திட் டுயர்நால் வேதந், தருபொருளா யைந்தவித்தைந் தழனாப்ப ணின்றுபெருந் தவங்க ளாற்றிக், கருதருமா மறலிவலை கடந்துமுக் கா லமுமுணர்ந்து கணிக்க வல்ல, பொருவருமா முனிவரர்க ளனுமதிகொண் டரியதவம் புரியு மெல்லை.

இ—ள். ஒரு மனமாய்—ஏகசிந்தையையுடையவனாய், இரு வினையின் துவக்கு அற முக்குறும்பு எறிந்திட்டு—நல்வினை தீவினைகளின் தொடர்பு அறும்படி காமம் வெகுளி மயக்கமாகிய முக்குறும்புகளையும் நீக்கி, உயர் நால் வேதம் தரு பொருள் ஆய்— உயர்வாகிய நான்குவேதங்களினதும் உட்பொருளை ஆராய்ந்து, ஐந்து அவித்து—பஞ்சப்புலன்களையுமடக்கி, ஐ தழல் நாப்பண் நின்று பெரும் தவங்கள் ஆற்றி — பஞ்சாக்கினிமத்தியில் நின்று பெரிய தவங்களைச்செய்து, கருதரும் மா மறலி வலை கடந்து— நினைத்தற்கரிய பெரிய யமனது (இறப்புஎன்னும்) வலையையுங்கடந்து, முக்காலமும் உணர்ந்து—செல்காலம் நிகழ்காலம் வருங்காலமாகிய முக்காலங்களையுமறிந்து, கணிக்கவல்ல பொரு அரு மா முனிவரர்கள் அனுமதி கொண்டு-மதிக்கத்தக்க வலிமையையுடைய ஒப்பற்ற மகத்தாகிய முனிவர்களது அனுமதியைக் கொண்டு, அரிய தவம் புரியும் எல்லை—அருமையாகிய தவங்களைச்செய்கின்றகாலத்தில் எ—று. (௩அ)

வேறு.

கறைவிட முகுத்தல் போலக் காய்சின மிகுத்து வானிற்
பிறையெயி றிலங்கப் பேழ்வாய்ப் பேய்மக ளொருத்தி பற்றி
யிறைவனை வருத்த வீதீங் கென்னெனப் பன்னு தொன்னூன்
முறைதெரிந் தருளுந் தெய்வ முனிவரை வினவி னானே.

இ—ள்: கறை விடம உகுத்தல் போல காய் சினம் மிகுத்து—கரியநஞ்சைக் கக்கினாற்போலக் கொதிக்கின்ற கோபமதிகரித்து, வானில் பிறை எயிறு இலங்க—ஆகாயத்தின்கண்ணேயுள்ள பிறைச்சந்திரனைப்போன்ற வக்கிரதந்தங்கள் பிரகாசிக்க, பேழ்வாய் பேய்மகள் ஒருத்தி— பகிர்ந்த வாயையுடைய ஒரு பேய்ப்பெண்ணானவள், இறைவனை பற்றி வருத்த —அரசனைப் பிடித்து வருத்துதல்செய்யவும், இங்கு ஈது என் என— இவ்விடத்து என்னை வருத்துவது என்னையென்று, பன்னு தொல் நூல் முறை தெரிந்து அருளும் தெய்வமுனிவரை வினவினான்— கூறப்படுகின்ற பழமையாகிய சாஸ்திரங்களையறிந்து அனுக்கிரகிக்கின்ற தெய்வத்தன்மையையுடைய முனிவர்களை வினாவினான் எ—று.

ஏ-அசை. (௩௯)

கணித்துமுக் காலந் தேருங் கடவுண்மா முனிவர் துத்திப்
பணித்தலைக் கிடந்த ஞாலம் பரித்தரு ளரசே முன்னாட்
குணித்தவா ளரக்க னாகிக் கோதில் வேதியனைக் கொன்று
பிணித்தவெம் பாவங் கண்டா யலகையாய்ப் பிணித்த தென்றார்.

(இ—ள்: கணித்து முக்காலம் தேரும் கடவுள் மா முனிவர்—அளவு படுத்தி முக்காலங்களையுமறிகின்ற தெய்வத்தன்மையையுடைய மகத்தாகிய முனிவர்கள், துத்தி பணி தலை கிடந்த ஞாலம் பரித்த அருள் அரசே—புள்ளிகளைகொண்ட படமகுடத்தையுடைய ஆதிசேடன் சிரமிசைத்தாங்கிய பூமியைப் பரிபாலனஞ்செய்கின்ற மகாராசனே, முன்னாள் குணித்த வாள் அரக்கன் ஆகி—முன்னாளிலே நினைக்கத்தகுந்த வாள்பொருந்திய இராட்சதனாய், கோதில் வேதியனை கொன்று பிணித்த வெம்பாவம்—குற்றமில்லாத பிராமணனைக் கொலைசெய்தமையால் பற்றிய கொடிய பாவமானது, அலகையாய் பிணித்தது என்றார்—பைசாசமாக உன்னைப்பற்றிக்கொண்டது என்று கூறினார்கள் எ—று.

கண்டாய்-முன்னிலையசை. (௪0)

அப்பாவம் தீர்ப்பா னெண்ணி யலைகடற் சேது முன்னாச்
செப்பருந் தீர்த்தம் யாவுஞ் சென்றுடன் மூழ்கி மூழ்கி
யொப்பரும் பிரமன் றன்னை யுந்தியிற் றந்த மாயன்
பைப்பணி சடையான் வைகும் பதிபல வணக்கஞ் செய்தான்.

இ—ள்: அப்பாவம் தீர்ப்பான் எண்ணி—அந்தப்பாவத்தை நீக்கக்கருதி, அலைகடல் சேது முன்னா செப்பரும் தீர்த்தம் யாவும்—அலைபொருந்திய கடலிலுள்ள சேதுதீர்த்தம்முதலாகச் சொல்லுதற்கரிய தீர்த்தங்கள் யாவற்றிலும், சென்று உடன் மூழ்கி மூழ்கி—போயுடனே முழுகிமுழுகி, ஒப்பரும் பிரமன் தன்னை உந்தியில் தந்த மாயன்—உவமைபற்ற பிரமதேவனை உந்தியங்கமலத்திற்றோற்றுவித்த மகாவிஷ்ணுமூர்த்தியும், பை பணி சடையான்—படம்பொருந்திய சர்ப்பங்களையணிந்த சடையையுடைய சிவபெருமானும், வைகும் பதி பல வணக்கம் செய்தான்—எழுந்தருளியிருக்கின்ற புண்ணியதலங்கள் பலவற்றையும் வணங்கினான் எ—று (௪௧)

உந்துவெண் டிரைநீர் வேலி யுலகெலா முழுந்து சூழ
வந்துமப் பிரம கத்தி மாறிடா திருத்த லாலே
யிந்துமண் டலம்போ யோங்கு மிஞ்சிசூழ் மிதிலை ஞாங்கர்க்
கந்துகொல் களிற்று வேந்தன் கவலையுற் றிருந்த காலை.

இ—ள். உந்து வெண் திரை நீர் வேலி உலகு எலாம்—வெள்ளியதிரையெறிகின்ற கடல்சூழ்ந்த உலகமெங்கும், உழந்து சூழ வந்தும்—வருந்திச் சுற்றிவந்தும், அப்பிரமகத்தி மாறிடாது இருத்தலால்—அப்பிரமகத்தி

தோஷமானது நீங்காமலிருந்தமையால், இந்த மண்டலம் போய் ஓங்கும் இஞ்சி சூழ் மிதிலை ஞாங்கர்—சந்திரமண்டலவ்வரையுஞ்சென்று உயர்ந்த மதிலாற்சூழப்பட்ட மிதிலைநகரின்பக்கத்தில், கந்து கொல் களிற்று வேந்தன்—கட்டுந்தறியைமுறிக்கின்ற யானைச்சேனைகளையுடைய அரசனானவன், கவலை உற்று இருந்த காலை—மனததில் துன்பமடைந்து இருந்தகாலத்தில் எ—று.

ஏ—அசை. (சஉ)

மாதவர் மருங்கு சூழ வளரிள மதியஞ் சூடு
நாதனிங் கிவனு மென்ன நானில மதிக்கத் தக்கோன்
பாதபங் கயங்க ணோவப் பார்த்திவ னிருக்கும் பாங்கர்க்
கோதம னென்னு நாமக் குலமறை முனிவன் வந்தான்.

இ—ள் மா தவர் மருங்கு சூழ—மகத்தாகிய முனிவர்கள் பக்கத்தே சூழ்ந்துவர, வளர இளமதியம சூடும் நாதன் இங்கு இவனும் என்ன—வளருகின்ற இளபபிறைச்சந்திரனை அணிந்த சிவபெருமானே இவராகுமென்று கூறும்படி, நானிலம் மதிககத தக்கோன்—விசாலமாகிய பூமியெங்கும் மதிககததககவரும, கோதமன் என்னும நாம குல மறை முனிவன்—கௌதமரெனனும் பெயரையுடையவருமாகிய உயர்வுபொருந்திய வேதங்களையறிந்த முனிவரானவர், பாத பங்கயங்கள் நோவ—தாமரைமலர்போன்ற பாதங்கள்வருந்தும்படி, பார்த்திவன் இருககும் பாங்கர் வந்தான்— மித்திரசகமகாராசனிருககின்றஇடத்தின பககத்தேவந்தார எ—று. (சங)

அன்றிருந் தவனைப் போற்றி யடிதொழு தங்கை கூப்பி
நின்றிடும் வடிவேற் றானை நிருபனுக் காசி கூறி
நன்றிருந் தனையோ வென்ன நவின்றுநின் முகத்தின் சோதி
குன்றிய தியாது வந்த குறையெனக் கறைதி யென்றான்.

இ—ள் அன்று இருந் தவனை போற்றி—அப்பொழுதே பெரிய தவத்தையுடைய அம்முனிவரைத துதித்து, அடி தொழுது அம் கை கூப்பி நின்றிடும்—பாதங்களை நமஸ்காரஞ்செய்து அழகிய கைகளிரண்டையுங்குவித்துக்கொண்டுநின்ற, வடிவேல் தானை நிருபனுககு—கூரிய வேற்படையைததாங்கிய மித்திரசகமகாராசனுககு, ஆசி கூறி—ஆசீர்வாதஞ்சொல்லி, நன்று இருந்தனையோ என்ன நவின்று—சவுககியமாகவிருககின்றாயா என்று வினவி, நின் முகத்தின் சோதி குன்றியது—உனதுமுகததிற்பொருந்தியபிரகாசமகெட்டுபபோனது, யாது வந்த குறை எனககு அறைதி என்றான்—நின்மாட்டுவநத தாழ்வுயாது எனககுககூறககடவையென்றார எ—று. (சச)

திருந்துதி முற்றுங் கறந்தோனை திசைமுகற் குமை சான்றோ
னருந்ததிக் காவி யன்ன வருண்முனி யாக்க ணுகு
வருந்துதி யென்னச் சாபம் வழங்கலால் வந்த தென்னைப்
பொருந்துதி கூறிப் பின்னு நிகழ்ந்தவை பேச லுற்றான்.

இ—ள்: திருந்துதி முற்றும் கற்றோன்— அழகிய வேதங்களை முற்ற க்கற்றவரும், திசை முகற்கு உவமை சான்றோன்—பிரமதேவருக்கு ஒப்பான வரும், அருந்ததிக்கு ஆவி அன்ன அருள்முனி—அருந்ததிதேவிக்குஉயிரொ த்த நாயகருமாகிய அருளையுடையவசிஷ்டமுனிவர், அரக்கன் ஆகி வருந்து தி என்ன சாபம் வழங்கலால்— இராட்சதனாகப் போய் வருந்தக்கடவையெ ன்று சாபமிட்டமையால், வந்தது என்று—இவ்வாபத்துவந்ததென்று, பெ ரும் துதி கூறி—பெரிய துதிகளைச்சொல்லி, பின்னும்—பின்னரும், நிகழ்ந் தவை பேசலுற்றான்— நடந்தசம்பவங்களைக்கூறினான் எ—று. (சரு)

அரக்கனாய் வனத்தி லன்னா ளந்தணற் கொன்ற பாவ
மிரக்கமி லலகை யாகி யிங்கெனைத் தொடர்த லாலே
பரக்கும்வெண் டிரைத்தீர்த் தங்கள் பற்பல படிந்து பொற்கோ
புரக்கவின் படைத்த கோயிற் புண்ணிய தலஞ்சே வித்தேன்.

இ—ள்: அரக்கன் ஆய் வனத்தில் அந்நாள் அந்தணன் கொன்ற பாவ ம்—இராட்சதனாய்க் காட்டிற்சென்று அக்காலத்தில் பிராமணனைக்கொன்ற பாவமானது, இரக்கம் இல் அலகை ஆகி— இரக்கமில்லாத பிசாசவடிவங் கொண்டு, இங்கு எனை தொடர்தலால்—இவ்விடத்து என்னைத்தொடர்ந்து பற்றியமையால், பரக்கும் வெள் திரை தீர்த்தங்கள் பல்பல படிந்து— பரவி ய வெள்ளியதிரைகளையுடைய பலபலதீர்த்தங்களிலும்ஸ்நானஞ்செய்து, பொ ன் கோபுர கவின் படைத்த கோயில் புண்ணிய தலம் சேவித்தேன்—அழகி ய கோபுரச்சிறப்புகளையுடைய கோவில்பொருந்திய புண்ணியத்தலங்களில் தொண்டுகள் செய்தேன் எ—று.

ஏ—அசை. (சகூ)

எண்ணருந் தருமஞ் செய்தே னீறின்மந் திரநவின்றேன்
விண்ணவர்க் கவிக ணல்கும் வேள்விகள் பலவுஞ் செய்தேன்
பண்ணரும் பாவ நீங்கப் பெற்றிலேன் படிவ வுன்றன்
கண்ணருள் பெற்றே னுய்யுங் காலமு முளதா மென்றே.

இ—ள்: எண் அரும் தருமம் செய்தேன்—அளவில்லாத தருமங்களைச் செய்தேன், ஈறில் மந்திரம் நவின்றேன்—எல்லையில்லாதமந்திரங்களைச் செபி த்தேன், விண்ணவர்க்கு அவிகள் நல்கும் வேள்விகள் பலவும் செய்தேன்— தேவர்களுக்கு அவிப்பாகத்தைக்கொடுக்கின்ற அனேகயாகங்களைச்செய்தே ன், பண் அரும் பாவம் நீங்க பெற்றிலேன்—செய்த அரியபாவமானது நீங்க ப்பெற்றிலேன், படிவ—முனிவரே, உன் தன் கண் அருள் பெற்றேன்—உ மது கிருபாநோக்கத்தையின்று அடைந்தேன், உய்யும் காலமும் உளதாம் எ ன்று—இனியான் உய்ந்துபடுகின்றநற்காலமும் உண்டு என்று கூறி எ—று.

ஏ—அசை. (சஎ)

அன்னமா முனிவன் றூய வடிமுடி சேர்த்தி நின்ற
மன்னவன் றன்னை நோக்கி வருந்தலை மதியஞ் சூடும் [வா
பின்னலஞ் சடையாற் கன்பு பெருக்குநோன் புக்கட்குண்மே
யுன்னரும் விரத மொன்றுண் டுணர்ந்திலை போலு மானீ.

இ—ள்: அன்ன மா முனிவன் தூய அடி முடி சேர்த்தி நின்ற மன்னவன் தன்னை நோக்கி—அந்தக் கௌதமமுனிவருடைய சுத்தமாகியபாதங்களைச் சிரசிற்சூடிநின்ற அவ்வரசனைப்பார்த்து, வருந்தலை— அரசனே நீ துன்புறுதலை நீங்குவாய், மதியம் சூடும் பின்னலம் சடையாற்கு— சந்திரனையணிந்த முறுகியசடையையுடையசிவபெருமானுக்கு, அன்பு பெருக்கு நோன்புகட்குள்—அன்பை அதிகரிக்கச்செய்கின்ற விரதங்களுள், மேலாய் உன்ன அரும் விரதமு ஒன்று உண்டு—நினைத்தற்கரிய மேலாகிய விரதம் ஒன்று உள்ளது, நீ உணர்ந்திலை போலும்—நீயறிந்திலாய்போலும் எ—று.

ஆல்—அசை. (சஅ)

மாகமா மதியிற் றேய்ந்த மதியிற்பன் னான்காம் பக்கத்
தேகநா யகனைப் போற்றி யீரிரு சாமந் தோறுந்
தாகமாம் பசிக்கூண் டுஞ்ச றவிர்ந்துளத் தொருமை கூரன்
பாகமா லூரந் தன்னா லருச்சியு னரந்தை நீங்கும்.

இ—ள்: மாக மா மதியில் தேய்ந்த மதியில்— பெருமைபொருந்திய மாசிமாதத்தில்வருகின்ற அபரபக்கத்தில், பன்னான்காம் பக்கத்து—பதினான்காந்திதியாகிய சதுர்த்தசித்திதியில், ஏக நாயகனை போற்றி—ஒரேதலைவராகிய சிவபெருமானைத்துதித்து, ஈரிரு சாமம் தோறும்—(இரவின்) நான்குசாமங்களினும், தாகமாம் பசிக்கு ஊண் துஞ்சல் தவிர்ந்து—தாகம் பசி என்னுமிவற்றிற்கு உணவுகொள்ளுதலும் நித்திரையுமின்றி, உளத்து ஒருமை கூர் அன்பாக—மனத்தை ஒருவழிப்படுத்தி அன்புகொண்டு, மாலூரம் தன்னால் அருச்சி—வில்வபத்திரங்கொண்டு பூசிக்கக்கடவை, உன் அரந்தை நீங்கும்— உனது துன்பங்கள்யாவுமழிந்துபடும் எ—று. (சக)

வரையிலக் காகத் தொட்ட வாளிக டவறு வோங்கித்
தரைமிசை யடித்த கைதான் றப்பிடா ததுபோ லீசன்
குரைகழற் பதும நோக்கிக் குறித்தநோன் பியற்றி நின்றாற்
புரையறப் பலிக்கு மென்னாப் புரவலற் குரைத்துப் பின்னும்

இ—ள்: வரை இலக்காக தொட்ட வாளிகள் தவறு— மலையையிலக்காகக்கொண்டு செலுத்திய பாணங்கள் அம்மலையிற் படாது தவறமாட்டா, ஓங்கி தரை மிசை அடித்த கை தான் தப்பிடாது— உயர்த்திப்பூமியிலடித்த கையானது அப்பூமியில் படுதல் தவிராது, அது போல்—அதுபோல, ஈசன் குரை கழல் பதுமம் நோக்கி குறித்த நோன்பு இயற்றி நின்றால்— சிவபெருமானது ஒலிக்கின்றகழலணிந்தபாததாமரைகளைச்சிந்தித்துக் குறிக்கப்ப

ட்ட சிவராத்திரிவிரதத்னதயனுஷ்டித்து வருவாயாயின், புரை அற பலி க்கும் என்று புரவலற்கு உரைத்து—குற்றமின்றி எண்ணியகருமங்களெல்லா ஞ் சபலமாகுமென்று அவ்வரசனுக்குக்கூறி, பின்னும்—பின்னரும் எ-று.

நற்றல மதனி லிந்த நவையிலா விரத நோற்கிற்
சற்றல மிகுதி நன்மை தந்திடுஞ் சடுதி யென்னுக்
குற்றமின் முனிவன் கூறக் குறிக்குமத் தலமு மெற்கே
சொற்றருளைய வென்னக் கௌதமன் சொல்ல லுற்றான்.

இ—ள்: நல் தலம் அதனில் இந்த நவை இலா விரதம் நோற்கில்—புண்ணியதலத்திலிருந்து குற்றமற்ற இவ்விரதத்தையனுஷ்டித்தால், சற்றல மிகுதி நன்மை சடுதி தந்திடும் என்று—குறைவில்லாத மிக்கநன்மையை ச்சீக்கிரத்திலே கொடுக்குமென்று, குற்றம் இல் முனிவன் கூற— குற்றமில்லாத அம்முனிவர் சொல்ல, குறிக்கும் அத்தலமும் எற்கே சொற்றருள் ஐய என்ன—குறிக்கப்பட்ட அப்புண்ணியதலத்தையும் ஐயனே அடியேற்குக்கூறி யருளுகவென்று வேண்டலும், கௌதமன் சொல்லல் உற்றான்— கௌதமமுனிவர் கூறுவாராயினார் எ—று. (௫க)

வேறு.

சொன்ன தலங்களின் முன்னி வருந்திய தூயோய் நீ
யுன்ன வருங்கிரி மன்ன னளித்திடு முமைகூட
மின்னவி ரஞ்சடை முன்னவ னன்பொடு மேவுங்கோ
கன்ன மெனும்பதி யொன்றுள தங்கது காணுயால்.

இ—ள். சொன்ன தலங்களில் முன்னி வருந்திய தூயோய் நீ—சொல்லப்பட்ட புண்ணியதலங்களில் விரும்பிச்சென்று தொண்டுகள்செய்து துன்பமடைந்த பரிசுத்தனே நீ, உன்ன அரும் கிரி மன்னன் அளித்திடும் உமை கூட —நினைத்தற்கரிய மலையரசன்பெற்ற உமாதேவியாரோடு, மின் அவிர் அம் சடை முன்னவன் அன்பொடு மேவும்— மின்னல்போலவொளிவிளங்குகின்ற அழகிய சடையையுடைய தலைவராகிய சிவபெருமான் அன்போடெழுந்தருளியிருக்கின்ற, கோகன்னம் எனும் பதி ஒன்று உளது—கோகர்னம் என்னும்பெயரையுடைய புண்ணியதலம் ஒன்றுள்ளது, அங்கு அது காணுய்—அவ்விடத்துச்சென்று அதனைத்தரிசிக்கக்கடவை எ—று.

ஆல்—அசை. (௫உ)

அத்தல னிற்றகை முற்று முணர்த்திட வார்வல்லார்
முத்த நகைத்திரு வுக்கிறை திக்கு முகத்தோனாற்
சித்த ரியக்கர் மயக்கறு நற்றவர் சேணுடர்
நித்த மியற்று தவத்தின் முயற்சியி னிற்பாரே.

இ—ள்: அ தலனில் தகை முற்றும் உணர்த்திட ஆர் வல்லார்—அக் கோகர்னத்தினது பெருமைகள்முழுவதையும் அறியும்படி சொல்லவல்லவர்

யாவர், முத்த நகை திருவுக்கு இறை—முத்துப்போன்ற பற்களையுடைய இலக்குமிநாயகராகிய விஷ்ணுமூர்த்தியும், திக்கு முகத்தோன்— பிரமதேவரும், நல் சித்தர்—நல்லசித்தர்களும், இயக்கர்-இயக்கர்களும், மயக்கறு நல் தவர்—மயக்கமற்ற நல்ல தவசிரேஷ்டர்களும், சேண் நாடர்—சுவர்க்கவாசிகளும் ஆகிய இவர்கள், நித்தம் இயற்று தவத்தின் முயற்சியில் நிற்பார்— எந்நாளுஞ் செய்யப்படுகின்ற தவமுயற்சியோடு அங்கேநிற்பார்கள் எ—று.

ஏ-அசை. (௫௩)

ஆடு முனிக்குழு வாயிர கோடி யரன்சீரைப்
பாடு முனிக்கண மெண்ணில சித்தி படுத்தியோகிற்
கூடு முனித்திரள் பற்பல வுற்றிடு கோகன்னம்
வீடு பெறுற்கினி யப்பதி யொப்புற வேறுண்டோ.

இ—ள். ஆடு முனி குழு ஆயிரகோடி—(ஆனந்தத்தினாலே) கூத்தாடுகின்ற ஆயிரக்கணக்கான முனிவர்கூட்டங்களும், அரன் சீரை பாடு முனி கணம் எண்ணில— சிவபெருமானுடைய கீர்த்திகளைப்பாடுகின்ற அளவில்லாதமுனிவர்கூட்டங்களும், சித்தி படுத்தி யோகில் கூடு முனி திரள் பல்பல உற்றிடு— (சாதனைகளைச்) சித்திபடுத்தி யோகத்திலிருக்கின்ற முனிவர்கூட்டங்கள்பற்பலவுமுள்ள, கோகன்னம்—கோகர்ணமாகிய, அப்பதி ஒப்புற வீடு பெறற்கு இனி வேறு உண்டோ—அத்தலத்திற்குச்சமமாக மோட்சவீட்டைப்பெறுதற்கு வேறுமொரு தலமுள்ளதோ எ—று. (௫௪)

அத்துடை மாதவர் வானவர் மானவ ராஞேர்மா
சித்துடை யார்வெரு வக்கட மிக்கிடு திக்காளே
முத்துடை வால மருப்பணி மார்பின் முரித்தோன்கம்
பத்துடை யானகன் முற்பக லர்ச்சனை பணவெண்ணி.

இ—ள்: அத்து உடை மாதவர்-காவிவஸ்திரம் தரித்த மகாதவத்தர்களும், வானவர்—தேவர்களும், மானவர் ஆனோர்—மனுடர்களும், மா சித்து உடையார் வெருவ—பெரிய சித்திபெற்றசித்தர்களுமஞ்சும்படி, கடம் மிக்கிடு திக்கு ஆனை முத்து உடை வால மருப்பு— மதத்தைமிகப்பொழிகின்ற அட்டதிக்குயானைகளினது முத்துக்கள்பொருந்திய வெள்ளிய கொம்புகளை, அணி மார்பின் முரித்தோன்—அழகிய மார்பின்கண்ணே முரியும்படிசெய்தவனும், கம் பத்து உடையான்—பத்துச்சிரசுகளையுடையவனுமாகிய இராவணன், அகல் முற்பகல் அர்ச்சனை பண எண்ணி— சென்ற முன்னைக்காலத்துப் பூசனைசெய்யக்கருதி எ—று. (௫௫)

ஓர்சிவ லிங்க முழும்படி வானி னுயர்ந்தோங்கு
மேர்பெறு வெள்ளி விலங்கலி னற்றவ மேசெய்யக்
கார்பெறு கண்ட னரக்கர் குலத்திறை கைதன்னிற்
பேர்பெறு லிங்க மளித்தவ னேடிவை பேசுற்ருன்.

இ—ள்: ஓர் சிவ லிங்கம் உறும்படி— ஒருசிவலிங்கத்தைப் பெற்றுக் கொள்ளும்பொருட்டு, வானில் உயர்ந்து ஓங்கும் ஏர்பெறு வெள்ளி விலங்கலில்—ஆகாயமட்டும் உயர்ந்துவிளங்குகின்ற அழகுநிறைந்த வெள்ளியங்கைலாசத்தில், நல் தவம் செய்ய—நல்லதவத்தைச்செய்ய, கார் பெறு கண்டன்— நீலகண்டராகிய சிவபெருமான், அரக்கர் குலத்து இறைகை தன்னில்—இராட்சதவமிசத்தாருக்கு அரசனாகிய இராவணனது கையில், பேர் பெறும் லிங்கம் அளித்து— பேர்பெற்ற ஒரு சிவலிங்கத்தைக்கொடுத்து, அவனோடு இவை பேசுற்றான்— அவ்விராவணனுக்கு இவ்வாறுகூறியருளுவார் எ—று.

ஏ—அசை. (௫௬)

பார்தனில் வைக்கி லெடுக்க வொணாது பகர்ந்தேமுன்
னூர்தரு மூர்தி யொழிந்தனை கைக்கொடு னூர்மேவிச்
சீர்தரு லிங்க மிதைப்பிர திட்டை செயிற் பாரி
னேர்தரு முன்னை வெலற்குரி யார்பிற ரிலை யென்றே.

இ—ள்: பார்தனில் வைக்கில் எடுக்க ஒண்ணாது பகர்ந்தேம்—இவ்விலிங்கத்தைப் பூமியில் வைப்பையாகில் பின்பு அதனை எடுக்கவியலாது கூறினேம், உன் ஊர்தரும் ஊர்தி ஒழிந்தனை—நீ இவர்ந்துசெல்கின்றவாகனங்களின்றி, கை கொடு உன் ஊர் மேவி—கையிலே தாங்கிக்கொண்டு உனதுநகரத்தையடைந்து, சீர்தரு லிங்கம் இதை பிரதிட்டை செயில்—சிறப்புப்பொருந்திய இவ்விலிங்கத்தைப் பிரதிட்டைசெய்து வைப்பாயாயின், பாரின் ஏர்தரும் உன்னை—பூமியின்கண்ணே சிறப்புப்பொருந்திய உன்னை, வெலற்கு உரியார் பிறர் இலை என்று—வெல்லக்கூடியவர்கள் வேறொருவரும் இல்லையென்று எ—று.

ஏ—அசை. ஒண்ணாது ஒணாது எனத்தொக்கது. (௫௭)

வித்தக னோதி விடுப்ப வரக்கனும் விடைகொண்டே
சித்த முவந்து நெறிக்கொடு பார்மிசை செல்போதிற்
புத்தமு தத்தினை யற்பொடு துய்த்திடு பொன்னாடர்
மத்தக வேழ முகத்த கணேசனை வந்தித்தே.

இ—ள்: வித்தகன் ஓதி விடுப்ப—அறிவுருவராகிய சிவபெருமான்இவ்வாறுகூறிவிடைகொடுக்க, அரக்கனும் விடைகொண்டு—இராவணனுமுத்தரவுபெற்றுக்கொண்டு, சித்தம் உவந்து நெறி கொடு பார்மிசை செல்போதில்—மனமகிழ்ந்து செல்லும்மார்க்கமாய்ப் பூமின்கண்ணேபோகுஞ்சமயத்தில், புது அமுதத்தினை அன்பொடு துய்த்திடு பொன் நாடர்— புதிய அமுதத்தை அன்புடனேகுடிக்கின்றதேவர்கள், மத்தக வேழ முகத்த கணேசனை வந்தித்து—மத்தகத்தைப்பொருந்திய யானைமுகத்தையுடைய விக்கினேசுவரக்கடவுளை வந்தனைகள் செய்து எ—று.

ஏ-இரண்டும் அசைகள். (௫௮)

எண்டகு மீச னளித்த விலிங்க மிலங்கைக்கே [தே
கொண்டகல் கின்றன னின்றெதிர் சென்றொரு கோள்செய்
தண்டரு தாண்மலர் நோவ நடந்திடை தடைசெய்ய
மண்டனி னீடிய மூடிக வாகன வருகென்றார்.

இ—ள்: எண்தகும் ஈசன் அளித்த இலிங்கம்— மதிக்கத்தக்க சிவபெருமானாலீந்தருளப்பட்ட இலிங்கத்தை, இலங்கைக்கு கொண்டு அகல்கின்றனன்-(இராவணன்) இலங்காபுரிக்குக் கொண்டுசெல்லுகின்றனன், இன்று எதிர் சென்று ஒரு கோள் செய்து—இப்பொழுது எதிரிற்போய் ஒருதந்தரவுபாயஞ்செய்து, இடை தடை செய்ய— இடையிலே (கொண்டுபோகாது) தடுக்கும்பொருட்டு, தண் தரு தாள் மலர் நோவ நடந்து—குளிர்ந்தமலர்போன்ற பாதங்கள்வருந்தும்படிநடந்து, நீடிய மண் தனில் மூடிகவாகன வருக என்றார்—நீண்டபூமியின்கண்ணே ஆகுவாகனத்தையுடைய எம்பெருமானே வந்தருளுகவென்றுவேண்டினர் எ—று.

ஏ—அசை. (௫௯)

உற்றிடு வானவர் சொற்றிட நான்மறை யோனாகி
மற்றிர டோளவ் வரக்கன் வரும்பெரு வழிதன்னி
னிற்றிட மற்றவ னுந்தனி வந்தவ னைநேருற்றான்
முற்றினி லற்பச லத்தை விடுக்க முடுக்குற்றே.

இ—ள்: உற்றிடு வானவர் சொற்றிட— வந்ததேவர்கள் இவ்வாறு வேண்டுதல்செய்ய, நான் மறையோன் ஆகி— சதுர்வேதங்களையுமறிந்த ஒருபிராமணனாகி, ம[illegible] திரள் தோள் அவ் அரக்கன் வரும்பெரு வழிதன்னில் நிற்றிட— மல்யுத்தஞ்செய்கின்ற திரண்டதோள்களையுடைய அவ்விராவணன்வருகின்ற பெரிய வழியின்கண்ணேநிற்க, அவனும் தனி வந்து அவனை நேர் உற்றான்—அவ்வரக்கனும் தனித்தவனாய்வந்து அவ்விடத்தே எதிர்ப்பட்டு, அற்ப சலத்தை விடுக்க முற்றினில் முடுக்குற்று— சிறுநீரைக்கழித்தற்கு அந்தமாகிய ஆவசியகமுடையனாய் எ—று.

ஏ—அசை. (௬0)

அச்சிறு வேதிய னங்கையி லிங்க மளித்தன்னோன்
மெய்ச்சிறு நீர்விட மேவிய காலை விரைந் திங்ஙன்
முச்சொலி னின்னை விளிப்ப னதற்குமுன் முன்னாயேல்
விச்சிவ லிங்க நிலத்தி லிருத்துவ னென்றானால்.

இ—ள்: அ சிறு வேதியன் அம் கை இலிங்கம் அளித்து— அப்பிராமணப்பிள்ளையுடைய கையிலே அச்சிவலிங்கத்தைக்கொடுத்து, அன்னோன் மெய் சிறுநீர் விட மேவிய காலை—அவ்விராவணன் தனதுடலினின்றுஞ் சிறுநீரைக்கழிக்கச்சென்ற சமயத்தில், விரைந்து இங்ஙன் முச்சொலின் நின்

னை விளிப்பன்—சீக்கிரத்திலுன்னை மூன்றுமுறை அழைப்பேன், அதற்கு முன் முன்னுயேல்— அதற்குமுன்னரே நீ வாராதிருப்பின், இச்சிவலிங்கம் நிலத்தில் இருத்துவன் என்றான்— இந்தச்சிவலிங்கத்தைப் பூமியில்வைத்து விடுவேனென்று கூறினார் எ—று.

ஆல்—அசை. (௬௧)

அம்முறை யாக வரக்க னிசைந்தய லகல்போதின்
மும்முறை கூவின னெய்திலனையிரு முடியோனு
மெம்மிறை நீதியி தென்று கணத்தவ னெய்தாமுன் [ன்.
மைம்முறை யாலொளிர் கண்டனை மண்டனில் வைத்திட்டா

இ—ள்: அம்முறையாக அரக்கன் இசைந்து அயல் அகல் போதில்—இவ்வாறு கூறியதற்கு இராவணன் சம்மதித்துப் பக்கத்தே சென்றசமயத்தில், மும் முறை கூவினன்—(இராவணா இராவணா இராவணா என்று) மூன்றுமுறை அழைத்தார், ஐயிருமுடியோனும் எய்திலன்—பத்துத்தலைகளையுடைய அவ்விராவணனும் வந்தானல்லன், எம் இறை நீதி இது என்று—எமதுபிதாவாகிய சிவபெருமானுடைய நீதி இத்தகையதென்று, கணத்து அவன் எய்தா முன்—கணப்பொழுதினுள் அவன் (அவ்விடத்திற்கு) வருதற்குமுன்னமே, மை முறையால் ஒளிர் கண்டனை— கருநிறம் முறையாகவிளங்குகின்ற திருமிடற்றையுடைய சிவலிங்கப்பெருமானை, மண்தனில் வைத்திட்டான்—பூமியில் வைத்தார் எ—று. (௬உ)

பின்பவ் வரக்கர் பிரானவ னுற்றழல் பெய்கண்ணுன்
நன்புவி யிற்சிலை யோடிய தென்று நடுக்கெய்தித்
துன்பொடு பத்திரு தோள்வலி கொண்டு தொடர்ந்தோடி
வன்பொ டெடுத்திது மாபெல மென்றான் வலியில்லான்.

இ—ள்: பின்பு அவ் அரக்கர் பிரான் அவண் உற்று—பின்னர் இராக்கதர்களுக்குத்தலைவனாகிய அவ்விராவணன் அவ்விடத்துவந்து, அழல் பெய் கண்ணன்—அக்கினியைக்கக்குகின்ற கண்களையுடையவனாய், நல் புவியில் சிலை ஓடியதென்று நடுக்கு எய்தி— நல்லபூமியின்கண்ணே வேரூன்றியதென்று நடுக்கங்கொண்டு, துன்பொடு—துன்பத்தோடு, பத்திரு தோள் வலிகொண்டு—இருபதுதோள்களின்வலிமையினால், தொடர்ந்தோடி—வேகமாயோடிவந்து, வன்பொடு எடுத்து வலியில்லான் இது மாபெலம் என்றான்—திடத்தோடுதூக்கி வலிமையற்றவனாய் இது மகாபெலமுடையதென்றுகூறினான் எ—று. (௬௩)

மன்னவ வாதலின் மாநில மாபெல லிங்கம்பே
ரென்னவிளம்பிய தின்னமு மீளவி லங்கைக்கோன்

பன்னக மேவுகை பற்றி யெடுக்கப் படிமீதி
னன்ன ரிலிங்க மெலிந்து நிமிர்ந்தது நைந்தங்கே.

இ—ள்: மன்னவ—அரசனே!, ஆதலின்—அக்காரணத்தால், மாநிலம்—மகத்தாகிய பூவுலகமானது, மாபெலலிங்கம் பேர் என்ன விளம்பியது—மாபெலலிங்கம் என்னும் பெயரைக் கூறியது, இலங்கைக் கோன் இன்னமும் மீள—இலங்காதிபதியாகிய இராவணன் மீட்டும்மீட்டும், பல்நகம் மேவு கை பற்றி எடுக்க—பலநகங்களைக்கொண்ட தன்கைகளாற்பிடித்துத் தூக்க, படிமீதில் நன்னர் இலிங்கம் அங்கே நைந்து மெலிந்து நிமிர்ந்தது—பூமியின் கண்ணே நன்மைபொருந்திய அவ்விலிங்கமானது அவ்விடத்து நெகிழ்ந்துமெலிவுகொண்டுநிமிர்ந்தது எ—று. (௬௪)

ஆவி னெடுஞ்செவி போல நிமிர்ந்திடு மதனா லூர்
நாவி னெடும்பெயர் கோகன மென்றனர் நனிகூரு
மேவி னலந்தரு வாள்விழி யம்பிகை யிடமேவுந்
தேவி னருஞ்சிவ லோக மிதென்றறி திணிதோளாய்.

இ—ள்: ஆவின் நெடும் செவி போல நிமிர்ந்திடும் அதனால்—(அவ்விலிங்கமானது, பசுவினது நெடியசெவியைப்போல நிமிர்ந்தகாரணத்தினால், ஊர் நாவின் நெடும் பெயர் கோகனம் என்றனர்—உலகிலுள்ளார் நாவினால் உயர்ந்த கோகர்ணம் என்னும்பெயரைக்கூறினர், நனி கூரும் ஏவின் நலம் தரு வாள் விழி அம்பிகை—மிகக்கூரிய அம்புபோலழகுவாய்ந்த ஒளிபொருந்திய கண்களையுடைய உமாதேவியார், இடம் மேவு தேவின்—இடப்பாகத்தமர்ந்த சிவபெருமானது, அரும் சிவலோகம் இது என்று அறி திணிதோளாய்—அருமையாகிய சிவலோகமிதுவென்று அறியக்கடவாய் திண்ணிய தோள்களையுடைய மித்திரசக மகாராசனே எ—று. (௬௫)

வேறு.

மாவின்வடு நிகர்த்தவிழி மலைமகளை யிடங்கொண்ட
தேவனருள் சிவலிங்க மெடுக்கநைந்தோன் சினங்கொண்டே
காவனைய கைத்திரளாற் கனன்றரக்கன் மறைமதலைத்
தேவனது குடுமிமுடி புடைத்தனன்றன் சினமிகலால்.

இ—ள். மாவின் வடு நிகர்த்த விழி மலைமகளை இடம் கொண்ட—மாவடுவையொத்த கண்களையுடைய மலையரசன்புதல்வியாகிய உமையம்மையாரை வாமபாகத்திற்கொண்ட, தேவன் அருள்—சிவபெருமான் கொடுத்தருளிய, சிவலிங்கம் எடுக்க நைந்தோன்—சிவலிங்கத்தை எடுத்தற்கியலாது துன்படைந்தவனாய், அரக்கன் கனன்று—இராவணன் கொதித்து, சினம் கொண்டு—கோபங்கொண்டு, கா அனைய கை திரளால்—பூஞ்சோலைபோன்ற தனது கூட்டமாகிய கைகளினால், மறை மதலை தேவனது குடுமி முடி—பி

ராமணப்பிள்ளையாகின்ற விநாயகக்கடவுளது குடுமியையுடையசிரசில், தன்சினம்மிகலால் புடைத்தனன்— தனதுகோபம் அதிகரித்தமையாற் குட்டினான் எ—று.

எ—அசை. (௬௬)

புடைத்தவுட னுருத்தெழுந்து பொழிமதவா ரணமுகத்தோ
னடித்தலமு மணிமுடியு மகலிடமும் விசும்புமுறப்
புடைத்தவுரு வெனநிமிர்ந்து பணைக்கரத்தா லிராவணனைப்
பிடித்துமணிக் கழங்கென்ன வெறிந்தெறிந்து பிடித்திடலும்.

இ—ள்: புடைத்த உடன் உருத்து எழுந்து— குட்டியவுடனேகோபங்கொண்டு எழுந்து, பொழி மத வாரண முகத்தோன்—சொரிகின்ற மதம்பொருந்திய யானைமுகத்தையுடைய விக்கினேஸ்வரக்கடவுள், அடி தலமும் மணிமுடியும் அகலிடமும் விசும்பும் உற—திருப்பாதங்கள் விசாலமாகியபூமியிற்பொருந்தவும் அழகியதிருமுடியானது ஆகாயத்திற்பொருந்தவும், புடைத்த உரு என நிமிர்ந்து— குட்டித்தஉருவத்தைப்போல விசுவரூபங்கொண்டு, பணை கரத்தால் இராவணனை பிடித்து—விசாலித்தகையினால் இராவணனைப்பற்றி, மணி கழங்கு என்ன எறிந்து எறிந்து பிடித்திடலும்—அழகிய பந்தைப்போலஎறிந்தெறிந்து பிடிக்கவும் எ—று. (௬௭)

மறையோனென் றுனைநினைந்த மடமையினா லீதிழைத்தேன்
பிறையோங்கு மணிமகுடப் பெருங்களிறே பிழைசெய்தே
னிறையோனே பொறுப்பதுனக் கியல்பென்றென் றேத்துதலும்
பொறையோடு முமைபுதல்வன் புவியிலரக் கனைவிடுத்தான்.

இ—ள்: மறையோன் என்று உனை நினைந்த மடமையினால் ஈது இழைத்தேன்—பிராமணனென்று தேவரீரை நினைத்த அறியாமையினால் இதனைச்செய்தேன், பிறை ஓங்கு மணி மகுட பெரும் களிறே—பிறைச்சந்திரன்விளங்குகின்ற அழகியதிருமுடியையுடைய பெரியயானைவதனத்தரே, இறையோனே—தலைவரே, பிழைசெய்தேன்—தவறிபற்றினேன், பொறுப்பது உனக்கு இயல்பு என்று என்று ஏத்துதலும்—பொறுக்கருளுவதுதேவரீருக்கு இயற்கையாகியகுணமேயென்று சொல்லித்துதிக்க, பொறையோடும் உமை புதல்வன் புவியில் அரக்கனை விடுத்தான்— பொறுமையுடனே உமாதேவியாரதுபுத்திரராகிய விநாயகக்கடவுள் பூமியில அவ்விராவணனை விடுத்தார் எ—று. (௬௮)

நிருதர்குலந் திகல்வேந்தே நினதுபிழை யான்பொறுத்தற்
கொருபதுசெங் கரத்தாலு மொழின்மலரோன் முன்கவித்த
வொருபதுமா முடித்தலையு முறப்புடைத்தி யெனலோடுங்
குருதிநிறங் கொளப்புடைத்துக் குதித்தாடி யுவப்பித்தான்.

இ—ள்: நிருதர் குலத்து இகல் வேந்தே— அரக்கர்குலத்து வலிமை மிக்க அரசனே, நினது பிழை யான் பொறுத்தற்கு— உனதுகுற்றத்தை யான்பொறுப்பதற்கு, இருபது செங்கரத்தாலும்— சிவந்த இருபதுகைகளினுலும், எழின் மலரோன் முன்கவித்த—அழகிய பிரமாவாலமுன்னரே சூட்டப்பட்ட, மா ஒருபது முடிதலையும்—மகத்தாகியபத்துமுடிகளணிந்த சிரசுகளினும், உற புடைத்தி எனலோடும்—தாக்கும்படி குட்டக்கடவையென்றுகூறுதலும், குருதி நிறம் கொள புடைத்து—இரத்தம்போலச் சிவப்படையும்படி குட்டி, குதித்து ஆடி உவப்பித்தான்—குதித்துவிளையாடி (அப்பெருமான்) சந்தோஷங்கொள்ளும்படிசெய்தான் எ—று. (சுகூ)

அன்னதுகண் டுவந்தருளி யைங்கரத்தோ னின்றுமுத
லென்னருணன் னலம்வேண்டி னின்றுனைப்போ லிருகரத்தாற்
சென்னியுறப் புடைத்தவர்பாற் சிந்தைமகி ழுவமென்று
மின்னின்மறைந் தனனிருதன் வேலையிலங் கையிற்புகுந்தான்.

இ—ள்: ஐங்கரத்தோன் அன்னது கண்டு உவந்து அருளி—ஐந்துதிருக்கரங்களையுடைய விநாயகக்கடவுள் அந்நடனத்தைக்கண்டு சந்தோஷங்கொண்டு, இன்றுமுதல் என் அருள் நல் நலம் வேண்டில்— இன்றுமுதலாக எனது அருளாகிய நன்மையையடைய விரும்பினால், இன்று உனை போல் இரு கரத்தால் சென்னி உற புடைத்தவர்பால்—இப்பொழுது நீ உனதுசிரமிசைக்குட்டியதுபோல இரண்டுகைகளினுலுந் தமது சிரசிற்பொருந்தக்குட்டினவர்களிடத்து, சிந்தை மகிழுவம் என்று—மனமகிழ்ச்சியடைவோமென்று கூறி, மின்னின் மறைந்தனன்—மின்னலைப்போல மறைந்தருளினர், நிருதன்—இராவணன், வேலை இலங்கையில் புகுந்தான்—சமுத்திரஞ்சூழ்ந்த இலங்காபுரியையடைந்தான் எ—று. (எ0)

தென்னிலங்கை யிராவணன்பாற் சிவனுதவத் திறலரக்கன்
பின்னிலங்கு மொருமருப்புப் பெருந்தகைதன் கைக்கொடுப்ப
வன்னலிங்க மைங்கரத்தோ னங்கையினு னட்டியதா
லிந்நிலத்திற் சிவலோக மெனவிளங்கி யிருந்துளதால்.

இ—ள்: தென் இலங்கை இராவணன் பால் சிவன் உதவ—தக்ஷிணதிக்கிலுள்ள இலங்காபுரிக்கரசனுகிய இராவணனிடத்துச் சிவபெருமான் கொடுத்தருள, திறல் அரக்கன் பின் இலங்கும் ஒரு மருப்பு பெரும் தகை தன் கை கொடுப்ப—வலிமைபொருந்திய அவ்விராவணன் பின்னர் விளங்குகின்ற ஒற்றைக்கொம்பையுடைய பெருந்தகைமைகொண்ட விநாயகக்கடவுளது திருக்கரத்திற்கொடுக்க, அன்ன லிங்கம்—அந்த லிங்கமானது, ஐங்கரத்தோன் அம் கையினுல் நாட்டியதால்—அவ்விநாயகக்கடவுள் தமது அழகிய திருக்கரத்தால் நாட்டியதன்மையால், இ நிலத்தில்—இப்பூமியின்கண்ணே, சி

வலோகம் என விளங்கி இருந்தது—சிவலோகம் என்று சொல்லும்படி பிர காசித்திருக்கின்றது எ—று.

ஆல்—அசை. (எக)

வேறு.

இத்தகைய கோகன்னந் தனின்னெலொருபுலைச்சி யிருக ண்ணில்லாள், சுத்தவமு தெனவெளுத்த நரைதிரைநோய் மூப்பு டையாள் சுருதி போற்று, மத்தனிர வெனவுணரா ளங்கடைந்து பசிமிகுத்திட் டகடு காயச், சித்தமதி லிரக்கமுளோர் சோறிடுமி னெனக்கெனவோர் தெருவி லுற்றாள்.

இ—ள்: இத்தகைய கோகன்னந்தனில்— இவ்விதமாகிய கோகர்ண ம் என்னும் ஸ்தலத்தில், நென்னல்—முற்காலத்தில், இரு கண் இல்லாள்— இரண்டுகண்களுமில்லாதவளாயும், சுத்த அமுது என வெளுத்த நரை தி ரை நோய் மூப்பு உடையாள்— சுத்தமாகிய பால்போலவெளிறி நரைத்துத் தோல்கள்திரைத்து நோய்கள்பிடித்து மூப்படைந்தவளாயும் (உள்ள), ஒரு பு லைச்சி—ஒரு புலைப்பெண்ணானவள், சுருதி போற்றும் அத்தன் இரவு என உணராள்—வேதங்களினாற்றுதிக்கப்படுகின்ற சிவபெருமானது சிவராத்திரி யென்று அறியாதவளாய், அங்கு அடைந்து—அவ்விடத்திற்சென்று, பசி மிகுத்திட்டு அகடு காய—பசியானது அதிகரித்து உதரம் வாட, சித்தம் அதி ல் இரக்கமுளோர் எனக்கு சோறு இடுமின் என— மனத்திலிரக்கமுள்ளவர் களே எனக்குச்சோறுகொடுங்களென்று (சொல்லிக்கொண்டு), ஓர் தெருவில் உற்றாள்-- ஒருவீதியின்கண்ணேயிருந்தாள் எ—று. (எஉ)

அத்தெருவின் றலைவருமோர் களியனிழி குலத்தவட னங் கை மீதின், முத்தளக்கூ விளமுணவென் றிடுதலுமேற் றெறிந்த னளான் முன்னாட் டாபித், துத்தமர்பூ சித்தபுரா தனலிங்க முடி மீதி னுளத்தன் போடும், பத்தரிடும் பச்சிலைபோ லானதவள் பசி மிகக்கல் பணடைசெய் யாளாய்.

இ—ள்: அத்தெருவின் தலை வரும் ஓர் களியன்—அவ்வீதியினிடத்தே வந்த ஒருகளியனானவன், இழிகுலத்தவள் தன் அங்கை மீதில்—இழிகுலத்தவ ளாகிய அப்புலைச்சியின் அகங்கையில், முத்தள கூவிளம் உணவு என்று இடு தலும்—மூவிதள்பொருந்தியவில்வபத்திரத்தை உணவு என்றுகொ டுக்கவும், ஏற்று எறிந்தனள்—அதனைவாங்கி (உண்ணுதற்கு உணவாக இரா மையின்) எறிந்தாள், முன் நாள் தாபித்து உத்தமர் பூசித்த புராதன இலிங்க முடிமீதில்—(அவ்வில்வபத்திரமானது) பண்டைக்காலத்தில் ஸ்தாபனஞ்செ ய்து முனிவராற்பூசிக்கப்பட்ட பழைய சிவலிங்கத்தின்முடியின்மேல், உளத் து அன்போடும் பத்தர் இடும் பச்சிலை போல் ஆனது—மனத்திலன்புமிகாண்டு அடியார்களினாலே சாதப்பட்ட பச்சிலைக்குச் சமானமானது, அவள் பசி மி

க—அவள் பசியதிகரித்ததினாலே, கண்படை செய்யாளாய்—நித்திரை செய்யாதவளாய் எ—று. (எ௩)

இருளகல விடியுமட்டும் வருந்தியிருந் திரவியுதித் தெழுந்த
பின்னைத், தெருவி னிடை யிரந்திடவோர் புலைச்சியெதிர் வழிகாட்
டச் செல்லுங் காலை, மருவியநோய் பசிமூப்பு வருத்திடவெஞ் சு
டுமணற்கீழ் மயங்கி வீழ்ந்தங், கொருவி யுயிர் பிரிபொழுதிற் பர
மனுயர் கணங்கடமை யுற்று நோக்கி.

இ—ள். இருள் அகல விடியுமட்டும் வருந்தி இருந்து—இருட்காலம் நீங்கி விடியும்வரையும்வருத்தத்தோடிருந்து, இரவி உதித்து எழுந்தபின்—சூரியனுதயஞ்செய்தபின்னர், அ தெருவினிடை இரந்திட — அவ்வீதியிற் சென்று யாசிக்கும்படி, ஓர் புலைச்சி வழி காட்ட செல்லும் காலை—ஒருபுலைப்பெண்ணானவள் முன்னே வழிகாட்டச்சென்றசமையத்தில், மருவிய நோய் பசி மூப்பு வருத்திட—பொருந்திய நோயும் பசியும்முதியபருவமுந் துன்புறுத்த, வெம் சுடு மணல கீழ் மயங்கி வீழ்ந்து—வெவ்விய சுடுமணலின்கண்ணே கீழே மயங்கிவிழுந்து, அங்கு உயிர ஒருவி பிரிபொழுதில்—அவ்விடத்து உயிரானது விட்டுநீங்கும்பொழுது, பரமன் உயர் கணங்கள் தமை உற்று நோக்கி—சிவபெருமான் தமது பெருமையிற்சிறந்த கணநாதர்களை உற்றுப் பார்த்து எ—று. (எ௪)

சீர்தருகோ கன்னத்திற் சிவநிசியி லுண்டி துயி றீர்த்து வில
வத், தேர்தருநற் பைந்தழைகொண் டெம்மையருச் சித்தனளி
மைக்குஞ் செம்பொற், றேர்தனிலப் புலைமகளை யேற்றியிங்கு வ
ருதிரெனச் செப்ப வன்னோர், பார்தனிலுற் றனைவரும்யாம் பார்
த்திருக்க வங்கவளைப் பணிந்து போற்றி.

இ—ள்: சீர் தரு கோகன்னத்தில்— சிறப்புப்பொருந்திய கோகர்னமென்னும்ஸ்தலத்தில, சிவ நிசியில் உண்டி துயில் நீத்து—சிவராத்திரிதினத்திலே உணவும் நித்திரையுமின்றி, வில்வத்து எர் தரு நல் பைம் தழைகொண்டு—வில்வமரத்தினழகுபொருந்திய நல்ல பசிய தழையைக்கொண்டு, எம்மை அருச்சித்ததனால்—எம்மைப்பூசித்தமையால், இமைக்கும் செம்பொன் தேர்தனில்—பிரகாசிக்கின்ற சிவந்த பொன்னாற்செய்த தேரின்மேல், அ புலைமகளை எற்றி—அப்புலைமாதை எற்றிக்கொண்டு, இங்கு வருதிர் என செப்ப—இங்குவரக்கடவீர்களென்றுகூறியருள, அன்னோர் பார் தனில் உற்று—அக்கணநாதர்கள் பூமியில் வந்து, யாம் அனைவரும் பார்த்திருக்க அங்கு அவளை பணிந்து போற்றி—யாமெல்லோருங்காணும்படி அவ்விடத்து அவளை வணங்கித்துதித்து எ—று. (எ௫)

செம்பொனெடுங் கொடிஞ்சிமணித் தேர்மீதி லிருத்திமிகு சிறப்பி னோடு, மும்பர்மட மகளிர்வெண்சா மரையிரட்டப் பைந்தருவி னுலவை யீன்ற, வம்பவிழ்பூ மழைபொழிய வளங்கெழுதுந் துபிமுழங்க மழுமா னேந்து, மெம்பரம னினிதுறையுங் களதபுத கிரியின்மிசை யேகி னாரே.

இ—ள்: செம்பொன் நெடும் கொடிஞ்சி மணி தேர் மீதில் இருத்தி—சிவந்த பொன்னாற்செய்யப்பட்ட நெடிய கூம்புகளையுடைய அழகிய இரதத்தின்மேலிருத்தி, மிகு சிறப்பினோடும்—மிகுந்த அலங்காரத்துடன், உம்பர் மட மகளிர வெண் சாமரை இரட்ட—தேவரம்பைகள் வெள்ளிய சாமரங்களை வீச, பைந்தருவின் உலவை ஈன்ற—பசுமையாகிய பஞ்சதருக்களின் கிளைகளிற்பூத்த, வம்பு அவிழ் பூ மழை பொழிய—வாசனைவீசுகின்ற புஷ்பங்களை மழைபோலச்சொரிய, வளம் கெழு துந்துபி முழங்க—வளம்பொருந்திய துந்துபிவாத்தியமாரவாரிக்க, மழுமான் ஏந்தும் எம் பரமன் இனிது உறையும்—மழுவையும் மானையுந்தரித்த எமது தலைவராகிய சிவபெருமான் நன்கு வீற்றிருக்கின்ற, களதபுத கிரியின்மிசை ஏகினார்—கயிலாசமலைக்குக்கொண்டு சென்றனர் எ—று.

ஏ—அசை. (எசு)

ஆதலின்மித் திரசகனே நீயுமந்தக் கோகன்னந் தடைந்து போற்றித், தீதகலுஞ் சிவநிசிநோற் றிடிலுனது வினையனைத்துந் தீரு மென்று, கோதகலும் பெருந்தவத்துக் கோதமனங் கவற்கு விடை கொடுத்துப் பின்ன, ரேதமின்மா தவர்சூழ்ந்து வரமிதிலை நகர்நோக்கி யேகி னானால்.

இ—ள்: ஆதலின்—ஆனதன்மையினால், மித்திரசகனே—மித்திரசகமகாராசனே, நீயும் அந்த கோகன்னத்து அடைந்து போற்றி—நீயும் அந்தக் கோகர்னம் என்னும் ஸ்தலத்தையடைந்து, துதித்து தீது அகலும் சிவநிசி நோற்றிடில்—தீமைகளெல்லாமழிந்துபடுகின்ற சிவராத்திரிவிரதத்தை அனுஷ்டிப்பாயாயின், உனது வினை அனைத்தும் தீரும் என்று—உனது தீவினைகளெல்லாம் நீங்குமென்ற(சொல்லி), கோது அகலும் பெரும் தவத்து கோதமன்—குற்றமில்லாத பெரிய தவத்தையுடைய கௌதமமுனிவர், அங்கு அவற்கு விடை கொடுத்து—அவ்விடத்து அக்கன்மாடபாதராசனுக்கு உத்தரவுகொடுத்து, பின்னர் ஏதமில் மாதவர் சூழ்ந்து வர—பின்பு குற்றமில்லாத மகாதவசிரேஷ்டர்கள் சுற்றிவர, மிதிலை நகர் நோக்கி ஏகினன்—மிதிலைமாநகரத்தை நோக்கிச்சென்றார் எ—று.

ஆல்—அசை. (எஎ)

புண்ணீரின் கடிகமழப் பொருகளத்தி லொன்னலர்தம் புயதோய் மின்னார், கண்ணீர்மை கலந்தொழுகக் கலுழ்ந்தணிபொ

ற் கலன்வாங்கக் கதிர்வேல் வாங்கி, மண்ணீர்மை பெறப்புரந்த மன்னவனுந் தாகமுற்று வருந்தினோர்க, ளுண்ணீர்பெற் றதுவென த்துன் பொழிந்துயர்கோ கன்னமுற்றா னுவப்பினோடும்.

இ—ள்: புண்ணீரின் கடி கமழப் பொரு களத்தில்—இரத்தத்தின் முடைநாற்றம்வீசும்படி யுத்தகளத்தில், ஒன்னலர் தம் புயம் தோய் மின்னோர்—பகைவர்களது புயங்களைத்தழுவுகின்ற மனைவியர்கள், கண்ணீர் மை கலந்து ஒழுக கலுழ்ந்து—கண்ணீரும் (தீட்டிய) மையும் கலந்துபாயும்படி அழுது, அணி பொன் கலன் வாங்க—அணிந்திருக்கின்ற பொன்னாற்செய்த மங்கிலியத்தைக கழிக்கும்படி, கதிர் வேல் வாங்கி— கூரியவேற்படையைச்செலுத்தி, மண் நீர்மை பெற புரந்த மன்னவனும்— பூமியை நன்மை பொருந்தப்பரிபாலித்த மித்திரசகமகாராசனும், தாகம் உற்று வருந்தினோர்கள்—நீர்வேட்கையினால் துன்புற்றவர்கள், உண் நீர் பெற்றது என துன்பு ஒழிந்து—உண்ணுவதற்குத் தண்ணீரைப்பெற்றதன்மையைப்போலத் துன்பம்நீங்கி, உவப்பினோடும் உயர் கோகன்னம் உற்றான்—மகிழ்ச்சியோடு உயர்வு பொருந்திய கோகர்ணம் என்னும் ஸ்தலத்தையடைந்தான் எ—று. (எஅ)

பூகநெடும் பொழில்புடைசூ ழப்பதியிற் புகல்கோடிப் புனலின் மூழ்கி, நாகர்தினந் தொழுதெழுமா பெலலிங்க நாயகனை நண்பிற் போற்றி, மாகமதிச் சிவநிசியின் மறைமுதலா கமத்துவிதி வழுவா தாற்றிச், சோகமிகத் தரும்பழைய வினைத்தொடர்பி னழுக்கனைத்துந் துடைத்திட் டானே.

இ—ள்: பூக நெடும் பொழில் புடை சூழ் அப்பதியில்—நெடிய கமுகஞ்சோலைகள் பக்கத்திற்சூழ்ந்த அந்தஸ்தலத்தில், புகல் கோடி புனலின் மூழ்கி—கூறப்படுகின்ற கோடிதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, நாகர் தினம் தொழுது எழும் மா பெல லிங்க நாயகனை—தேவர்கள் தினந்தோறும் நமஸ்காரஞ்செய்து,எழும்புகின்ற மாபெலலிங்கநாயகரை, நண்பில் போற்றி—அன்போடுதுதித்து, மாக மதி சிவநிசியில்—மாசிமாதத்துச் சிவராத்திரியில், மறை முதல் ஆகமத்து விதி வழுவாது ஆற்றி—வேதங்களிலுஞ் சிறந்த ஆகமங்களிலுங்கூறப்பட்ட விதிதவறாதபடியனுஷ்டித்து, சோகம் மிக தரும் பழைய வினை தொடர்பின் அழுக்கு அனைத்தும்—மிகத்துன்பத்தைத்தருகின்ற பழைய தீவினைத்தொடர்பினாலுண்டாகிய பாவங்களெல்லாவற்றையும், துடைத்திட்டான்—நீக்கிக்கொண்டனன் எ—று. ஏ—அசை. (எகூ)

வளமைதரு கோகனத்தின் மாகமதிச் சிவநிசியை மகிழ்ந்து நோற்றுப், பழிவிளைக்கும் பிரமகத்தி பற்றறவே தீர்ந்தபினர்ப் பரமன் செய்ய, கழலடைந்து பேரின்பங் கலந்திருந்தான் சிவநிசியைக் கருத்தி னுற்ற, வுளமகிழ்வா னோற்றவர்கள் பேரின்ப வீடடைவ ருண்மை யென்றான்.

இ—ள்: வளமை தரு கோகனத்தின்—செழிப்புப்பொருந்திய கோகர்ணம் என்னும் ஸ்தலத்தில், மாகமதி சிவநிசியை மகிழ்ந்து நோற்று— மாசி மாதச்சிவராத்திரியை மனமகிழ்ச்சியோடு அனுஷ்டித்து, பழி விளைக்கும் பிரமகத்தி பற்றறவே தீர்ந்த பினர்— பழிகளையுண்டாக்குகின்ற பிரமகத்தி தோஷமானது முற்றும்நீங்கியபின்பு, பரமன் செய்ய கழல் அடைந்து—சிவபெருமானுடைய சிவந்த திருப்பாதங்களையடைந்து, பேரின்பங் கலந்து இருந்தான்—மோட்சசுகத்தை யனுபவித்திருந்தான், சிவநிசியைக் கருத்தில உற்ற உள மகிழ்வால் நோற்றவர்கள்—சிவராத்திரிவிரதத்தை தம்மனத்திற் பொருந்திய உள்ளக்களிப்போடு அனுஷ்டித்தவர்கள், பேரின்ப வீடு அடைவார் உண்மை என்றான்—மோட்சசுகத்தைப்பெறுவர் இது சத்தியமென்று கூறினார் எ—று. (அ௦)

என்றுயர்நை மிசவனத்தி லிருந்தவிருந் தவர்மகிழ்ந்தாங் கிருகை கூப்பித், துன்றுசடை முடிதுளக்கிக் கேட்டுவப்ப விரித்தெடுத்துச் சொல்லி னானாற், கன்றுகொடுஞ் சினமயக்கங் காமமெனு முக்குறும்மைக் கடிந்து நாளும், வென்றிபெறுந் தவஞானநிலையுணர்ந்து களங்கமின்றி விளங்குஞ் சூதன்.

இ—ள். கன்று கொடும் சினம் மயக்கம் காமம் எனும் முக்குறும்பை கடிந்து— மனத்தைக்கன்றச்செய்கின்ற கொடிய வெகுளி மயக்கம் காமம் என்னும் மூக்குறும்புகளையும் நாசஞ்செய்து, நாளும் வென்றி பெறும் தவ ஞான நிலை உணர்ந்து—தினந்தோறும் மேன்மையையடைவிக்கின்ற தவவொழுக்கத்தோடுகூடிய ஞானநிலையையுணர்ந்து, களங்கம் இன்றி விளங்கும் சூதன்— மனக்களங்கஞ்சிறிதுமின்றி விளங்குகின்ற சூதமகாமுனிவர், உயர் நைமிசவனத்தில் இருந்த இருந் தவர் மகிழ்ந்து—உயர்வுபொருந்திய நைமிசாரணியத்திலிருந்த பெருமையிற்சிறந்தமுனிவர்கள் ஆனந்தங்கொண்டு, ஆங்கு இருகை கூப்பி—அவ்விடத்து இரண்டுகைகளையுஞ் சிரமிசைக்குவித்து, துன்று சடைமுடி துளக்கி—நெருங்கிய சடைமுடியையசைத்து, கேட்டு உவப்ப—கேட்டுமகிழும்படி, என்று விரித்து எடுத்து சொல்லினான்— என்றிவ்வாறு விரிவாக எடுத்துக்கூறினார் எ—று.

ஆல்—அசை. (அக)

கன்மாடபாதச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௬௦.

# விபரிசச்சருக்கம்

எண்டரு மறையுண ரிருடி காடிரி
புண்டர நுதலர னிரவிற் பூசனை
கண்டவன் கதையினைக் கழறக் கேண்மினென்
றெண்டவச் சூதனு முரைப்ப தாயினான்.

இ—ள்: எண் தரு மறை உணர் இருடிகாள்—மதிக்கப்படுகின்றவேதங்களையறிந்த முனிவர்களே, திரி புண்டர நுதல் அரன் இரவில்— திரிபுண்டரமாக விபூதியையணிந்த நெற்றியையுடைய சிவபெருமானது இராத்திரியில், பூசனை கண்டவன் கதையினை கழற கேண்மின் என்று—சிவபூசையைத்தரிசித்தவனது சரித்திரத்தைக் கூறுகின்றேன் கேட்கக்கடவீரென்று, ஒள் தவச் சூதனும் உரைப்பது ஆயினான்—மேன்மைபொருந்திய தவத்தையுடைய சூதமகாமுனிவருங்கூறுவாராயினார் எ—று. (க)

பாரினிற் புராதலப் பதிபு ரப்பவன்
போரினிற் றெவ்வர்மெய்ப் புலவு காரியு
மோரியு மருந்தவே லுறைக ழித்திடும்
வீரியன் விபரிச னென்னும் வேந்தனே.

இ—ள் பாரினில புராதல பதி புரப்பவன் - பூமியின்கண்ணே பழமையாகிய நகரத்தைப்பரிபாலிப்பவனும், போரினில் தெவ்வர் மெய் புலவு—போர்க்களத்தில் பகைவர்களது சரீரமாமிசத்தை, காரியும் ஓரியும் அருந்த—காகங்களும் நரிகளும் உண்ணும்படி, வேல் உறை கழித்திடும் வீரியன்— தனது வேற்படையையுறையினின்றும் நீக்குகின்ற வீரத்தன்மையையுடையவனும் ஆகிய, விபரிசன் என்னும் வேந்தன் — விபரிசனென்னும்பெயரையுடைய ஒரு அரசன் (உளன்) எ—று.

ஏ — அசை. (உ)

தன்றடஞ் சிலைகொடு தானுஞ் சேனையுங்
குன்றருங் கானிடைக் குறுகி நாடொறும்
வன்றலைக் கேழன்மான் மரைபுல் வாய்களின்
மென்றசை யருந்திட வேட்ட மாடுவான்.

இ—ள் தன் தடம் சிலை கொடு தானும் சேனையும்—தனது விசாலமாகிய வில்லைக்கொண்டு தானுஞ்சேனைகளுமாய், குன்று அரும் கானிடை குறுகி—மலைகளிலும அரிய காடுகளிலுஞ்சென்று, நாள் தொறும் வன் தலை கேழல் மான் மரை புல்வாய்களின் மென் தசை அருந்திட— தினந்தோறும் வலிய தலையையுடைய பன்றி மான் மரை புல்வாய் ஆகிய மிருகங்களின் மிரு

தவாகிய மாமிசங்களைப்புசிப்பதற்கு, வேட்டம் ஆடுவான்— வேட்டையாடு வான் எ—று. (௩)

புலந்தரு பூசுரர் புலைஞர் மற்றுள
குலந்தனி லுதித்தெழில் குலவு மாதரை
நிலந்தனி லவாவுட னேடி நித்தமுங்
கலந்துளந் தருக்கொடு களிக்கு நீர்மையான்.

இ—ள்: புலம் தரு பூசுரர் புலைஞர் மற்றுள குலம் தனில் உதித்து—அறிவின்மிகுந்த பிராமணர் (குலத்திலும்) புலையர் (குலத்திலும்) வேறுமுள்ள குலங்களிலும்பிறந்து, எழில் குலவு மாதரை—அழகுபொருந்திய பெண்களை, நிலந்தனில் அவாவுடன் நேடி—பூமியின்கண்ணே ஆசையோடுதேடி, நித்தமும் கலந்து—தினந்தோறுஞ்சையோகித்து, உளம் தருக்கொடு களிக்கும் நீர்மையான்—மனச்செருக்கடைந்து களிப்புக்கொள்ளுந்தன்மையயுடையவன் எ—று. (௪)

வேறு.

மதிவளர் பக்கங் கலைகுறை பக்க மதிதொறு மருவுபன் னான்காந், திதிகளிற் றுயிலூண் டுறந்துதன் னடியார் சிந்தனைப் படிமுடி வில்லாக், கதிதரும் பரனை யானினைந் தாட்டிக் கடிமலர் கூவிளஞ் சாத்தி, விதிமுறை வழுவா துள்ளநெக் குருகி விருப்புட னருச்சனை புரிவான்.

இ—ள்: மதி வளர் பக்கம்—சந்திரன் கலைகள்வளரப்பெற்ற பூருவபக்கத்திலும், கலை குறை பக்கம்—கலைகள் தேய்கின்ற அபரபக்கத்திலும், மதி தொறும் மருவு பன்னான்காம் திதிகளில்— மாதங்கடோறும்வருகின்ற சதுர்த்தசிகளில், துயில் ஊண் துறந்து—நித்திரையுமுணவுமின்றி, தன் அடியார் சிந்தனைப்படி—தமது அடியார்களது எண்ணத்தின்படி, முடிவில்லா கதி தரும் பரனை—அளவில்லாத நற்கதிகளைக்கொடுக்கின்ற சிவபெருமானை, ஆனின் ஐந்து ஆட்டி—பசுவிலிருந்தெடுக்கப்படுகின்ற பஞ்சகௌவியங்களினலபிஷேகித்து, கடிமலர் கூவிளம் சாத்தி—வாசனைபொருந்திய புஷ்பங்களையும் வில்வங்களையுஞ்சாத்தி, விதிமுறை வழுவாது— விதிக்கிரமந்தவறாமல், உள்ளம் நெக்கு உருகி—மனங்கசிந்துருகி, விருப்புடன் அருச்சனை புரிவான்—சந்தோஷத்துடனே பூசைசெய்வான் எ—று. (௫)

மற்றவன் மனைவி யாகிய குமுத வதியவன் மலரடி வணங்கிக், கற்றடந் திணிதோட் புரவல விரவுங் கல்வியிற் றிறலினை நில்லாய், பொற்றரு விழுது விட்டெனக் கிடந்த புரிசடைப் புனிதனை ரிரவி, லுற்றருந் திடுமூண் டுயிலொழிந் துளத்தி லுவப்புடன் பூசனை புரிவாய்

இ—ள்: அவன் மனைவி ஆகிய குமுதவதி— அவ்விபரிசமகாராசன
து மனைவியாகிய குமுதவதியானவள், அவன் மலரடி வணங்கி— அவனது
தாமரைமலர்போன்ற பாதங்களை நமஸ்கரித்து, கல் தடம் திணி தோள் புர
வல—கல்லைப்போன்ற விசாலமாகிய திண்ணிய தோள்களையுடைய அரச
னே, விரவும் கல்வியில் திறலில் நேர் இல்லாய்— பொருந்திய கல்வியிலும்
வன்மையிலும் பிறரொருவரும் நிகரின்றியிருப்பவனே, பொன் தரு விழுது
விட்டென கிடந்த புரிசடை புனிதனார் இரவில்—பொன்மரமானது விழு
துவிட்டாற்போலிருக்கின்ற முறுக்குப்பொருந்திய சடைமுடியையுடைய ப
ரிசுத்தராகிய சிவபெருமானது இராத்திரியில், உற்று அருந்திடும் ஊண் து
யில் ஒழிந்து—மனம்விரும்பியுண்ணுகின்ற உணவையும் நித்திரையையுந்த
விர்த்து, உளத்தில் உவப்புடன் பூசனை புரிவாய்—மனமகிழ்வோடு சிவார்ச்ச
னை செய்கின்றனை எ—று.

மற்று—அசை. (௬)

கூனருஞ் சிலைக்கை வேட்டுவ ரென்னக் குலவிலங் கனைத்
தையுங் கொலைசெய், தூனருந் திடுத லொழிந்திலை நிலத்தி லுயர்
குலத் திழிகுலத் துதித்த, தேனருங் கனிபா னிகர்த்தசொற் க
ணிகைச் சேயிழை யார்முலைப் போகந், தானருந் திடுத றவிர்ந்தி
லை யிந்தத் தன்மையென் சாற்றுதி யென்றாள்.

இ—ள்: கூன் அரும் சிலை கை வேட்டுவர் என்ன— வளைந்த அரிய
வில்லைத்தாங்கிய கைகளையுடைய வேட்டுவர்களைப்போல, குல விலங்கு அ
னைத்தையும் கொலை செய்து—கூட்டமாகிய மிருகங்களெல்லாவற்றையுங்
கொன்று, ஊன் அருந்திடுதல் ஒழிந்திலை— மாமிசமபுசித்தலை விடுத்திலை,
நிலத்தில் உயர்குலத்து இழிகுலத்து உதித்த—பூமியின்கண்ணே உயர்குல
ங்களிலும் தாழ்ந்தகுலங்களிலும்பிறந்த, தேன் அரும் கனி பால் நிகர்த்த
சொல் கணிகை சேயிழையார் முலை போகம் தான்—தேனையும் அரிய கனிக
ளையும் பாலையும் நிகர்த்த மொழிகளைவசனிக்கின்ற சிறந்த ஆபரணங்களைய
ணிந்த வேசிப்பெண்களது ஸ்தனபோகத்தை, அருந்திடுதல் தவிர்ந்திலை—
அனுபவித்தலை விடுகின்றிலை, இந்தத் தன்மை என் சாற்றுதி என்றாள்— இ
வ்வாறு (ஒன்றற்கொன்று மாறுபாடாகஇருக்கும்) தன்மைகள் என்ன அத
னைக்கூறுகவென்று வேண்டினாள் எ—று. (எ)

என்றவள் மொழிந்த மொழிசெவிப் படலு மிளநகை கோ
ட்டிவே விறைவன், முன்றவப் பயனு விறப்பெதிர் நிகழ்வா மூ
ன்றுகா லங்களு முணர்வேன், குன்றளிக் குலம்பாட் டயர்மலர்க்
கோதைச் சுரிகுழால் கேட்டியான முன்னங், குன்றெனு மிஞ்சிப்
பம்பைமா நகரிற் குரைமுக ளுமலியா வுதித்தேன்.

இ—ள்: என்று இவள் மொழிந்த மொழி செவி படலும்— என்று அக்குமுதவதிகூறிய வாக்குக்கேட்டலும், வேல் இறைவன் இளநகை கோட்டி—வேற்படையைத்தாங்கிய விபரிசமகாராசன் புன்முறுவல்கொண்டு, முன் தவ பயனால்—முன்னரேசெய்த தவத்தின்பிரயோசனத்தால், இறப்பு எதிர் நிகழ்வாம் மூன்று காலங்களும் உணர்வேன்—செல்காலம் எதிர்காலம் நிகழ்காலமாகிய முக்காலசம்பவங்களையும் அறியவல்லேன், துன்று அளிகுலம் பாட்டு அயர் மலர் கோதை சுரிகுழால் கேட்டியால்—நெருங்கிய வண்டுக் கூட்டங்களிசைபாடுகின்ற மலர்மாலையையணிந்த சுரித்த கூந்தலையுடைய பெண்ணே கேட்கக்கடவை, முன்னம்—முற்பிறப்பிலே, குன்று எனும் இஞ்சி பம்பை மா நகரில்—மலையென்றுகூறும்படியுயர்ந்த மதிலாற்சூழப்பட்ட பம்பைமாநகரத்தில், குரை முக ஞமலியா உதித்தேன்— குரைக்கின்ற முகத்தையுடைய நாயாகப்பிறந்தேன் எ—று. (அ)

பாலைவென் றமுதை யடுமொழிக் கவுரி பங்கில்வாழ் பம்பை நாயகன்ற, னாலயங் குறுகிப் பலிக்கிடு மடிசி லருந்துவான் வருந்தியங் கடையுங், காலையிற் கோயிற் கைவினை யாளர் கடிதெனைக் கடிந்திடக் கருதி, வேலையில் விடம்போற் கதைகணை குனித்த வில்லொடுங் கல்லொடுந் தொடர்ந்தார்.

இ—ள்: பாலை வென்று அமுதை அடு மொழி கவுரி பங்கில் வாழ்—(இனிமையினாற்) பாலையும்வென்று அமுதத்தையும்வென்ற வார்த்தைகளையுடைய உமாதேவியார் வாமபாகத்திலெழுந்தருளிய, பம்பை நாயகன் தன் ஆலயம் குறுகி—பம்பைநாயகனாகிய சிவபிரானது திருக்கோயிலையடைந்து, பலிக்கு இடும் அடிசில் அருந்துவான்—பலியாக இடப்படுகின்றசோற்றைப் புசிக்கும்பொருட்டு, வருந்தி அங்கு அடையும் காலையில்— பசியினால்வருந்தி அவ்விடத்துச் செல்லுஞ்சமயத்தில், கோயிற் கைவினையாளர்—கோவிற்றொண்டுசெய்கின்ற பரிசாரகர்கள், கடிது எனை கடிந்திட கருதி—சீக்கிரத்திலென்னைத் தண்டிக்கநினைத்து, வேலையில் விடம்போல்—சமுத்திரத்திற்றோன்றிய நஞ்சைப்போல, கதை கணை குனித்த வில்லொடும் கல்லொடும் தொடர்ந்தார்—தண்டாயுதமும் அம்பும் வளைத்தவில்லும் கல்லும் ஆகிய இவற்றைக்கொண்டு தொடர்ந்துவந்தார்கள் எ—று. (கூ)

ஓடினேன் வெருவி யாலயம் வலமா யுயிர்பிழைத் துய்குவா னெறிக, டேடினேன் காணேன் பலிசொரி பீடத் தின்னயற் சென்றுழிச் சுருதி, பாடினான் மறையோன் பழிச்சிட நெய்த்தீ பச்சுடர்த் தட்டெடுத் தேந்திப், பீடுறும் பணிமா றினர்தரி சித்தேன் பிறைமுடிப் பிஞ்ஞகன் றன்னை.

இ—ள்: வெருவி ஆலயம் வலமாய் ஓடினேன்—அப்பொழுது பயங்கரங்கொண்டு கோயிலை வலமாகச்சுற்றி ஓடினேன், உயிர் பிழைத்து உய்கு

வான் நெறிகள் தேடினேன்—உயிரானது உய்ந்துபிழைத்தற்காகிய வழிக ளைத்தேடினேன், காணேன்—அங்ஙனமொருவழியையுங்கண்டிலேன், பலி சொரி பீடத்தின் அயல் சென்றுழி—பலியிடப்படுகின்ற பீடத்துக்குப் பக்க த்தே சென்றபொழுது, சுருதி பாடி நான்மறையோர் பழிச்சிட— வேதங்க ளைக்கூறிப்பிராமணர்கள் துதிக்க, நெய் தீப சுடர் தட்டு எடுத்து ஏந்தி பீடி னோல் பணிமாறினர்—ஒளிபொருந்திய நெய்த்தீபத்தட்டைத்தாங்கிப் பெரு மையோடு உபசரித்தனர், பிறை முடி பிஞ்ஞகன் தன்னை தரிசித்தேன்—(அ ப்பொழுது) பிறைச்சந்திரனைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமா னைத் தரிசனஞ்செய்தேன் எ—று. (௪0)

அக்கணத் தொருவன் சரந்தொட வீந்தே னன்றிராச் சிவநி சியதனின், மிக்கவா லயத்தை வலமதாய் வந்து விமலனைத் தரிச னைபுரிந்து, நக்கனார் திருமுன் னாவிநீத் திட்ட நன்மையாற் கால மூன்றுணர்ந்து, தக்கவாழ் வுடனா னிலம்புரந் தருளுந் தலைவனாத் தரைதனி லுதித்தேன்.

இ—ள்: அக்கணத்து ஒருவன் சரம் தொட வீந்தேன்— அப்பொழு து ஒருவன் அம்புசெலுத்த அதனாலிறந்தேன், அன்று இரா சிவநிசி—அன் றிரவானது சிவராத்திரியாகும், அதனில் மிக்க ஆலயத்தை வலமதாய் வந் து—அச்சிவராத்திரியில் மேன்மைபொருந்திய சிவாலயத்தைப் பிரதட்சண மாகவந்து, விமலனை தரிசனை புரிந்து—நின்மலராகிய சிவபெருமானைத் தரி சித்து, நக்கனார் திருமுன் ஆவி நீத்திட்ட நன்மையால்— சிவபெருமானது திருமுன்னிலையில் இறந்துபட்ட நன்மையினாலே, காலம் மூன்று உணர்ந் து—முக்காலங்களையுமறிந்து, தக்க வாழ்வுடன்—நல்ல சுகவாழ்வுடனே, நா ல் நிலம் புரந்து அருளும் தலைவனா—பரந்தபூமியைப் பரிபாலித்தருளுகின்ற அரசனாக, தரை தனில் உதித்தேன்—இப்பூமியின்கட்பிறந்தேன் எ—று.()

இந்தநற் பலத்தைத் தந்தது பரம னிரவெனக் கருதியா னெ திர்ந்து, வந்தநற் றினங்க டோறுங்கலை நிறைந்து வருபிறை கு றைபிறை யதனிற், றந்தபன் னான்காம் பக்கமென் றுரைக்குஞ் சதுர்த்தசி களிற்றவ றுமல், லந்திவா னதிச்செஞ் சடிலவா னவ னை யகத்தில்வைத் தருச்சனை புரிவேன்.

இ—ள்: இந்த நல் பலத்தை தந்தது பரமன் இரவு என யான் கரு தி—இந்த நல்ல பலனைத் தந்தது சிவபெருமானது சிவராத்திரிதினத்தின் தரிசனப்பேறு என்றுநான்நினைத்து, எதிர்ந்து வந்த நல் தினங்கள் தொறு ம்—எதிராகவந்த நன்மைபொருந்திய தினங்களிலெல்லாம், கலை நிறைந்து வ ருபிறை குறை பிறை அதனில்—சந்திரன் கலைகள்வளர்ந்து வருகின்ற பூரு வபக்கத்திலும் தேய்ந்துவருகின்ற அபரபக்கத்திலும், தந்த பன்னான்காம் பக் கம் என்று உரைக்கும் சதுர்த்தசிகளில்— வருகின்ற பதினான்காந்திதியாகக்

கூறப்படுகின்ற சதுர்த்தசித்திதிகளில், தவறாமல்—தவறுதலில்லாமல், நதி அந்தி வான் செம் சடில வானவனை அகத்தில் வைத்து— கங்கைநதியைத்தரித்த செக்கர்வானத்தையொத்த சிவந்த சடையையுடைய சிவபெருமானை மனத்திலேசிந்தித்து, அருச்சனை புரிவேன்—பூசனைசெய்வேன் எ—று. ()

புரிந்தபூ சனையாற் பிரிந்துவெம் பாவம் போகுமோ வெனப்
புகன்றனையேல், விரிந்தபைப் பணிப்பூ ணணிந்தருண் முக்கண்
விமலனை வழிபடி னினன்முன், சொரிந்தவெம் பனிபோற் கொடு
ஞ்சிகைத் தழன்முன் றொக்குறக் குவிந்தவிந் தனம்போற், கரிந்
துநீ றாகும் பரமனை நீயும் வழிபடக் கருதுகா ரிகையே.

இ—ள்: புரிந்த பூசனையால்— (இங்ஙனஞ்) செய்தசிவபூசையால், பிரிந்து வெம் பாவம் போகுமோ என புகன்றனையேல்—செய்த கொடிய பாவமானது விட்டுநீங்குமோவென்று வினவுவாயாயின், விரிந்த பை பணி பூண் அணிந்து அருள் முக்கண் விமலனை வழிபடில்—விசாலமாகிய படத்தைக்கொண்ட சர்ப்பங்களை ஆபரணமாகவணிந்த மூன்றுகண்களையுடைய நின்மலராகிய சிவபெருமானைவழிபட்டால், இனன் முன் சொரிந்த வெம் பனி போல்—சூரியனுக்குமுன்னே பெய்த கொடிய பனியைப்போலவும், கொடும் சிகை தழல் முன் தொக்குற குவிந்த இந்தனம் போல்-உக்கிரமாசக்கொழுந்துவிட்டெரிகின்ற அக்கினியில் தொகுதியாகக்குவித்த விறகைப்போலவும், கரிந்து நீறு ஆகும்—அப்பாவங்கள் எரிந்துசாம்பராகும், பரமனை நீயும் வழிபட கருது காரிகையே— (ஆதலினால்) சிவபெருமானை நீயும் வழிபாடுசெய்ய நினைக்குதி பெண்ணே எ—று. (௧௫)

எனவெடுத் திறைவ னியம்பலுங் கதிர்கான் றெழின்மணிக்
கலன்கிடந் திமைக்குங், கனதனக் குமுத வதியெனு மணங்குகை
தொழு தெனதுமுற் பவமு, மனமுறத் தெளிந்து சொல்லுநீ யெ
னலும் வளந்தரு மல்லிகார்ச் சுனத்திற், சினகரத் திருக்கு மென்
சிறைப் புறவாச் சென்றுதித் திருந்தனை முன்னாள்.

இ—ள்: என எடுத்து இறைவன் இயம்பலும்— என்று விபரீசமகாராசன் எடுத்துக்கூறுதலும், கதிர் கான்று எழில் மணி கலன் கிடந்து இமைக்கும்—ஒளியைக்கக்கி அழகிய இரத்தினாபரணங்கள் கிடந்து பிரகாசிக்கின்ற, கன தன குமுதவதி எனும் அணங்கு கை தொழுது—பாரமாகிய ஸ்தனங்களையுடைய குமுதவதியென்னும் பெண்ணானவள் கைகுவித்து நமஸ்கரித்து, எனது முன் பவமும் மனம் உற தெளிந்து சொல்லு நீ எனலும்—என்னுடைய முற்பிறப்பின் சம்பவங்களையும் நன்றாய்மனத்திலுணர்ந்து (எனது நாயகனே) நீர்கூறவேண்டுமென்று வேண்டலும், வளம் தரும் மல்லிகார்ச்சுனத்தில்—செல்வத்தையுடைய மல்லிகார்ச்சுனமென்னும்நகரத்திலுள்ள, சின கரத்து இருக்கும் மென் சிறை புறவா—கோயிலிலிருக்கின்ற மி

ருதுவாகிய சிறகுகளையுடைய புறப்பட்சியாக, முன்னாள் சென்று உதித்து இருந்தனை—முன்னைக்காலத்திற்சென்று பிறந்திருந்தாய் எ—று. (௧௪)

இறந்தமுற் பவத்திற் செந்நிறத் தசையொன் றெடுத்துவாய்க் கவ்விநீ வரலுஞ், சிறந்தவெங் கழுகொன் றுனைத்தொடர்ந் திட.வச் சிவாலயந் தனைவலஞ் சூழ்ந்து, பறந்தனை வந்து விடைவரை கொடிக்கம் பத்திடைப் பயந்தொளித் திருப்ப, மறந்தரு கங்கங் கொத்திவா யலகால் வதைத்திட வாங்குயிர் மடிந்தாய்.

இ—ள்: இறந்த முன் பவத்தில்—கழிந்துபோன முற்பிறப்பில், செம் நிற தசை ஒன்று எடுத்து வாய் கவ்வி நீ வரலும்—செந்நிறமாகிய ஓர் மாமிசத்துண்டையெடுத்து வாயினாற்கவ்விக்கொண்டு நீவருதலும், சிறந்த வெய் கழுகு ஒன்று உனை தொடர்ந்திட—அழகிய கொடிய ஒரு கழுகானது உன்னைத்தொடர்ந்து செல்ல, அச்சிவாலயம் தனை வலம் சூழ்ந்து— அந்தச்சிவாலயத்தைப் பிரதட்சணஞ்செய்து, பறந்தனை வந்து—பறந்துவந்து, விடை வரை கொடி கம்பத்திடை—இடபமெழுதிய கொடிதூக்கிய ஸ்தம்பத்திலே, பயந்து ஒளித்து இருப்ப—நீ அஞ்சி மறைந்திருக்க, மறம் தரு கங்கம்—கொடிய அக்கழுகானது, வாய் அலகால் கொத்தி வதைத்திட—தனது வாயினலகினால் உன்னைக்கொத்திக்கொல்ல, ஆங்கு உயிர் மடிந்தாய்—அவ்விடத்தே நீ உயிரிறந்துபட்டாய் எ—று. (௧௫)

சொல்லுமக் கங்கம் புறவதா நின்னைத் தொடர்ந்துகொன் றிடுஞ்செயல் சொல்லில், வல்லினில் விழைவி னீகொடு வந்த வசைபடு தசையினை வவ்விச், செல்லுவ னென்று வந்துனை வலிதிற் செகுத்துநின் வாய்படுந் தசையைக், கல்லெறி விரைவி னப்புறங் கொண்டு போனதக் கடுஞ்சிறைக் கங்கம்.

இ—ள்: சொல்லும் அ கங்கம்—கூறப்பட்ட அக்கழுகானது, புறவு அதாம் நின்னை தொடர்ந்து கொன்றிடும் செயல் சொல்லில்—புறவாகிய உன்னைப் பின்தொடர்ந்து கொலைசெய்த காரணத்தைச் சொல்லவேண்டுமென்னில், வல்லினில் விழைவில நீ கொடு வந்த வசைபடு தசையினை—வலிமையுடனே ஆசையினால் நீகொண்டுவந்த எளிய மாமிசத்தை, வவ்வி செல்லுவன் என்று வந்து—கவர்ந்துசெல்வேனென்றுவந்து, உனை வலிதில் செகுத்து—உன்னைவலிமையாற்கொலைசெய்து, நின் வாய் படுந்தசையை—உனது வாயிற்கிடந்தமாமிசத்தை, கல் எறி விரைவில் அப்புறம் கொண்டு போனது—கல்லையெறிந்தாற்போன்ற வேகமாய் அப்பாற்கவர்ந்துகொண்டுசென்றது, அ கடும் சிறை கங்கம்—அந்த வேகமாகிய சிறகுகளையுடைய கழுகு எ—று.

தீவிழி யெருவை தொடர்ந்திட வந்தச் சிவாலயம் தனைவலம் வரலா, லாய்பிழிக் கொன்றைத் தொடைபுனை சடிலத் தண்ணன்

முன் னுவிநீத் ததனுற், பாய்திரை யுடுத்த நெடுநிலப் பரப்புப் பரி
த்திடும் பார்த்திவன் மகளாத், தூயசெய் கமலத் திருமகளென்ன
த் தோன்றியென் றுணைவியு மானாய்.

இ—ள்: தீ விழி எருவை தொடர்ந்திட—அக்கினியைப்போன்ற க
ண்களையுடைய அக்கழுகானது தொடர்ந்துசெல்ல, அந்த சிவாலயம் தனை
வலம் வரலால்—அந்தச்சிவாலயத்தைப் பிரதட்சணஞ்செய்ததனுலும், ஆய்
பிழி கொன்றை தொடை புனை சடிலத்து அண்ணல் முன் ஆவி நீத்த அதனு
ல்—தெளிந்த தேனையுடைய கொன்றைமலர்மாலையையணிந்த சடைமுடி
யையுடைய சிவபெருமானுக்குமுன்னே உயிரிறக்கப்பெற்றமையாலும், பாய்
திரையுடுத்த நெடுநில பரப்பு பரித்திடும் பார்த்திவன் மகளா—தத்துகின்ற
திரையையுடைய சமுத்திரத்தாற்சூழப்பட்ட நெடிய பரந்த பூமியைப்
பரிபாலனஞ்செய்கின்ற அரசனுடைய புத்திரியாய், தூய செம் கமல திரும
கள் என்ன தோன்றி—சுத்தமாகிய செந்தாமரைமலரில்வீற்றிருக்கின்ற இல
க்குமியைப்போலப்பிறந்து, என் துணைவியும் ஆனாய்— எனக்குநாயகியுமா
னாய் எ—று. (சஎ)

வேறு.

என்றிவை கூறக் கேட்ட வேந்திழை யெழுந்து போற்றி
நன்றிதென் றிறும்பூ தெய்தி நலனுடை நீயு நானு
மொன்றிமுன் னெடுத்த காயத் துற்பவ முரைத்தா யாங்கள்
சென்றினிப் பிறக்குந் தன்மை செப்புதி தெரிய வென்றாள்.

இ—ள்: என்று இவை கூற கேட்ட ஏந்திழை எழுந்து போற்றி—
என்று இவைகளை விபரீசமகாராசன்கூறக்கேட்ட ஆபரணங்களைத்தரித்த கு
முதவதியானவள் எழுந்து நமஸ்கரித்து, நன்று இது என்று இறும்பூது எ
ய்தி—இது மிகவும்நலமென்று குதூகலித்து, நலனுடை நீயும் நானும் ஒ
ன்றி முன்னெடுத்த காயத்து உற்பவம் உரைத்தாய்— நன்மையையுடைய
தேவரீரும் அடியேனும் இசைந்து முன்னேயெடுத்த சரீரத்தோற்றங்களை (எ
டுத்துச்) கூறினீர், யாங்கள் சென்று இனி பிறக்கும் தன்மை செப்புதி தெ
ரிய என்றாள்—நாங்கள் இனிமேல் போய் பிறக்குமபிறப்பை அறியும்படிசொ
ல்லவேண்டுமென்று வேண்டினுள் எ—று. (கஅ)

மென்னடை யன்ன மன்னாய் வேறினி யிரண்டாஞ் சன்மம்
பன்னக வேந்த னேந்தும் பார்மிசைச் சீந்து நாட்டின்
மன்னவ னுவன் யானீ சஞ்சயன் மகளாத் தோன்றிக்
கன்னலந் தருமென் மேருளிற் கலந்துறக் களித்து வாழ்வாய்.

இ—ள்: மெல் நடை அன்னம் அன்னாய்—மிருதுவாகிய நடையை
யுடைய அன்னத்தைப்போன்றவளே, வேறு இனி இரண்டாம் சன்மம்—

இனிவருகின்ற இரண்டாம்பிறப்பில், பன்னக வேந்தன் எந்தும் பார் மிசை-சர்ப்பராசனுகிய ஆதிசேடனுற்சுமக்கப்பட்ட பூமியில், யான் சிந்து நாட்டின் மன்னவன் ஆவன்—யான் சிந்துதேசத்திற்கு அரசனுகப்பிறப்பேன், நீ சஞ்சயன் மகளா தோன்றி—நீ சஞ்சயமகாராசனுடைய புத்திரியாகப்பிறந்து, கல் நலம் தரும் என் தோளில் கலந்து உற களித்து வாழ்வாய்— மலையைப்போன்ற வலிமைபொருந்திய எனதுபுயங்களைப் பொருந்தத்தழுவி மிகவும் மகிழ்ந்துவாழுவாய் எ—று. (கக)

படியிலோர் மூன்றுஞ் சன்மம் பகர்சவு ராட்ட நாட்டில்
வடியயிற் சுடர்வே லேந்து மன்னவ னுவன் யானீ
கடிமதிற் கலிங்க நாட்டிற் கலிங்கர்கோன் மகளாத் தோன்றி
யிடிமுரா சதிரும் வாயி லென்மனைக் கிழத்தி யாவை.

இ—ள்: படியில்—பூமியில், ஓர் மூன்றும் சன்மம்—மூன்றுவதாகிய பிறப்பிலே, பகர் சவுராட்ட நாட்டில்—சொல்லப்பட்ட சௌராட்டிரமென்னும் தேசத்திலே, யான் வடி அயில் சுடர் வேல் ஏந்தும் மன்னவன் ஆவன்—யான் மிகக்கூரிய ஒளியைக்கொண்ட வேற்படையைத்தாங்கிய அரசனுவேன். நீ கடி மதில் கலிங்க நாட்டில்—நீ காவல்பொருந்திய மதிலாற்சூழப்பட்டகலிங்கதேசத்தில், கலிங்கர் கோன் மகளா தோன்றி— கலிங்கதேசராசனுடைய புத்திரியாகப்பிறந்து, இடி முரசு அதிரும் வாயில் என் மனைகிழத்தி ஆவை—இடிபோல் முரசப்பறை ஆரவாரிக்கின்ற வாயிலையுடைய எனது மனைக்குரிய நாயகியாவாய் எ—று. (உ0)

மருவொரு நான்காஞ் சன்மம் வளங்கொள் காந்தார நாட்டிற்
றிருவள ரரச னுய்க்கோல் செலுத்துவன் யானீ சீறிப்
பொருதரி யலரை வெல்லு மகதர்கோன் புதல்வி யாகிச்
சுருதிவண் டிமிரும் பைந்தார் சூட்டியென் றுணைவி யாவை.

இ—ள்: மருவு ஒரு நான்காம் சன்மம்—பொருந்திய நாலாவதாகிய பிறப்பிலே, வளம் கொள் காந்தார நாட்டில்—செழிப்புப்பொருந்திய காந்தாரதேசத்தில், யான் திருவளர் அரசனுய் செங்கோல் செலுத்துவன்—யான் இலட்சுமிகரம் வளரப்பெற்ற அரசனுகிச்செங்கோல்செலுத்தி யரசாட்சிசெய்வேன். நீ சீறி பொரு அரியலரை வெல்லும் மகதர் கோன் புதல்வியாகி—நீ கோபித்து யுத்தஞ்செய்கின்ற பகைவர்களையெல்லாம் வெல்லுகின்ற மகதநாட்டரசன்புத்திரியாகி, சுருதி வண்டு இமிரும் பைந்தார் சூட்டி என் துணைவி ஆவை—இசைபொருந்திய வண்டுகள்மொய்க்கின்ற பசுமையாகிய மாலையைச்சூட்டி எனது நாயகியாவாய் எ—று. (உக)

சிறந்ததேச மைந்தாந் தோற்றந் திகழுவ லவந்தி நாட்டிற்
பிறந்தர சளிப்பன் யானீ பேருல கனைத்தும் போற்று

மறந்தரு வடிவேற் றானைத் தாருணன் மகளா வந்தென்
னறந்தரு மனைவியாகி யிருப்பையங் களவில் காலம்.

இ—ள்: சிறந்ததோர் ஐந்தாம் தோற்றம்—சிறப்புப்பொருந்திய ஐந்தாவதாகிய பிறப்பில், திகழ் இயல் அவந்தி நாட்டில் யான் பிறந்து அரசு அளிப்பன்—விளங்குகின்ற இயல்பையுடைய அவந்திதேசத்தில் யான்பிறந்து அரசாட்சிசெய்வேன், நீ பேருலகு அனைத்தும் போற்றும் மறந்தரு வடிவேல் தானை தாருணன் மகளா வந்து—நீ பெரிய உலகத்திலுள்ளாரால் துதிக்கப்படுகின்ற கொடிய கூரிய வேலைத்தாங்கிய சேனைகளையுடைய தாருணதேசத்தரசன் புத்திரியாகப்பிறந்து, என் அறந்தரு மனைவியாகி—என்னுடைய தருமபத்தினியாகி, அங்கு அளவு இல் காலம் இருப்பை—அங்கே எண்ணிறந்தகாலம் சீவித்திருப்பாய் எ—று. (௨௨)

முருந்துறழ் முறுவன் மானே மூவிரண் டாம்பி றப்பிற்
பெருந்தமி ழருத்த நாட்டிற் பேரர சளிப்பன் யானீ
யிருந்தவப் பலனால் விஞ்சும் யாதிதன் மகளாத் தோன்றி
யருந்தவத் திருமா தொத்தெ னம்புய மதனிற் சேர்வை.

இ—ள்: முருந்து உறழ் முறுவல் மானே—இறகின் முள்ளடியையொத்த பற்களைக்கொண்ட பெண்ணே, மூவிரண்டாம் பிறப்பில்—ஆறாவது பிறப்பிலே, பெரும் தமிழ் அருத்த நாட்டில—மிக்க தமிழ்வாய்ந்த அர்த்ததேசத்தில், யான் பேர் அரசு அளிப்பன்—யான் பெரிய அரசாட்சியைச் செய்வேன், நீ இரும் தவ பலனால் விஞ்சும் யாதி தன் மகளா தோன்றி—நீ மிக்க தவப்பேற்றினால் மேம்பட்ட யயாதிமகாராசனுக்குப் புத்திரியாகி, அரும் தவ திரு மாது ஒத்து—அரிய தவப்பெருக்கையுடைய இலச்சுமிதேவியைப்போன்று, என் அம்புயம் அதனில் சேர்வை—எனது அழகிய புயங்களைத்தழுவுவாய் எ—று. (௨௩)

கழிதரு மேழாஞ் சன்மங் கைதவன் குலத்திற் றோன்றி
யெழில்பெறு பதும வன்ம னெனும்பெயர் பெற்று வாசம்
பொழிமலர்ப் பைந்தார் வேம்பின் பூந்தொடை புனைந்து நாளும்
பழிபவம் பயிலா வண்ணம் பாண்டிநா டளிப்பன் யானே.

இ—ள்: கழி தரும் ஏழாம் சன்மம்—கழிவதாகிய ஏழாவது பிறப்பிலே, கைதவன் குலத்தில் தோன்றி—பாண்டியவம்சத்திலவதரித்து, எழில் பெறு பதுமவன்மன் எனும் பெயர் பெற்று—அழகுபொருந்திய பதுமவன்மனென்னும் பெயரைத்தாங்கி, வாசம் பொழி மலர் பைம் தார் வேம்பின் பூம் தொடை புனைந்து—வாசனைவீசுகின்ற பசுமையாகிய மலர்மாலைகளையும் வேப்பம்பூமாலையையும் அணிந்து, நாளும் பழி பவம் பயிலாவண்ணம்—எந்நாளும்

பழிபாவங்களைச் செய்யாதபடி, யான் பாண்டி நாடு அளிப்பன்—யான் பாண்டிநாட்டை அரசாட்சிசெய்வேன் எ—று.

ஏ—அசை. (உ௪)

நீயுமப் பவத்திற் செல்வ நிறைந்திடும் விந்த நாட்டிற்
காயும்வெங் கதிர்வேன் மன்னன் கண்ணெனக் கதிர்கொண் முத்த
மேயும்வேய் மருட்டு மேன்றோள் வசுமதி யென்னு நாமந்
தோயுமோ ரணங்கா வந்து தோன்றிநீ வளர்வா யுன்னை.

இ—ள்: நீயும் அ பவத்தில்—நீயும் அந்த ஏழாவதுபிறப்பிலே, செல்வம் நிறைந்திடும் விந்த நாட்டில்—ஐசுவரியம்நிறைந்த விந்ததேசத்திலே, காயும் வெம் கதிர் வேல் மன்னன் கண் என—பகைவரைவருத்துகின்ற கொடிய ஒளிபொருந்திய வேற்படையைத்தாங்கிய அரசனது கண்களென்று சொல்லும்படி, கதிர் கொள் முத்தம் ஏயும் வேய் மருட்டும் மென் தோள்— ஒளியையுடைய முத்துக்கள்பொருந்திய மூங்கிலையும் மருளச்செய்கின்ற மிருதுவாகிய தோள்களையுடைய, வசுமதி என்னும் நாமம் தோயும் ஓர் அணங்கா வந்து தோன்றி நீ வளர்வாய்-வசுமதியென்னும்பெயரையுடைய ஓர் பெண்ணாகவந்துபிறந்து நீ வளருவாய், உன்னை—அங்ஙனம் வளருகின்ற நின்னை எ-று.

மங்கல முரச மார்ப்ப மன்றல்செய் தளிப்பா னுன்னிச்
செங்கதிர் மணிகள் வேய்ந்த செம்பொன்மண் டபஞ்சோ டித்துத்
துங்கவேற் கரனுன் றாதை தூதரி லோலை போக்க
வங்கண்வந் தெய்தும் வைவே லரசரை யறையக் கேட்டி.

இ—ள்: மங்கல முரசம் ஆர்ப்ப மன்றல் செய்து அளிப்பான் உன்னி—மங்கலகரமாகிய முரசப்பறை ஆரவாரிக்க விவாகஞ்செய்து கொடுக்கநினைத்து, செம் கதிர் மணிகள் வேய்ந்த செம் பொன் மண்டபம் சோடித்து—சிவந்தகிரணங்களையுடைய இரத்தினங்கள்பதித்துச் செம்பொன்னினாற் செய்யப்பட்ட மண்டபத்தையலங்கரித்து, துங்க வேல் கரன் உன் தாதை— உயர்ச்சிபொருந்திய வேற்படையைத்தாங்கிய கையையுடைய உனதுபிதாவானவன், தூதரில் ஓலை போக்க—தூதர்களிடத்தில் மணவோலையையெழுதியனுப்ப, அங்கண் வந்து எய்தும் வை வேல் அரசரை அறைய கேட்டி—அவ்விடத்து வந்துசேருகின்ற கூரியவேற்படையைத்தாங்கிய அரசர்களைக் கூறுவேன் கேட்கக்கடவாய் எ—று. (உ௫)

கொண்டல்கண் படுக்குஞ் சோலை குலவயோத் தியர்தங் கோமான்
வண்டலம் வருந்தண் பைந்தார் வளையுங்காந் தாரமன்ன
னெண்டலத் தரசர் போற்று மிருபதன் றுருப தேயன்
விண்டலத் தமரர் போற்றும் விறலுடை யவந்தி வேந்தன்.

இ—ள்: கொண்டல் கண் படுக்கும் சோலை குலவு அயோத்தியர் தம் கோமான்—மேகங்கள்படிகின்ற சோலைகள்விளங்கப்பெற்ற அயோத்திதேசரா

சனும், வண்டு அலம் வரும் தண் பைம் தார் வளையும் காந்தார மன்னன்—வண்டுகள் சுழலுகின்ற குளிர்ந்த பசிய மாலைகள்சுற்றிய காந்தாரதேசாதிபதியும், எண் தலத்து அரசர் போற்றும் இரு பதன் துருப தேயன்—மதிக்கத்தகுந்த பூமியிலுள்ள அரசர்கள் துதிக்கின்ற இரண்டுபாதங்களையுடைய துருபதேயமகாராசனும், விண் தலத்து அமரர் போற்றும் விறல் உடை அவந்தி வேந்தன்—சுவர்க்கலோகவாசிகளாகிய தேவர்களாலுந் துதிக்கப்படுகின்ற வலிமையையுடைய அவந்திதேசராசனும் எ—று. (உ௭)

பல்லவ தேய மாளும் பார்த்திவன் பன்னுந் தொன்னூல்
வல்லவன் யானைத் தானை வாரணை வாசி மன்னன்
வில்லவ னாரின்மாலை மிலைந்திடு நேரி வெற்பன்
நல்லொளி முடிசேர் மன்னர் நன்மணச் சாலை நண்ண.

இ—ள்: பல்லவ தேயம் ஆளும் பார்த்திவன்—பல்லவதேசத்தை ஆளுகின்ற அரசனும், பன்னும் தொல் நூல் வல்லவன் யானை தானை வாரணவாசி மன்னன்—கூறப்படுகின்ற பழமையாகிய சாஸ்திரங்களில் வல்லவனாகிய யானைப்படைகளையுடைய காசிதேசராசனும், வில்லவன்—சேரராசனும், ஆரின் மாலை மிலைந்திடும் நேரிவெற்பன்— ஆத்திமாலையையணிந்த சோழராசனுமாகிய, நல் ஒளி முடி சேர் மன்னர்— நல்ல பிரகாசம்பொருந்திய முடியையணிந்த அரசர்களெல்லோரும், நல் மண சாலை நண்ண—நல்லவிவாகமண்டபத்தையடைய எ—று. (உ௮)

யானுமங் கெய்த நீயன் றிசையளி முரன்று பாடுந்
தேனுமிழ் மலர்ப்பைந் தாரென் றிண்டிறற் றோளிற் சூட்டப்
பானுவின் குலத்தோர் முன்னும் பார்த்திவ ரனேக ரண்டி
யூனுமிழ் படைக ளேந்தி யுருத்தென்னோ டியுத்தஞ் செய்வார்.

இ—ள்: யானும் அங்கு எய்த—(பதுமவன்மபாண்டியனாகிய) யானும் அவ்விடத்திலே வர, நீ—(விந்ததேசாதிபதியின்புத்திரியாகிய வசுமதியென்னும்) நீ, அன்று இசை அளி முரன்று பாடும் தேன் உமிழ் மலர் பைம் தார் என் திண் திறல் தோளில் சூட்ட—அற்றைக்காலத்து வண்டுகள் இசையை ஆரவாரித்துப்பாடுகின்ற தேனைச்சொரிகின்ற பசியமலர்மாலையை எனது மிக்கவலிமைபொருந்திய புயங்களிற்சூட்ட, பானுவின் குலத்தோர் முன்னும் பார்த்திவர் அனேகர், அண்டி— சூரியவம்சத்தவர்கள்முதலாகிய அனேக அரசர்கள் திரண்டு, ஊன் உமிழ் படைகள் ஏந்தி—மாமிசங்களைக்கக்குகின்ற ஆயுதங்களைத்தாங்கி, உருத்து என்னோடு யுத்தம் செய்வார்—கோபங்கொண்டு என்னுடன் போர்புரிவார்கள் எ—று. (உ௯)

அங்கவர் தம்மை யெல்லா மாடல்வெங் கரிக்கூட் டத்தோர்
சிங்கம தென்ன வென்று சேயிழை யுனையான் கொண்டு

சங்கமா முரசு பம்பை தழங்கிட வானில் வாழும்
புங்கவர் பரவுங் கூடற் புரிதனிற் புகுந்த பின்னர்.

இ—ள்: அங்கு அவர் தம்மை எல்லாம்— அவ்விடத்து அவ்வரசர்க ளெல்லாரையும், ஆடல வெம் கரி கூட்டத்து ஓர் சிங்கமது என்ன வென்று— கொலையில்வல்ல வெவ்விய யானைக்கூட்டத்துள் (சென்ற) ஓர் சிங்கத்தைப் போல வெற்றிகொண்டு, சேய் இழை—செம்மையாகிய ஆபரணங்களையணி ந்த பெண்ணே, சங்கம் மா முரசு பம்பை தழங்கிட—சங்குகளும் பெரியமுர சப்பறையும் ஒருகட்பறையும் ஆரவாரிக்க, வானில் வாழும் புங்கவர் பரவும் கூடல் புரிதனில—சுவர்க்கலோகத்தில் வாழுகின்ற தேவர்களுந் துதிக்கின் ற மதுராபுரியில், உனை யான் கொண்டு புகுந்த பின்னர— உன்னை யான் கொண்டுசென்றபின்பு எ—று. (ரு0)

அளப்பருங் கால மன்போ டாயிழை நீயு நானு
முளப்படும் போகந் துய்த்திட் டுலகொரு குடைக்கீ ழாண்டு
வளப்படு மகங்க ளாற்றி வளநிதி மறையோர்க் கீந்து
களப்படுங் கறையி னான்றன் கழல் பூசை செய்து.

இ—ள்: அளப்பருங் காலம் அன்போடு—அளவில்லாதகாலமாக அன் புடனே, ஆயிழை நீயும் நானும் உளப்படும் போகம் துய்த்திட்டு-ஆபரணங்களை யணிந்த பெண்ணே நீயும் யானும் மனத்துக்கேற்ற போகசுகங்களை யனுப வித்து, உலகு ஒரு குடை கீழ் ஆண்டு—உலகமுழுவதையும் ஒருகுடைநிழ லிற் பரிபாலனஞ்செய்து, வளப்படு மகங்கள ஆற்றி— மிக்கபலன்களைத்தர வல்ல யாகங்களைச்செய்து, வள நிதி மறையோர்க்கு ஈந்து—மிகுந்த திரவிய ங்களைப் பிராமணர்களுக்குக்கொடுத்து, களப்படும் கறையினான் தன் கழல பூசை செய்து—நஞ்சுண்டதழும்பு பொருந்திய திருமிடற்றையுடைய சிவபெ ருமானது ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த பாதங்களைப் பூசித்து எ—று. (ருக)

வள்ளைவார் குழைதோய் கண்ணாய் மழகளி றென்ன வாங்கோர்
பிள்ளையாம் பெறுவ மன்னோன் பெருங்கலை யுணர்ந்து தும்பி
கள்ளையார் கடுக்கை மாலைக் கடவுளுக் கடிமை பூண்டு
வெள்ளைவான் மதியம் போல வளர்ந்துபேர் விளங்கு நாளில்.

இ—ள். வள்ளை வார் குழை தோய் கண்ணாய்-வள்ளைக்கொடிபோன் றநீண்ட காதளவும்பாய்ந்த கண்களையுடையவளே, மழ களிறு என்ன ஆங்கு ஓர் பிள்ளை யாம் பெறுவம்-இளமையாகிய ஆண்யானையைப்போல அவ்விட த்து ஒருபுத்திரனை யாங்கள் பெறுவோம், அன்னோன் பெரும் கலை உணர்ந் து—அப்புதல்வனானவன் பெரிய அறுபத்தினான்கு கலைஞானங்களையுங் கற் று, தும்பி கள்ளை ஆர் கடுக்கை மாலை கடவுளுக்கு அடிமை பூண்டு—வண்டு கள் தேனையுண்ணுகின்ற கொன்றைமாலையையணிந்த சிவபெருமானுக்கு அ டிமையாகி, வெள்ளை வான் மதியம் போல வளர்ந்து—வெண்ணிறமாகிய ஆ

காயத்திற்சஞ்சரிக்கின்ற சந்திரனைப்போலவளர்ந்து, பேர் விளங்கு நாளில்—கீர்த்திவிளங்குகின்ற காலத்தில் எ—று. (௫௨)

அணிகெழு செழும்பொற் சோதி யவிர்மணி முடியுஞ்சூட்டி
மணிமுடி யனந்தனேந்து மாநில மவன் பானல்கித்
தணிவருஞ் சனன மென்னுந் தழலினுங் கொடிய வெய்ய
பிணிகெட வேட்கை யோடும் பெருந்தவ மியற்ற வெண்ணி.

இ—ள்: அணி கெழு செழும் பொன் சோதி அவிர் மணி முடியும் சூட்டி—அழகுவிளங்குகின்ற செழுமையாகிய பொற்பிரகாசந்தங்கிய இரத்தினங்கள் பதித்துச்செய்த முடியையுந்தரித்து, மணி முடி அனந்தன் ஏந்தும் மா நிலம் அவன் பால் நல்கி—இரத்தினங்கள்பொருந்திய ஆயிரஞ்சிரசுகளையுடைய ஆதிசேடனாற் சுமக்கப்பட்ட பெரியபூமியை அப்புத்திரனிடத்திற்கொடுத்து, தணிவு அரும் சனனம் என்னும்— நீங்குதற்கரிய பிறப்பென்கின்ற, தழலினும் கொடிய வெய்ய பிணி கெட— அக்கினியினுங் கொடிய வெவ்விய நோயானது அற்றுப்போகவேண்டுமென்கின்ற, வேட்கையோடும்— (நீங்காத)விருப்பத்தோடும், பெரும் தவம் இயற்ற எண்ணி— பெரியதவங்களைச் செய்யக்கருதி எ—று. (௫௩)

தென்றலங் கன்று சந்தச் சினைமலர் வாசம் வீசுங்
குன்றமர்ந் தினிது வைகுங் குறுமுனி குறுக நம்பால்
மன்றலங் கோதை நீயும் யானுமாய் மருட்சி நீங்கி
யன்றவன் றன்னை நோக்கி யருந்தவ முழப்ப நின்றே.

இ—ள்: தென்றல் அம் கன்று—இளந்தென்றற்காற்றானது, சந்த சினை மலர் வாசம் வீசும்—சந்தனமரக்கொம்பர்களிலுள்ள மலர்வாசனையை அளாவிவீசுகின்ற, குன்று அமர்ந்து இனிது வைகும் குறுமுனி நம்பால் குறுக—பொதியமலையின்கண் நன்குவீற்றிருக்கின்ற அகஸ்தியமுனிவர் எங்களிடத்திற்குவரும்படி, மன்றல் அம் கோதை நீயும் யானுமாய்— வாசனைபொருந்திய கூந்தலையுடைய மங்கையே நீயும் யானுமாக, மருட்சி நீங்கி— மயக்கந் தவிர்ந்து, அன்று அவன் தன்னை நோக்கி—அந்நாளில் அவ்வகத்தியமுனிவரைக்குறித்து, அரும் தவம் நின்று உழப்பம்—அரியதவத்தை (நிலைத்து) நின்று செய்வோம் எ—று.

ஏ—அசை. (௫௪)

அரியநற் றவஞ்செய் காலை யகத்திய னெமக்கு ஞானத்
துரியநற் சிவயோ கத்தை யுவந்துப தேசஞ் செய்வா
னெரிசுடர்ப் பிழம்பா மேனி யெந்தையைச் சிந்தை தன்னிற்
றெரியுமவ் வியோக நின்று சித்தியா முத்தி சேர்வோம்.

இ—ள்: அரிய நல் தவம் செய் காலே— அருமையாகிய நல்ல தவத்தைச் செய்யுங்காலத்து, அகத்தியன்— அகத்தியமகாமுனிவர், எமக்கு ஞானத்து உரிய நல் சிவ யோகத்தை உவந்து உபதேசம் செய்வான்—நம்மிருவருக்குஞ் ஞானத்திற்குரியதாகக் கூறப்படுகின்ற நல்ல சிவயோகாப்பியாசத்தை மகிழ்ச்சிகொண்டு உபதேசித்து அருளுவர், எரி சுடர் பிழம்பாம் மேனி எந்தையை—எரிகின்ற சுடர்ப்பிழம்பாகிய திருமேனியைக்கொண்ட எமது பிதாவாகிய சிவபெருமானை, சிந்தை தன்னில் தெரியும் அ யோகம் நின்று சித்தியா முத்தி சேர்வேம்—மனத்திலுணரத்தக்க அந்தயோகசாதனையில் நின்று அதனாற் சித்தித்த மோட்சசாயுச்சியத்தை யடைவோம் எ—று. ()

நவமிகு பம்பை நாட்டி னாயுரு வெடுத்து முன்னாட்
சிவநிசி தன்னி லீசன் றெரிசனங் கிடைத்த பேற்றாற்
பவமகன் றுய்ய நன்மை பலித்தது பாவை நீயுந்
தவமதிவ் விரதந் தானே தவறிடா திழைத்தி யென்றான்.

இ—ள்: நவம் மிகு பம்பை நாட்டில் நாய் உரு எடுத்து— புதுமை மிகுந்த பம்பைநாட்டில் நாயாகப்பிறந்து, முன்னாள்— பண்டைக்காலத்தில், சிவநிசி தன்னில் ஈசன் தெரிசனம் கிடைத்த பேற்றால்— சிவராத்திரிதினத்தில் சிவதரிசனஞ்செய்த பேற்றினால், பவம் அகன்று உய்ய நன்மை பலித்தது—பாவங்களெல்லாம் நசிந்து உய்யும்பொருட்டு நன்மைவாய்க்கப் பெற்றது. பாவை—பாவைபோன்றவளே, நீயும் தவமது இவ்விரதம் தானே தவறிடாது இழைத்தி என்றான்— நீயுந்தவமாகிய இச்சிவராத்திரிவிரதத்தையே விதிவழுவாது அனுஷ்டிக்கக்கடவையென்று கூறினான். எ—று. (நசு)

ஒருவருந் திங்க டோறு முபயபக் கத்தி லுற்று
வருசதுர்த் தசிக டோறு மழுவலான் றன்னை வாசந்
தருமலர் கொடுபூ சித்துத் தணந்தெழு பிறப்பு நீங்கி
யிருவரும் பொருவி லாப்பே ரின்பவீ டெய்தி னாரால்.

இ—ள்: ஒருவ அரும் திங்கள் தோறும்—நீக்குதற்கரிய மாதங்கடோறும், உபய பக்கத்தில் உற்று வரு சதுர்த்தசிகள் தோறும்—பூருவ அபரபக்கங்கள் இரண்டினும் வருகின்ற சதுர்த்தசித்திதிகளிலெல்லாம், மழுவலான் தன்னை—மழுவாயுதத்தை வலக்கரத்திற்றாங்கிய சிவபெருமானை, வாசம் தரு மலர் கொடு பூசித்து—நறுமணம்வீசுகின்ற புஷ்பங்களைக்கொண்டு, அருச்சனைசெய்து, தணந்து எழு பிறப்பும் நீங்கி—தொடர்பாக வருகின்ற எழுபிறவிகளையுநீங்கி, இருவரும்—விபரிசமகாராசனும் மனைவியாகிய குமுதவதியும், பொரு இலா பேரின்ப வீடு எய்தினார்— ஒப்பற்ற மோட்சவீட்டையடைந்தார்கள் எ—று.

ஆல்—அசை.                    (நஎ)

சிவன்றிருக் கோயின் மேவிச் சிவநிசி விரதந் தன்னிற்
சிவன்றனைத் தெரிசித் தோருஞ் சேருவர் முத்தி யென்றே
சிவன்றனை யுணர்ந்து நாளுஞ் சிந்தைசெய் முனிவர் கேட்பச்
சிவன்றனக் கடிமை பூண்ட சூதன்முன் செப்பி னானே.

இ—ள்: சிவன் திரு கோயில் மேவி சிவநிசி விரதம் தன்னில்—சிவபெருமானுடைய திருக்கோயிலின்கண்ணேசென்று சிவராத்திரிவிரததினத்தில், சிவன் தனை தெரிசித்தோரும் சேருவர் முத்தி என்று — சிவபெருமானை (விரதமனுஷ்டியாது) தரிசனைசெய்தவர்களும் மோட்சவீட்டையடைவர்களென்று, சிவன் தனை உணர்ந்து நாளும் சிந்தைசெய் முனிவர் கேட்ப சிவபெருமானை மனத்தாலறிந்து எந்நாளுந் தியானஞ்செய்கின்ற நைமிசாரணியமுனிவர்கள்கேட்கும்படி, சிவன் தனக்கு அடிமை பூண்ட சூதன் முன் செப்பினான்—சிவபெருமானுக்கு அடியவராகிய சூதமகாமுனிவர் பண்டைக் காலத்துக் கூறியருளினார் எ—று.

ஏ-அசை. (௬அ)

விபரிசச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௨அ.

# குபேரச்சருக்கம்.



ஓதமுற் றிடுபாற் கடலடுக் களேக்க ணமைத்தவா லோதன மருந்து, நாதனற் சங்கக் குழையணி காத னகைத்துமுப் புரமெரித் திடுநாண், மாதனு வெனப்பொற் கிரிகுழைத் தேறும் வசுந்தரைத் தேர்நனி கடவுஞ், சூதனுக் கிணையாஞ் சூதன்மற் றின்னுஞ் சிவநிசிக் கதைதொடுத் துரைப்பான்.

க. இ—ள்: ஓதம் உற்றிடு பால் கடல் அடுக்களைக் கண் அமைத்த—திரைபொருந்திய பாற்கடலாகிய பாகசாலையில் சமைக்கப்பட்ட, ஆல ஓதனம் அருந்தும் நாதன்—நஞ்சாகிய உணவையுண்டருளிய தலைவரும், நல் சங்க குழையணி காதன்—நல்ல சங்குக்குண்டலங்களையணிந்த திருக்காதுகளையுடையவருமாகிய சிவபெருமான், நகைத்து முப்புரம் எரித்திடு நாள்— சிரித்து முப்புரங்களையுந் தகித்த அற்றைக்காலத்து, மா தனு என பொன் கிரி கு

ழைத்து—பெருமைபொருந்திய வில்லாக மகாமேருகிரியை வளைத்து, ஏறும் வசுந்தரை தேர் நனி கடவும்—இவர்ந்துசென்ற பூமியாகிய இரதத்தை வேகமாய்ச்செலுத்திய, சூதனுக்கு இணையாம்—பாகராகிய பிரமதேவருக்கு இணையாகக்கூறப்படுகின்ற, சூதன்—சூதமுனிவரானவர், இன்னும் சிவநிசி கதை தொடுத்து உரைப்பான்—மேலுஞ்சிவராத்திரிவிரத சரித்திரத்தைத் தொடுத்துக் கூறுவாராயினர் எ—று.

மற்று-அசை. (௧)

முத்தவெண் மணிதோ டரித்தநூல் வடத்தின் முறைமுறை குறைவறக் கோத்து, வைத்தெனச் சிதறி விரிந்தபூம் பாளை மரகதக் கமுகினிற் குலையைத், துய்த்தலை கடுவன் பாய்ந்துறச் சிந்தச் சுரிமுகக் கூன்பிடர்ச் சங்கங், கைத்தலத் தெடுத்துக் கம்பள ரெறிந்து கடிந்திடுங் காம்பிலி நாடு.

இ—ள்: முத்த வெண் மணி தோள் தரித்த நூல் வடத்தில் முறை முறை குறைவு அற கோத்து வைத்து என—வெண்மையான முத்துமணிகளைத் தோளிற்றரித்த பூணூலாகிய வடத்தில் வரிசைவரிசையாகக் குறைவின்றிக் கோத்துவைத்தார்போல, சிதறி விரிந்த பூம் பாளை— பரந்து விரிந்த பூம்பாளைகளையுடைய, மரகத கமுகினில் குலையை- மரகதரத்தினம்போன்ற (பச்சைநிறத்தையுடைய) கமுகமரத்தினது குலைகளை, துய்த்து அலை கடுவன் பாய்ந்து உற சிந்த-உணவுகளைப்புசித்து அலைகின்ற குரங்குகளானவை பாய்ந்து மிகச்சிதைவுசெய்ய, சுரிமுக கூன் பிடர் சங்கம் கை தலத்து எடுத்து- முறுக்குப்பொருந்திய முகத்தையும் வளைந்த பிடரையுமுடைய சங்குகளைக் கைகளினலெடுத்து, கம்பளர் எறிந்து கடிந்திடும் காம்பிலி நாடு—உழவர்கள் எறிந்து துரத்துகின்ற காம்பிலிநாடு (என்று ஓர் நாடுளது) எ—று. (௨)

கயமலர் துவைத்துக் கரைதவழ் பணிலங் கான்றிடத் தோன்றுநித் திலத்தை, முயன்மதிப் பிள்ளை யெனப்பகற் காவி முகைமுறுக் குடைந்துதே னொழுக்கும், வயன்மருங் கெழுந்த கரும்பினைக் கவரி முறித்திடத் தெறித்தவெண் மணிமுத், தயன்முதிர்ந் திடுசூற் றவளைமேற் படநொந் தாங்கது பொறுத்திடா தாறும்.

இ—ள்: கய மலர் துவைத்து—தடாகத்தின்கணுள்ள புஷ்பங்களைமிதித்து, கரை தவழ் பணிலம் கான்றிட தோன்று நித்திலத்தை — கரைகளில் தவழ்ந்துசெல்லுகின்ற சங்குகளானவை கக்குதலினல் பிரகாசிக்கின்ற முத்துக்களை, முயல் மதி பிள்ளையென—முயற்களங்கத்தைக்கொண்ட இளஞ்சந்திரனென்று, பகல் காவி முகை முறுக்கு உடைந்து தேன் ஒழுக்கும்— பகற்காலத்திற் கருங்காவி முகைகளானவை இதழ் விண்டு தேனைச் சிந்துகின்ற, வயல் மருங்கு எழுந்த கரும்பினை—வயல்களின்பக்கத்தில் வளர்ந்த கரும்

புகளை, கவரி முறித்திட—கவரிமான்கள் முரித்தலினால், தெறித்த வெண்மணி முத்து—சிந்திய வெள்ளிய முத்துமணிகளானவை, அயல் முதிர்ந்திடு சூல் தவளை மேல்பட—அயலிலுள்ள கருப்பம் முதிர்ந்த தவளைகளின்மேற்படுதலும், நொந்து— வருந்தி, ஆங்கு அது பொறுத்திடாது அரற்றும்—அவ்விடத்து அத்தவளைகளானவை சகிக்கலாற்றாது அலறும் எ—று. (ங)

இலைதலை விரிந்த நெட்டுடற் பூக மேற்றவொண் டாற்றிளங் கதலி, யலைதலைத் தவிராத் தூங்குதீங் கனிசே ரம்பிர மனற்பொறி சிதறு, முலைமுகத் துருக்கிப் பழுத்தபொற் சுளைக ளுற்றமுட் குடப்பழப் பனசந், தலைவளை குலைச்செஞ் சாலிநீள் வயலின் றலைத்தலை தழைந்துநின் றோங்கும்.

இ—ள் இலை தலை விரிந்த நெட்டு உடல் பூகம்—தலையின்கண்ணே இலைவிரியப்பெற்ற நீண்ட உடலையுடைய கமுகுகளும், ஏற்ற ஒள் தாறு இளம் கதலி—உயர்வுபொருந்திய ஒளியமைந்த தாறுகளைக்கொண்ட இளமையாகிய வாழைகளும், அலை தலை தவிரா தூங்கும தீம் கனி சேர் ஆம்பிரம்—அசைதல் ஒழியாது தூங்குகின்ற தித்திப்பாகிய பழங்கள்நிறைந்த மாமரங்களும், அனல பொறி சிதறும் உலை முகத்து உருக்கி பழுத்த பொன் சுளைகள் உற்ற முள் குட பழ பனசம்—அக்கினிப்பொறிகளைச்சிந்துகின்ற உலைமுகத்திலுருக்கச்செய்து பழுப்பு ஏற்றிய பொன்போன்ற சுளைகளையுடைய முட்கள் பொருந்திய குடத்துக்குச்சமானமாகிய பழங்களைக்கொண்ட பலாமரங்களும், தலை வளை குலை செம் சாலி—தலைகள்வளைந்த கதிர்களைக்கொண்ட செந்நெற்களும், நீள் வயலின் தலைத்தலை தழைத்து நின்று ஓங்கும்— நீண்ட வயல்களிலே இடமிடங்கடோறும் ஓங்கி வளர்ந்துநிற்கும் எ—று. (ச)

இரும்புகாய்ந் தொத்த செக்கர்வா னெழுந்த விளமதிக் குழவியை யளிகள், விரும்புபூ மலர்த்தா தினைச்சிறு நுதலின் வெண்டிரு நீறெனச் சாத்தி, யரும்பெனுங் கலசத் தூறுநறு நெய்வார்த் தடர்சினைத் தொட்டில்வைத் தசைத்துச், சுரும்புதா லிசைப்ப மென்றளிர்ச் சாணை துயிற்றியே வளர்த்திடுஞ் சோலை.

இ—ள் இருப்பு காய்ந்து ஒத்த செக்கர் வான் எழுந்த இளமதிக் குழவியை—இரும்பைப் பழுக்கக்காய்ச்சினாற்போன்ற செக்கர்வேசத்திலுதித்த இளம்பிறைச்சந்திரனாகிய குழந்தையை, அளிகள் விரும்பு பூ மலர் தாதினை சிறு நுதலில் வெள் திருநீறு என சாத்தி— வண்டுகள் விரும்புகின்றபுஷ்பங்களின் பராகத்தைச் சிறியநெற்றியின்கண்ணே வெள்ளிய திருநீறாகத் தரித்து, அரும்பு எனும் கலசத்து ஊறு நறுநெய் வார்த்து—முகையாகிய கலசத்திற்பொருந்திய நறிய நெய்யை வார்த்து, அடர் சினை தொட்டில் வைத்து அசைத்து—நெருங்கிய கிளைகளாகிய தொட்டிலிற்கிடத்தி அசைத்து, சு

ரும்பு தால் இசைப்ப-வண்டுகள் தாலாட்டுசலாகிய் இசையைப்பாட, மெல் தளிர் சாணை துயிற்றி-மிருதுவாகியதளிர்களென்னுஞ்சாணையில் நித்திரைசெய்வித்து, வளர்த்திடும் சோலை-வளரும்படிசெய்யும் சோலைகளானவை எ-று. வ-அசை. (ரு)

இனையன வளங்கூர்ந் திடுநெடு நாட்டி லிருங்கலைத் துறையெலா முணர்ந்தோன், வனைதுழா யலங்கற் கண்ணனு மறியா மரைடி வந்தனை புரிந்து, நினைவருங் காம முதலமுக் குறும்பி னெடும்பகை கடிந்து நீணிலத்திற், றனைநிக ரான சுத்தநல் வேள்வி தத்தனென் றுளனொரு மறையோன்.

இ—ள். இனையன வளம் கூர்ந்திடு நெடு நாட்டில்— இத்தன்மையாகிய செழிப்புமிகுந்த நெடிய அந்தக் காம்பிலிநாட்டில், இரும் கலை துறையெலாம் உணர்ந்தோன்—பெரிய சாஸ்திரவழிகள் எல்லாவற்றையும் அறிந்தவனாய், வனை துழாய் அலங்கல் கண்ணனும் அறியா மலர் அடி வந்தனை புரிந்து—தொடுக்கப்பட்ட துளசிமாலையையணிந்த மாயவனுமறியாத (சிவபெருமானுடைய) தாமரைமலர்போன்ற திருப்பாதங்களைநமஸ்கரித்து, நினைவு அரும் காமம் முதல முக்குறும்பின் நெடும பகை கடிந்து— நினைத்தற்கரிய காமம் வெகுளி மயக்கமாகிய முக்குறும்புகளினதும் மிக்க பகையை அழித்து, நீள் நிலத்தில்—நீண்ட பூமியின்கண்ணே, தனை நிகரான — தனக்குப் (பிறர் ஒருவரும் நிகராகாது) தானேநிகராக இருக்கின்ற, சுத்த நல் வேள்வி தத்தன் என்று உளன் ஒரு மறையோன்—சுத்தமாகிய நன்மைபொருந்திய வேள்விதத்தன் என்னும்பெயரையுடையவனாகிய பிராமணன் ஒருவன் இருந்தான் எ—று. (சு)

அன்னமா மறையோ னைம்புலப் பகைசெற் றாற்றிய வருந்தவப் பேற்றாற், கன்னல்வே ளெனவோர் நன்மகப் பெற்றான் கருதருங் குணநிதி யவன்பேர், முன்னமுந் நூலின் வினைவிதி முறையின் முடித்தபின் முதுக்குறை வுடையோ, னுன்னருஞ் சுருதி முதற்கலை பயிற்ற வோதினு னுளத்திலுற் றுணர்ந்தான்.

இ—ள்: அன்ன மா மறையோன்—அந்தப்பெருமைபொருந்திய பிராமணன், ஐம் புல பகை செற்று ஆற்றிய அரும் தவ பேற்றால்—சத்த பரிச ரூப ரச கந்தமாகிய பஞ்சப்புலன்களின் பகைகளையும் அழித்துச்செய்த அரிய தவப்பலத்தினால், கன்னல் வேள் என ஓர் நல் மகப் பெற்றான்— கருப்புவில்லையுடையவனாகிய மன்மதனைப்போல ஒரு நல்ல புத்திரனைப்பெற்றான், அவன் பேர் கருத அரும் குணநிதி— அவனுடைய பெயர் எண்ணுதற்கரிய குணநிதியாகும், முன்னம் முந்நூலின் வினை விதி முறையின் முடித்தபின்—அவனுக்கு முன்னரே உபவீததாரணத்தை விதிப்படிசெய்து

முடித்தபின்பு, முதுக்குறைவு உடையோன்—பேரறிவுடைய அவனதுபிதா வாகிய வேள்விதத்தன், உன்ன அரும் சுருதி முதல் கலை பயிற்ற-எண்ணுதற்கரிய வேதமுதலிய சாஸ்திரங்களெல்லாவற்றையுங் கற்பிக்க, ஓதினான் உள த்தில் உற்று உணர்ந்தான்—கற்று மனத்தில் அறிந்து தெளிந்தான் எ—று.

தூமமார்ந் திருண்டு சுருண்டுநீண் டிடுமைச் சுரிகுழற் றோகையர் மருண்டு, காமனு மென்னக் காமுறு பருவ முற்றபின் கற்றைவெண் கதிர்கால், சோமனு ண்டளப்பான் முதனவக் கிரகஞ் சுகம்பெறு முகூர்த்தநன் னுளோர், வாமமே கலைப்பொற் குலக் கொடி தன்னை மறைப்படி வதுவைசெய் திட்டான்.

இ—ள்: தூமம் ஆர்ந்து இருண்டு சுருண்டு நீண்டிடும் மை சுரிகுழல் தோகையர்—நறும்புகையூட்டப்பட்டுக் கறுத்துச்சுருண்டுநீண்ட மயிர்ச்சாந்தணிந்த சுரித்தகூந்தலையுடைய பெண்கள், மருண்டு காமனும் என்ன காமுறும் பருவம் உற்ற பின்—மயங்கி மன்மதனேயென்று விரும்பத்தக்க பருவம் அடைந்தபின்பு, கற்றை வெண் கதிர் கால் சோமன்—கூட்டமாகிய வெள்ளிய கிரணங்களைக் கக்குகின்ற சந்திரனும், ஆண்டு அளப்பான்முதல்—ஒருவருடத்திற்கு ஒருமுறை ஓரிராசியிற்செல்லுகின்ற வியாழனும்முதலாகிய, நவக்கிரகம் சுகம் பெறு முகூர்த்த நல நாள்-ஒன்பதுகிரகங்களுஞ் சுகத்தைத் தரும்நிலையில் நிற்கின்ற நலமுகூர்த்தத்தில், ஓர் வாம மேகலை பொன் குல கொடி தன்னை—அழகிய மேகலாபரணமணிந்த இலக்குமிபோன்ற குலமகளொருத்தியை, மறைப்படி வதுவை செய்திட்டான்—வேதவிதிப்படி விவாகஞ்செய்தான் எ—று. (அ)

வேறு.

இன்பமுற் றன்னை தந்தை யில்வயி னிருக்கு மந்நாண்
மன்பதை மதிக்குஞ் சீர்த்தி வளர்குண நிதியா மைந்தன்
புன்புல மீதூர்ந் தூழின் பொறித்திடு விதியின் கோட்பாற்
றுன்பமும் பகையு நல்குஞ் சூதின்மேன் மனம்வைத் தானே.

இ—ள்: இன்பம் உற்று— அவளுடன் போகசுகத்தையனுபவித்துக்கொண்டு, அன்னை தந்தை இல் வயின் இருக்கும் அந்நாள்— தாய்தந்தையரது இல்லத்தில் வாழ்ந்திருக்கும் அற்றைக்காலத்து, மன்பதை மதிக்கும் சீர்த்தி வளர் குணநிதியாம் மைந்தன்—மனுடர்களினால் மதிக்கப்படுகின்ற கீர்த்திகள்வளரப்பெற்ற குணநிதியென்னும பெயரையுடைய புத்திரன், புன்புலம் மீதூர்ந்து—தீய அறிவு மிகுந்து, ஊழின் பொறித்திடும் விதியின் கோட்பால்—ஊழ்வினையின்படியெழுதப்பட்ட விதியின்வலியால், துன்பமும் பகையும்நல்கும்-துன்பங்களையும் பகைகளையும் விளைவிக்கின்ற, சூதின்மேல் மனம் வைத்தான்—சூதாட்டத்தின்மேல் விருப்பங்கொண்டனன் எ—று.

ஏ—அசை.

அற்புள ளாய தந்தை யறிவுறா வண்ணங் கல்விச்
சொற்பயி லாதா ரோடு துன்னிவெங் களகந் தன்னி
னற்பக லிரவெப் போது நன்மதி மருட்சி கூர்ந்து
பொற்கலன் கலைபொற் காசு பொருதுநா டோறுந் தோற்பன்.

இ—ள்: அன்பு உளன் ஆய தந்தை அறிவு உறா வண்ணம்—அன்பு பொருந்தியவனாகிய தனது பிதா அறியாதபடி, கல்வி சொல் பயிலாதாரோடு துன்னி—கல்வியென்னுஞ் சொல்லைத்தானும் அப்பியாசஞ்செய்யாத (மூடர்களோடு) கூடி, வெம் களகம் தன்னில்—கொடிய சூதாடுமிடத்தில், நல் பகல் இரவு எப்போதும்—நல்ல பகலுமிரவுமாகிய எக்காலத்தினும், நல் மதி மருட்சி கூர்ந்து—நல்லறிவு மயக்கப்பெற்று, நாள் தொறும் பொருது—தினந்தோறுஞ்சூதாடி, பொன் கலன் கலை பொன் காசு தோற்பன்— பொன்னாபரணங்களையும் வஸ்திரங்களையும் பொற்காசுகளையுந் தோல்வியடைவான் எ—று. (௧0)

தனையன்யாண் டுற்றா னென்று தாதைகேட் டிடும்போ தெல்லா
மனைமிக வெருவி யோதற் ககன்றன னென்று தீய
வினையம தானசூது மறைத்தனள் விளம்ப முந்நூல்
வனைதரு மார்பன் சற்று முணர்ந்திலன் வாழு நாளில்.

இ—ள்: தனையன் யாண்டு உற்றான் என்று தாதை கேட்டிடும் போது எல்லாம்—மகன் எங்குச்சென்றானென்று பிதாக் கேட்கும்போதெல்லாம், அனை மிக வெருவி—தாயானவள் மிகவும்பயங்கரமடைந்து, ஓதற்கு அகன்றனன் என்று—படித்தற்குச் சென்றானென்று, தீய வினையமதான சூது மறைத்தனள் விளம்ப—கொடியதொழிலாகிய சூதாட்டத்திற்குச் சென்றதை மறைத்துக்கூற, முந்நூல் வனைதரும் மார்பன்—முப்புரியாகிய உபவீதந்தரித்த மார்பையுடைய வேள்வித்தத்தனானவன், சற்றும் உணர்ந்திலன் வாழும் நாளில்—சிறிதுமறியாதவனாய்ச் சீவிக்குங்காலத்தில் எ—று. (௧௧)

ஆய்மகன் றன்னை வாவென் றழைத்துநீ யிழைக்கு மிந்தத்
தீயசூ துந்தை தேரி னுனையுமிங் கெனையுஞ் சீறிக்
காய்வனென் றுள்ளத் தஞ்சிக் கவறுக டவறுசெய்யுந்
தாயநீ யாடுஞ் சூது தனையொழித் துரைத்தேன் முற்றும்.

இ—ள்: ஆய் மகன் தன்னை வா என்று அழைத்து—தாயானவள் புத்திரனாகிய குணநிதியை வருகவென்றழைத்து, நீ இழைக்கும் இந்த் தீய சூது உந்தை தேரின்—நீயாடுகின்ற கொடிய இச்சூதை உனது பிதா அறிவாராயின், உனையும் இங்கு எனையும் சீறி காய்வன் என்று உள்த்து அஞ்சி-உன்னையுமென்னையும் இவ்விடத்திற்கோபங்கொண்டு கண்டிப்பாரென்கின்ற மனப்பயத்தினால், நீ ஆடும் கவறுகள் தவறு செய்யும் தாயம் சூது தனை-நீவிளையாடுகின்ற கவறுருட்டமுந் தீமையைவருவிக்கின்ற தாயமும் சூது

மாகிய இவைகளை, முற்றும் ஒழித்து உரைத்தேன்—முழுவதையும்மறைத்துக்கூறினேன் எ—று. (௧௨)

உந்தைதன் றொழுக்க நீதி யுணர்ந்திலை யந்த ணாளர்
மைந்தர்க ணடக்கை கண்டு மதிக்கிலை யென்று மாழ்கிக்
கந்தமைக் குவளை வாட்கண் கலுழ்ந்தவ ளுரைக்கு மாற்றஞ்
சிந்தையிற் கொள்ளான் வஞ்சக் கணிகையர் திறத்திற் சேர்வான்

இ—ள்: உந்தை தன் ஒழுக்கம் நீதி உணர்ந்திலை— உன்பிதாவினது நல்லொழுக்கத்தையும் நீதிநிலையையும் அறிந்தாயில்லை, அந்தணாளர் மைந்தர்கள் நடக்கை கண்டு மதிக்கிலை— பிராமணர்களது புத்திரர்களின் நடக்கையைப்பார்த்து (நல்லவொழுக்கமின்னது தீயவொழுக்கமின்னதென்று)மதித்தாயுமில்லை, என்று மாழ்கி—என்ற(கூறி)மனம்வருந்தி, கந்தம் மை குவளை வாள் கண் கலுழ்ந்து— வாசனைபொருந்திய கருங்குவளைமலரையும் வாளையுமொத்த கண்களிலிருந்து நீர்சொரிந்து, அவள் உரைக்கும் மாற்றம் சிந்தையில் கொள்ளான்— அவள்கூறுகின்ற வார்த்தைகளை மனத்திற் சிந்தியாதவனாய், வஞ்ச கணிகையர் திறத்தில் சேர்வான்— வஞ்சகத்தன்மைகள்குடிகொண்ட வேசியர்களிடத்திற் செல்வான் எ—று. (௧௩)

வாட்டடங் கருங்கட் குழை மகளிர்மேன் மனம்வைப் போரைக்
கோட்டரு கள்ளு நாளுங் குடிப்பவர் தம்மைக் கூடி
யீட்டரும் பொருள வாவுற் றிருங்கவ றாடு வோரை
வேட்டமேன் மனம்வைப் போரை யாவரே விலக்க வல்லார்.

இ—ள்: வாள் தடம் கரும் கண் குழை மகளிர்மேல் மனம் வைப்போரை—வாள்போன்ற விசாலமாகிய கரியகண்களையுடைய வேசிப்பெண்களிடத்து மனப்பற்றுவைப்பவர்களையும், கோள் தரு கள்ளு நாளும் குடிப்பவர் தம்மை—கோள்களைவிளைக்கின்ற கள்ளை எந்நாளுங் குடிப்பவர்களையும், கூடி ஈட்ட அரும் பொருள் அவாவுற்று இரும் கவறு ஆடுவோரை—கூடித் தேடுதற்கரிய பொருளிச்சைகொண்டு பெரியசூதாடுபவர்களையும், வேட்டம் மேல் மனம் வைப்போரை—வேட்டையாடுவதில் மனம்வைப்பவர்களையும், யாவரே விலக்க வல்லார்—(அத்தொழில்களினின்றும்) யார்தான்தடுக்கவல்லவர் எ—று.

இனைய நீர்மையினு னென்று மிசைந்துளா னில்லி னோர்நா
ளனைதுயி லமைய நோக்கி யத்தன்முன் னவள்பா னல்கும்
புனைமணி யாழி தன்னைப் பொருக்கெனத் திருடிப் போகி
வினையவெங் கவற்றி னாடித் தோற்றனன் வேறொன் றில்லான்.

இ—ள்: இனைய நீர்மையினன் என்றும் இசைந்து உளான்— இவ்விதமாகிய செயல்களை எந்நாளும் பொருந்தப்பெற்றவனாகிய அக்குணநிதியானவன், இல்லின் ஓர் நாள் அனை துயில் அமையம் நோக்கி—இல்லத்தில்

ஓர்தினத்துத் தாயானவள் நித்திரைசெய்யுஞ்சமையம்பார்த்து, அத்தன் முன் அவள் பால் நல்கும் புனை மணி ஆழி தன்னை—பிதாவானவன் அவளிடத்து முன்கொடுத்துவைத்த அழகிய இரத்தினமோதிரத்தை, பொருகவெனை திருடி போகி—வேகமாய்க் களவுசெய்துபோய், வினைய வெம் கவற்றின் ஆடி—தீவினையாகிய கொடிய கவருட்டத்தில்வைத்து விளையாடி, தோற்றனன் வேறு ஒன்று இல்லான்—வேறுபொருள் ஒன்றுமில்லாதவனாய்த் தோல்வியடைந்தான் எ—று. (௧௫)

அந்தமோ திரத்தைக் கையி லணிந்துளா னொருவன் றன்னைத்
தந்தையாம் வேள்வி தத்தன் றனித்தொரு மறுகிற் கண்டு
சிந்தையிற் கவலை கூர்ந்து தெளிந்துபின் னறிவ னென்றுங்
கிந்தமா மணிப்பொன் னாழி யாருனக் கீந்த தென்றான்.

இ—ள்: அந்த மோதிரத்தை கையில் அணிந்துளான் ஒருவன் தன்னை—அந்தமோதிரத்தைக் கையிலே அணிந்திருந்த ஒருவனை, தந்தையாம் வேள்வி தத்தன் தனித்து ஒரு மறுகில் கண்டு—பிதாவாகிய வேள்விதத்தன் தனிமையாக ஒரு வீதியிற் கண்டு, சிந்தையில் கவலை கூர்ந்து — மனத்தில் துக்கங்கொண்டு, பின் தெளிந்து—பின்னர் ஒருவாறு தேறுதலடைந்து, அறிவன் என்று—இதனை வினவுவோமென்று, இந்த மா மணி பொன் ஆழி யார் உனக்கு ஈந்தது என்றான்—இந்தப் பெரிய இரத்தினங்கள்பதித்துச் செய்த பொன்மோதிரத்தை யார் உனக்குக் கொடுத்ததென்று வினவினான் எ—று.

ஆங்கு-அஃசை. (௧௬)

அரவின்மேற் கிடந்த வையத் தமரர்கள் பதியே யானுங்
கரவினிற் கொண்ட தன்றுன் காதல்கூர் மைந்தன் சூது
பொரவிருப் புடையோ னேற்றென் புட்டகம் வென்று னின்றிவ்
விரன்மணி யாழி தோற்றான் மேவுவ னாளை யின்னும்.

இ—ள்: அரவின் மேல் கிடந்த வையத்து அமரர்கள் பதியே— ஆதிசேடனதுசிரசின்மேற்றங்கிய பூமியின்மேல்வசிக்கின்ற பிராமணர்களுக்கெல்லாந்தலைவரே, யானும் கரவினில் கொண்டது அன்று—யானும் களவினாற் பெற்றேனல்லேன், உன் காதல் கூர் மைந்தன்—உமது அன்புபொருந்திய புத்திரனானவன், சூது பொர விருப்பு உடையோன்—சூதாட்டத்தில் மிகப்பிரியமுடையவன், நேற்று என் புட்டகம் வென்றான்—நேற்றைத்தினத்தில் என் வஸ்திரத்தை வென்றனன், இன்று இவ்விரல் மணி ஆழி தோற்றான்—இன்றைசகு இந்த விரலிலணிந்த இரத்தினமோதிரத்தைததோற்றான், இன்னும் நாளை மேவுவன்—இனி நாளைக்கும் வருவான் எ—று. (௧௭)

ஓதுநூற் கலைவல் லாய்நின் னொருமகன் விலையி லாமென்
போதுபோற் கோசி கஞ்செம் பொன்புனை கலன்கள் யாவுஞ்

சூதுபோர் பொருது நாளுந் தொழிலிது வாகத் தோற்பா
னீதுநீ யுணராய் போலு மென்றவ னெடுத்துக் கூற.

இ—ள்: ஓது நூல் கலை வல்லாய்—ஓதப்படுகின்ற நூற்கலைகளை ஆராய்ந்தறிந்த வன்மையையுடையவரே, நின் ஒரு மகன்— உமது ஏகபுத்திரனாகிய குணநிதியானவன், விலை இலா மென் போது போல் கோசிகம்—விலைமதிப்பற்ற மிருதுவாகிய பூவையொத்த வஸ்திரங்களும், செம் பொன் புனை கலன்கள் யாவும்—சிவந்த பொன்னினாற்செய்த ஆபரணங்களுமாகிய எல்லாவற்றையும், சூது போர் பொருது நாளும் தொழில் இதுவாகத் தோற்பான்—சூதாடி எந்தநாளும் இதுவேதொழிலாகக்கொண்டு தோல்வியடைவான், ஈது நீ உணராய் போலும் என்று— இதை நீவிர் அறிந்திலீர்போலுமென்று, அவன் எடுத்துக் கூற-அவன் இவைகளையெடுத்துச்சொல்ல எ-று.

கன்னபா கத்திற் காய்ந்த கதிர்நுனிச் சலாகை யிட்ட
தென்னவெந் துருகி யிற்பா லெய்தியில் லவளை நோக்கி
யுன்னதா ருயிரொப் பான புதல்வனெவ் வுழையி னுற்றா
னென்னமற் றவனீ ராட நீர்த்துறை புகுந்தா னென்றாள்.

இ—ள்: கன்ன பாகத்தில் காய்ந்த் கதிர் நுனி சலாகை இட்டது என்ன—காதிலே நெருப்பிற்காய்ந்த ஒளிபொருந்திய கூர்மையாகிய இருப்புச்சலாகையைச் செருகினாற்போல, வெந்து உருகி இல் பால் எய்தி— மனங்கொதித்து உருகித் தனது இல்லத்தையடைந்து, இல்லவளை நோக்கி— மனைவியைப்பார்த்து, உனது ஆர் உயிர் ஒப்பான புதல்வன் எவ்வுழையில் உற்றான் என்ன—உனது அரிய ஆன்மாவையொத்த மைந்தன் யாண்டுச்சென்றனன் என்றுவினவ, அவன் நீராட நீர்த்துறை புகுந்தான் என்றாள்— அப்புத்திரனானவன் ஸ்நானஞ்செய்தற்கு நீர்நிலையை அடைந்தான் என்றுகூறினள் எ—று.

உன்னது விரித்தல்விகாரம். (கக)

என்னலு நென்ன லுன்பா லெண்ணெயாட் டயர்போ தீந்த
வன்னநன் மணிப்பொன் னாழி தருகென மறையோன் கேட்பக்
கன்னலிற் கனிந்த மூரல் பகற்கடன் கழித்துத் துய்த்த
பின்னர்யான் றருவ லென்று பெட்புறப் பேச லோடும்.

இ—ள்: என்னலும்—என்றுகூறுதலும், நென்னல் உன் பால் எண்ணெய் ஆட்டு அயர் போது ஈந்த— நேற்றைத்தினம் எண்ணெய்தேய்த்து ஸ்நானஞ்செய்யும்பொழுது உன்னிடத்திற்றந்த, வன்ன நல் மணி பொன் ஆழி தருக என—அழகிய நல்ல இரத்தினமோதிரத்தைத் தருவாயாகவென்று, மறையோன் கேட்ப—அப்பிராமணன்கேட்க, கன்னலின் கனிந்த மூரல்—கரும்பைப்போலக் கனிந்தமொழிகளையுடைய அம்மனைவியானவள், ப்

கல் சடன் கழித்து தாய்த்தபின்னர்—பகலிற்செய்யப்படும் கருமங்களைமுடித்துப் போசனஞ்செய்தபின்பு, யான் தருவல் என்று பெட்பு உற பேசலோடும்—யான் அதனைத்தருவேனென்று அன்புபொருந்தக்கூறவும் எ—று.

ஆரல்—இருமடியாகுபெயர். (உ0)

நெறியில்பொய் புகன்று கற்பி னீரல செய்தாண் மைந்த
னறிவில"னாக வெஞ்சூ தாடியே படிற னானான்
குறியுடைப் பெரியோர் நூலிற் கூறிய நீதி நோக்கிற்
பொறியிலா விவரை விட்டுப் போவதே கடனென் றெண்ணி.

இ—ள்: நெறியில் பொய் புகன்று கற்பின் நீரல செய்தாள்— ஒழுக்கமற்ற பொய்யைக்கூறிக் சற்புநெறிக்கிசையாதனவற்றைச் செய்தனள், மைந்தன் அறிவிலன் ஆகி வெம் சூது ஆடியே படிறன் ஆனான்— புத்திரனானவன் நல்லறிவின்றிக் கொடிய சூதாடிப் பொய்யனாயினான், குறியுடை பெரியோர் நூலில் கூறிய நீதி நோக்கில்—நெறிதவறாத பெரியோர்கள் சாஸ்திரங்களிற்கூறிய நீதிகளை ஆராயின், பொறி இலா இவரை விட்டு போவதே கடன் என்று எண்ணி—நல்லறிவில்லாத இவர்களைவிட்டு நீங்குவதே நீதியென்று நினைந்து எ—று. (உக)

பற்றொரு சற்று மின்றிப் பாசிழைப் பவளச் செவ்வாய்ப்
பொற்றொடி தனையும் பெற்ற புத்திரன் றனையு நீத்தன்
றற்றொரு பதியி லெய்தி யுயர்குண வேள்வி தத்தன்
மற்றொரு மடந்தை தன்னை மணவினை முடித்து வாழ்ந்தான்.

இ—ள்: பற்று ஒரு சற்றுமின்றி — பறறுச் சிறிதுமில்லாமல், பாசிழை பவள செவ்வாய் பொன் தொடிதனையும்—பசுமையாகிய ஆபரணங்களையணிந்த பவளம்போன்ற சிவந்தவாயையும் பொன்வளையலையுமுடைய மனைவியையும், பெற்ற புத்திரன் தனையும் நீத்து—பெற்றபுத்திரனையும் விடுத்து, அன்று ஒரு பதியில் எய்தி உற்று—அத்தினத்தே வேறொருநகரத்தையடைந்து இருந்து, உயர் குண வேள்வி தத்தன்— மேலாகிய குணங்களையுடைய வேள்விதத்தனானவன், மற்றொரு மடந்தை தன்னை மணவினை முடித்து வாழ்ந்தான்— வேறொருபெண்ணை விவாகஞ்செய்து சுகித்திருந்தான் எ—று ()

இந்தமா நிலத்தி லிந்நாள் யான்புரி தவறு கண்டு
தந்தையிங் கன்னை யோடென் றன்னையுந் தணந்தா னென்று
சிந்தையிற் கவலை கூர்ந்து செய்வதொன் றறியான் மைந்த
னந்தமி றுன்ப வேலை யாழ்ந்தனன் கரைகா ணான்.

இ—ள்: இந்த மா நிலத்தில் இந்நாள் யான் புரி தவறு கண்டு— இந்தப் பெரிய பூமியின்கண்ணே இன்று யான்செய்தகுற்றத்தைக் கண்டு, தந்தை—பிதாவானவர், இங்கு அன்னையோடு என் தன்னையும் தணந்தான் எ

ன்று—இங்கே எனதுதாயையும் என்னையும்வெறுத்து நீக்கினுரென்று, மை திக்தன்ந்தையில் சவலை கூர்ந்து—புத்திரனுகிய குணநிதியானவன் மனத்தில் துன்பமதிகரித்து, செய்வதொன்று அறியான்—செய்யவேண்டியதொன்றையும்அறியாது, அந்தம் இல் துன்ப வேலை—முடிவற்ற துக்கசாகரத்தில், கரைகாணுனுய் ஆழ்ந்தனன்-கரைகாணப்பெருதவனுயழுந்தினுன் எ—று.()

கற்றிலம் பொருள்க ளீட்டுங் கல்விக ளொழுக்க மேன்மை
பெற்றில மஞ்ச லென்பார் பிறரெவ ரொருவர் பாலும்
பற்றில மற்று முள்ள பாசனத் தோர்க ணட்புஞ்
சற்றில மென்று மாழ்கிச் சலிப்புட னிருக்கு நாளில்.

இ—ள்: பொருள்கள் ஈட்டும் கல்விகள் கற்றிலம்—பொருள்கள்சம்பாதிக்கும் வித்தைகளொன்றையும பயின்றேமல்லேம், ஒழுக்க மேன்மை பெற்றிலம்—நல்லொழுக்கத்தையும் மேன்மையையும் பெற்றேமல்லேம், அஞ்சல் என்பார் பிறர் எவர்—இனியெங்களை அஞ்சன்மின் என்று ஆதரிப்பார் யார், ஒருவர் பாலும் பற்றிலம்—யாரிடத்துஞ் சிநேகமுடையேமல்லேம், மற்றுமுள்ள பாசனத்தோர்கள் நட்பும் சற்றிலம் என்று—மற்றுமுள்ள உறவினர்களது அன்புஞ்சிறிதாயினுமில்லேமென்று, மாழ்கி சலிப்புடன் இருக்கும் நாளில்—வருந்தித் துக்கத்தோடு இருக்குங் காலத்தில் எ—று. (உச)

அரனிர வதனி லீச னுலயந் தன்னி லோர்விப்
பிரனுயர் பூசை செய்யச் செல்லுவான் பின்ன ரெய்திக்
கரவினி லமலற் கேற்று மமுதினைக் கவர்ந்து மீள்வா
னிரவினி லற்ற நோக்கி யிருந்தனன் றுயிலி லாமல்.

இ—ள்: அரன் இரவு அதனில் ஈசன் ஆலயம் தன்னில்—சிவராத்திரிதினத்தில் ஓர் சிவாலயத்தில், ஓர் விப்பிரன் உயர் பூசை செய்ய செல்லுவான் பின்னர் எய்தி — ஒரு பிராமணன் உயர்வாகிய சிவபூசைசெய்யும்படி செல்ல அவன்பின்னேசென்று, கரவினில் அமலற்கு எற்றும் அமுதினை கவர்ந்து மீள்வான்—களவினுல் நிர்மலராகிய சிவபெருமானுக்கு நிவேதிக்கப்படுகின்ற அமுதைக்கவர்ந்து திரும்பிப்போகும்படி, இரவினில் துயிலை இலாமல் அற்றம் நோக்கி இருந்தனன— அவ்விரவில் நித்திரையில்லாமல் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான் எ—று. (உரு)

எரிபெரும் பசியி னோடங் கியாமமோர் நான்கும் பூசை
புரிதர நோக்கி வைகி வைகறைப் போதி தன்னி
லரியநல் விரத மாற்றி யமலனை யருச்சித் தேத்தித்
திரிசறு மறையோன் கண்க டூங்கியே துயிலக் கண்டான்.

இ—ள்: எரி பெரும் பசியினோடு அங்கு யாமம் ஓர் நான்கும் பூசை புரிதர நோக்கி வைகி—சுடுகின்ற மிகுதியான பசியுடன் அவ்விடத்து நான்

குசாமங்களும் பூசைசெய்யப்பட அதனைப்பார்த்திருந்து, வைகறை போது தன்னில்—விடியற்காலத்தில், அரிய நல் விரதமாற்றி— அருமையாகிய நல்ல விரதத்தையனுஷ்டித்து, அமலனை அருச்சித்து எத்தி— அருமையராகிய சிவபெருமானைப் பூசித்துத் துதித்து, தூரிசு அறு மறையோன் கண்கள் தூங்கியே துயில கண்டான்— குற்றமில்லாத அப்பிராமணனவன் கண்களில் தூக்கமுண்டாகி நித்திரைசெய்தலைக் கண்டான் எ—று. (உசு)

ஆண்டவ னெழுந்து போகி யமுதினை யெடுப்பக் கண்ணிற்
காண்டல்செய் யாது மங்குங் கனைசுடர் விளக்கைக் கையாற்
றூண்டல்செய் தீசன் முன்னர்ச் சோற்றினைக் கவர்ந்து கொண்டு
மீண்டொரு மறையோன காலில் விரைந்தனன் மிதிக்க லுற்றான்.

இ—ள்: ஆண்டு அவன் எழுந்து போகி—அவ்விடத்திற்கு அக்குணநிதியானவனெழுந்துபோய், அமுதினை எடுப்ப கண்ணில் காண்டல் செய்யாது—அத்திருவமுதைத் திருடுதற்குக் கண்ணினாற்காண இயலாமையால், மங்கும் கனை சுடர் விளக்கை கையால் தூண்டல் செய்து— ஒளிமழுங்குகின்ற விளக்கைச் சுவாலித்தெரியும்படி கையினாற்றூண்டி, ஈசன் முன்னர் சோற்றினைக் கவர்ந்து கொண்டு—சிவபெருமானது சந்நிதியில் நிவேதித்த திருவமுதைத்திருடிக்கொண்டு, மீண்டு விரைந்தனன்—திரும்பி விரைவிற்செல்லும்பொழுது, ஒரு மறையோன் காலில் மிதிக்கலுற்றான்—ஒரு பிராமணனது காலில் மிதிக்கலாயினான் எ—று. (உஎ)

மிதித்தவப் பொழுதி லந்த வேதியன் விழித்து நோக்கிக்
கொதித்தனன் கள்வ னென்றே கூக்குர லெழுப்ப லோடுங்
கதித்தவெந் திறலி னோரக் கடிநகர் காப்போர் கேட்டங்
கதிர்த்தனர் வந்து பற்றி யவன்றலை யறுத்திட் டாரால்.

இ—ள்: மிதித்த அ பொழுதில் அந்த வேதியன் விழித்து நோக்கி-மிதித்தவுடனே அப்பிராமணன் நித்திரைதெளிந்துபார்த்து, கொதித்தனன் கள்வன் என்றே கூக்குரல எழுப்பலோடும்—கோபம்மிகுந்து கள்வன் வந்தானென்று உரத்த ஒலியாய்ச்சத்தமிடுதலும், கதித்த வெம் திறலினோர் அக்கடிநகர் காப்போர் கேட்டு—மிக்க வெவ்விய வலிமையையுடையவர்களாகிய அந்தச்சிறந்த நகரத்தைக் காக்கின்றவர்கள் கேட்டு, அங்கு அதிர்த்தனர் வந்து பற்றி—அவ்விடத்து கர்ச்சிதத்தோடுவந்து பிடித்து, அவன்தலை அறுத்திட்டார்—அவனது தலையைவெட்டினார்கள் எ—று.

ஆல்-அசை. (உஅ)

வேறு.

அவ்வேலையி னிகலந்தக னடல்கொண்டிடு தூதர்
கைவேலயி னவியஞ்சிலை கணைவெங்கதை கொண்டே

மைவேலையில் விடமென்றிட வந்தங்கவ னிருதோ
ளைவேதர விசித்தீர்த்தவர் நடைகொண்டது கண்டே.

இ—ள்: அவ்வேலையில்—அச்சமயத்தில், இகல் அந்தகன் அடல் கொண்டிடு தூதர்—வலிய யமனது போராடல்பொருந்திய தூதுவர்கள், கை வேல்—கையிற்பொருந்தியவேல், அயில் நவியம்—கூரிய மழுவாயுதம், சிலை—வில்லு, கணை—அம்பு, வெம் கதை கொண்டு—கொடிய தண்டு ஆகிய இப்படைகளைக்கொண்டு, மை வேலையில் விடம் என்றிட அங்கு வந்து—கரிய சமுத்திரத்திற்றோன்றிய ஆலாகலநஞ்சைப்போலவந்து, அவன் இருதோள் நைவே தர—அவனது இரண்டுதோள்களும் வருந்தும்படி, விசித்து ஈர்த்து—கட்டியிழுத்துக்கொண்டு, அவர் நடை கொண்டது கண்டு—அவர்கள் நடந்து போவதைக்கண்டு எ—று.

அசும் ஏ இரண்டும் அசைகள். (உக)

கடுவெங்கரி யுரிகொண்டகண் ணுதறன்கண நாதர்
வடுவின்றிய மணிதுன்றிய மானத்திடை வந்தே
விடுமின்க ளிவன்றன்னை யெனச்சென்று விலக்கக்
கொடுசென்றிடு நமதூதர் குறித்திங்கிவை சொல்வார்.

இ—ள்: கடு வெம் கரி உரி கொண்ட கண்ணுதல் தன் கண நாதர்—மிகக்கொடிய யானையையுரித்த நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது கணத்தவர்கள், வடு வின்றிய மணி துன்றிய மானத்திடை வந்து—குற்றமில்லாத இரத்தினங்கள்நெருங்கிய விமானத்தில்வந்து, விடுமின்கள் இவன் தன்னையென சென்று விலக்க—இவனைவிடுங்களென்று போய்த்தடுப்ப, கொடு சென்றிடு நமதூதர்—அவனைக்கொண்டு சென்ற யமதூதர்கள், குறித்து இங்கு இவை சொல்வார்—குறிப்பாக இவ்வசனங்களைக்கூறுவார்கள் எ—று.

ஏ-அசை. (௩0)

பொருடங்கிய மறைவாணரொ ழுக்கம்புற நீக்கிட்
டருடங்கிய வவைசொற்றவை யறிவின்றி முனிந்து
மருடங்கிய சூதாடிநல் விலைமாதை மணந்து
கருடங்கிய மனத்தான்சிவ னிர்மாலியங் கவர்ந்தான்.

இ—ள்: பொருள் தங்கிய மறை வாணர் ஒழுக்கம் புற நீக்கிட்டு—உண்மைப்பொருள்தங்கிய வேதத்தை அறிந்த அந்தணர்களது ஆசாரத்தைப் புறத்தேயகற்றி, அருள் தங்கிய அவ்வை சொற்றவை அறிவின்றி முனிந்து—அருள்நிறைந்த தாயாற்கூறப்பட்டவைகளை நல்லறிவில்லாமல் வெறுத்துத்தள்ளி, மருள் தங்கிய சூதாடி—மயக்கம்பொருந்திய சூதைவிளையாடி, நல் விலை மாதை மணந்து—அழகிய வேசிகளைப்புணர்ந்து, கருள் தங்கிய மனத்தா

ன்—இருண்ட மனத்தையுடையவனாய், சிவன் நிர்மாலியம் கவர்ந்தான்—சி வபெருமானுக்கு நிவேதித்த திருவமுதைக்களவுசெய்தான் எ—று.

அவ்வை அவையெனத்தொக்கது. (கூக)

உய்யும்வகை யேதிங்கிவ னுறுமிப்பவ மதனிற்
செய்யுந்தவ முளதோவெனச் சிவகங்குலி னுதரம்
பெய்யுந்தழ னிகர்வெம்பசி பெரிதாயெழத் துயினீத்
தெய்யுங்கணை மதனைச்சுடு மிறைதாளிணை கண்டான்.

இ—ள். இங்கு இவன் உய்யும் வகை ஏது—இவன் உய்யத்தக்க செயல்யாது, உறும் இ பவம் அதனில் செய்யும் தவம் உளதோ என—பொருந்திய இப்பிறப்பில் செய்துகொண்ட தவமானது இருக்கின்றதோ என்று (யமதூதர்) வினவ, (கணநாதர் கூறுவார்) சிவகங்குலின்—சிவராத்திரியில், உதரம் பெய்யும் தழல் நிகர் வெம் பசி பெரிதாய் எழ—வயிற்றிற்பொருந்திய அக்கினியையொத்த கொடிய பசியானது மிகமூள, துயில் நீத்து— நித்திரையையொழித்து, எய்யும் கணை மதனை சுடும் இறைதாள் இணை கண்டான்—எவப்படுகின்ற புஷ்பபாணங்களையுடைய மன்மதனையெரித்த சிவபெருமானது இரண்டுதிருப்பாதங்களையுந் தரிசித்தான் எ—று. (கூஉ)

அடல்சேர்விடை யுடையானெதி ரவியுஞ்சுட ரதனை
மடல்சேர்மலர்க் கரத்தாலொளி வரத்தூண்டின னதனால்
மிடல்சேர்கொடு வினையாவையும் வீத்தான்றுயர் நீத்தான்
கடல்சேர்நெடு நிலமீதுயர் கலிங்கத்திறை யாவான்.

இ—ள்: அடல் சேர் விடை உடையான் எதிர் அவியும் சுடர் அதனை—வலிமைபொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது சந்நிதியில மங்கிய தீபத்தை, மடல் சேர் மலர் கரத்தால்— இதழ்பொருந்திய தாமரைமலர்போன்ற கையினால், ஒளி வர தூண்டினன்— பிரகாசமதெரியும்படி தூண்டினான், அதனால்—அக்காரணத்தாலும், மிடல சேர் கொடு வினை யாவையும் வீத்தான்—வலிமைபொருந்திய கொடிய தீவினைப்பலன்கள் யாவற்றையும் அழித்து, துயர் நீத்தான்— துன்பங்களையொழித்தான், (இனிமேல்) கடல் சேர் நெடு நிலமீது—கடலாற்சூழப்பட்ட நெடிய பூமியின்கண்ணே, உயர் கலிங்கத்து இறையாவான்— உயர்வுபொருந்திய கலிங்கதேசாதிபதியாய்ப் பிறப்பான் எ—று. (கூங)

என்றேசிவ கணநாத ரியம்பச்சமன் றூத
ரன்றேயவ ரடிபோற்றிநின் றருள்சேர்குண நிதிதோட்
குன்றேபிணி யவிழ்த்தங்குநீர் கொடுபோமென விடுத்துச்
சென்றேபுலிக் குழுவன்னவர் தென்றிக்கினி னுற்றார்.

இ—ள்: என்றே சிவ கண நாதர் இயம்ப— என்றிவ்வாருகச் சிவ பெருமானுடைய கணத்தலைவர்கள் கூறுதலும், புலி குழு அன்னவர் சமன் தூதர் அன்றே அவர் அடி போற்றி நின்று— புலிக்கூட்டத்தையொத்த யமதூதுவர்கள் அப்பொழுதே அவர்களுடைய பாதங்களைத் துதித்துநின்று, அருள் சேர் குண நிதி தோள் குன்று எப் பிணி அவிழ்த்து—அருள்பொருந்திய குணநிதியென்னும் அந்தணனது மலைபோன்ற புயங்களின் கட்டையவிழ்த்து, அங்கு நீர் கொடுபோமென விடுத்து—அவ்விடத்து நீங்கள்கொண்டுபோங்களென்றுவிடுத்து, சென்றே தென் திசையில் உற்ருர்— போய்த்தென்புலத்தையடைந்தார்கள் எ—று. (௩௪)

வேறு.

ஈச னன்பரக் காலையிற் குணநிதி யென்பவன் முகநோக்கிக்
காச ணிந்தபொன் முடிதரித் துயர்புகழ்க் கலிங்கநா டளிக்கின்ற
வாச மாலிகை யருந்தமன் மதலையா வளங்கொளுத் தமனென்னு
மாச கன்றபே ரொடுபிறந் திடுதியென் றறைந்தன ரகல்கின்ருர்.

இ—ள்: ஈசன் அன்பர்—சிவபெருமானுடைய அன்பர்களான கணநாதர்கள், அ காலையில் குணநிதி என்பவன் முகம் நோக்கி—அவ்வேளையிற் குணநிதியென்பவனுடைய முகத்தைப்பார்த்து, காசணிந்த பொன் முடி தரித்து—இரத்தினங்கள்பதித்துப் பொன்னுற்செய்யப்பட்ட முடியைத் தரித்து, உயர் புகழ் கலிங்க நாடு அளிக்கின்ற—உயர்ந்த கீர்த்திதங்கிய கலிங்கதேசத்தைப்பரிபாலிக்கின்ற, வாச மாலிகை அருந்தமன் மதலையா—வாசனை பொருந்திய மாலையையணிந்த அருந்தம ராசனது புத்திரனய், வளம் கொள் உத்தமன் என்னும் ஆசு அகன்ற பேரொடு பிறந்திடுதி என்று— வளம்பொருந்திய குற்றமற்ற உத்தமனென்னும் நாமத்தைக்கொண்டு பிறக்கக்கடவையென்று, அறைந்தனர் அகல்கின்ருர்—கூறிச்செல்வாரானுர் எ—று. (௩௫)

அனைய னப்படிக் கலிங்கநாட் டிறைமக னுகிமுற் பவந்தன்னிற்
றனையு ணர்ந்துறத் தொடர்முதுக் குறைவினுற் சங்கரன்குலந்தோ
கனைசெ ழுஞ்சுடர் நெய்விளக் கேற்றிநற் கடிகமழ் நறுந்தூபம் [றும்
புனையு மாமலர் சாத்தியே யருச்சனை புரிந்தறம் பல செய்தான்.

இ—ள்: அனையன் அப்படி கலிங்க நாட்டு இறை மகன் ஆகி— அக்குணநிதியானவன் அவ்வாறு கலிங்கதேசத்தரசனது புத்திரனுகி, முன் பவம் தன்னில் தனை உணர்ந்து உற தொடர் முதுக்குறைவினுல்— முற்பிறப்பில் தன்னை யாரென்று அறியும்படிதொடர்ந்த பேரறிவினுல், சங்கரன் குலம் தோறும்—சிவபெருமானுடைய திருவாலயங்களெங்கும், கனை செழும் சுடர் நெய் விளக்கு ஏற்றி—பிரகாசிக்கின்ற மிக்க ஒளியைக்கொண்ட நெய்த்தீபங்களையேற்றி, நல் கடி கமழ் நறும் தூபம்—வாசனைபொருந்திய நல்ல சு

கந்ததூபமிட்டு, புனையும் மா மலர் சாத்தி—அலங்கரிக்கப்படுகின்ற பெருமை பொருந்திய புஷ்பங்களைச்சாத்தி, அருச்சனை புரிந்து அறம பல செய்தான்—பூசனைசெய்து பலதருமங்களையும புரிந்தான் எ—று.

ஏ-அசை. (௬௬)

இன்ன வாறுபற் பலதினந் தருமங்க ளியற்றியா யிரஞ்சென்னிப்
பன்ன காதிபன் சுமந்தபார் புரந்துநீர் பட்டழிந் திடுமொக்கு
ளன்ன மானுடச் சட்டைநீத் துத்தரத் தளகைமா நகர்காக்கு
மன்ன னாகிவீற் றிருந்தனன் யாவரும் வந்தடி தொழுதேத்த.

இ—ள் இன்னவாறு பல் பல தினம தருமங்கள் இயற்றி—இவ்வாறு பலபல காலங்களாய்த் தருமங்களைச்செய்து, ஆயிரம சென்னி பன்னக அதிபன் சுமந்த பார் புரந்து—ஆயிரஞ்சிரசுகளையுடைய ஆதிசேடனாற்றாங்கப்படுகின்ற பூமியைப் பரிபாலித்து, நீர் பட்டு அழிந்திடு மொக்குள் அன்ன—நீரில் தோன்றி அழிகின்ற குமிழியைப்போல, மானுட சட்டை நீத்து—மனுடசரீரத்தைக்கழித்து, உத்தரத்து அளகை மா நகர் காக்கும் மன்னன் ஆகி—வடக்குத்திசையின்கணுள்ள அளகாபுரியை ஆளுகின்ற குபேரனாகி, யாவரும வந்து அடி தொழுது ஏத்த வீற்றிருந்தனன்—எல்லோரும வந்து பாதங்களைவணங்கித் துதிக்க வாழ்ந்திருந்தான் எ—று. (௬௭)

சிலபகற்கழிந் திட்டபின் றெண்டிரை திரிவாநதிசூழ்ந்து
நலமிகுந்தருங் காசியிற் சிவலிங்க நாட்டியர்ச்சனைசெய்தா [மான்
னிலகு பேரொளிச் சுடர்ப்பிழம் பாய்ச்சசி யிருத்திய சடைப்பெம்
கலக வாள்விழி மலைமக ளோடுமக் கணத்தினில் வெளிப்பட்டான்.

இ—ள் சிலபகல் கழிந்திட்டபின—சிலதினங்கள் சென்றபின்பு, தெண் திரை திரி வாநதி சூழ்ந்து—தெளளிய திரைவீசுகின்ற கங்காநதியாற்சூழப்பட்டு, நல மிக தரும காசியில சிவலிங்கம் நாட்டி அர்ச்சனை செய்தான—நன்மையை மிகவுந்தருகின்ற காசியம்பதியில ஒரு சிவலிங்கத்தைப்பிரதிட்டைசெய்து பூசனைசெய்தான, இலகு பேர் ஒளி சுடர் பிழம்பாய்—விளங்குகின்ற மிகக ஒளியையகொண்ட அககினிப்பிழமபையொத்து, சசி இருத்திய சடை பெம்மான்—சந்திரனைததரித்த சடைமுடியையுடைய சிவபெருமான், கலக வாள் விழி மலைமகளோடும்—(கண்டோரது) உலகத்தைவிளைக்கின்ற வாளைபோலுங் கணகளையுடைய உமையம்மையாரோடும், அ கணத்தினில் வெளிப்பட்டான்—அப்பொழுதே பிரசன்னமாயினா எ—று. (௬௮)

உன்ன ருந்தவம் வியந்தனன் றனதுநின் னுளத்தினில் விருப்புற்ற
தின்ன தென்றுரை தருதுமென் றுரைத்திட விரவியா யிரங்கோடி
துன்ன ருங்கதிர் விரித்துநின் றனையபொற் சோதியன் னுருக்கா
ணன்ன லந்தரு கண்ணிணை கூசிடா நல்வரந் தருகென்றான். [ண

இ—ள்: தனத உன் அரும் தவம் வியந்தனம்—குபேரனே உனது அரிய தவத்தில் மகிழ்வுற்றும், நின் உளத்தினில் விருப்புற்றது இன்னது என்று உரை—உனது மனத்திற்கொண்ட விருப்பத்தை இன்னதென்று கூறக்கடவை, தருதும் என்று உரைத்திட—தந்தருள்வோமென்று திருவாய்மலர்ந்தருள, இரவி ஆயிரங்கோடி தான் அரும் கதிர் விரித்து நின்று அனைய—ஆயிரகோடி சூரியர் நெருங்கி அரிய கிரணங்களைப் பரப்பிநின்றாற்போன்ற, மெய் சோதி உன் உருகாண—உண்மைப்பிரகாசத்தைக்கொண்ட தேவரீரது திருவடிவத்தைக் காணும்படி, நல் நலம் தரு கண்ணிணை கூடிடா நல்வரம் தருக என்றான்—மிக்க நன்மையைத்தருகின்ற கண்களிரண்டும் கூசுதலில்லாத நல்லவரத்தைத் தந்தருளுகவென்று வேண்டினான் எ—று. (கசு)

காக்கு மாலயன காணொணு வடிவவன் கட்புலங் கதுவுற்று [ம்
நோக்கு மாறருள் செய்தனன் றழலுமிழ் நுதல்விழிப் பெருமானு
பூக்கு மாமலர் மணமெனப் பொருந்திய புனிதனை யெஞ்ஞான்று
நீக்கு மாறரி தாவுறை நிமலையைப் பார்த்திது நினைக்கின்றான்.

இ—ள்: தழல் உமிழ் நுதல் விழி பெருமானும்—அக்கினியைக் கக்குகின்ற நெற்றிநாட்டத்தையுடைய பரமசிவனும், காக்கும் மால் அயன் காணொணு வடிவு-காத்தற்றொழிலையுடைய விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் தேடியுங்காணவியலாத திருவுருவத்தை, அவன் கண் புலம் கதுவுற்று நோக்குமாறு அருள் செய்தனன்-அக்குபேரனுடைய கண்ணொளியானதுபற்றித் தரிசிக்கும்படி அருள்செய்தார், பூக்கு மா மலர் மணமென— விரிந்த பெரிய புஷ்பத்தினது மணத்தைப்போல, பொருந்திய புனிதனை எஞ்ஞான்றும் நீக்குமாறு அரிதாய் உறை—கலந்திருக்கின்ற சிவபிரானை எக்காலத்தும் நீக்குதற்கரிதாய் வீற்றிருந்தருளுகின்ற, நிமலையை—பார்ப்பதிதேவியாரை, பார்த்து இது நினைக்கின்றான்—பார்த்து இவ்வாறு சிந்திக்கின்றான் எ—று. (சO)

தீது தீர்த்தருள் சிவன்றிரு மேனியிற் செறிந்துறைந் திடமுன்னாள், யாது நற்றவ மியற்றின ளிவளென வெண்ணிநோக் குறவெற்பின், மாது ளங்கறுத் திட்டன ளோர்விழி மறைந்ததங் கவற்கந்நா, ளோது மாமறை யளவிடற் கரியவ னுமையவட் கிவை சொல்வான்.

இ—ள்: தீது தீர்த்து அருள் சிவன் திருமேனியில் செறிந்து உறைந்திட—சர்வதீமைகளையும் நீக்கியருளுகின்ற சிவபெருமானது திருமேனியில் (ஒன்றாய்ப்) பொருந்தி வீற்றிருத்தற்கு, முன் நாள் யாது நல் தவம் இயற்றினள் இவளென எண்ணி நோக்குற— முன்னைக்காலத்தில் இத்தேவியானவர் என்ன நல்ல தவத்தைச்செய்தனர் என்று நினைத்துப் பார்த்தவுடன், வெற்பின் மாது உளம் கறுத்திட்டனள்—மலையரசன்புதல்வியாராகிய உமாதேவியார் திருவுள்ளத்தே சோபங்கொண்டனர், அங்கு அவற்கு ஓர் விழி ம

றைந்தது-அக்குபேரனுக்கு அவ்விடத்தே ஒருகண் ஒளிகுன்றப்பெற்றது, அந்நாள்—அப்பொழுது, ஓது மா மறை அளவிடற்கு அரியவன்— ஓதப்படுகின்ற பெரிய வேதங்களினாலும் அளத்தற்கரிய சிவபெருமானானவர், உமையவட்கு இவை சொல்வான்—உமாதேவியாருக்கு இவைகளைக்கூறுவார் எ-று.

ஊறு இல் நின்றவப் பெருமையை வியந்துளத் துவந்தன னினைக்கின்றான், வேறு வன்புரி தவறிலை முனியலை விழியிவற் கருளென்னச், சீறு வெம்பொறிக் கனலெனக் கனன்றுதன் சிந்தையுற்றெழுங்கோபம், மாறியம்பிகை யம்பகம் வழங்கினள் பொற்கண்ணுய் வயங்கிற்றால்.

இ—ள்: ஊறு இல் நின் தவ பெருமையை வியந்து உளத்து உவந்தனன் நினைக்கின்றான்—பழுதிலலாத உனது தவத்தின்மகிமையை அதிசயங்கொண்டு மனமகிழ்ச்சியுடையனாய்ச் சிந்திக்கின்றான், வேறு இவன் புரி தவறு இலை—இவன்செய்த வேறுகுற்றங்கள் ஒன்றுமில்லை, முனியலை—கோபஞ்செய்யேல், இவற்கு விழி அருள் என்ன—இவனுக்குக் கட்பார்வையைக்கொடுக்குகவென்று திருவாய்மலர்ந்தருள, சீறி வெம் பொறி கனலென கனன்று தன் சிந்தை உற்று எழும் கோபம் மாறி—வெகுண்டு கொடிய அக்கினிப்பொறியைப்போல அழல்கொண்டு தன்னுடைய திருவுள்ளத்தில் மிகுந்து எழுந்தகோபந்தணிந்து, அம்பிகை அம்பகம் வழங்கினள்—உமாதேவியார் கட்பார்வையைக்கொடுத்தருளினர், பொன் கண்ணாய் வயங்கிற்று—அழகிய நேத்திரமாகப்பிரகாசித்தது எ—று.

ஆல்-அசை. (சஉ)

விழியி ழந்தது பெற்றபி னியக்கர்தம் வேந்தனும் வியப்போடவ், வுழியி ளம்பிறை முடித்தருள் சடாடவி யுடைவிடைக் கொடியோனைக், கழிவ ருங்கயன் மருட்டுவாட் டடநெடுங் கட்கவு ரியைவேரி, பொழிசெ ழுந்துண ரிறைத்துநற் றுதிபல புகழ்ந்துவீழ்ந் தெழுகின்றான்.

இ—ள்: விழி இழந்து அது பெற்றபின்—கண்ணை இழந்து அதனைப்பெற்றபின்னர், இயக்கர் தம் வேந்தனும்—இயக்கர்களுக்குத் தலைவனாகிய குபேரனும், வியப்போடு அவ்வுழி—அதிசயத்தோடு அவ்விடத்து, இளம் பிறை முடித்து அருள் சடாடவி உடை விடை கொடியோனை— இளமையாகிய பிறைச்சந்திரனைச்சூட்டி யருளுகின்ற சடைக்காட்டையுடைய இடபக்கொடியைக்கொண்ட சிவபெருமானையும், கழி வருங் கயல் மருட்டு வாள் தட நெடும் கண் கவுரியை—நீர்க்கழிகளில் வசிக்கின்ற சென்டைமற்சங்களைமயக்குகின்ற வாள்போன்ற விசாலமாகிய நெடிய கண்களையுடைய உமாதேவியாரையும், வேரி பொழி செழும் துணர் இறைத்து—தேனைப்பிலிற்றுகின்ற செழித்தமலர்களைத்தூவி, நல் துதி பல புகழ்ந்து வீழ்ந்து எழுகி

ன்றான்—நல்ல ஸ்தோத்திரங்கள்பலவற்றால் புகழ்ச்சிகளைக்கூறி விழுந்து நமஸ்கரித்து எழுகின்றனன் எ—று. (சங)

மன்று ணட்டமே புரியரன் கைகளான் மற்றவ னுடலைவந், தின்று தொட்டுநீ யென்னுடைத் தோழனாயி ருத்தியென் றிசைத்தான்பொற், குன்று கிட்டிய தனநிதிப் பெருக்கொடு குலவுபுட் பகம்பெற்றே, யன்று தொட்டவ னளகைமா நகரர சளித்தவ ணிருக்கின்றான்.

இ—ள்: மன்றுள் நட்டம் புரி அரன்—கனகசபையின்கண்ணே நிருத்தஞ்செய்பவராகிய சிவபெருமான், கைகளால் அவன் உடல் தைவந்து—தமது திருக்கரங்களினால் அவனது சரீரத்தைத்தடவி, இன்று தொட்டு நீ என்னுடை தோழனாய் இருத்தி என்று இசைத்தான்— இற்றைநாள்தொட்டு எனதுதோழனாகி இருக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினார், பொன் குன்று கிட்டிய தன நிதி பெருக்கொடு குலவு புட்பகம் பெற்று— பொன்மலையைப்போலுயர்ந்த மிக்க செல்வப்பெருக்கத்துடன் விளங்குகின்ற புட்பகவிமானத்தையும் பெற்றுக்கொண்டு, அன்று தொட்டு அவன் அளகை மா நகர் அரசளித்து அவண் இருக்கின்றான்—அற்றைக்காலந்தொடங்கி அக்குபேரனானவன் அளகாபுரியைப்பரிபாலனஞ்செய்து அவ்விடத்தேயிருக்கின்றான் எ—று.

மற்று ஏ அசைகள். (சச)

இன்ப மார்சிவ நிசியினின் மாலிய மெடுத்தருந் திடற்கீசன்
முன்ப விந்திடுவிளக்கினைத் தூண்டிய முற்பய னதனாலே
நன்பு வித்தல மரசளித் தளகைமா நகர்தனக் கிறையாகிப் [றான்.
பின்ப ரன்றனைப் பிரிந்திடாத் தோழமைப் பெருமையும் பெறலுற்

இ—ள்: இன்பம் ஆர் சிவநிசியில்—சுகத்தைக்கொடுத்தற்குரிய சிவராத்திரியில், நின் மாலியம் எடுத்து அருந்திடற்கு—நிவேதித்த திருவமுதைக்காணும்படி எடுத்துண்ணும்படி, ஈசன் முன்பு அவிந்திடு விளக்கினைத் தூண்டிய—சிவபெருமானது சந்நிதியில் மங்கியதீபத்தைத் தூண்டிவிட்ட, முன் பயன் அதனாலே—முற்பிறப்பிற்செய்த புண்ணியத்தினால், நன் புவி தலம் அரசு அளித்து—நல்லபூமியைப்பரிபாலனஞ்செய்து, அளகை மா நகர் தனக்கு இறையாகி—அளகாபுரிக்கு அரசனாய், பின்பு அரன் தனை பிரிந்திடா தோழமை பெருமையும் பெறலுற்றான்—பின்னர்ச்சிவபெருமானைவிட்டு நீங்காத தோழனும் பெருமையையுமடைந்தனன் எ—று. (சடு)

சேற்றி னார்செழுந் தாமரைக் கண்ணனுந் தேடருஞ் சிவன்மெய்யி, னீற்றி னான்றிருக் கோயிலி னுயர்சிவ நிசிகளி னெய்த்திட, மேற்றி னார்பெறும் பேற்றினை விரித்தெடுத் தியம்பவேண்

டிடிலெண்க, ணூற்றி சாமுகம் படைத்தருள் விரிஞ்சனு நவின்றி டற் கரிதாமால்.

இ—ள்: சேற்றின் ஆர் செழும் தாமரை கண்ணனும்—சேற்றிற்செழித்துவளருகின்ற தாமரைக்கண்ணனாகிய மாயவனும், தேடரும் சிவன் மெய்யில் நீற்றினன்— தேடுதற்கரிய திருமேனியிற்பொருந்திய விபூதியையுடைய சிவபெருமானது, திருக்கோயிலில—திருவாலயத்தில், உயர் சிவ நிசிகளில்—உயர்வுபொருந்திய சிவராத்திரிகளில், நெய் தீபம் ஏற்றினர் பெறும் பேற்றினை—நெய்விளக்கேற்றியவர்கள் பெறும்பலனை, விரித்து எடுத்து இயம்ப வேண்டிடில்-விரித்தெடுத்து விசாலமாகக்கூறவேண்டுமாயின், எண் கண் நால் திசாமுகம் படைத்து அருள் விரிஞ்சனும்—எட்டுக்கண்களையும் நான்குதிக்கினும்நோக்கிய சதுர்முகங்களையும் உடைய பிரமதேவனும், நவின்றிடற்கு அரிதாம்—சொல்லிமுடித்தற்கு இயலாததாகும் எ—று.

ஆல்— அசை. (சசு)

அன்றியெண் ணிரண்டா முபசாரத்திற் கடுத்தவை யந்நாளிற், குன்றி யத்துணை யீயினு மாயிர கோடியாய்ப் பயனல்கு, மென்றிருட்குறும் பறவெறி கனைசுட ரிரவிசெங் கதிரென்னத், துன்றிருஞ்சடைத் துறவர்கேட் டுவப்புறச் சூதனண் டுரைசெய்தான்.

இ—ள்: அன்றி—அதுவுமலலாமல், எண்ணிரண்டாம் உபசாரத்திற்கு அடுத்தவை—சோடசோபசாரத்திற்குரிய திரவியங்களை, அந்நாளில் குன்றி அத்துணை ஈயினும்—அற்றைக்காலத்துக் குன்றிமணியளவு உபகரிப்பினும், ஆயிர கோடி ஆய் பலன் நல்கும்—ஆயிரகோடிக்கணக்கான பலன்களைக்கொடுக்கும், என்று—இவ்வாறாக, இருள் குறும்பு அற எறி கனை சுடர் இரவி செம் கதிர் என்ன—இருளாகிய கெடுதியை முற்றாகஅழிக்கின்ற மிக்க ஒளியையுடைய சூரியனது சிவந்தகிரணத்தைப்போல, துன்று இரும் சடை துறவர் கேட்டு உவப்புற-நெருங்கிய பெரியசடைமுடியையுடைய முனிவர்கள்கேட்டு மனங்களிக்கும்படி, ஆண்டு சூதன் உரைசெய்தான்—அவ்விடத்துச் சூதமாமுனிவர் கூறினர் எ—று. (சஎ)

குபேரச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் சுஎ௫.

---

# சாலிகோத்திரச்சருக்கம்.



கழனிமலை கயல்கள் வள்ளைக் கொடிகுதிப்ப தெனக்குழை பாய் கருங்கட் பைந்தார்க், குழனிமலை முலையமுத மணமிறைவாய் கமழ முத்தங் கொடுப்போன் போரி, னழனிமலை கடக்கரிதென் றருக்கனுளந் தடுமாற வவுணர்க் கொன்று, பழனிமலை குடிபுகுந் த பகவனிரு சரணமலர் பரவி வாழ்வாம்.

இ—ள்: கழனி மலை கயல்கள் வள்ளை கொடி குதிப்பது என— வயல்களிற்பொருகின்ற கயல்மீன்கள் வள்ளைக்கொடிகளிற் பாய்வதைப்போல, குழை பாய் கரும் கண—காதணிவரையுநீண்ட கரியகண்களையும், பைம் தார் குழல்—பசுமையாகிய மாலைகளையணிந்த கூந்தலையுமுடைய, நிமலை முலை அமுத மணம்—நின்மலையாகிய உமாதேவியாரது முலைப்பாலின் மணமானது, இறை வாய் கமழ முத்தம் கொடுப்போன்— சிவபெருமானது திருவாயின்கண் பரிமளிக்கும்படி முத்தமிடுபவரும், போரில் அழனி மலை கடக்க அரிது என்று—யுத்தகளத்திலுள்ள உடற்குறைகளாகிய மலைகளைக் கடத்தலியலாதென்று, அருக்கன் உளம் தடுமாற—சூரியனதுமனம் அலையும்படி, அவுணர் கொன்று—அசுரர்களையழித்து, பழனி மலை குடிபுகுந்த பகவன்— திருப்பழனிமலையிலெழுந்தருளியிருக்கின்ற சுப்பிரமணியக்கடவுளது, இரு சரண மலர் பரவி வாழ்வாம்—இரண்டு தாமரைமலர்போன்ற திருப்பாதங்களையுந் ஸ்துதித்து (சுகமாய்) வாழக்கடவேம் எ—று. (க)

அங்கிராப் பிருகுவிட பன்றதீசி யத்திரிகா சிபன்சு பேதன், பங்கமில்வான் மீகிசர பங்கன்சா பாலியருட் பரத்து வாசன், றுங்கமுறு புலத்தியனற் சுசீலனா ரதன்மரிசி சுகன்மார்க் கண்ட, னெங்குமிசை பெறுசனகன் முற்கலன்முற் படுமுனிவ ரிவர்கள் யாரும்.

இ—ள்: அங்கிரா—அங்கிராவும், பிருகு—பிருகுவும், விடபன்—விடபனும், ததீசி—ததீசியும், அத்திரி—அத்திரியும், காசிபன்— காசிபனும், சுபேதன்—சுபேதனும், பங்கம் இல் வான்மீகி—குற்றமில்லாத வான்மீகியும், சரபங்கன்—சரபங்கனும், சாபாலி—சாபாலியும், அருள் பரத்துவாசன்—(எவ்வுயிர்களிடத்தும்) அருளையுடைய பரத்துவாசனும், துங்கம் உறு புலத்தியன்—உயர்வுபொருந்திய புலத்தியனும், நல் சுசீலன்— நல்ல சுசீலனும், நாரதன்—நாரதனும், மரீசி—மரீசியும், சுகன்—சுகனும், மார்க்கண்டன்—மார்க்கண்டனும், எங்கும் இசை பெறு சனகன்—எவ்விடங்களிலுங்கீர்த்தி பரந்த சனகனும், முற்கலன் முற்படு முனிவர் இவர்கள் யாரும்—முற்கலனும்முதலாகிய இந்த முனிவர்கள் எல்லோரும் எ—று. (உ)

பாடளிக்கு மதுவளிக்கும் பசுந்துளவோன் முதலமரர் படி வர் யார்க்குங், கேடளிக்க வருங்கடுவுண் டவனருள்சேர் சூதன் முகங் கிளர நோக்கிப், பீடளிக்குந் தவமுனிவ சிவநிசிநோற் றவ ர்க்கிறந்த பின்பே ரின்ப, வீடளிப்ப தன்றியிகம் விழைந்தனவு ம ளிக்குமோ விளம்பு கென்றார்.

இ—ள்: பாடு அளிக்கு மது அளிக்கும்—பண்ணைப்பாடுகின்ற வண்டு கள் உண்ணுதற்குத் தேனைக்கொடுக்கின்ற, பசும் துளவோன் முதல் அமர ர் படிவர் யார்க்கும்—பசுமையாகிய துளசிமாலையையணிந்த விஷ்ணுமுதலிய தேவர்களும் முனிவர்களுமாகிய எல்லோருக்கும், கேடு அளிக்க வரும் கடு உ ண்டவன் அருள் சேர்—அழிவைச்செய்யும்படிவந்த நஞ்சையுண்ட சி பெருமானது திருவருளைப் பொருந்திய, சூதன் முகம் கிளர நோக்கி— சூத முனிவரது முகம் மலரும்படி பார்த்து, பீடு அளிக்கும் தவ முனிவ— பெரு மையைத்தருகின்ற தவங்களையுடைய முனிவரே, சிவநிசி-சிவராத்திரிவிரத மானது,நோற்றவர்க்கு-அனுஷ்டித்தவர்களுக்கு, இறந்தபின் பேரின்ப வீடு அளிப்பது அன்றி—உயிர்நீங்கியபின்பு பேரின்பத்தைத் தருதற்குரிய மோட் சத்தைப்பயப்பதேயல்லாமல், இகம் விழைந்தனவும் அளிக்குமோ—இம்மை யில் விரும்பிய போகசுகங்களையும் கொடுக்குமோ, விளம்புக என்றார்—கூறி யருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் எ—று. (௩)

அரவுமதி முடித்தசடை யரனிரவிற் கண்படைநீத் தருச்சி த் தானல், குரவுதுகள் படுத்திநெடு நிலத்தின்மிகு செல்வமெலா ங் கொடுக்கு மைந்தாய், விரவுகொலை முதற்பாவ வல்வினையின் வேர்பிடுங்கி வீடு நல்கும், பரவுமிதி னிகழ்காதை யொன்றுளதெ ன் றுயர்சூதன் பகர்வ தானுன்.

இ—ள்: அரவு மதி முடித்த சடை அரன் இரவில்— சர்ப்பங்களையு ஞ் சந்திரனையுந்தரித்த சடையையுடைய சிவபெருமானது சிவராத்திரியில், கண்படை நீத்து அருச்சித்தால்—நித்திரையின்றிச் சிவபூசைசெய்தால், நல் குரவு துகள் படுத்தி—வறுமைத்துன்பங்களை முற்றநசித்து, நெடு நிலத்தி ல் மிகு செல்வம் எலாம் கொடுக்கும்—நெடியபூமியின்கண்ணே (இப்பிறப்பி ற்றானே) மிக்கதிரவியங்களெல்லாவற்றையுங் கொடுக்கும், ஐந்தாய் விரவு கொலை முதல் பாவ வல்வினையின் வேர் பிடுங்கி வீடும் நல்கும்— ஐந்துவகை யாகக்கூறப்படுகின்ற கொலை களவு கள் காமம் குருநிந்தையாகிய கொடிய வி னைகளின் உற்பத்தியை முற்றநசித்து (மறுமைக்கண்)மோட்சத்தையுங் கொ டுக்கும், பரவும் இதில் நிகழ் காதை ஒன்று உளது என்று—துதிக்கத்தக்கதா ய் இச்சிவராத்திரியினிகழ்ந்த ஒருசரித்திரமுளதென்று, உயர் சூதன் பகர்வ தானுன்—உயர்வுபொருந்திய சூதமகாமுனிவர்கூறுவாராயினர் எ—று. ()

காலிகோத் திரத்தியல்பிற் புரந்தருளுங் கண்ணன்முதற் கரு தற் கொண்ணுச், சூலிகோத் திரத்தவர்கொண் டெயிலொருமூன் றழற்களித்த தொல்லோன் றிங்கள், மோலிகோத் திரவருளே பெறவேண்டி யறையுமறை முறையி னின்றோன், சாலிகோத் திரனெனப்பேர் தரித்துடையா னொருவனுளன் றவத்தின் மிக்கோன்.

இ—ள். காலி கோதத்திரத்து இயல்பில் புரந்து அருளும் கண்ணன் முதல்—பசுக்கூட்டங்களை வமிச ஒழுக்கத்தின்படி பாதுகாத்தருளிய கோபா லன்முதலியதேவர்களும், கருதற்கு ஒண்ணு சூலி—அறிதற்கரிய சூலாயுதத் தைத் தாங்கியவரும், கோத்திர தவர் கொண்டு எயில் ஒரு மூன்று அழற்கு அ ளித்த தொல்லோன்—மேருமலையாகியவில்லைக்கொண்டு முப்புரங்களையும் அ க்கினிக்கு உணவாகக்கொடுத்த பழையோரும், திங்கள் மோலி கோ—சந்திர னைத்தரித்த சடைமுடியையுடையவருமாகிய சிவபெருமானது, திர அருளே பெறவேண்டி—உறுதியாகிய அனுக்கிரகத்தைப் பெறவிரும்பி, அறையும் ம றை முறையின் நின்றோன்—கூறப்படுகின்ற வேதவிதிப்படி ஒழுகுபவனும், சாலி கோத்திரன் என பேர் தரித்துடையான்— சாலிகோத்திரனென்னும் பெயரைப் பெற்றுடையவனுமாகிய, தவத்தின் மிக்கோன் ஒருவன் உளன்- மிக்கதவப்பேற்றையுடைய ஒரு (அன்பன்) இருந்தான் எ—று. (௫)

வேதியர்தங் குலத்திலுயர் விண்மணிகண் மணியெனவே வி ளங்கும் வேதம், மோதியுணர்ந் தறிவரிய கலைக்கடலின் கரைகடந் திட் டுயர்நூல் வல்ல, வாதியரை வென்றுசந்தி வந்தனைகண் முப் பொழுதும் வழுவா தாற்றிச், சாதிமுறை தவறுமனீதியுட னெ டிதுதினஞ் சரிக்கு நாளில்.

இ—ள் வேதியர் தம் குலத்தில் உயர் விண் மணி கண் மணி என— பிராமணர்களது குலத்திற்பிறந்து உயர்வாகிய ஆகாயத்திற்சஞ்சரிக்கின்ற சூ ரியனைப்போலவும் கண்ணினுள்ளிருக்கின்ற மணியைப்போலவும், விளங்கு ம் வேதம் ஓதி உணர்ந்து—(உலகமெங்கும்) விளங்குகின்ற சதுர்வேதங்களை யும் கற்றறிந்தும், அறிவரிய கலை கடலின் கரை கடந்திட்டு— அறிதற்கரிய அறுபத்துநான்கு கலைஞானங்களாகிய சமுத்திரத்தின் கரையைக்கடந்தும், உயர் நூல் வல்ல வாதியரை வென்று—உயர்வாகிய சாஸ்திரங்களில் வன்மை யுடைய தார்க்கிகர்களை வெற்றிகொண்டும், சந்தி வந்தனைகள் முப்பொழுது ம் வழுவாது ஆற்றி—சந்தியாவந்தனங்களைத் திரிகாலங்களினும் விதிவழுவா து கிரமமாகச்செய்தும், சாதி முறை தவறுமல்— குலத்திற்குரிய ஒழுக்கங்க ள் தவறுதலின்றி, நீதியுடன் நெடிது தினம் சரிக்கு நாளில்— தருமவொழுக்க த்தோடு அநேககாலஞ் சீவித்து வருகையில் எ—று.

ஏ—அசை. (௬)

வம்பவிழுங் குழன்மனைவி மக்கள்சுற்ற முதற்குடும்ப மலிய
நாளுநுஞ், செம்பவள விதழ்க்கமலை திருக்கடைக்க ணோக்கமின்றி
ச் சிறுமை யெய்த, வெம்பரம னருளிதுவோ வென்செய்வே னெ
ன்னமனத் தெண்ணித் தென்பாற், கும்பமுனி வரனிருக்கு மிடந்
தேடிச் செல்வனெனக் குறித்துக் கொண்டே.

இ—ள். வம்பு அவிழும் குழல் மனைவி மக்கள் சுற்றம் முதல் குடும்ப
ம் நாளும் மலிய—நறுமணங்கமழுகின்ற கூந்தலையுடைய மனைவியும் பிள்ளை
களுஞ் சுற்றத்தவர்களுமாகிய குடும்பங்கள் நாள்தோறும் பெருக, செம் பவ
ள இதழ் கமலை திரு கடைக்கண் நோக்கம் இன்றி சிறுமையெய்த—சிவந்த ப
வளம்போன்ற அதரங்களையுடைய கமலாசனியாகிய இலக்குமிதேவியின் தி
ருக்கடாட்சவீட்சணமின்றி வறுமையடைய, எம் பரமன் அருள் இதுவோ
என் செய்வேன் என்ன மனத்து எண்ணி—எமது கடவுளாகிய சிவபெருமா
னது கிருபை இத்தகையதோ! யான் யாதுசெய்வேன் என்று மனத்தில்நி
னைந்து, தென்பால் கும்பமுனி வரன் இருக்கும்—தக்ஷணதிக்கின்கணுள்ள
கும்போற்பன்னராகிய அகஸ்தியமுனிவ ரெழுந்தருளியிருக்கின்ற, இடம்
தேடி செல்வன் என குறித்து கொண்டு—பொதியமலையைத்தேடிச்செல்லக்
கடவேனென்று நிச்சயித்துக்கொண்டு எ—று.

ஏ-அசை. (எ)

தடங்கரைகொண் டிரங்குதிரை சுருட்டியெறிந் திடும்பெரு
நீர்ச் சலதி யேழுங், குடங்கையினிற் கொண்டுமுதற் குடித்தகுறு
முனிவனடி குறுகிப் போற்றி, விடங்கலுழ்பற் பணிவாயி லகப்ப
டுமண் டூகமென மிடிவாய்ப் பட்டேன், றிடங்கொடுளந் தேறியு
ய்யும் படியடியேற் குனதருட்கண் செய்தி யென்றான்

இ—ள். தடம் கரை கொண்டு இரங்கு திரை சுருட்டி எறிந்திடும்
பெரு நீர் சலதி எழும்—விசாலமாகிய கரைபொருந்தியொலிக்கின்ற திரைக
ளைச்சுருளச்செய்து வீசுகின்ற மிக்க நீர்நிறைந்த சப்தசாகரங்களையும், குட
ம் கையினில் கொண்டு முதல் குடித்த குறுமுனிவன் அடி குறுகி போற்றி—
உள்ளங்கையிலடக்கிப் பண்டைக்காலத்திற் பருகிய அகத்தியமுனிவரது பா
தங்களையடைந்து ஸ்தோத்திரஞ்செய்து, விடம் கலுழ் பல பணி வாயில் அக
ப்படும் மண்டூகம் என—விஷத்தைக்கக்குகின்ற பற்களையுடைய சர்ப்பங்களி
னது வாயிலகப்பட்ட தவளையைப்போல, மிடிவாய்ப்பட்டேன்—வறுமையி
னாற்பீடிக்கப்பட்டேன், இடம் கொடு உளம் தேறி உய்யும்படி—கலங்காநிலை
மையடைந்து மனந்தெளிந்துய்யும்படி, அடியேற்கு உனது அருள் கண் செ
ய்தி என்றான்—அடியேற்கு உமது கிருபாநோக்கத்தைச்செய்தருளுகவென்
று வேண்டினான் எ—று. (அ)

ஆங்கவனு முளத்தருள்கூர்ந் தந்தணனை முகநோக்கி யவனி
மீதிற், றீங்ககற்றுஞ் சிவநிசிநோற் றிடில்வறுமைப் பெருங்கடலி

ன் றீரங் காண்பாய், 'பூங்கமலத் தயனாலும் புகலரிய போகமெல்லாம் புசித்துப் பின்னர், நீங்கரிய சிவபதமும் பெறுவாயென் றுறுதியுட னிகழ்த்தி னானல்.

இ—ள்: ஆங்கு அவனும் உளத்து அருள் கூர்ந்து—அவ்விடத்து அவ்வகத்தியமுனிவரும் மனத்தில் இரக்கங்கூர்ந்து, அந்தணனை முகம் நோக்கி—பிராமணனாகிய சாலிகோத்திரனது முகத்தைப்பார்த்து, அவனி மீதில்—பூமியின்கண்ணே, தீங்கு அகற்றும் சிவநிசி நோற்றிடில்—எல்லாத்தீங்குகளையும் நாசஞ்செய்கின்ற சிவராத்திரிவிரதத்தை யனுட்டித்தால், வறுமை பெரும் கடலின் தீரம் காண்பாய்—வறுமையாகிய பெரிய சமுத்திரத்தின் கரையைக்காண்பாய், பூ கமலத்து அயனாலும் புகல் அரிய போகம் எல்லாம் புசித்து— தாமரைமலரில் வாசஞ்செய்கின்ற பிரமதேவராலுஞ் சொல்லமுடியாத சுகானுபவங்களையெல்லாம் அனுபவித்து, பின்னர் நீங்கரிய சிவபதமும் பெறுவாய் என்று— மறுமைக்கண் நீங்குதலில்லாத சிவபதவியாகிய மோட்சத்தையும் பெறுவாயென்று, உறுதியுடன் நிகழ்த்தினன்—துணிவாய்க்கூறினார் எ—று.

ஆல அசை. (௯)

அனையசிவ நிசிநோற்கு முறைமறையா கமப்படி நீ யடியனேனுக், கினையபரி செனவிரித்தீண் டியம்புகென விருக்குமுனா வியம்பும் வேதந், தனை யுணருங் குடத்தனய னவ்விரதந் தனைநோற்குந் தன்மை யெல்லாங், கனைகடலுண் டருடிருவாய் மலர்ந்தவனுட் புலங்களிக்கக் கழறிப் பின்னும்.

இ—ள்: அனைய சிவநிசி நோற்கும் முறை—அந்தச்சிவராத்திரி விரதத்தை அனுஷ்டிக்கின்ற கிரமத்தை, மறை ஆகமப்படி—வேதாகமவிதிப்படி, நீ அடியனேனுக்கு இனைய பரிசு என விரித்து ஈண்டு இயம்புக என—தேவரீர் அடியவனாகிய எனக்கு இத்தன்மையையுடையதென்று விரிவாய் இப்பொழுது கூறியருளுகவென்று வேண்டுதலும், இருக்கு முன்னா இயம்பும் வேதம் தனை உணரும் குடத்தனயன்— இருக்குமுதலாகக் கூறப்படுகின்ற வேதங்களையெல்லாமறிந்த கும்போற்பன்னராகிய அகத்தியமுனிவர், அவ்விரதம் தனை நோற்கும் தன்மை எல்லாம்— அவ்விரதத்தையனுட்டிக்கும் விதங்களெல்லாவற்றையும், கனை கடல் உண்டு அருள் திருவாய் மலர்ந்து—ஒலிக்கின்ற சமுத்திரத்தை உண்டருளிய திருவாயைத்திறந்து, அவன் உள் புலம் களிக்க கழறி பின்னும்—அச்சாலிகோத்திரனது மனம் மகிழும்படி கூறிப் பின்னரும் எ—று. (௧0)

பொன்னிலமே வியபுலவர் புகழ்விரத மிதனிலைமை புகலற் பாற்றோ, வெந்நிலமுந் தொழத்தகுநற் றலத்திலிருந் திவ்விரத மியற்ற லாற்றா, னன்னிலவித் தெனவோங்கிச் சின்னாளிற் பெரி

துபய னல்கு மென்ன, வந்நிலமு மெனக்கறியச் சொல்லுதிநல் லோதிபயி லறிஞ வென்றான்.

இ—ள்: பொன் நிலம் மேவிய புலவர்புகழ்—பொன்னுலகமாகியசுவர்க்கலோகத்தின்கண் வசிக்கின்ற தேவர்களாலும் புகழப்படுகின்ற, விரதம் இதன் நிலைமை புகலல் பாற்றோ—இந்த விரதத்தினது பெருமையைக்கூற விபாலுமோ, எ நிலமும் தொழ தகும் நல தலத்திலிருந்து—எவ்வுலகத்தாராலும் வணங்கப்படத்தக்க புண்ணியதலத்திலிருந்து, இவ் விரதம் இயற்றல் உற்றால்—இவ்விரதத்தை யனுஷ்டித்தால், நல் நில வித்து என ஓங்கி—(அது) நல்லநிலத்தில் விதைக்கப்பட்ட வித்தைப்போலவளர்ந்து, சில் நாளில் பெரிது பயன் நல்கும் என்ன—சிலதினங்களில் அளவற்ற பிரயோசனத்தைத்தருமென்று கூற, நல் ஓதி பயில் அறிஞ அந்நிலமும் எனக்கு அறிய சொல்லுதி என்றான்—நல்லஞானத்தைப்பயின்ற அறிவையுடையவரே அப்படிப்பட்ட தலத்தையும் யானறியும்படி கூறியருளவேண்டுமென்றான் எ—று.

சீதவனம் பொழியுமிருட் கொண்டனிறங் கொண்டிடுமெய்ச் செய்ய செங்கண், மாதவனம் புயன்றவள வாரணத்தின் வருமகவான் வானில் வானோர், பாதவன சம்பரவ வுமையாளோ டெமையாளும் பரமன் வைகும், வேதவன மென்றுலகி லொன்றுளதங் கதன்றகையார் விரிக்க வல்லார்.

இ—ள்: சீதவனம் பொழியும் இருள் கொண்டல் நிறம் கொண்டிடும் மெய்—குளிர்ந்த நீரைப்பொழிகின்ற கரியமேகம்போன்ற நிறத்தைக்கொண்ட திருமேனியும், செய்ய செம் கண்—செம்மையாகிய சிவந்தகண்களையுமுடைய, மாதவன்—மாயவனும், அமபுயன்—பிரமனும், தவள வாரணத்தில் வரும் மகவான்—வெள்ளிய ஐராவதயானையின்மேல் எறிவருகின்ற இந்திரனும், வானில் வானோர்—சுவர்க்கவாசிகளாகிய மற்றுந்தேவர்களும், பாத வனசம பரவ—பாததாமரைகளைத்துதிக்க, உமையாளோடு எமையாளும் பரமன் வைகும்—பார்ப்பதிதேவியுடன் எங்களையாண்டருளுகின்ற சிவபெருமானெழுந்தருளிய, வேதவனம் என்று உலகில் ஒன்று உளது—மறைக்காடென்னுந்திருப்பெயரையுடைய ஒரு ஸ்தலமுள்ளது, அங்கு அதன் தகை யார் விரிக்க வல்லார்—அவ்விடத்து அதன்பெருமையை யார்விரித்துக் கூறவல்லுநர் எ—று. (௩௨)

முன்னுருவம் பலவெடுத்து முயன்றுசெயுந் வினைக்கெழுங்கே மூலமாகப், பின்னுருவ மெடுத்துழலும் பித்தருமத் தலத்திறக்கப் பெற்றாரெண்ணிற், பொன்னுருவச் சடாமௌலிப் புனிதன்றாரகப்பிரமம் போதித் தாதித், தன்னுருவந் தருவதனு லந்தலத்துக் கிணைபுகலச் சரிவே றுண்டோ.

இ—ள்: முன் உருவம் பல எடுத்து முயன்று செய் தீவினை கிழங்கே மூலமாக—முன்னைக்காலங்கடோறும் பலபிறவிகளிலுஞ் சரீரங்களையெடுத்துப்பிறந்து முயற்சிகொண்டுசெய் ததீவினையாகியகிழங்கை ஆதாரமாகக்கொண்டு, பின் உருவம் எடுத்து உழலும் பித்தரும்— பின்னும்பின்னும் பிறந்துழலுகின்ற அறிவிலிகளும், அத்தலத்து இறக்க பெற்றார் என்னின்—அந்தவேதவனத்திலே இறப்பாராயின், பொன் உருவ சடா மௌலி புனிதன்— பொன்போன்ற சிவந்த சடையையுடை சிவபெருமான், தாரக பிரமம் போதித்து—ஓம் என்னும் பிரணவத்தைஉபதேசித்து, ஆதி தன் உருவம் தருவதனால்—ஆதியாகிய தமது சாரூபத்தைக்கொடுத்தலால், அ தலத்துக்கு இணை புகல சரி வேறு உண்டோ—அந்தததலத்திற்குஒப்பாகக் கூறுதற்கு வேறொரு தலமுளதோ எ—று. (கரு)

பொன்னிமுத னதிப்புனல்பாய் புலவுகமழ் கடற்றீரப் புளினந்தோறுங், கன்னியிளம் பெடையொடனங் கலந்துவளங் காட்டுமறைக் காட்டு வேணிச், சென்னிதனின் மதிமுடித்த சிவபெருமான் சந்நிதியிற் றிருமுன்னாக, வன்னிமர மொன்றுளதாங் கடியர்வினைக் காடுசுடும் வன்னி யாமால்.

இ—ள்: பொன்னி முதல் நதி புனல் பாய் புலவு கமழ் கடல் தீரம் புளினம் தோறும்—காவிரியாறுமுதலிய புண்ணியநதிகளின் நீரானது வந்துபாய்கின்ற புலால்நாற்றம்வீசப்பெற்ற சமுத்திரத்தின்கரையிலுள்ள மணற்குன்றுகளில், கன்னி இளம் பெடையொடு அனம் கலந்து— இளமையாகிய கன்னிப்பருவத்தையுடைய பெடையன்னத்தோடு சேவலன்னமானது சேர்க்கைசெய்து, வளம் காட்டும் மறைக்காட்டு—நீர்வளத்தைக் காட்டுகின்ற வேதாரணியப்பதியிலெழுந்தருளிய, வேணி சென்னி தனில் மதிமுடித்த சிவபெருமான் சந்நிதியில் திருமுன் ஆக—சடைபொருந்தியசிரசிலேசந்திரனைத்தரித்த சிவபெருமானது திருக்கோயிலின்முன்னே, வன்னி மரம் ஒன்று உளது—ஒரு வன்னிவிருட்சமிருக்கின்றது, ஆங்கு அடியர் வினை காடு சுடும்வன்னியாம்—அது அவ்விடத்துவருகின்ற அடியார்களின் பாவமாகிய காடுகளைத் தகனஞ்செய்கின்ற அக்கினியேயாகும் எ—று.

ஆல்—அசை. (கசா)

விண்ணவர்பூ சனைபுரியா மறையொழுக்கம் வழுக்கியவே தியர்கோல் கோடி, புண்ணவரை வருத்துகின்ற மன்னர்நெறி பிழைத்தொழுகும் வணிகர் முன்னா, வெண்ணவரும் பின்னவர்சங் கரசாதி யரிவையர்மற் றிவரீறாகப், பண்ணவர்நா டெனத்தகுமத் தலமேவும் பொழுதெஞ்சப் பாதக ரேனும்.

இ—ள்: விண்ணவர் பூசனை புரியா மறை ஒழுக்கம் வழுக்கிய வேதியர்—தேவபூசைசெய்யாத வேத ஒழுக்கத்தினின்றுந்தவறிய பிராமணர்களு

ம், கோல் கோடி மன்னவரை வருத்துகின்ற மன்னர்— செங்கோன்முறை தவறிப்பூமியிலுள்ளாரைத் துன்புறுவிக்கின்ற அரசர்களும், நெறி பிழைத்து ஒழுகும் வணிகர்—தமதுகுலாசாரத்தைவிட்டுத் தீயவழியில் நடக்கின்ற செட்டிகளும், முன்னூ—முதலாக, எண்ணவரும் பின்னவர்—மதிக்கப்படுகின்ற வேளாளர்களும், சங்கரசாதி—சங்கரசாதியாரும், அரிவையர் இவர் ஈறுக—பெண்களும் ஆகிய இவர்கள் இறுதியாக, பண்ணவர் நாடு என தகும்—தேவர்களது சுவர்க்கலோகமென்றுசொல்லத்தக்க, அ தலம் மேவும் பொழுது—அந்தவேதவனத்தையடையும்பொழுது, எந்த பதகரேனும்— எவ்வகைப்பாவிகளாயினும் எ—று.

மற்று—அசை.                                                                                    (கரு)

சிறையுறுமிப் பிறவியெனும் பிணிக்குடைந்தீர் வம்மினது
தீர்ப்பன் யானென், றறைபறையிற் கறங்குதிரை மறைநதிக்கண
டைந்துகுடைந் தாடிக் கோடித், துறையதனிற் படிந்துமுதற் சு
ருதிதொட்ட வாரிதனிற் றோய்ந்து தொன்னூல். முறைவழுவா
துன்னிமணி கன்னிகையிற் றுன்னியங்நீர் மூழ்கி யேறி.

இ—ள்: சிறை உறும் இ பிறவி எனும் பிணிக்கு உடைந்தீர்— பிறவிச்சிறையாகிய இந்தத் துன்பத்தினால் வருத்தமுற்றீர், வம்மின் யான் அது தீர்ப்பன் என்று—இங்குவாருங்கள் யான் அந்நோயைத் தீர்க்கவல்லேனென்று, அறை பறையில் கறங்கு திரை—அடிக்கப்படுகின்ற முரசைப்போல ஒலிக்கின்ற,திரைகளையுடைய, மறை நதிக்கண் அடைந்து குடைந்து ஆடி-வேதநதியையடைந்து அதிலே முழுகி நீராடி, கோடி துறை அதனில் படிந்து-(பின்னர்) கோடிதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, முதல் சுருதி தொட்ட வாரிதனில் தோய்ந்து—(பின்பு) முதன்மைபொருந்தியவேதாமிர்ததீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, தொல் நூல் முறை வழுவாது உன்னி— பழைய சாஸ்திரவிதிதவறாமல்தியானஞ்செய்து, மணிகன்னிகையில் துன்னி அந்நீர் மூழ்கி ஏறி—(பின்னர்) மணிகன்னிகையென்னுந் தீர்த்தத்தையடைந்து அதில் ஸ்நானஞ்செய்து ஏறி எ—று.                                                          (கசு)

விடமுனிய வருமமையத் திமையவர்க்கா வுண்டுவட விண்டு
பண்டு, தடமுனியிற் குனித்துநகைத் தெயிலொருமூன் றழற்க
ளித்த தலைவற்போற்றிற், றிடமுனிய பொருளனைத்துஞ் சித்தியு
ற முத்தியினுஞ் சேர்வரென்றே, குடமுனிவன் சுருதிவனப் பெ
ருமை யெல்லா மவற்கறியக் கூறிப்பின்னும்.

இ—ள்: விடம் முனிய வரும் அமையத்து— விஷமானது கொல்ல வருஞ்சமயத்திலே, இமையவர்க்கா உண்டு-தேவர்கள்பொருட்டு அவ்விஷத்தைப்புசித்து, வட விண்டு பண்டு தடமுனியில் குனித்து— மகாமேருமலையை முன்னைக்காலத்து விசாலமாகியவில்லாக வளைத்து, நகைத்து எயில்

ஒருமூன்று அழற்கு அளித்த தலைவற் போற்றில்— புன்னகைபுரிந்து மும்ம தில்களையும் அக்கினிக்கு உணவாகக்கொடுத்த பரமசிவனைத் தோத்திரஞ்செ ய்யில், உன்னிய பொருள் அனைத்தும் சித்தியுற— நினைத்தபொருள்களெல் லாம் சித்தியடைந்து, முத்தியினும் சேர்வர்— மோட்சத்தையுமடைவர், தி டம் என்று—இதுநிச்சயமென்று, குடமுனிவன்—அகத்தியமுனிவர், சுரு தி வன பெருமை எல்லாம்— வேதவனத்தின் மகிமைகளெல்லாவற்றையும், அவற்கு அறிய கூறி பின்னும்—அச்சாலிகோத்திரனுக்குத் தெரியும்படிசொ ல்லிப் பின்னரும் எ—று.

ஏ—அசை. (கஎ)

அத்தல மாரூர் காசி யம்பலமற் றெவற்றினுக்கு மதிக மெ ன்றே, முத்தலமும் புகழவரு முனிவரனை வருமொழிந்தார் மொ ழியா நின்ற, வெத்தலமு மதிக்கு மிந்தத் தலத்திலிருந் திவ்விரத மியற்றிற் சித்தி, கைத்தலத்தில் வைத்த நெல்லிக் கனிபோலக் கா ண்டியெனக் கழறிப்பின்னர்.

இ—ள். அத்தலம்-அந்த மறைக்காடானது, ஆரூர் காசி அம்பலம் மற் று எவற்றினுக்கும் அதிகம் என்று—திருவாரூர் காசி சிதம்பரம் முதலாகிய ம ற்றைய எல்லாத்தலங்களிலும விசேடமுடையதென்று, முத்தலமும் புகழ வரும் முனிவர் அனைவரும் மொழிந்தார்—திரிலோகத்தாரும் புகழத்தக்க மு னிவர்யாவருங் கூறினர், மொழியா நின்ற எத்தலமும் மதிக்கும் இந்த தலத் தில் இருந்து-கூறப்படுகின்ற எத்தலத்தவர்களாலும் மதிக்கப்படும் இந்தத்தல த்திலிருந்து, இ விரதம்இயற்றில்-இந்த விரதத்தையனுஷ்டித்தால், கை தல த்தில் வைத்த நெல்லி கனி போல- கையிலே வைத்த கருநெல்லிப்பழத்தை ப்போல, சித்தி காண்டி என கழறி பின்னர் — சித்தியடையப்பெறுவாயென் றுகூறிப் பின்பு எ—று.

ஏ—அசை. (கஅ)

நல்வலனை யதனமலை நங்கையொடு கிராதவுரு நண்ணிக் கா னிற், செல்வலனை வருங்காண வெல்வலருச் சுனனையென்னச் செயிர்த்துப் போர்செய், மல்வலனை யுளத்திருத்தி மறைவலனும் வாதாவி மடியச்சீறி, வில்வலனை முனிந்தமுனி விடைகொடுப்ப மறைசைநகர் மேவலுற்றான்.

இ—ள்: நல வல அனைய தன மலை நங்கையொடு— நல்லசூதாடுகரு வியைநிகர்த்த ஸ்தனமாகியமலைகளையுடைய உமாதேவியாருடன், கிராத உரு நண்ணி—வேடவடிவங்கொண்டு, கானில் செல்வல்—காட்டையடைவேன், அனைவரும் காண அருச்சுனனை வெல்வல் என-யாருங்காணும்படி அருச்சுன னைவெல்லுவேனென்று, செயிர்த்து போர்செய் மல்வலனை உளத்து இருத் தி—கோபித்துப்போர்செய்த மல்யுத்தத்தில் வலிமையுடையவராகிய சிவ

பெருமானை மனத்திற்சிந்தித்து, மறை வலனும் வாதாவி மடிய சீறி— மந்திரவலிமையையுடையவனாகிய வாதாவியென்னுமசுரன் அழியும்படி கோபித்து, வில்வலனை முனிந்த முனி—வில்வலனாகிய அசுரனையுங்கோபித்தழித்த அகத்தியமுனிவர், விடைகொடுப்ப—அனுமதிகொடுக்க, மறைசை நகர் மேவல் உற்றான்—வேதாரணியப்பதியையடைந்தான் எ—று. (கக)

உற்றனுவுற் றிடும்புனித தீர்த்தமெலாம் படிந்தாடி யுயர்பொற் கோவில், சுற்றிவலம் வந்துகொற்ற வீரகத்திச் சேதகன்றாடொழுது முனைறு, ஏற்றமிலான் மறைநறைப்போதாலருச்சித்தருளிறைசே வடிகள் போற்றிக், குற்றமில்யாழைப்பழித்தமொழியம்மை நூபுரத்தாள் கும்பிட்டேத்தி

இ—ள் உற்று அவண் உற்றிடும் புனித தீர்த்தம் எலாம் படிந்து ஆடி—போய் அங்குள்ள பரிசுத்தமாகிய தீர்த்தங்கள் யாவற்றினும் ஸ்நானஞ்செய்து, உயர் பொன் கோவில சுற்றி வலம் வந்து—உயர்வுபொருந்திய பொன்மயமாகிய திருக்கோயிலைப் பிரதட்சிணம்வந்து, கொற்ற வீரகத்தி சேதகன் தாள தொழுது—வெற்றியையுடைய வீரகவொலையாலாகிய பழியைத்துடைத்த விநாயகக்கடவுள்து திருப்பதங்களை நமஸ்கரித்து, முனைவன் அற்றமில் நால் மறை——பண்டைக்காலத்துக்குற்றமில்லாத நான்குவேதங்களும, நறை போதால் அருச்சித்த அருள —வாசனைபொருந்திய புஷ்பங்களினலை பூசனைசெய்த. இறை சே அடிகள போற்றி—சிவபெருமானது சிவந்த திருப்பாதங்களை ஸ்தோத்திரஞ்செய்து, குற்றமில் யாழைப்பழித்த மொழியம்மை—குற்றமில்லாத யாழைப்பழித்த மொழிஅம்மையாரது, நூபுரத்தாள கும்பிட்டு ஏத்தி—சிலம்பணிந்த திருப்பாதங்களைவணங்கித்துதித்து எ—று. (௨0)

ஒருபொருளை யுணர்ந்திருகண் பனிதூங்க முப்பொழுது முயர்நால் வேதந், தருபொருளா மஞ்செழுத்தை நெஞ்சழுத்தி யறுதொழிலோர் தலைவன்பாரில், வருபொருளா ருயிரனைத்தும் படைத்தளிக்குந் தன்மையினன் மண்ணோர் விண்ணோ, ரிருபொருளென் றிடுமயன்மாற் கெட்டாத பதம்பெறுவானிதயத் தெண்ணி.

இ—ள் ஒரு பொருளை உணர்ந்து—ஒப்பில்லாத முழுமுதற்பொருளாகிய சிவத்தையறிந்து, இரு கண் பனி தூங்க — இரண்டுகண்களினின்றும் ஆனந்தபாஷ்பமசொரிய, முப்பொழுதும்—காலை உச்சி மாலையாகிய திரிகாலங்களினும், உயர் நால் வேதம் தரு பொருள் ஆம அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி-மேன்மைதங்கிய நான்குவேதங்களினாலும் உணர்த்தப்படுகின்ற ஆப்தமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாட்சரங்களை மனத்திற்சிந்தித்து, அறு தொழில் ஓர் தலைவன்—ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல ஆகிய அறுதொழில்களையுமுடைய பிராமணோத்தமனாகிய அச்சாலிகோத்திரன், பாரில் வரு பொருள் ஆர் உயிர் அனைத்தும் படைத்து அளிக்கும் தன்மையினு

ல்—பூமியின்கண்ணேயுள்ள சர்வான்மாக்களேயும் முழுதுஞ்சிருட்டித்துக்காக்கின்ற தன்மையினுல், மண்ணேர் விண்ணேர் இரு பொருள் என்றிடும்—பூமியிலுள்ள மனுடர்களும் சுவர்க்கவாசிகளும் இரண்டுபொருளென்று எடுத்துப்பேசுகின்ற, அயன் மாற்கு எட்டாத—பிரமவிஷ்ணுக்களினது அறிவுக்குமகப்படாத, பதம் பெறுவான் இதயத்து எண்ணி— திருப்பாதங்களேயடையும்படி மனத்திற்சிந்தித்து எ—று. (உ௧)

சிவநிசியாஞ் சதுர்த்தசியிற் றிங்கடொறுந் துயிலுணவு சிறிதுமின்றி
தவமுயல்வா னீராடி வில்வமுடன் கந்தமலர் சந்தஞ் சாத்திப் [றித்
பவமறமந் திரநவின்று பரிந்துநிவே தனம்புரிந்து பாடியாடி
நவநவமாச் சிவபூசை நாலுயாமமு முடித்து நடத்து நாளில்.

இ—ள்: திங்கள் தொறுஞ் சிவநிசியாம் சதுர்த்தசியில்—மாதங்கடோறும்வருஞ்சதுர்த்தசியாகிய சிவராத்திரிகளிலெல்லாம், துயில் உணவு சிறிதுமின்றி—நித்திரையுமுணவுஞ்சற்றேனுமில்லாமல், தவ முயல்வான் நீராடி—விரதத்தையனுஷ்டிக்கும்படி (சுத்தோதகத்தில்) ஸ்நாநஞ்செய்து, வில்வமுடன் கந்த மலர் சந்தம் சாத்தி—வில்வபத்திரத்தையும் பரிமளம்வீசுகின்ற புஷ்பங்களேயும் சந்தனத்தையுஞ்சாத்தி, பவம் அற மந்திரம் நவின்று—பிறவித்துன்பம்கெடும்படி மந்திரங்களேச்செபித்து, பரிந்து நிவேதனம் புரிந்து—அன்புடனே அன்னம்முதலியவற்றை நிவேதனஞ்செய்து, பாடி ஆடி— ஸ்தோத்திரங்களேப்பாடி ஆனந்தக்கூத்தாடி, நவம் நவமாய் சிவபூசை நாலு யாமமும் முடித்து நடத்தும் நாளில்—புதிதுபுதிதாய்ச் சிவபூசையை நான்குயாமங்களிலும் நடாத்திவருங்காலத்தில் எ—று. (உஉ)

சூடுடைய தலைச்சேவற் றுவசனைப்பெற் றெடுத்தவிடைத்
துவசன் பொற்றா, ளேடுடைய மனக்கமலத் திருத்தியருச் சித்திடுமோ ரிரவினுப்பண், கோடுடைய கயிலைநடை கொண்டனைய வெள்விடைமேற் கொண்டு கூந்தற், காடுடைய் மலைமகளோ டெதிர்நின்றான் மற்றவன்கண் களிக்க மன்னே.

இ—ள்: சூடு உடைய தலை சேவல் துவசனை பெற்று எடுத்த—சூடுபொருந்திய சிரசையுடைய சேவலாகிய கொடியையுயர்த்திய சுப்பிரமணியக்கடவுளேப்பெற்றருளிய, விடை துவசன் பொன் தாள்—இடபக்கொடியையுடைய சிவபெருமானது பொன்மயமாகிய திருப்பாதங்களே, ஏடு உடைய மன கமலத்து இருத்தி—(நற்குணமாகிய) இதழ்களேயுடைய இதயதாமரையில் ஆவாகித்து, அருச்சித்திடும் ஓர் இரவின் நாப்பண்—பூசைசெய்த ஒரு சிவராத்திரியின் அர்த்தயாமத்தில், கோடு உடைய கயிலை நடை கொண்டு அனைய—சிகரத்தையுடைய ஒரு கயிலாயமலை நடந்துவந்தாற்போன்ற, வெள் விடை மேல் கொண்டு—வெண்ணிறமாகிய இடபவாகனத்தின் மேலிவர்ந்

து, கூந்தல் காடு உடைய மலைமகளோடு—கூந்தலாகிய காட்டையுடைய மலையரசன் பூத்திரியாகும் உமாதேவியாரோடு, அவன் கண் களிக்க எதிர்நின்றுன்—அச்சாலிகோத்திரனது கண்கள் ஆனந்தமடையும்படி முன்வந்து நின்றருளினுர் எ—று.

மற்று மன் ஓ அசைகள். (உரு)

பிறைகாட்டுஞ் சடைமுடியும் பிரமரங்கா மரமூரன்று பிரசமாந்த, நறைகாட்டுங் கொன்றையந்தா ரணிந்திலகு திருமார்பு நயன மூன்றுங், கறைகாட்டுங் கந்தரமு மந்தரத்திண் புயநான்குங் கண்டு முத்தித், துறைகாட்டுங் கடற்றீரச் சுருதிவனத் திறைவனடி துதித்தல் செய்வான்.

இ—ள்: பிறை காட்டும் சடைமுடியும்—இளம்பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடைமுடியும், பிரமரம் காமரம் முரன்று பிரசம் மாந்த—வண்டுகள் இசையைப்பாடித் தேனையுண்ணும்படி, நறை காட்டும் கொன்றை அம் தார் அணிந்து இலகு திருமார்பு—பரிமளம் வீசுகின்ற அழகிய கொன்றை மலர்மாலையையணிந்து பிரகாசிக்கின்ற திருமார்பையும், நயனம் மூன்றும்—சோமசூர்யாக்கினியாகிய மூன்றுகண்களையும், கறை காட்டும் கந்தரமும்—(நஞ்சுண்டதனல்) கறுத்த திருக்கண்டத்தையும், மந்தர திண் புயம் நான்கும் கண்டு—மந்தரமலைபோற்காட்பாகிய வலிய நான்குபுயங்களையுந் தரிசித்து, முத்தி துறை காட்டும் கடல் தீர— மோட்சதனையடைதற்காகிய துறையைக்காட்டுகின்ற சமுத்திரத்தின்கரையையுடைய, சுருதி வனத்து இறைவன் அடி துதித்தல் செய்வான்—வேதாரணியப்பதியிலெழுந்தருளிய சிவபெருமானது திருப்பாதங்களை ஸ்தோத்திரிப்பானுயினன் எ—று. (உசு)

வேறு.

களக்கோலவல் விடமுண்டருள் களத்தாய்கவின் றருஞ்சா
மளக்கோமளத் திருமேனிகொண் மலைமாதின் மணுளா
தளக்கோகனதக்கண்ணினன் றருவேடனைச் சுடுதீக்
குளக்கோவுடை யானேகுறிக் குங்கோவுடை யானே.

இ—ள்: களம் கோல வல் விடம் உண்டு அருள் களத்தாய—கருநிறம்பொருந்திய கொடிய ஆலகாலவிஷத்தையுண்டருளிய நீலகண்டரே, கவின் தரும் சாமள கோமள திருமேனி கொள் மலைமாதின் மணாளா—அழகமைந்து விளங்குகின்ற பச்சைநிறமபொருந்திய இளமையாகிய திருமேனியையுடைய உமாபதியே, தள கோகனத கண்ணினன்—இதழ்களமைந்த செந்தாமரைமலராகிய திருநயனத்தையுடைய விஷ்ணுமூர்த்தி, தரு வேள் தனை சுடு தீ கோ குளம் உடையானே—பெற்றருளிய மன்மதனைத்தகித்த அக்கினிநேத்திரத்தையுடைய திருநெற்றியைக் கொண்டவரே, குறிக்கும் கோ உடையானே—தீட்டப்பட்ட இடபக்கொடியையுடையவரே எ—று.

குறிக்கும் கோ உடையானே என்பதற்கு குறிக்கப்படுகின்ற திக்கை யாடையாகவுடையவரே எனினுமாம். (உ௫)

சுடுஞ்சூகரத் தடிமென்றூறு சுவைகண்டவை யுதவுங்
கடுங்கானவர் குலந்தோன்றிய கண்ணப்பனை யாண்டாய்
தொடுங்காய்கணை யெனமால்வரத் துன்னார்புர முன்னா
ளடுங்கார்முகத் தானேயொரைந் தழகார்முகத் தானே.

இ—ள்: சுடும் சூகர தடி மென்று ஊறு சுவை கண்டவை உதவும்—சுடப்பட்ட பன்றியிறைச்சியைப் பற்களினாலதுக்கிப் பார்த்து நல்ல சுவையாகக்காணப்பட்டவைகளைக் கொடுத்த, கடும் கானவர் குலம் தோன்றிய கண்ணப்பனை ஆண்டாய்—கொடிய வேட்டுவர்குலத்திற்பிறந்த கண்ணப்பநாயனாரையாண்டருளியவரே, மால் தொடும் காய் கணை என வர— விஷ்ணுமூர்த்தியானவர் செலுத்தப்படுகின்ற சுடுசரமாகவுருவெடுத்தது வர, துன்னார் புரம் முன்னாள் அடும் கார் முகத்தானே—பகைவர்களது முப்புரங்களையும் முன்னொருநாளில் அப்பாணத்தையேவியழித்த (மேருவாகிய) வில்லையுடையவரே, அழகு ஆர் ஒரைந்து முகத்தானே—அழகுநிறைந்த ஐந்து திருமுகங்களையுடையவரே எ—று. (உ௬)

சம்புக்கிளை கிளையின்கிளை தானாய்வர மீனார்
மொய்ம்புற்றிடு கொடிமன்னவன் முன்னேகொடு வந்தா
யம்புற்றநன் முடியாய்விற லரிதேடரு மடியாய்
கம்புக்குழை யானேகயக் கம்புக்குழை யானே.

இ—ள்: சம்புக்கிளை கிள்ளையின் கிளை தானாய் வர—நரிகக்கூட்டங்களானவை குதிரைக்கூட்டங்களாயுருமாறி வர, மொய்ம்புற்றிடு மீன் ஆர் கொடி மன்னவன் முன்னே கொடுவந்தாய்— வலிமைபொருந்திய மற்சமெழுதிய கொடியையுடைய அரிமர்த்தனபாண்டியராசன்முன் (அவைகளைக கொண்டுவந்தருளியவரே, அம்பு உற்ற நல் முடியாய்— கங்காநதியைத்தரித்த நல்ல சடைமுடியையுடையவரே, விறல் அரி தேட அரும் அடியாய்—வலிய விஷ்ணுமூர்த்தியினாலுந் தேடுதற்கரிய திருப்பாதங்களையுடையவரே, கம்பு குழையானே—சங்கக்குண்டலங்களையணிந்த திருச்செவிகளையுடையவரே, கயக்கம் புக்கு உழையானே- துன்பங்களையடைந்து வருந்தாதவரே எ-று. கிள்ளை கிளை எனத்தொக்கது. (உ௭)

ஈரக்குளிர்ப் புனல்வைகையி னிடியுங்கரை நொடியிற்
றூரச்சொரி மண்கூடை சுமந்தேயடி பட்டாய்
கோரச்சின மிக்காகிய கொக்கின் சிறையக்கி
னாரச்சடை யானேநினை யாரச்சடை யானே.

இ—ள்: ஈர குளிர் புனல் வைகையின் இடியும் கரை—மிக்க குளிர்மைபொருந்திய நீரைக்கொண்ட வைகைநதியினிடிந்த கரையை, நொடியில் தூர சொரி மண் கூடை சுமந்தே அடி பட்டாய்—கணப்பொழுதில் தூரும்படி கொட்டிய மண்கூடையைச் சுமந்து அடிபட்டவரே, கோர சினம் மிக்கு ஆகிய கொக்கின் சிறை—உக்கிரத்தைக்கொண்ட கோபம்மிகுந்து தோன்றிய பகாசுரனாகிய கொக்கின் சிறகுகளையும், அக்கின் ஆர் சடையானே—எலும்புமாலைகளையுமணிந்த திருச்சடையையுடையவரே, நினையார் அச்சு அடையானே—தியானியாதவர்களுடைய உள்ளத்தின்கண்ணே (சிந்தித்தவழியுஞ்) செல்லப்பெறாதவரே எ—று. (௨௮)

கலைமாமறை யயனீறுறு கற்பந்தொறு நல்குந்
தலைமாலை புனைந்தாய்வட தருநீழ லிருந்தாய்
கொலையார்கதி ராழிப்படை கொண்டேசலந் தரனை
மலைமாதிடத் தானேயிம மலைமாதிடத் தானே.

இ—ள்: கலை மா மறை அயன் ஈறு உறு கற்பம் தொறும் நல்கும்—பெருமைபொருந்திய வேதசாஸ்திரங்களை அறிந்த பிரமதேவன் அழிந்துபடுகின்ற கற்பகாலங்களிலெல்லாம் கொடுத்த, தலை மாலை புனைந்தாய்—சிரமாலைகளைத் தரித்தருளியவரே, வடதரு நீழல் இருந்தாய்—கல்லாலவிருட்சநிழலிலெழுந்தருளியவரே, கொலை ஆர் கதிர் ஆழி படை கொண்டு—கொலைத்தொழில்பொருந்திய ஒளியையுடைய சக்கராயுதத்தைக்கொண்டு, சலந்தரனை மலை மாதிடத்தானே—சலந்தராசுரனோடு யுத்தஞ்செய்து அழித்த மிக்க வலிமையுடையவரே, இம மலை மாது இடத்தானே—இமயமலையரசன் புத்திரியாகிய உமாதேவியாரை வாமபாகத்திற்கொண்டருளியவரே எ—று.

ஏ—அசை. (௨௯)

சிலைத்தூண்டனி லுதித்தோங்கிமண் டிகைத்தெங்கமுன் சிரித்தே
யுலைத்தாண்டுபொன் னிறத்தீயவ னுடற்கீண்டிடு மரியை
யலைத்தாங்குயிர் கொளச்சிம்புள தாறுயயி லார்முத்
தலைத்தானையி னானேபுலித் தலைத்தானையி னானே.

இ—ள்: சிலை தூண் தனில உதித்து ஓங்கி—கற்றூணினிடத்துத் தோன்றி வளர்ந்து, மண் திகைத்து எங்க முன் சிரித்து உலைத்து—பூமியானது நடுங்கி அஞ்சும்படி முன்னைக்காலத்து நகைத்துக் கலங்கச்செய்து, ஆண்டு பொன்னிற தீயவன் உடல் கீண்டிடும் அரியை—அப்பொழுதே இரணியனாகிய கொடியவனது உடலைக்கிழித்த நரசிங்கத்தை, அலைத்து ஆங்கு உயிர் கொள சிம்புள் அது ஆறுய்—அவ்விடத்து வருத்தி உயிர்கவரும்படி சரபப்பட்சிவடிவங்கொண்டவரே, அயில் ஆர் முத்தலை தானையினானே—கூர்மைபொருந்திய முக்கவரைக்கொண்ட சூலப்படையையுடையவரே, புலித்

தலை தானையினானே—புலியிற்பொருந்திய தோலை உடையாகக்கொண்டருளியவரே எ—று (௯0)

பணப்பாம்பரைப் பரவைக்குநம் பரவைப்பெரு விரக
முணர்த்தாங்கென விடுஞ்சுந்தரற் கொருசந்து நடந்தாய்
மணப்பூந்துகள் குடைந்தூதிமை வரிவண்டிமிர் மதலைத்
துணர்ப்பூங்கணி யானைதொழுந் தொண்டர்க்கணி யானே.

இ—ள்: பணம் பாம்பு அரை பரவைக்கு—சர்ப்பபடத்தையொத்த நிதம்பத்தையுடைய பரவையாருக்கு, நம் பரவை பெரு விரகம் உணர்த்து ஆங்கு என—நமது சமுத்திரம்போன்ற பெரிய மயக்கத்தை ஆங்குச்சென்றறிவிக்குகவென்று, விடும் சுந்தரற்கு ஒரு சந்து நடந்தாய்—அனுப்பிய சுந்தரமூர்த்திநாயனாருக்கு ஒரு தூதாகச்சென்றருளியவரே, மணம் பூ துகள் குடைந்து ஊதி மை வரி வண்டு இமிர்—வாசனைபொருந்திய பூம்பராகங்களை காலினாற்றுழைத்தூதிக் கரிய புள்ளிபொருந்திய வண்டுகளானவை படிந்துபாடுகின்ற, மதலை துணர் பூ கண்ணியானே—இதழமைந்த கொன்றைமலர்மாலையையுடையவரே, தொழும் தொண்டர்க்கு அணியானே—என்றும் வழிபாடுசெய்கின்ற அடியவர்களுக்குச் சமீபமாயுள்ளவரே எ—று.

கண்ணி கணியெனத்தொக்கது. (௯௧)

சுதைக்கும்பநன் முலைமாதரைத் துகடீர்புவிச் சுரரை
வதைக்கும்பழி தனைமாற்றிடு மணிகன்னிகை யுடையாய்
பதைக்கும்படி யடலார்கொடும் பகடூர்சமன் மருமத்
துதைக்குங்கழ லானேகரத் தொளிர்பொங்கழ லானே.

இ—ள். சுதை கும்ப நல் முலை மாதரை—அமுதகலசத்தைப்போன்ற நல்ல ஸ்தனங்களையுடைய பெண்களையும், துகள் தீர் புவி சுரரை—குற்றமற்ற பிராமணர்களையும், வதைக்கும் பழி தனை மாற்றிடும்—கொன்ற கொலைத்தோஷங்களை நாசஞ்செய்யவல்ல, மணி கன்னிகை உடையாய்—மணிகன்னிகையென்னும் தீர்த்தத்தையுடையவரே. பதைக்கும்படி—மிகவும் வருந்தும்படி, அடல் ஆர் கொடும் பகடு ஊர் சமன் மருமத்து—வலிமைபொருந்திய கொடிய எருமைக்கடாவிலேறிய யமனது மார்பினிடத்து, உதைக்கும் கழலானே—உதைத்த திருவடியையுடையவரே, கரத்து ஒளிர் பொங்கு அழலானே—திருக்கரத்தின்கண்ணே ஒளிகொண்டு சுவாலிக்கின்ற அக்கினியையுடையவரே எ—று. (௯௨)

சலத்தான்மிகுங் கொடியோனிசை தருவீணையின் கொடியோன்
புலத்தார்கரி யிருநான்குடன் பொருதன்மடல் புரிய
முலத்தோடலை நெரிபட்டுர னுட்கும்படி யூன்று
மலர்க்கானகத் தானேதிரு மறைக்கானகத் தானே.

இ—ள்: சலத்தால் மிகும் கொடியோன்— கோபத்தினால் மிகுந்த கொடியவனும், இசை தரு வீணையின் கொடியோன்—பண்ணமைந்த யாழ்க்கொடியையுடையவனுமாகிய இராவணனது, புலத்து ஆர் கரி இரு நான்குடன் பொருது—திக்குகளிலுள்ள எட்டுயானைகளோடும் எதிர்த்து, அன்று அடல் புரியும்—அக்காலத்து போராடல்புரிந்த, உலம் தோல் தலை நெரிபட்டு உரன் உட்கும்படி—திரண்டகல்லையொத்த புயங்களும் தலைகளும் நெரிந்துவலிமைகுன்றும்படி, ஊன்றும் மலர் கால் நகத்தானே—ஊன்றிமிதித்த மலர்போன்ற திருப்பாத நகத்தையுடையவரே, திருமறை கானகத்தானே-இலட்சுமீகரம்பொருந்திய வேதவனத்தையுடையவரே எ—று. (௩௩)

துன்பந்தரு பிறவிப்பிணி தொலையும்படி நிலையா
மன்பங்கியி னிழுதிட்டென வகநெக்குரு கிப்பூ
நன்பங்கய நிகர்நின்பத நாளுந்தொழு மடியார்க்
கின்பந்தரும் பித்தாவர மெனைநீவிரும் பித்தா.

இ—ள்: துன்பம் தரு பிறவி பிணி தொலையும்படி—(இடையறாது) வருத்தஞ்செய்கின்ற பிறவிநோயானது அழியும்வண்ணம், அங்கியின் இழுது இட்டு என—அக்கினியின்கண்ணே நெய்யைச்சொரிந்தாற்போல, நிலையாம் அன்பு அகம் நெக்கு உருகி—நிலைத்த அன்பையுடைய மனமானது கசிந்து உருகப்பெற்று, நல் பங்கய பூநிகர் நின்பதம்— நல்ல தாமரைமலரையொத்த உமது திருப்பாதங்களை, நாளும் தொழும் அடியார்க்கு இன்பம் தரும் பித்தா—என்றும்வழிபடுகின்ற அடியவர்களுக்கு நித்தியசுகத்தையீந்தருளுகின்ற பித்தரே, எனை நீ விரும்பி வரம் தா—அடியேனிடத்துத் தேவரீர் அருள்கொண்டு மோட்சவரத்தைத் தந்தருளும் எ—று. (௩௪)

வேறு.

என்றுபல துதிகூறி யானந்த மிகுந்துபுன லிருகண் சோரத், துன்றுமயிர்ப் புள்கமெழப் பரவசனாய் வீழ்ந்தெழுந்து துள்ளி யாடித், தன்றுணைச்செங் கரங்கூப்பி முடியில்வைத் துப் படியினின்றோன் றன்னை நோக்கிக், கன்றுசினக் கருங்காலன் றனையுதைத்த செங்காலன் கழறு மன்றே.

இ—ள்: என்று பல துதி கூறி—இவ்வாறுபல ஸ்தோத்திரங்களைச் சொல்லி, ஆனந்தம் மிகுந்து—சந்தோஷம் அதிகரிக்கப்பெற்று, புனல் இரு கண் சோர—கண்ணீர் இரண்டுகண்களினின்றுஞ்சொரிய, துன்று மயிர் புளகமெழ—நெருங்கிய உரோமங்கள் சிலிர்த்து எழ, பரவசனாய் வீழ்ந்து எழுந்து துள்ளி யாடி—தன்வசமற்றுச் சிவவசப்பட்டு பூமியில் விழுந்து வணங்கியெழுந்துதுள்ளி ஆனந்தக்கூத்தாடி, தன் துணை செம் கரம் கூப்பி முடியில் வைத்து—தன்னுடைய இரண்டு சிவந்தகைகளையுங் குவித்துச்சிரசில் வைத்

தக்கொண்டு, படியில நின்றோன் தன்னை நோக்கி—பூமியின்கண்ணே நின்ற சாலிகோத்திரனைத் திருநோக்கஞ்செய்து, கன்று சின கரும் காலன் தனை உதைத்த செம் காலன்—கொதிக்கின்ற கோபத்தையுடைய கரிய யமனையுதைத்த சிவந்த திருப்பாதத்தையுடைய சிவபெருமான், கழறும்— திருவாய் மலர்ந்தருளுவாரா எ—று.

அன்று ஏ அசைகள். (௩௫)

உவரிவளை நெடுநிலத்தி லுடற்கணிலா கண்டலன்போ லுவப்பி ஞேடுந், துவரிதழ்வாய் மனைவிமகார் சூழ்மிகு போகமெலா ந துய்த்துக் கற்றைக், கவரிசிலர் புடையிரட்டக் கணங்களெதிர் கொண்டழைப்பக் காய நீததுத், தவரிதய மெனவிளங்குங் கயிலை மலை வருதியெனச் சாற்றிப் போனான்.

இ—ள். உவரி வளை நெடு நிலத்தில்—உப்புச்சமுத்திரத்தாற் சூழப்பட்ட பெரிய பூமியின்கண்ணே, உடல் கண் இல் ஆகண்டலன் போல்—சரீரத்திற் கண்களில்லாத இந்திரனைப்போல, உவப்பினோடும்— சந்தோஷத்துடனே, துவர் இதழ் வாய் மனைவி—பவளம்போலும் சிவந்த உதடுகளையுடைய வாயபொருந்திய மனைவியும், மகார்—மக்களும், சூழ மிகு போகம் எலாம் துய்த்து—சூழ இருந்து மிகுந்த சுகானுபவங்களெல்லாவற்றையு மனுபவித்து, (பின்னர்) கற்றை கவரி சிலர் புடை இரட்ட—கூட்டமாகிய சாமரங்களைப் பக்கத்தேநின்று சிலர்வீச, கணங்கள் எதிர் கொண்டு அழைப்ப— நமதுகணங்களெதிர்கொண்டழைக்க, காயம் நீதது—இவ்வுடலத்தைககழித்து, தவர் இதய மென விளஙகும கயிலை மலை வருதியென— தவத்தையுடையவர்களது இருதயத்தைப்போல (வெண்ணிறமாய்) பிரகாசக்கின்ற கயிலாயமலையையடையககடவையென்று, சாறறி போனான்—திருவாய்மலர்ந்தருளிச் சென்றனா எ—று. (௩௬)

. அன்றுமுத லளகைநகர்க் கதிபதிபோ னிதிபலபெற் றவனி மீதிற், றன்றுபல போகமெலாந் துய்த்துநெடு நாட்கழித்துத் துதித்து வானோர், நின்றுநொழப் பதஞ்சலியும் புலிமுனியுங் காண நித்த நிருத்தந் தில்லை, மன்றுதனி லாடியபொற் பூவடிவாஞ் சேவடியின் மருவி னானே.

இ—ள்: அன்று முதல் அளகை நகர்க்கு அதிபதி போல்— அந்நாள் முதல் அளகாபுரிக்கரசனாகிய குபேரனைப்போல, நிதிபல பெற்று— பலவகைச் செல்வங்களையுமடைந்து, அவனி மீதில் துன்று பல போகம் எலாம் துய்த்து—பூமியின்கணுள்ள நிறைந்த பலவகைச்செல்வங்களையுமனுபவித்து, நெடு நாள் கழித்து—அனேககாலஞ்சென்றபின்னர், வானோர் நின்று அ

த்து தொழ—தேவர்கள்கூடிநின்று ஸ்தோத்திரஞ்செய்து வணங்கவும், பதஞ்சலியும் புலிமுனியும் காண—பதஞ்சலிமுனிவரும் வியாக்கிரபாத முனிவருந்தரிசிக்கவும், நித்தம் நிருத்தம் தில்லை மன்றுதனில் ஆடிய—என்றும் பஞ்சகிருத்தியகாரணமாகிய நடனத்தைப்பொன்னம்பலத்தின்கண்ணே ஆடுகின்ற, பொன் பூ வடிவாம் சேவடியில் மருவினன்—பொற்றாமரைமலர்போல விளங்குகின்ற சிவந்த திருப்பாதங்களை அடைந்தனன் எ—று.

ஏ-அசை. (கஎ)

ஈதுமுதனிகழ்காதை யாரேனுஞ் சிவநிசிநோற் றிடுவோர்
பேறிங், கோதுவதெ னுளத்தில்விழைந் தனபெறுவ ருலகமதி னு
டலம் விட்டாற், றாதவிழ்பூங் கொன்றையந்தார்ச் சடை முடியோ
னிருசரணஞ் சார்வ ரென்று, சூதமுனி வரன்முனிவ ரனைவரு
ங்கேட் டுளமகிழச் சொன்னான் மன்னோ.

இ—ள்: ஈது முதல் நிகழ் காதை—இஃது முன்னைக்காலத்தில் நடந்த சரித்திரமாகும், யாரேனும் சிவநிசி நோற்றிடுவோர்—யாவராயினும் சிவராத்திரிவிரதத்தை அனுஷ்டிப்பவர்கள், பேறு இங்கு ஓதுவது என்— பெறுகின்ற பயனை இங்கேகூறுவது என்னை, உளத்தில் விழைந்தன உலகமதில்பெறுவர்—மனத்தில் விரும்பிய யாவற்றையும் இவ்வுலகத்திற்றானே அடைவர், உடலம் விட்டால்—இவ்வுடலம் இறந்தபடின், தாது அவிழ் பூ கொன்றை அம் தார சடை முடியோன் இரு சரணம் சார்வர் என்று—(மறுமைக்கண்) இதழ்விரிந்த கொன்றைமலர்மாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருப்பாதங்களை அடையப்பெறுவரென்று, முனிவர் அனைவரும் கேட்டு உள மகிழ—நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்களெல்லோருங்கேட்டு மனமகிழும்படி, சூத முனிவரன் சொன்னான்— சூதமகாமுனிவர் கூறினார் எ—று.

மன் ஓ அசைகள். (கஅ)

வேறு.

வாழி மாதவர் வாழி மனுநெறி
வாழி மாநிலம் வாழிநல் லானினம்
வாழி நான்மறை வாழி மழைமுகில்
வாழி வைதிக சைவ வழக்கமே.

இ—ள்: மாதவர் வாழி—மகாதவத்தையுடைய முனிவர்கள் வாழ்க, மனுநெறி வாழி—மனுவினாலே செய்யப்பட்ட நீதிநெறிகள்வாழ்க, மாநிலம் வாழி—பெரியபூவுலகம் வாழ்க, நல் ஆன் இனம் வாழி—நன்மையைத்தருகின்ற பசுக்கூட்டங்கள்வாழ்க, நால் மறை வாழி— நான்குவேதங்களும்வாழ்க,

மழை முகில் வாழி—மழையைப்பொழிகின்ற மேகங்கள் வாழ்க, வைதிக சைவ வழக்கம் வாழி—வேத ஒழுக்கங்களும் சிவாகம ஒழுக்கங்களும் (எந்நாளும்) வாழ்க எ—று.

ஏ-அசை (௯௬,

சாலிகோத்திரசருக்கம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ஏகசு.



சிவராத்திரிபுராணம்

முற்றிற்று.

